# ஆன்மீகக் கதைகள்


அருளியவர்

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம்

**ஸ்ரீ சுவாமி வேதானந்தா**








வெளியிடுவோர்

**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சிவானந்தா ஆஸ்ரமம்

சுவாமி சிவானந்தா சாலை

இராசிபுரம், சேலம் மாவட்டம்

விலை] 1995 [ரூ. 30.00

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும், வழிகாட்டியாகவும் விளங்கும் சற்குரு ஸ்ரீசுவாமி சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமஹராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப் பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ்நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழி பெயர்ப்புகள் இன்று இருக்கின்றன.

குருதேவ் சிவானந்தா ஆங்கிலத்தில் எழுதிய "Spritual Stories" என்ற நூலை தமிழில் 'ஆன்மீக கதைகள்' என்ற தலைப்பில் ஸ்ரீ சுவாமி வேதானந்தா அவர்கள் மிக அருமையாக மொழிபெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் மதுரை 'பிரிண்ட் ஷாப்' நிறுவனத்தினர் டைப்செட் செய்து கொடுத்துள்ளனர். சிவகாசி தி ஓரியண்ட் லித்தோ பிரஸ்ஸார், சிறந்த முறையில் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கிய அன்பர், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீகப் போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம்வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

**சுவாமி சிதானந்தா**

# ஆன்மீகக் கதைகள்

# 1. அஹிம்சைத் தத்துவம்

மாந்தோட்டத்தின் வழியாக வறுமையால் வாடியவன் ஒருவன் போய்க்கொண்டிருந்தான். பசியோ அவன் வயிற்றைக் கிள்ளியது. கடந்த மூன்று நாள்களாக அவன் உணவைக் கண்ணால் கண்டதே இல்லை. தோட்டத்தில் நிறைய மாமரங்கள் இருந்தன. மாம்பழம் அமோகமாக விளையும் பருவகாலம் அது. மதுரமான அந்தமாம்பழம் அவனை மயக்கியது. இயற்கையாக அவன் ஒரு கல்லை எடுத்து மரத்தின் மேல் எறிந்தான். மாம்பழங்கள் இரண்டு கீழே விழுந்தன. மகிழ்ச்சியால் பசி பிரகாசித்தது. அவற்றைக் கையில் ஏடுத்தவுடன் அவனுடைய வாயில் எச்சில் ஊறிற்று கல்லானது விரைந்து போய் மரத்தினின்று பழத்தை வெட்டித் தள்ளியது. பசியைத் தீர்த்துக்கொள்ளலாமென்ற மிதமிஞ்சிய சந்தோஷத்தால், கல் எப்படி பழங்களைக் கொணர்ந்தது என்று எண்ணிப் பார்க்க முடியவில்லை. இலக்கைஅடைந்த பிறகு கீழே விழத்தான் செய்தது கல். பசியின் அபாரமான நிலையானது கல்லை வானத்தில் பறக்கச் செய்தது -அது கீழே விழுமுன்.

அதிசயமான சூழ்நிலைகளைச் சிருஷ்டி செய்யும் விதியானது, அத்தோட்டத்திலே அன்று பரம ஏழை மனிதனையும் பரந்த நிலத்தை ஆளும் மன்னனையும் கொண்டுவரச் சதி செய்தது. மரணக் கதவினருகிலுள்ள பரம ஏழை எதையாவது - தேடினான், தன் பசியைத் தீர்த்துக் கொள்ள. மன்னர் பெருமான் மத்தியான ராஜ போஜனம் உட்கொண்டு, தன் மனைவிமார்களுடனும் மந்திரிகளுடனும் சதுரங்கம் ஆடிப் பொழுதுபோக்குவதற்காக, மாஞ்சோலையின் குளிர்ந்த மரநிழலை நாடி வந்தான். அரசனும் பசியால் அவதிப்பட்ட ஏழையும் ஒருவரையொருவர் அறிந்ததில்லை.

மரக்கிளையைத் தாக்கிப் பழத்தை விழச்செய்த கல்லோ மந்தமான ஜடம்; அது அரசனை நீங்காமல் கௌரவமாக

இருக்க முடியவில்லை. அது அவர் தலை மேல் விழுந்தது. தலைப்பாகை தலையைக் காப்பாற்றியது; ஆனால் அது உருக்குலைந்து கீழே எறியப்பட்டது. மனைவிமார்களுடன் ஆடுகிற குதூகலமான ஆட்டத்தில் அமிழ்ந்தவராக, அரசர் தமது தலைப்பாகையின் துயரமான கதியின் காரணத்தை விசாரிக்க நினைவே கொள்ளவில்லை. ஆனால், அவருடைய மந்திரி பிரதானிகள் அரசருக்குச் செய்யப்பட்ட அபசாரத்தைப் பொறுக்கவில்லை. ராஜசேவகர்கள் துஷ்டனைத் தேடலானார்கள் - மதுரமான பழங்களை ஆவலோடு தின்று கொண்டிருந்தான் அந்தப்பரம தரித்திரன்.

மாட்சிமை தங்கிய மன்னர் பெருமானுடைய தேகத்திற்குக் குறைந்த அளவு இடையூறு பண்ணியவன் மீது முதன்மையான தண்டனையை விதிப்பதன் மூலமாகத் தங்கள் ராஜ பக்தியை நிரூபிக்க விரும்பிய ராஜ சேவகர்கள் சதாகாலமும் அரசரின் கடுந்தண்டனையை எதிர்பார்த்த வண்ணம் இருந்தார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில்கூட, மன்னரின் நீதி அமைச்சர்கள் அதே இடத்தில் விசாரணை நடத்தி மன்னரைத் தாக்கிய காரணத்தால் மரண தண்டனையை அந்த ஏழையின் மீது விதித்தார்கள்.

அரசர் ஆட்டத்தினின்று எழுந்தார். நீதி அமைச்சர் அந்தத் துஷ்டன் செய்த அடாத செயலுக்காகக் கடுமையாகத் தண்டிக்கப்பட்டானென்று பிரகடனம் செய்தார். மன்னர் பெருமான், "அவனை இங்கே கொண்டு வாருங்கள்" என்றார். அந்தப்பரம ஏழை பட்டத்து முன்னர் முன் நிறுத்தப்பட்டான். "நீ ஏன் கல்லை விட்டெறிந்தாய்?" என்று அரசர் வினவ, "ஒரு மாம்பழத்தை அடைவதற்கு" என்றான் அந்தப்பரம ஏழை. "எங்கே அக்கல்லை வீசினாய்?"என, "மரத்தின் மீது" என்றான். "உனக்கு மாம்பழம் கிடைத்ததா?" என்று கேட்க, 'ஆம், மஹாராஜா" என்று பணிந்தான் ஏழை. "நீ மாம்பழத்தைச் சாப்பிட்டாயா?" என, "ஆம், மகாராஜா!" என்று ஒப்புக்கொண்டான். நீதி அமைச்சரைப் பார்த்து மன்னர், "இந்த ஏழை பசியால் பரிதவித்தபடியால் மரத்தில் கல்லை விட்டெறிந்தான். மாம்பழங்கள் இரண்டு விழுந்தன.

அவற்றைத் தின்றான். பசிக் கொடுமையினின்று நீங்கி எவ்வளவு காலம் அவனால் சுயேச்சையாக இருக்க முடியும் என்பதை இப்போது எனக்குச் சொல்லும்" என்று கேட்டார். "மகாராஜா! இருபத்து நான்கு மணி நேரம்" என்றார் நீதி அமைச்சர்.

"அதிருக்கட்டும், நாம் தீர்ப்பு வழங்குவோம் இப்போது" என்றார் வேந்தர். அக்கூட்டத்தினர் நீதிபதியின் தீர்ப்பைக்காட்டிலும் தீயதாயிருக்குமோவெனக் கருதி மூச்சடக்கிக் கொண்டு காத்திருந்தனர். "இன்று முதல் இப்பூலோகத்தில் இருக்கும் இறுதிக் காலம் வரை, இந்தப் பரம ஏழை தன் வாழ்க்கைக்குப் போதுமான திரவியத்தை எமது பொக்கிஷத்திலிருந்து பெற்றுக் கொள்ளட்டுமென்று நாம் உத்தரவிடுகிறோம். இக் கட்டளையை இக்கணமே நிதி அமைச்சருக்குத் தெரியப்படுத்துங்கள்" என்று தீர்ப்பு அளித்தார்.

ஒவ்வொருவரும் அதிசயப்பட்டார்கள்! இது எத்தகைய தண்டனை! தான் அரசரை ஆட்டத்தில் மகிழ்வித்ததால், அந்த இனிமையான சந்தர்ப்பம் அரசரைக் குதூகலப்படுத்தி ஏழைக்கு அந்தப் பரிசை வழங்கும்படி செய்தது; அதனால் அந்தச் சம்பவத்திற்குத் தானே காரணமென பட்டத்து ராணி கருதினாள். அர்த்த புஷ்டியுடன் அவள் புன்முறுவல் செய்தாள்.

அரசர், அரசியைப் பார்த்து, "என் அன்பே! மரம் உணர்ச்சியுள்ள பொருளா? உணர்ச்சியற்ற பொருளா?" என்று கேட்டார்.

"பிராணநாதா! அது உணர்ச்சியற்றது".

"நான்?"

"மகாப்பிரபுவே! என்ன கேள்வி இது! சிருஷ்டியில் மகுடம் போன்றவன் மனிதன் - உணர்ச்சி பொருந்தியவன். மாந்தர்களில் தாங்கள் ஆபரணம் போன்றிருக்கிறீர்கள். உண்மையில் தெய்வீகத்தன்மை வாய்ந்தவர்கள். அறிவிலும் ஞானத்திலும் தங்களை மிஞ்சியவர்கள் யார்?"

"அப்படியானால், என் அன்பே! சைதன்யமில்லாத ஓர் மரத்தைக்காட்டிலும் இறைவனால் அருளப்பட்ட இந்த எனது அந்தஸ்தில் மிகவும் தகுதி வாய்ந்தவன் சைதன்யமுள்ளவாசியாகிய நான் என்று நிரூபிக்க வேண்டியது நியாயந்தானே?"

"என் பிராண நாதா! தாங்கள் மிகுந்த தகுதி வாய்ந்தவரே. எல்லோரைக் காட்டிலும் ஞானத்தில் தாங்களே சிரேஷ்டமானவர் - ஆனால் இதையெல்லாம் தாங்கள் ஏன் சொல்லுகிறீர்கள்?"

"கவனி! கல்லைக் கொண்டு மரத்தை அடித்தான் ஏழை. அவன் தின்பதற்கு மதுரமான இரண்டு பழங்களைத் தந்தது அது. அவனுடைய பசியைத் தீர்த்தது ஒரு நாள். வீசுகிறபோது கல் என் மீது விழுந்தது. என்னைக் கல்லால் தாக்கியதாக நியாயத் தீர்ப்பு சொல்லப்பட்டது. மரத்தைக் காட்டிலும் மிக்க தகுதி வாய்ந்தவனென்று நான் நிரூபிக்க வேண்டாமா? ஆகையால்தான் அவனுடைய தேவைகள் அவனுடைய வாழ்நாள் முழுவதும் பூர்த்தி செய்யப்பட வேண்டுமென்று நான் உத்தரவிட்டேன்" என்றார்.

அமைச்சர்கள், சேவகர்கள், இராணி ஆகியோர் மன்னர் பாதங்களில் விழுந்து வணங்கி, "எங்கள் அரசரே! பூமியின் மேல் உண்மையில் தாங்கள் ஒரு தெய்வம். இதைப் போல, கடவுளைத் தவிர வேறு யாரால் இவ்வளவு கருணை உள்ளத்தைக் காட்டக் கூடும்? பிரபுவே! இந்த பண்பாட்டிலே தாங்கள் புத்தர் பகவானோடும், ஏகநாதரோடும், பெரிய ரிஷிகளோடும் தகுதி பாராட்டுகிறீர்கள். தங்களைப் போன்ற மன்னர்கள் கருணை, பரந்த நேசம், பொறுமை ஆகிய பண்புகளை வளர்ப்பதற்கு மக்களை ஊக்குவிப்பார்கள். ஆதலால் அறிவூட்டும் பயன்தரத்தக்க உங்கள் அரசாட்சி எண்ணிறந்த வருஷங்கள் நிலைக்குமாக! நீடூழி காலம் வாழ்க!

மகிமை பொருந்திய தங்கள் உதாரணத்தினால் தைரிய மூட்டப் பெற்ற மக்கள் ஒருவரையொருவர் நேசித்து, ஒருவருக்கொருவர் சேவை புரிந்து, இங்ஙனம் இதயத் தூய்மை

பெற்றவர்களாக தெய்வீகச் சரீரிகளாக மாற்றிக் கொள்வார்கள். ஓ! பிரபுவே, தங்களுக்குத் தகுதி வாய்ந்த ஊழியர்களாக நாம் சேவை புரிய எங்களை ஆசீர்வதியுங்கள்" என்று வணங்கினார்கள்.

## 2. அக்பரும் பிச்சைக்காரனும்

அக்பர் பாதுஷா பெரிய விருந்து ஒன்று நடத்தினார் ஆயிரக்கணக்கான மக்கள் அதில் கலந்துகொண்டார்கள். ஏழை பணக்காரர் ஆகிய எல்லா மக்களுக்கும் சம்பிரமமான உணவு படைக்கப்பட்டது. அரண்மனை ஹாலில் உட்கார்ந்த ஒரு கூட்டத்தார் பாதுஷாவின் பெருமைகளைப் பாடி, "அக்பர் பாதுஷாக்கீ ஜே" என்று உரத்த குரலில் கோஷமிட்டார்கள். சாளரச் சாய்ப்பினின்று (Balcony) நிகழ்ச்சிகளைக் கவனித்துக் கொண்டிருந்த அக்பர் பாதுஷா பாட்டிலும் கோஷத்திலும் கலந்து கொள்ளாமல் பிச்சைக்காரன் போலிருந்த ஒருவனை அழைத்து வருமாறு ஆளை ஏவினார். "போஜனம் அளிக்கப்படமாட்டாதென்று அவனிடம் போய்ச் சொல். என்னைப் போற்றுகிற கீதங்களில் கலந்து கொண்டு, "அக்பர் பாதுஷாக்கீ ஜே" என்று கோஷமிடாவிட்டால், அரண்மனையில் நுழையக்கூட அவனை அனுமதிக்கலாகாது. அவனை அரண்மனையிலிருந்து இழுத்துக் கொண்டு போய் வாசலுக்கு வெளியே கழுத்தைப் பிடித்துத் தள்ளுங்கள்" என்றார். பாதுஷாவின் கட்டளைகள் அந்தக் இரக்கமின்றி நிறைவேற்றப்பட்டன.

அன்றிரவு அக்பர் படுக்கையில் அங்குமிங்கும் புரண்டு கொண்டிருந்தார், தூக்கமில்லை. "அக்பர்! நான் மகத்தான கடவுளாயிருந்தாலும், பல்லாயிரக்கணக்கான அறிஞர்கள் என்னைப் பாராட்டிப் பாடினாலும், மிகத் தாழ்த்தப்பட்டோர்களிலும் தாழ்ந்தவர்களையும், மிகுந்த ஏழைகளிலும் ஏழைகளையும் என்னைத் தூற்றுகிற - கடவுளே இல்லை என்று நாத்திகம் பேசுகிற - மகா கொடியவர்களிலும் கொடியவர்களையும் நான் புறக்கணிக்காமல் அவர்களை

ஆசீர்வதித்து ரக்ஷித்துவரத் தயங்குவதில்லை. உனது புகழ்ச்சியைப் பாடாத ஒருவனுக்கு உணவு கொடுக்க மறுக்கலாமா? அந்த மனிதர் ஒரு பெரிய மஹான் - எனது பக்தர். உனது புகழை அவன் பாடத் தேவை இல்லை; ஆனால் அவனுக்குப் உணவு படைத்தால், நீ ஆசீர்வதிக்கப்படுவாய்'' என்றது ஒரு குரல் - மர்மமான குரல்.

அக்பர் தமது செவிகளையே நம்ப முடியவில்லை. அழுத்தம், ஓசை முதலியவற்றில் அக்குரல் வியாபித்துப் படுக்கையறை முழுதும் அச்சொற்கள் எதிரொலித்தன. இறுதியில் அக்பர் அது இறைவனுடைய குரலாகவே இருக்குமென்று நம்பினார்.

மறுநாள் அதிகாலையில், அந்த ஏழையைத் தேடுவதற்காகத் தமது தூதர்களை அனுப்பினார் அக்பர். அவன் வந்ததும் அக்பர் அவனுடைய காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டார். முனிவர் புன்முறுவல் செய்தார். "பாதுஷா! தாங்கள் மன்னிப்பு கேட்கத் தேவை இல்லை. கடவுள் ஒருபோதும் கோபமூட்டப்படமாட்டார். அது போலவே அவருடைய அடியார்களும். தாங்கள் ஆசீர்வதிக்கப் பெற்றீர்கள். ஏனெனில் தாங்கள் என்னைப் புறக்கணித்த செயலானது இறைவனுடைய குரலோசையை உற்றுக் கவனிக்கவும், அவரிடமிருந்து ஒரு பாடத்தைக் கற்றுக்கொள்ளவும் உங்களுக்கு ஒரு சந்தர்ப்பம் அளித்தது'' என்றார் அந்தமஹான்.

## 3. Milk, தூத், பால், க்ஷீரம்

நான்கு நபர்கள் கடுமையாகச் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். ஒருவருக்கு ஆங்கிலம் தெரியும். மற்றொருவருக்கு ஹிந்துஸ்தானியும், இன்னொருவர்க்குத் தமிழும், நாலாவது நபருக்கு சமஸ்கிருதமும் தெரியும். ஆங்கிலம் அறிந்தவர் 'Milk' என்றார். ஹிந்துஸ்தானி தெரிந்தவர் 'தூத்' என்றார். தமிழ் தெரிந்தவர் 'பால்' வேண்டுமென்றார்.

சமஸ்கிருதம் தெரிந்தவர் 'க்ஷீரம்' வேண்டுமென்றார். அப்போது இந்த நான்கு மொழிகளையும் கற்றறிந்த நிபுணர் ஒருவர் அங்கே வந்து, அவர்கள் சண்டை போடுவதைக் கண்டு, உண்மை அறிந்து, பின் அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கோப்பை பால் கொணர்ந்தார். நால்வரும் பாலைக் குடித்தார்கள். சண்டை தீர்ந்தது. பால் ஒன்று - பெயர்கள் நான்கு. இதைப் போலவே எல்லா மதங்களின் சாராம்சத்தை அறியாத அஞ்ஞானிகள் சண்டையிடுகிறார்கள். எல்லா மதங்களின் சாராம்சமும் ஒரே மாதிரியானது. "பொறுமையுள்ளவனாக இரு; தாராள மனப்பான்மையுடன் இரு; எல்லா மதங்களுக்கும் மரியாதை செய்; எல்லா தீர்க்கதரிசிகளையும் வணங்கு. சாராம்சத்தை அறிந்து, மேலான ஸாந்தியை அனுபவிப்பாயாக!" என்பதுவே மேலான உபதேசமாகும்.

## 4. கவலையின் கதை

நாலாயிரம் ரூபாய்க்கு ஒரு ஜமீன்தார் அழகான பங்களா ஒன்றைக் கட்டி முடித்தார். அவர் பல வருடங்களாகச் சேர்த்துவைத்த தொகை அது. பங்களாவை எப்படிக் கட்ட வேண்டுமென்று அவரே யோசித்து யோசித்துத் தமது சொந்த மேற்பார்வையில் கட்டி முடித்தார். இப்போது தினந்தோறும் இரவில் அந்தப் பங்களா இடிந்து நொறுங்கியதாகக் கனவு காண்கிறார். அவர் பெரிதும் கவலைக்குள்ளானார். அறிவிற் சிறந்த ஜோதிடர்களைக் கண்டு விஷயத்தைக் கூறினார். கட்டடம் நிலைக்காதென்று அவர்களும் உறுதிமொழி கூறினார்கள். அப்போது ஜமீன்தார் அடைந்த கவலைக்கோ அளவு இல்லை.

புத்திசாலியான அவருடைய மனைவி அதை விற்கும்படி வேண்டினாள். ரூபாய் நாலாயிரத்திற்கே அப்பங்களா விற்கப்பட்டது. வாடகைக்கு அமர்த்தப்பட்ட குடிசையிலே ஜமீன்தார் நாற்பது நூறு ரூபாய் நோட்டுகளுடன் குடி புகுந்தார். அன்றிரவு நன்றாகத் தூங்கினார் கவலையில்லாமல்

மறுநாள் எழுந்தவுடன், தாம் விற்ற பங்களாவை யாரோ போக்கிரிகள் தீ வைத்துக் கொளுத்திச் சாம்பலாக்கி விட்டதாகச் செய்தி கேட்டார். அவரே போய் எரிந்து கொண்டிருந்த பங்களாவை - பரிதாபகரமான காட்சியைக் கண்டார் - சடுகளவு கவலையில்லாமல், நல்ல நேரத்தில் அதை விற்று விட்டதற்காக அவர் உள்ளுக்குள் உவகை கொண்டார். அந்தபங்களா அவருடையது அல்ல. தமது பெட்டியில் வைத்திருந்த நாற்பது ரூபாய் நூறு நோட்டுகளை ஞாபகப்படுத்திக் கொண்டிருந்தார் - அவருடைய பணம் குடிசைக்கு ஓடினார்.

பல திகில்கள் அவரைப் பயமுறுத்தின. கள்வர்களின் நினைவுகள் இரவு முழுதும் அவரைக் கண்விழிக்கச் செய்தன. அவர் தமது சகோதரர்களையும் - தம்முடைய புத்திரர்களையும் கூட சந்தேகப்படலானார். தர்ம பத்தினியின் உபதேசம் அவரைக் காப்பாற்றலாயிற்று. அவளுடைய யோசனைப்படி பணத்தை அரசாங்க வங்கியில் செலுத்தி ரசீது வாங்கிக் கொண்டு வந்தார். மறுநாள் துணிகரமான வங்கிக் கொள்ளை நடந்தது. நமது ஜமீன்தாரோ கவலைப்படவில்லை. அவரிடம் அரசாங்க வங்கியின் ரசீது பத்திரமாய் இருந்தது.

அச்சம் அவரை மீண்டும் அலைக்கழிக்கத் தொடங்கியது. புத்திரர்கள் விஷம் கொடுத்துத் தம்மைக் கொன்று விட்டு, வங்கி ரசீதைக் கொண்டு பெருந் தொகையை உரிமையுடன் பெற்றுக்கொள்வார்களே என்ற எண்ணம் அவரைப் பிடித்து வாட்டலாயிற்று. அந்தகிராமத்தில் அநாதை ஆசிரமம் ஒன்று இருந்தது. பல கஷ்டங்களுடன் அதை நிர்வகித்துக் கொண்டிருந்த பரிசுத்தமான உள்ளம் படைத்த ஒரு சாது ஜமீன்தாரை அணுகி பொருளுதவியை நாடினார். ஆண்டவனுடைய ஆணை அதுவே என்று உணர்ந்த ஜமீன்தார் அநாதை ஆசிரம வளர்ச்சிக்காகத் தமது நன்கொடை என்று கூறி அந்த சாதுவிடம், வங்கி ரசீதைக் கொடுத்துவிட்டார். ஜமீன்தாரின் பெயரில் பெரியதோர் கட்டடம் அமைக்கப்பட்டது. ஜமீன்தார் பெருந்தன்மையான - தாராள மனப்பான்மை கொண்ட

தருமசீலர் என்ற புகழ் எங்கணும் பரவலாயிற்று. மக்கள் அவரைப் பெருமதிப்புடன் பாராட்டலாயினர். அச்சம் எதுவுமே அவருக்கு இல்லை. வாழ்நாள் முழுவதும் மக்கள் தம்மை மகிழ்ச்சியுறச் செய்வார்கள் என்றும், தாம் அமைதியுடன் காலங்கழிக்கலாமென்றும், இவ்வுலகை நீத்து மறு உலகுக்குப் போனால் தாம் செய்த தருமமும் அநாதைகளின் ஆசிகளும் பிரார்த்தனைகளும் அவ்வுலகில் தம்மை நல்ல நிலையில் நிறுத்துமென்றும் ஜமீன்தார் தெளிவாகத் தெரிந்துகொண்டார்.

நீதி :- பற்றும் பந்தமும் துக்கத்தை விளைவிக்கின்றன. "என்னுடையது" என்று நீர் மதிப்பிடுவதெல்லாம் உமக்குச் சத்துருவாக மாறிவிடுகின்றன. எல்லாத் துயரங்களும் இவற்றினின்று கிளம்புகின்றன. விஷயப் பொருளிடமிருந்து நீர் அலாதியாக அகல அகல, அது உம்மை படிப்படியாகத் தொந்தரவு கொடுப்பதை நிறுத்தும். பந்தத்தின் அடிவேரை அறுத்தெறி. எல்லாவற்றையும் அவருடையதாக (இறைவனுடையதாக) பாவிப்பீராக. நீர் சந்தோஷமும் ஸாந்தியும் அனுபவிப்பீர்.

## 5. கிழவியும் ஊசியும்

பழுத்த கிழவி ஊசி ஒன்றை இழந்துவிட்டாள். வெளியே போய் அவள் ஊசியைத் தேடினாள் நிலா வெளிச்சத்திலே. ஒருவன் அவளைப் பார்த்து, "அம்மா! என்ன தேடிக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்க அவள், "ஊசி காணாமற் போய்விட்டது வீட்டிலே. அங்கே ஒரே இருட்டாயிருக்கிறது. இங்கே அதைத் தேடுகிறேன். ஏனெனில், இங்கே நல்ல நிலா வீசுகிறது" என்றாளாம்.

உலோகாயத மக்கள் இக் கிழவியைப் போலத்தான் இருக்கிறார்கள். வெளிப் பொருள்களிலே அவர்கள் ஆனந்தத்தைத் தேடுகிறார்கள். ஓ, மனிதா! உனக்குள்ளே!

அந்தர்முகமாகப் பார். மனத்தை அடக்கு. உன்னுடைய ஆத்மாவிலேயே ஆனந்த நிறைவைக் கண்டுபிடிப்பாய்.

## 6. ஸ்வர்ணகேச மகரிஷியின் கதை

இமயமலைச் சாரலில் அழகான பள்ளத்தாக்கில், ஒரு மகாத்மா வசித்து வந்தார். அந்தக் காலத்தில் பாகீரதி நதியில் இன்று போல வெள்ளம் எப்போதும் ஓடிக்கொண்டிருக்கும். நதிக்கரையில் புற்களால் கட்டப்பட்ட சிறு குடிசையில் மகாத்மா வசித்துவரலானார். அப்போதைக்கப்போது கிடைத்துவந்த உணவோடு திருப்தியடைந்துவந்தார். சதா தெய்வ சிந்தனையிலேயே பொழுது போக்கிக்கொண்டு மகிழ்ச்சியாக இருந்துவந்தார்.

ஒரு நாள் காலையில் அவருக்கு ஓர் எண்ணம் உண்டாயிற்று. ஊர் ஊராகச் சுற்றித் திரியும் பரிவ்ராஜக வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டுமென்பதே அந்த எண்ணம். அங்ஙனமே, இமயமலைப் பள்ளத்தாக்கைவிட்டு நகரத்திற்குப் புறப்பட்டார். ஆன்மீக ஒளி அவரைச் சுற்றிலும் கவர்ச்சிகரமாக ஜ்வலித்தது. மக்கள் அவரைப் பார்த்து வியந்தனர். அந்த மகாத்மா தமது போதனை, சொற்பொழிவு, தின்சரி வாழ்க்கை முதலியவற்றால் அவர்கள் மனத்தைக் கொள்ளை கொண்டார். அவருடைய சௌந்தர்யமான உடலமைப்பு எல்லோரையும் வசீகரித்துவிட்டது. அழகான தாடியும், தலைமுடியும் பொன்னிறத்தை ஒத்திருந்தன. இதனால் இவர் ஸ்வர்ணகேச மகரிஷி என்ற பெயரால் அழைக்கப்பட்டு வந்தார். (ஸ்வர்ணம் = பொன். கேசம் = முடி.)

இவ்வாறு ஊர் ஊராகச் சுற்றும்போது, ஒருநாள் ஒரு கிராமத்தின் வழியாகச் சென்றுகொண்டிருந்தார். குழந்தையைக் கையில் தூக்கிக் கொண்டவண்ணம், ஒரு மாது, மகரிஷியை அணுகினாள். ஆறு குழந்தைகள் ஒவ்வொன்றாக இறந்துபோன விசனப்படத்தக்க தனது கதையை அவள் சொன்னாள். கடுங் காய்ச்சலால் பெரிதும் அவதிப்பட்டுக்

கொண்டிருக்கும் அந்த ஏழாவது குழந்தையைக் காப்பாற்றுமாறு அவள் வேண்டினாள். ஸ்வாமி ஸ்வர்ணகேசர் அவள் மீது இரக்கங்கொண்டு, ஆறுதல் கூறினார். பின், அவர் தமது தாடி முடி ஒன்றைப் பிடுங்கி, "கௌரவமுள்ள சகோதரியே! இந்த கேசத்தை எடுத்துக்கொள். இதைப் பத்திரமாக வைத்துக்கொள்; உன் குழந்தைக்குக் காய்ச்சல் தீர்ந்து குணமாகும்" என்று கூறினார்.

அந்த கேசத்தை எடுத்துக் கொண்டு, வெகு மகிழ்ச்சியாக விடைபெற்றுக் கொண்டு போய்விட்டாள் அந்த மாது. இறைவன் திருவருளால் குழந்தை காய்ச்சல் விட்டுச் சுகப்பட்டது. இச்செய்தி காட்டுத்தீ போல எங்கும் பரவிவிட்டது. மகாத்மாவின் பெயர் பிரசித்தம் அடைந்தது. குழந்தைகளின் நோயைத் தமது மாந்திரீக முடியினால் குணப்படுத்துகிற ஒரு மகாத்மா விஜயம் செய்துள்ளார் என்று தெரிந்து கொண்டு கிராமங்களிலிருந்தும் நகரங்களிலிருந்தும் மக்கள் திரளாக வந்து குவியலானார்கள்.

மகாத்மாவைத் தரிசிக்கவரும் பக்தர்களின் எண்ணிக்கை நாள்தோறும் அதிகரித்துக்கொண்டே வந்தது. கைக்குழந்தைகளுடன் பெண்கள் ஆயிரக்கணக்கில் வந்து, ஸ்வாமியின் ஆசியைப் பெறலானார்கள். தகுதிவாய்ந்த சிலருக்கு மாத்திரம் மகாத்மா தமது முடியை பிடுங்கி நிச்சயமான குணம் ஏற்படுமென்று ஆசீர்வதித்துக் கொடுத்தார்.

நோயாளிகளின் கூட்டம் வர வர அசாத்தியமாகிவிட்டது. அடக்கமுடியாத அளவுக்கு வந்தது. மகாத்மாவின் முடி வேண்டுமென்ற கூக்குரல்கள் தொடர்ந்து எழுந்தன. கூட்டம் மிஞ்சிவிட்டபடியால், மகாத்மாவால் சமாளிக்க முடியவில்லை. அளவுக்கு மீறிய கூட்டம்! ஒவ்வொரு முடியாகப் பிடுங்கித் தரும் வரையில் பொறுமையுடன் இருக்கக் கூடிய நிலை மாறிவிட்டது. கூட்டம் பொறுமை இழந்துவிட்டது. சிரசாசனத்தில் மகாத்மா நிறுத்தப்பட்டார். கூட்டத்திலுள்ளோர் ஒவ்வொருவரும் முடியை

பிடுங்கிக் கொண்டார்கள். வேதனையால் மகாத்மா அலறினார். தத்தம் நோயைக் குணப்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற ஆத்திரத்தால் மக்கள், மகாத்மாவின் வேதனைக் குரலைப் பொருட்படுத்தவில்லை. அந்தோ! பரிதாபம்! உடல் எங்கும் காயங்களுடன் மகாத்மா உயிர் இழந்தார்.

ஓர் ஆத்மீக சாதகன் பேரும் புகழும் வேண்டுமென்று ஆத்திரப்படக்கூடாது. சித்திகளுக்காகப் பிரயத்தனம் செய்யக் கூடாது. அது பரிதபிக்கத்தக்கது. ஆகாயத்தில் பறத்தல், கந்தக அமிலம் (Nitric acid) குடித்தல், ஆணிகளை விழுங்குதல், நெருப்பில் நடந்துபோதல், பொதுஜன மேடையில் சமாதி அவஸ்தையில் புகுதல், பூமிக்குள் நாற்பது நாள் அன்னாகாரமின்றி புதையுண்டிருத்தல் - இவை ஒரு ஜீவன் முக்தன் அல்லது ஒரு சித்த புருஷனுக்குரிய நிச்சயமான (சோதனை) உரைகல் அல்ல. அற்புதமான சில வேலைப்பாடுகளைக் காட்டுபவன் யோகி அல்ல. வெறும் (லங்கோட்) கௌபீனம் தரித்தலாலோ, உலர்ந்த இலைகளைத் தின்பதாலோ, பனிக்கட்டி சூழ்ந்த பிரதேசங்களில் வாழ்வதாலோ, வேப்பிலைகளைத் தின்பதாலோ அல்லது காற்றும் நீரும் உட்கொண்டு வாழ்வதாலோ மகாத்மா அல்லது சித்தன் ஆகிவிடமாட்டான். இவற்றால் அவனைப் பரிசோதிக்கலாகாது. தம்மைச் சூழ்ந்தவர்களுக்கு ஆனந்தமும் அமைதியும் வழங்குபவரும், மக்கள் சமுதாயத்திற்கு நன்மை செய்பவரும், தாமே அமைதியும் ஆனந்தமும் அனுபவிப்பவரும், கோபம், காமம், பேராசை, பேரும் புகழும் பெறவேண்டுமென்ற ஆசை இவை இல்லாதவரும், வெற்றி தோல்வியில் சமசித்தமுடைமை, உற்சாகத்துடனிருத்தல், கலப்பற்ற ஆனந்தம், கவலை, துயரம், ஆத்திரம் இல்லாமலிருப்பவருமே உண்மையான மகாத்மா. இத்தகைய உத்தம குணங்களினால் ஒரு மகாத்மாவைப் பரிசோதிக்கலாம். உண்மையான குணங்களே உரைகல் ஆகும்.

ஒரு மகாத்மா என்பவர் ஒரு கற்ப விருட்சம். தமது பக்தர்களுக்குத் தேவையானவற்றையெல்லாம் வாரி

வழங்குவார். பக்தனுடைய பக்திக்கு உகந்த அளவு அவருடைய கிருபை பரிணமிக்கிறது. மகாத்மா ஒரு சிந்தாமணி. எதையும், எல்லாவற்றையும் அவரிடமிருந்து நாம் பெறக் கூடும். உம்மைத் தகுதியுடையவராகச் செய்துகொள்க. உம்மைத் தூய்மையுடையவராகச் செய்துகொள்க. மகாத்மா உம்மை ஆத்மசாக்ஷாத்காரம், ஒளி, ஆனந்தம், சுபிட்சம், நித்தியானந்தம் நித்தியத்துவம் இவற்றால் நிரப்பி அவற்றை அனுபவிக்கச் செய்வார். மகாத்மாக்களின் ஆசிகள் எப்போதும் உங்களுக்குக் கிடைக்குமாக! அவர்களுடைய கிருபைக்குப் பாத்திரர்களாக ஆவீர்களாக! சுபம்!

## 7. நம்பிக்கையின் பரிசு!

விலை உயர்ந்த நகைகளை அணிந்து இளவரசன் குளக் கரையில் நின்று கொண்டிருந்தான். தாடி வளர்த்துக் கொண்டிருந்த வயோதிகக் கள்வன் அங்கு வந்தான். அவனுடைய இதயத்தில் பொங்கி வழிந்த தீய எண்ணம் கண்களிலே பிரகாசித்தது. கீழே விழுந்தவனைப் போலப் பாசாங்கு செய்து பரிதாபகரமான குரலை எழுப்பினான். இளவரசன் அரச வழக்கப்படி அவனிடம் ஓடிப் போய், அவனுடைய ஆரோக்கியத்தைப் பற்றிக் கேட்டான்.

"தாகத்தினால் சாகிறேன். குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கொண்டு வந்து தா; குழந்தாய்!" என்றான் அவன். "இதோ உடனே நானே . . ." என்று இளவரசன் குளத்தை நோக்கிச் செல்லலானான். "அன்புள்ள குழந்தாய்! அது அல்ல. நீ கொடுக்கும் தண்ணீர் இந்த ஜன்மத்திலே கடைசியாகக் குடிக்க வேண்டியதாயிருக்கும். உனக்கு மந்திரதீக்ஷை ஆகவில்லை. ஆகையால், இறைவனுடைய தரிசனம் உனக்குக் கிட்டியதில்லை. புனிதமான சொல் (மந்திரம்) தீக்ஷை செய்தால், அந்த மந்திரம் உன் முன்னால் கடவுளையே கொண்டு வந்து நிறுத்தத் தூண்டும். நீ தரும் தண்ணீர் புனிதமடையும். என்னால் குடிக்கக்கூடிய தகுதிபெறும், - நான்

புனிதமானவன் - இவ்வுலகை விட்டு மறையும் போது" என்று விளக்கமாகக் கூறினான்.

இளவரசன் சிறு வாலிபன். "தயவு செய்து எனக்கு மந்திரதீக்ஷை செய்யுங்கள், ஐயா!" என்றான்! வயோதிகன், "என் மகனே! குளத்தில் இறங்கி நீர் மட்டத்தின் கீழ் மூழ்குவாய். ஆனால், போவதற்கு முன், விலையுயர்ந்த இந்த ஆபரணங்களை எடுத்துக் கரைமேல் வைத்துவிடு. மூச்சைப் பிடித்துக் கொள். நான் உன்னை வெளியே வாவென்று கூப்பிடுகிறவரை, தண்ணீருக்குள் தலையை வைத்துக்கொண்டிரு. இதற்கிடையில், தீக்ஷை நிரம்பவும் வல்லமை பெறும் பொருட்டு, நான் பரிசுத்தப்படுத்தும் மந்திரங்களை உச்சாடனம் செய்து கொண்டிருக்கிறேன்" என்றான். சொன்னபடியே செய்தான் இளவரச வாலிபன். கிழவனுடைய பாதத்தருகில் ஆபரணங்கள் கிடந்தன - அவனுடைய இதயத்தில் பெருமகிழ்ச்சி ஊட்டின. தண்ணீருக்குள் வாலிபன் போனான். தலையை நீரில் அமிழ்த்தியதும், கள்வனோ ஆபரணங்கள் அத்தனையும் எடுத்துக் கொண்டு ஓடிப் போனான்.

உறுதி - திட வைராக்யம் ஆகியவற்றால் இளவரசனுடைய உள்ளம் படைக்கப்பட்டிருந்தது. சில நிமிஷங்கள் கழிந்தன. குருதேவருடைய அழைப்பு வரவில்லை. அவர் தன்னை அழைக்கும் வரைக்கும் அவன் நீரினின்று தலையை உயர்த்தவே இல்லை. உணர்வோடு நிகழ்ந்த போராட்டம் உணர்வின்மையில் முடிவுற்றது. பிராணவாயுவுக்குப் பதிலாக அவன் குளிர்ந்த நீரையே உட்கொண்டான். இந்த இளம்பிராய பக்தனுடைய உறுதியும், பூரண சுயசரணாகதியும் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியினுடைய இதயத்தையே நெகிழச் செய்தன. அவர் தமது வைகுண்டத்தை விட்டு பையன் இருந்த குளத்திற்கு விரைந்து வந்தார்.

குளக்கரையில் நின்ற வண்ணம், ஸ்ரீமந் நாராயண மூர்த்தி இளவரசனைக் கூப்பிட்டு, "எனது குழந்தாய்! நான் நாராயணமூர்த்தி - இப்பிரபஞ்சத்தின் கர்த்தா. உன் பக்தியை

மெச்சி மிக்க மகிழ்ச்சியடைகிறேன். இப்போது வெளியே வா" என்று அழைத்தார். ஆனால் பையன் வரவில்லை. அவன் தன் மனத்திற்குள்ளாக, "நீ யாராக இருந்தாலும் சரி, என் குருதேவர் வெளியே வாவென்று என்னைக் கூப்பிடும் வரையில் தண்ணீரை விட்டுத் தலையைத் தூக்கமாட்டேன்" என்று கூறிக் கொண்டான்.

நாராயணமூர்த்தி கள்வன் இருந்த இடத்திற்குப் போனார். போலீஸ் அதிகாரி போலவும் பையனின் தகப்பனார் போலவும் வேஷந் தாங்கி, கள்வனைப் பிடித்து அடித்து, "என் மகனை - நீ கூப்பிடும் வரை - தண்ணீருக்குள் இருக்கும்படி வற்புறுத்தி விட்டாய். அவன் வெளியே வரமாட்டேனென்கிறான். போ - ஓடு - வெளியே வரும்படி கூப்பிடு" என்றார். இருவரும் குளத்திற்குப் போனார்கள். கள்வன், "குழந்தாய் வா, வா, இப்போது தண்ணீரை விட்டு வெளியே வா" என்று கூப்பிட்டான். பையன் தலையைத் தூக்கியதும், கள்வன் கீழே விழுந்து இறந்தான். திடமான நம்பிக்கையும் பக்தியும், சுயசரணாகதியான உணர்வும் கூடி நாராயணமூர்த்தியின் தரிசனம் கிடைக்கும்படியான மேலான பரிசை அந்த இளவரசன் பெறும்படி செய்தன.

(உறுதியான நம்பிக்கையை குருவின்மீது கொண்டதால், இளவரசனுக்கு சுவாமி தரிசனம் கிடைத்தது.)

## 8. என் பாவத்தை ஏற்றுக்கொள்பவர் யார்?

தான் ஒரு பாவமும் செய்ததே கிடையாதென்று கருதி அகம்பாவங்கொண்டிருந்தாள் பார்வதி. இவ்வுலகில் இறந்தவுடன் தன்னை மோக்ஷத்துக்கு இட்டுச் செல்வார்களென்று நிச்சயமாக நம்பியிருந்தாள். ஒருநாள் காலையில் வீட்டைச் சுத்தம் செய்துகொண்டிருந்தபோது, எதிர்பாராதவிதமாக துடைப்பம் அங்கிருந்த கரப்பான்பூச்சி ஒன்றின்மீது விழுந்தவுடன் அது அக்கணமே

இறந்துபோயிற்று. பார்வதியின் உள்ளம் தலைகீழாகக் கவிழ்ந்தது. பைத்தியம் பிடித்தவள்போல அலறினாள். "ஐயோ தெய்வமே! இந்தப் பாவத்தை யார் ஏற்றுக்கொள்வார்கள்? இப்பாவத்தை எப்படி நான் கழுவுவது? இதுவரை ஒரு பாவமும் செய்தறியாதவளாயிற்றே. இப்போது இதைச் செய்துவிட்டேன். நான் என்ன செய்ய வேண்டுமோ?" என்றெல்லாம் ஆற்றொணாத் துயரம் அடைந்தாள்.

அந்தகரப்பான் பூச்சியைக் கையில் வைத்துக்கொண்டு அங்குமிங்குமாக ஓடலானாள். கடைத்தெருவில், சாவித்திரி எனும் செம்படவப் பெண்ணைப் பார்த்தவுடன் அவளுக்கு அதியாச்சரியமாயிருந்தது. அவளைப் பார்த்துப் பார்வதி, 'ஹே துர்பாக்கியப் பெண்ணே! நீ செத்தால், என்ன கதி அடைவாய்? எத்தனையோ பிராணிகளைத் தினந்தோறும் கொன்று குவிக்கிறாய்! இன்று காலை வரைக்கும் நான் வாழ்நாளில் ஒரு பாவமும் செய்ததே கிடையாது. இன்று காலைதான் எதிர்பாராதவிதமாக இந்தக் கரப்பான் பூச்சியைக் கொன்றுவிட்டேன். தக்க பிராயச்சித்தத்தினால் இந்த ஒரு பாவத்தைக்கூடக் கழுவிவிட வேண்டுமென்று என் உள்ளம் போராடிக் கொண்டிருக்கிறது" என்று கதறிப் பதறினாள்.

சாவித்திரி, "அப்படியா? பதற்றம் கொள்ளாதே. கோடிக்கணக்கான மீனைக் கொன்றிருக்கிறேன். நீயோ எந்தப் பாவமும் செய்ததில்லை. கரப்பான் பூச்சியைக் கொன்ற இந்தப் பாவம் உன்னைத் தொந்தரவுபடுத்தத் தேவை இல்லை. அதை என்னிடம் கொடு. மீனைக் கொன்ற பாவத்தால் நிரம்பிய இந்தக் கூடையில் அதைச் சேர்த்துக்கொள்கிறோம். இக்கணமே நீ பாவத்தினின்று விடுதலை பெறுவாய். இதற்காகக் கவலைப்பட வேண்டாம். எனக்கும் கூட கவலை இல்லை. ஏனெனில், மீன்களால் நிரம்பிய கூடையில் ஒரு சிறு கரப்பான் பூச்சியைச் சேர்த்துக் கொள்வதால் பெரிய வித்தியாசம் எதுவும் ஏற்பட்டுவிடாது" என்று விளக்கமாகக் கூறினாள்.

பார்வதிக்குச் சந்தோஷம் வீறிட்டது. இறந்துபோன கரப்பான் பூச்சியைக் கொடுக்கவே, சாவித்திரி அதை உடனே எடுத்து மீன் கூடையில் போட்டுக்கொண்டாள். பார்வதிக்குப் பெரிய பாரமூட்டையைத் தலையிலிருந்து இறக்கியது போன்ற நிவாரண உணர்வு தலையெடுத்தது. சாவித்திரிக்கும் கவலை இல்லை.

தெய்வத் திருவருள் திறமையை யாரால் அளக்க முடியும்? இரு பெண்களும் ஒரே குறிப்பிட்ட தினத்தில் இறந்தார்கள். மோக்ஷத்திற்கு அழைத்துப்போக விமானம் ஒன்று சாவித்திரியை எதிர்நோக்கி வந்தது. நரகலோகத்தார்கள் பார்வதியை நெருங்கினார்கள். குழப்பம் ஒரு பக்கமும் கோபம் ஒரு பக்கமுமாக பார்வதியை அலைக்கழித்தன. தூதர்களைப் பார்த்து "என்ன! தவறு செய்துவிட்டீர்களே! நான் சாவித்திரி பாவி அல்ல, பரிசுத்தமான பார்வதி நான். சாவித்திரியை அழைத்துப் போங்கள். மோக்ஷத்திற்குப் போக விமானத்தை அனுப்புங்கள்" என்று வாதாடினாள்.

நரகலோக தூதர்கள் பார்வதியைப் பார்த்து, "சிறந்த சீமாட்டியே! நாங்கள் தவறுகள் செய்ததே இல்லை. நரகத்திற்கு உன்னை அழைத்துப்போக வந்தோம். மோக்ஷத்திற்கு சாவித்திரி போவாள்" என்று கூறினார்கள். "ஐயா! ஏன் இப்படி?" என்று பார்வதி கேட்டாள். தூதர்கள், அம்மா, பார்வதீ! மீனை விற்பது சாவித்திரியினுடைய கடமையாகும். தன்னுடைய சந்தோஷத்திற்காக அவற்றைக் கொல்லவில்லை - ஆனால் தனது கடமையில் அவற்றைக் கொன்றாள். கடமையைப் பக்தி சிரத்தையோடு கடைப்பிடித்தவள் அவள். அதே நேரத்தில், கடவுள்பால் நிரந்தர பக்தி பூண்டவள். அவள் செய்த சகல காரியங்களையும் ஈஸ்வர அர்ப்பணமாகச் செய்ததன்றி, ஈசுவரருடைய கருவியாகத் தன்னைக் கருதிவந்தாள். ஆகையால் மோக்ஷத்திற்கு உரியவள் ஆனாள். ஆனால், "நான் ஒரு கரப்பான் பூச்சியைக் கொன்றுவிட்டேன்" என்று, அதைக் கொன்று, உணர்ந்தாய். தருமமும் திருப்பணிகளும் செய்தாய் - நான் என்ற தற்பெருமையையும் போலிக் கர்வத்தையும் கொழுக்க

வைத்தாய். அந்த அகம்பாவத்தினால், முனிபுங்கவர்களையும், தூய மஹான்களையும் கேவலமாகக் கருதினாய். இறைவனைப் பற்றியே எண்ணியதில்லை- அவ்வளவு அகந்தை உன்னை மூடிக்கொண்டது. - அளவு கடந்து சுயநலமே வடிவெடுத்தவளாயிருந்தாய். உன்னுடைய பாவத்தைச் சாவித்திரிக்கு மாற்றிவிடும் அளவுக்குக்கூட துணிந்தாய். ஆனால், சுயநலமே பாராட்டாமல், பாவ உணர்ச்சியின் வேதனையினின்று உன்னை விடுவிப்பதற்காக அந்த பாவத்தை அவள் ஏற்றுக் கொண்டாள். ஆகையால் அவளுக்கு மோக்ஷம் தகுதி வாய்ந்தது. நீ நரகத்திற்குப் போக வேண்டும். வா. தாமதிக்காதே" என்று மிகவும் விளக்கமாகக் கூறினார்கள்.

## 9. புறாவை விடுதலை செய்;

தஞ்சாவூர் மகாராஜா மரணப் படுக்கையில் கிடக்கிறார். மருத்துவர்கள் நம்பிக்கை இழந்து கைவிட்டார்கள். அரண்மனையிலுள்ளவர்கள் அனைவரும் கண்ணும் கண்ணீருமாகக் கவலையே வடிவாக நின்றார்கள். அவர்கள் அன்பும் பிரேமையும் வாத்ஸல்யமும் செலுத்திய உயிரின் இறுதிக் கட்டத்திற்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். தூக்கமில்லா இரவுகளும் கண்ணீர் வெள்ளங்களும் அவர்களைத் தளர்ச்சியடையச் செய்து ஊமைகளாக்கிவிட்டன. அவர்களுடைய கதிகலங்கிய வெற்றுப் பார்வைகள் தஞ்சை மன்னரின் முகத்தைக் காட்டிலும் அதிகமாகத் தரையையே நாடின.

"ஏ, பிச்சைக்காரனே! போடா வெளியே, பெரிய பெரிய மருத்துவர்கள் தோல்வியுற்றார்கள். நீயா வெற்றியடையப் போகிறாய்?" என்று அரண்மனை வாயில் காப்போர்கள் கர்ஜித்தார்கள். இக்கூற்றுக்கு இலக்கானவர் ஒரு பிச்சைக்காரர். பிரசித்திபெற்ற மகான் ராகவய்யாதான் அவர் என்பது அவர்களுக்குச் சற்றும் தெரியவே தெரியாது.

அன்று தொட்டு நாகூர் ஆண்டவன் என்ற பெயரால் வழங்கப்பெற்று வருபவர் ஒரு மகத்தான முஸ்லிம் மஹான். ராகவய்யா மகானும் அவருடைய காலத்தவர். அவதூதர்களின் வாழ்க்கையை அவர்கள் கடைப்பிடித்தார்கள். சற்றேறக் குறைய நிர்வாணமாயிருந்த அவர்களது சரீரங்கள் எக்கணத்திலேனும் தங்கள் பூர்வீக இன்ப வீட்டை நோக்கிப் பறந்து செல்லத் தயாராயிருந்தன. ஆகையால்தான், அச்சரீரங்கள் ஞானச் சுடரால் ஜ்வலிக்கும் ஆத்மாவினோடு கட்டுண்டு கிடக்காமல் "தளர்ச்சியாக" ஒட்டிக் கொண்டிருந்தன. அவர்களுடைய தாடி மீசை படர்ந்த முகமானது அரண்மனையில் காணவொண்ணாத அமைதியை எங்கும் பிரகாசிக்கச் செய்தது. உள்ளத்தைப் பெரிதும் கொள்ளை கொள்ளும் மானுஷ்ய உருவத்தின் அழகை அவர்களுடைய கண்களில் ஜ்வலிக்கும் சுடர் அவமானத்தில் ஆழ்த்தியது. கவனம், கண்ணியம், பக்தி ஆகியவற்றை ஒருங்கே வற்புறுத்தக்கூடிய சக்தி ஏதோ ஒன்று அவர்களிடம் காணப்பட்டது. ராகவய்யாவும் நாகூர் ஆண்டவனும் இதயபூர்வமாக ஒரு கருத்துகொண்ட மகான்கள். அவர்கள் சேர்ந்து விளையாடிய அதிசயச் செயல்கள் பலப்பல. எல்லாத் தரங்களிலும் அவர்கள் விஸ்வ கல்யாண் என்பதைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தார்கள். சர்வமங்களம் என்பதே விஸ்வகல்யாண் என்பதற்குப் பொருள். நோயாளிகளைக் குணப்படுத்தியும், சிரத்தையுள்ளவர்களுக்குச் சுபிட்சத்தை வழங்கியும், பக்திமான்களுக்கு ஆத்மானந்தத்தை அள்ளித் தந்தும் ஆதரித்து வந்தார்கள்.

வாயில் காப்போர்களின் கவலை தோய்ந்த வதனத்தை ராகவய்யா உற்றுப் பார்த்தார். "மருத்துவர்கள் தவறியவிடத்துப் பிச்சைக்காரன் ஒருவன் வெற்றிபெறக் கூடாதா? மன்னர் பெருமானின் சங்கதி இன்னது என்று எனக்குச் சொல்லுங்கள். என்னால் உதவ முடியுமாவென்று முயலுகிறேன். பிச்சைக் கேட்க இங்கு நான் வரவில்லை; ஆனால் ஆசி கூற வந்துள்ளேன்" என்று திருவாய்மலர்ந்தருளினார்.

அரசரின் தாயார் சந்நியாசியின் நெஞ்சத்தினின்று வெளிப்பட்ட அமைதியும் உறுதியும் வாய்ந்த சொற்களைக் கேட்டார். அற்பமாகத் தோன்றிய அந்தமனிதர் தமது இதயத்தில் எழுப்பிய நம்பிக்கைச் சுடரை அம்மையார் பற்றிக் கொண்டார். தாயார் ஓடோடி வந்து பிச்சைக்காரனை வரவேற்றார்; வாயிற்காப்போர்கள் முற்றிலும் இகழ்ச்சியாக நோக்கினார்கள். நீரில் மூழ்கி இறப்பவன் மிதக்கிற வைக்கோலைப் பிடித்துக் கொள்வான்.

"தாயே! மன்னரை அடியேன் பார்க்கலாமா? தப்பும் வழி ஏதேனும் நமக்குக் கடவுள் காட்டுவார்" என்றார் அந்தமகான். சாதுவின் மனோ உறுதியினால் உருவாக்கப்பட்ட நம்பிக்கைக்கும், அவருடைய தோற்றத்தினால் காட்டப்படும் நம்பிக்கையின்மைக்கும் நடுவிலே போராடிக் கொண்டிருந்த மன்னரின் மாதா மகானை அரசரின் மாளிகைக்குள் அழைத்துச் சென்றார். பேசாமல் சிறிது நேரம் ராகவய்யா மகான் அரசரை உற்று நோக்கினார். அவர் புன்முறுவலித்தார். அங்கு சுற்றிலும் இருந்தோர் அனைவரும் தம்மையறியாமலே புன்முறுவல் செய்தார்கள்; தங்கள் பாரம் குறைந்ததான உணர்வைப் பெற்றார்கள். அம்மகான், "எந்த மருந்தையும் கொடுக்க நான்கூஅறிவுறுத்தமாட்டேன்" என்று கூறவே, மாதர்கள் அழலானார்கள். "ஆனால், பரிகாரம் எங்கு தேடலாமென்பதை நான் கூறுவேன்" எனவும், விம்மி விம்மி அழுது கொண்டிருந்த தாயார், "தயவு பண்ணுங்கள்" என்றார். "நாகூர் ஆண்டவனிடம் புறப்படுங்கள். மாம்பழத் தோட்டத்திலே மரத்தடியில் அமர்ந்திருப்பார். உங்களுடைய விஷயங்களைக் கூறுங்கள், தேவையான மருந்தை அவர் வழங்குவார்" என்று மகான் செப்பினார்.

நாகூர் ஸ்தலத்தை நாடிச் செல்லும் சாலை வழியே மோட்டார் வண்டி ஒன்று அதிவேகமாகப் பறக்கிறது. அரசரின் தாய் உள்ளம் ஒரு மைல் தூரம் முன்னாலேயே சென்றது! மிகவும் கண்ணியம் பொருந்திய, வழக்கமாகக் கர்வம் கொண்ட ஹிந்து மன்னரின் அன்னை, அரை நிர்வாணமாயும் விபூதியால் உத்தூளிக்கப்பட்டவராயும்

விளங்கிய முஸ்லிம் பக்கிரி நாகூர் ஆண்டவன் என்ற மகானின் பாதங்களில் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டார். பக்கிரியின் பாதங்களைப் பற்றிய வண்ணம், "பிரபோ! என் மைந்தனைக் காப்பாற்றுங்கள்" என்று கெஞ்சினார்.

பக்கிரி தமது சிரசை வேறு பக்கம் திருப்பிக் கொண்டார். 'ஹூம்! முட்டாள்தனமான காரியங்களையெல்லாம் செய்து விட்டுப் பின் அபாயத்தில் சிக்கி அல்லலுறும்போது என்னைத் தேடி வருகிறீர்கள் . . . சரி . . . . நான் சொல்லுவது போலச் செய்வீர்களா?" என்றார். "சரி, பிரபோ! என்ன வேண்டுமானாலும் செய்கிறேன்" என்றார் அம்மையார். பின்னர், நாகூர் ஆண்டவன் பக்கிரி பின்வருமாறு திருவாய்மலர்ந்தருளினார்: - "நேராக அரண்மனைக்குச் செல்லுங்கள். மன்னர் . படுத்திருக்கும் அறையிலே தலைக்கு நேராகக் கூரையில் புதிதாகக் காரைப்பூச்சு வட்டமொன்றைக் காண்பீர்கள். அதை இடித்து விடுங்கள். சுவரில் தன் உயிருக்கு மன்றாடிக் கொண்டிருக்கிறது ஒரு புறா. உடனே அதை விடுதலை செய்யுங்கள். உங்கள் புத்திரர் · குணமாவார். கருணையற்ற அவரது இச் செயலால்தான் அவர் அவஸ்தைப்படுகிறார்; புறாவைப் பாதிக்கிற அதே வலியை மன்னர் சகித்துக்கொள்ள வேண்டியதாயிற்று! புறா பிராணனை விட்டுவிட்டால், புரவலரும் அதே க்ஷணத்தில் ஆவி துறப்பார், பாய்ந்து செல்லுங்கள். அவர் உயிர் பிழைப்பார்; ஆனால், இந்த க்ஷணத்தில் நீங்கள் ஓர் வாக்குறுதி எடுத்துக் கொள்ள வேண்டும். உயிருள்ள எந்தப்பிராணிக்கும் எக்காலத்திலும் மிகக் குறைந்தளவு கெடுதிகூட செய்யக் கூடாது என்பது. எவ்வுயிரும் புனிதமுள்ளது என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். மேலான பிரம்மாவுக்கு உள்ளது போலவே, எறும்பு ஒன்றுக்கு அவ்வளவு நீதியும் உரிமையும் உண்டு, தன் தன் சொந்த வாழ்க்கை நடத்துவதற்கு. எந்த உயிரின் வாழ்க்கைப் பாதையிலும் தலையிட்டுத் தடுக்க மனிதனுக்கு உரிமை இல்லை, செல்லுங்கள்."

மகானுடைய ஆசிகளால் காவல் பெற்றவராக தாயார் அரண்மனைக்கு வேகமாக வந்தார். அரசரின் அறைக்குள் நுழைந்தார். அரசர் தலைக்கு நேரே கூரையில் ஒரு குறி வைக்கப்பட்டது. கொத்தனார்கள் வரவழைக்கப்பட்டார்கள்; ஒரு க்ஷணத்தில் காரைப் பூச்சு இடித்துத் தள்ளப்பட்டது. பரிதாபகரமான காட்சி! வாழ்வுக்கும் மரணத்துக்கும் இடையில் போராடிக் கொண்டிருந்த புறா ஒன்று பாதி மூடிய கண்களுடன் அவ்விடத்தில் வாய்விட்டுச் சொல்லொணாத வேதனையால் வாட்டப்பட்டுத் துடிதுடித்துக் கிடந்தது. தாயார் அந்தப்புறாவுக்குச் சிசுருஷை செய்து உயிர் வாழ வைத்தார். மன்னர் படுக்கையை விட்டெழுந்து உட்கார்ந்தார். புறா தின்ற ஒவ்வொரு அரிசியும், அதன் வாய்க்குள் புகட்டிய ஒவ்வொரு துளி நீரும் மன்னரை உயிர்ப்பித்தன. "என் படுக்கைக்கு மேலே சுவரில் ஒரு துளை இருந்தது. அதில் புறாக்கள் புகுந்து வாழ்ந்து வந்தன. என் படுக்கையை அழுக்குப்படுத்தின. அவை எனக்கு ஓர் உபத்திரவமாகத் தோன்றின. அதைக் காரையால் அடைத்துவிடுமாறு உத்தவிட்டேன்" என்று அரசர் ஒப்புக்கொண்டார். தாயார் பொறுமை இழந்தவராக, "நீ காப்பாற்றப்பட்டாய், என் மகனே! - நாகூர் பக்கிரியின் திருவருளினால். அவரிடம் செல். அவரை வணங்கு. நீ எந்த உயிர்ப் பிராணிக்கும் எக்காலத்தும் மிகக் குறைந்தளவுகூட கேடு விளைவிக்கக்கூடாது என்ற வாக்குறுதியை அம்மகான் சந்நிதியில் எடுத்துக்கொள். காலம் கழிக்காமல் உடனே செல்" என்று வற்புறுத்தினார்.

ஹிந்து மன்னர் கிரீடம் முஸ்லிம் பக்கிரியின் பாதங்களை முத்தமிட்டன. நாகூர் ஆண்டவன் என்ற பெயரை இட்டவர் அவரேதான். அன்று தொட்டு அந்தமகான் இப்பெயரால் வழங்கப்பெற்று வருகிறார். பக்கிரி காலமான பிறகு அந்தமகானின் சமாதியின் மீது மன்னர் மாபெரும் கோவில் ஒன்றைக் கட்டுவித்தார். கோவிலுக்கே அநேக நிலங்களை மானியமாக வழங்கினார். அந்நிலங்களில் விளையும் நெல் தானியங்களால் ஆயிரக்கணக்கான புறாக்கள் உணவளித்து வளர்க்கப்பட்டு வரவேண்டுமென 'உயில்' எழுதி வைத்தார். இவ்வழக்கம் இன்று கூட

கடைப்பிடிக்கப்பெற்று வருகிறது. இக்கோவில் அற்புதமான திருவருளையும், குணப்படுத்தும் சக்தியையும், ஸாந்தியையும், ஐக்கியத்தையும் சுபிட்சத்தையும் எங்கணும் சுடர்விட்டுப் பரப்பிக்கொண்டு வருகிறது. நாகூர் ஆண்டவன் மஹிமையே மஹிமை! அவருக்கு எனது வந்தன வழிபாடுகள் உரித்தாகுக! ஓம் தத் ஸத்.

## 10. நமது கல்யாணம் கரையாதது

சுவாமி ஆசாலானந்தா பெரிய மஹான். அவர் பாதத்தில் விழுந்து, சஞ்சல சைதன்யா .என்பவர், "குருமஹராஜ்! நான் பெரிய தவறு செய்துவிட்டேன். தங்களுடைய தாமரைத் திருவடிகளை விட்டுப் போனதால், நான் இமயமலை அளவு குற்றம் புரிந்துவிட்டேன். தங்களை விட்டுப் பிரிந்த பின்னர் எண்ணிறந்த அனுபவங்கள் ஏற்பட்டன. தங்களிடம் எனக்குள்ள பக்தி சிரத்தையை அவை மேலும் வளர்த்தன. உண்மையில், நான் தங்களுடையவன். எங்கு நான் போக முடியும்? அடியேன் சுற்றித் திரிந்த காலங்களில், தங்களுடைய திருவருள் என்னை வழி காட்டியும், என்னைத் தாங்கியும் துணை புரிந்துள்ளதென்று நான் கண்டு கொண்டேன். இனி தங்களுடைய செங்கமலத் திருவடிகளை விட்டு என் மனத்தை அலையவிடமாட்டேன்" என்று பக்தி விநயத்துடன் பகர்ந்தார்.

"குழந்தாய்! கவலைப்படாதே. அமர்ந்து கொள். தோற்றமாகிய இவ்வுலகத்தில், இத்தகைய காரியங்கள் இயற்கையாகவே நிகழும். அது யாருடைய குற்றமும் அல்ல. இரண்டு உள்ளங்கள் நெருங்கி வரும்போது கருத்து வேற்றுமைகள் உண்டாவது இயல்பு. சில வேளைகளில் சண்டை கிளம்பும். இறுதியில், இதயத்தின் அன்பு எல்லாவற்றையும் முறியடித்து, வித்தியாசங்களைச் சரிப்படுத்திச் சமப்படுத்துகிறது. வயோதிக தம்பதிகளிடையிலும்கூட இப்படி நிகழ்ந்துள்ளது. ஞானம் நிறைந்த இந்தக் கதையை உனக்குச் சொல்லுகிறேன், கேள்" என்று கதை சொல்ல ஆரம்பித்தார் ஸ்வாமி ஆசாலானந்தா.

ஆர்வமுள்ள அந்தமாணவர் கதையின் சாராம்சத்தைக் கிரகித்துக் கொள்ள குருதேவருடைய திருவடிகளின் அருகில் அமர்ந்தார் . . . . .

ராமேஸ்வர் தயால் என்பவர் தமது மனைவி பிரேமாவதியுடன் அன்னியோன்னியமாக வாழ்ந்து வந்தார். அவர்கள் பிரிக்கவொண்ணாத் சதிபதிகளாக, ஐம்பது வருடங்களுக்கு மேலும் ஒற்றுமையாய் வாழ்ந்து வந்தார்கள். புத்திரர்கள், பேரன்கள், கொள்ளுப் பேரன்கள் புடைசூழ, சஷ்டியப்த பூர்த்தி விழா வெகு விமரிசையாக நடைபெற்றது. அவர்களிடையில் அற்ப சொற்ப சச்சரவுகள் ஏற்பட்டிருக்கலாம். ஆனால், அவர்களிடையில் நிலவிய பரஸ்பர அன்பு வெற்றிகரமாக இயங்கிக் கொண்டிருந்தது. இலட்சிய தம்பதிகளின் ஓர் உதாரணமாக விளங்கினார்கள்.

கோழி வளர்த்து ஜீவனம் நடத்தினார்கள். கோழிக் குஞ்சுகளை வளர்ப்பது பிரேமாவதியின் வேலை; முட்டைகளைச் சந்தைக்குப் போய் விற்பது ராமேஸ்வரின் வேலை. சுகமான வாழ்க்கை நடந்து வந்தது. கோழிக் குஞ்சைப் பொரித்துச் சாப்பிட வேண்டுமென்ற மிதமிஞ்சிய ஆசை வயோதிக ராமேஸ்வருக்கு இருந்து வந்தது. ஆனால், பிரேமாவதி அதை அனுமதிக்கவில்லை. "பழம் தருகிற மரத்தை யாராவது வெட்டுவார்களா?" என்று கேட்பாள். தனது குறிக்கோளை நிறைவேற்றுவதற்கு நல்லதோர் தந்திரம் பண்ணினார் தயாள். ஒரு நாள் பெருமூச்சு வாங்கிக் கொண்டே வீட்டிற்குள் ஓடி வந்தார்.

"என்ன நடந்தது? ஏன் இப்படி ஓடி வருகிறீர்கள்?" என்று வினவினாள் பிரேமாவதி. "கண்ணே! நான் என்னவென்று சொல்லுவது! அதோ இருக்கிற மரத்தடியில் திடீரென்று என்னைத் தாக்கியது பயங்கரமானதோர் பிசாசு. நிஜமாக நான் தப்பியது நிர்மல இறைவன் செயல்" என்று பதற்றத்துடன் பேசினார். பிரேமாவதி விம்மி விம்மி அழத் தொடங்கினாள். "அந்தப் பிசாசு எங்கே ஒளிந்து கொண்டிருக்கிறது. தயவு செய்து சொல்லுங்கள்" என்று

கேட்கவே, "அந்த மரத்தின் அடிப்பொந்தில் அது மறைந்துள்ளது. அவலக்ஷணமான அதன் முகத்தாலும், பயங்கரமான குரலோசையாலும் நான் வேர்த்து விறுவிறுத்துப் போனேன். விடுதலைக்குப் போராடினேன். பின்னர் அது, 'காலை மாலை எனக்குப் பொரித்த கோழிக் குஞ்சு ஒன்று உணவாகக் கொடுக்க முடியுமா? பின் உன்னை விட்டு விடுகிறேன்' என்று கூறவே, கடவுள்தான் என்னை காப்பாற்றுகிறார் என்று கருதிய நான் "சரி, அப்படியே தருகிறேன்" என்று ஒப்புக்கொண்டு ஓடியே வந்து சேர்ந்தேன்.

"அப்பாடா, கடவுளை நூறு முறை கும்பிட வேண்டும்! தாங்கள் உயிரோடு பிழைத்து வந்தீர்களே! பயங்கரமான அந்த பிசாசின் விருப்பத்தை நாம் நிச்சயமாக நிறைவேற்ற வேண்டும். கோழிக்குஞ்சு தான் எனக்கு அருமை; ஆனால் தங்களுடைய உயிர் அதைக் காட்டிலும் பன்மடங்கு அருமை வாய்ந்தது" என்று ஆறுதல் அடைந்தாள் பிரேமாவதி.

குறித்த நேரத்திற்கு முன்பேயே, ராமேஸ்வர் மரப் பொந்துக்குள் மறைவாய்த் தங்கித் தமது உணவை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார். பயமுறுத்தப்பட்ட பிரேமாவதி பயபக்தியுடன் பொரித்த கோழிக் குஞ்சுகளை பொந்திலே தள்ளி வந்தாள். அவளுடைய கணவன் மிகுந்த அவாவுடன் அதை விழுங்கி வந்தான். பல நாள்கள் பறந்தோடின. இந்த விசித்திரச் செயலின் உண்மையை உணர்ந்துகொள்ள வேண்டுமென்று பிரேமாவதி துடிதுடித்தாள். குஞ்சைக் கொல்லுவதில்லை என்ற எண்ணமும், உண்மையறிய வேண்டுமென்ற எண்ணமும் ஒன்றுபட்டு ஒப்பந்தம் செய்து கொண்டன. அந்தப் பிசாசு எப்படித்தான் இருக்குமோவென்ற எண்ணம் பிடிவாதமாக எழுந்தது. வாக்குறுதிப்படி நடந்து கொள்வதால், அப்பிசாசு தன்னை ஹிம்சிக்காதென்று உறுதி கொண்டாள்.

பொந்துக்குள் எட்டிப் பார்த்தாள். கைவிளக்கின் பிரகாசத்திலே பரிதாபகரமான தனது கணவனின் முகம் ஜ்வலித்தது. இப்போது அச்சத்தினால் வெளுத்துப்

போயிருந்தது. ராமேஸ்வர் தயாள் தலையில் வசவு மழை இடி இடித்தாற் போலப் பொழியலாயிற்று! கடும் போர் கிளம்பியது.

எழுபத்தாறு வயது நிறைந்த பிரேமாவதி தனது எண்பத்தைந்து வயது நிறைந்த கணவனை விட்டுப் பிரிந்து, தாய் வீட்டுக்குச் செல்லுவதென்று துணிந்தாள். ஒரு பெரிய மரப் பெட்டியில் அவளுடைய சாமான்களையெல்லாம் போட்டுப் பத்திரமாகப் பூட்டி ஆயத்தப்படுத்துமாறு வேலைக்காரர்களுக்கு உத்தரவிட்டிருந்ததை ராமேஸ்வர் ஒளிந்து கேட்டுக்கொண்டார். மறுநாள், பக்கத்து ஊரில் தமக்கு ஒரு முக்கியமான அலுவல் இருக்கிறதால், மறுநாள் வரை திரும்பி வரமுடியாதென்று சாக்குச் சொல்லி ராமேஸ்வர் புறப்பட்டு விட்டார். இது பிரேமாவதிக்குச் சந்தோஷத்தை உண்டு பண்ணியது.

கொல்லைப் பக்கத்து முற்றத்தில், பிரேமாவதியின் தாயகத்துக் கொண்டு போகத் தயாராகக் கிடந்தது பெரிய மரப்பெட்டி. அதைத் திறந்து அதிலுள்ள சாமான்களில் பாதியைப் பக்கத்து அறையில் பதுக்கிவிட்டு, ராமேஸ்வர் அப்பெட்டிக்குள் படுத்துக் கொண்டு முன் போலப் பெட்டியை மூடிப் பூட்டிக் கொண்டார். விஷமம் செய்கிற கணவரின் வீட்டுக்கு இனி திரும்பி வருவதில்லையென்று உரக்கக் கத்திக் கொண்டே பிரேமாவதி தனது தாயகத்துக்குப் புறப்பட்டாள். விலையுயர்ந்த அச்சுமையை வேலையாட்கள் தூக்கிக் கொண்டு அவளைப் பின் தொடர்ந்தார்கள். தாயகத்துக்குப் போனவுடன் "அப்பாடா" என்று நிம்மதியான பெருமூச்சு விட்டாள்.

மரப் பெட்டியைத் திறந்தாள். என்ன ஆச்சரியம்! அதில் தன் கணவர் பேசாமல் அமர்ந்திருத்தைக் கண்டதும் அவளுக்கு ஏற்பட்ட வியப்புக்கு அளவே இல்லை. கண்ணீர் நிறைந்த கண்களால் கணவனும் மனைவியும் ஒருவரையொருவர் உற்று நோக்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களுடைய இதயங்களில் மௌனமான பரஸ்பரத்

தொடர்பு கொண்டதில், அபாரமான வாக்கு வல்லமை பொருந்தியிருந்தது. பிரேமாவதி தனது கணவனின் திருவடிகளில் தெண்டனிட்டாள். கருணை நிறைந்த கண்களுடன், கிழட்டுக் கணவனார் அமைதியுடன் ஆறுதல் சொல்லலானார்.

"கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள உறவு விலக்க முடியாதது. கண்ணே! கேள். வானுலகில் விவாகங்கள் செய்யப்படுகின்றன. மேலும், இத்தள்ளாத காலத்தில், தனித்து வாழ்வதென விரும்பினாலும்கூட, நம்முடைய கதி என்னவாகும்? விவாகமான வாழ்க்கையில் ஒவ்வொரு வருஷத்தோடும், தம்பதிகள் நெருங்கி நெருங்கி பரஸ்பர நேர்மையிலும் அமைதியிலும் வாழ வேண்டுமென்கிற அவசியம் மிகவும் வளர இடமேற்பட்டு வருகிறது. பிரிந்து வாழ முடியாத அந்த பெரு நிலையை நாம் அடைந்து விட்டோம். இரு நபர்களின் பொது வாழ்க்கையில் இப்போது நடைபெற்றதைப் போன்ற சந்தர்ப்பங்கள் ஏற்படுவது இயல்பு. இத்தகைய வித்தியாசங்களை நியாயமாகத் திருத்திச் சூழ் நிலைக்குத் தக்கவாறு நடந்து கொள்வது ஞானமாகும். கரைக்கவொண்ணாத பந்தமாகிய நமது தாம்பத்ய வாழ்க்கையைக் கெடுக்குமளவு அற்ப சொற்ப அபிப்பிராய பேதங்களை விடக்கூடாது. இது மாபெரும் குற்றமாகும். இப்படித் திருத்தி, சமப்படுத்தி, சமயோசிதம் போல தம்பதிகள் ஒத்து வாழ்வதிலே உள்ளத்தின் வலிமையும், அறிவும், மனோசக்தியும் வளரும். இது இல்லாவிட்டால், பலவீனத்திற்கு அபாயகரமான நிச்சயமான அறிகுறியாகும். எவ்வளவு உயர்ந்த அறிவு படைத்தவர்களாயிருந்தாலும், இரண்டு பேர் ஒரே மாதிரியாக நினைக்கவும், ஒரே மாதிரியாக உணரவும் எப்போதும் சாத்தியமில்லை. இரண்டு உள்ளங்கள் எப்போதும் ஒத்துழைக்க முடியாது. ஏனெனில், ஒவ்வொரு உள்ளமும் அவரவருடைய சொந்தமான ஆசாபாசங்களினால் தூண்டப்பட்டிருக்கிறது. அந்த ஆசாபாசங்களையும், அவாக்களையும், நாட்டங்களையும் தெரிந்து கொள்வதிலேதான் சமயோசித புத்தியின் ரகசியம் அடங்கியுள்ளது. ஆசாபாசங்கள் நிறைவேற்றுவதற்கு

அனுசரணையாக நம்மை நாம் இயக்கிக் கொள்ளுமளவு, ஆசாபாசம் நிறைவேறுதல் எனும் செய்கையானது ஆனந்தத் தியாகமாக வந்தமைகிறது. தொண்டு புரியும் மனப்பான்மை நமக்கு இருந்தால், மற்றவருடைய ஆசைகளும் நோக்கங்களும், நமது மனப்பான்மையை மேலும் மேலும் அதிக அளவில் பிரகடனப்படுத்தத் துணைபுரியும்''.

"கோழிக் குஞ்சின் மீது எனக்கு ஆசை உண்டு என்பதை நீ கண்டு கொண்ட பிறகு, நடுநாயகமான முறையைக் கையாள்வதினால் அந்த ஆசையைச் சுலபமாக விலக்கியிருக்க முடியும். சில குஞ்சுகளைக் கொடுத்துவிட்டுப் பிறகு கேட்க வேண்டாமென்று என்னிடம் எச்சரித்திருக்கலாம். இங்ஙனம், அன்பின் வழியாக என்னை நீ வென்றிருக்கவும், நம் உறவு தடைப்படாத வகையில் நடந்து கொண்டிருக்கவும் முடிந்திருக்கும். பொருள்களின் மீது மித மிஞ்சிய பற்று வைப்பதால், வேற்றுமை மனப்பான்மையை அதிகரிக்கச் செய்கிறது. அதிகமான முட்டைகளை உற்பத்தி செய்வதற்காகக் குஞ்சுகளை வளர்க்கிறாய். முட்டைகளை விற்று உணவுக்கு வேண்டிய பண்டங்களை வாங்குகிறோம். அப்படியானால், என்னுடைய நாவின் ருசியைத் திருப்திப்படுத்தும் ஆசை பூர்த்தியாவதற்கு ஒரு சில குஞ்சுகளைச் சாப்பிடுவதனால், நம்மைக் கடுமையாகவா பாதிக்கும்? எப்படியேனும் அவை நமது பொதுச் சொத்து. அவற்றைக் காப்பாற்றி அவற்றினின்று முட்டைகளை உற்பத்தி செய்வதற்கு உனக்கு எவ்வளவு உரிமையோ, அவற்றைச் சாப்பிட்டுப் பசி அடக்கிக் கொள்வதற்கு அவ்வளவு உரிமை எனக்கும் உண்டு. சமயோசிதம் போல் ஒழுகுதல் என்பது நல்வாழ்க்கையின் சாராம்சம் ஆகும். பரஸ்பர சம்மதமும் தியாகமும் சமயோசித ஒழுக்கத்திற்கு அமைந்த முக்கிய அம்சங்கள் ஆகும். என் கண்ணே! சொன்னதும் நடந்ததும் எல்லாம் போய்விட்டது. நாமிருவரும் தனித்து வாழ முடியாது. உடனே வீட்டுக்குத் திரும்பிப் போகலாம்'' ராமேஸ்வர் தயாள் சாங்கோபாங்கமாய்ச் சாஸ்திரயுக்தமாகப் பேசினார். பிரேமாவதி சந்தோஷமாக, ஆனால் பணிவன்புடன், அவரைப் பின் தொடர்ந்தாள்.

குருதேவராகிய சுவாமி ஆசாலானந்தா தமது கதையைச் சொல்லி முடித்தார்."சஞ்சல சுவாமி! குருவுக்கும் மாணவருக்கும் இடையே உள்ள உறவு இத்தகையது, இதற்கும் அதிகமானது. ஆன்மீகத்துறையில் ஒவ்வொன்றும் நித்தியத்துவம் வாய்ந்த நிலை உள்ளது. அத்தகைய உயர்ந்த ஆன்மீகத் துறையில் நாம் இருக்கிறோம். இந்த ஜன்மத்தில் மட்டும் அல்ல, சென்ற பல ஜன்மங்களிலும் நானும் நீயும் சேர்ந்து ஒழுகி வருகிறோம். நமது சம்பந்தம் விலக்கவொண்ணாததாக அமைந்திருக்கிறது" என்று அவர் விளக்கினார்.

## 11. மாயையும் மந்திரவாதியும்

உதயபூர், ராணா ராய்சிங் என்பவர் தர்பாரில் அமர்ந்திருந்தார். மந்திரவாதி ஒருவன் வந்து அரசரிடம் சில அற்புதங்களைச் செய்து காட்டுவதற்கு அனுமதி கோரினான். அரசர் சம்மதித்தார். மந்திரவாதி மெல்லிய நூலிழையை ஆகாயத்தில் வீசினான். அது மேலே போய், எவ்வித ஆதாரமுமின்றித் தொங்கிக் கொண்டிருந்தது. அப்போது மந்திரவாதி ராணாவைப் பார்த்து, "வேந்தரே! எனது நூலிழை யக்ஷர்களின் ராஜ்யமாகிய யக்ஷலோகத்திற்குப் போயிருக்கிறது. என்னோடு யக்ஷராஜன் தனது பெரிய சேனையுடன் போராட வருகிறான். ஆகையால், நான் யக்ஷனோடு போராடப் போகிறேன்" என்று கூறிக் கொண்டே, மெல்லிய அந்த நூலிழையைப் பிடித்து ஏறி ஆகாயத்திற்குள் போய் மறைந்து விட்டான். சிறிது நேரத்திற்குப் பின், யுத்த களத்தில் உண்டாகும் குழப்பமான குரலோசைகளும் போர் முழக்கங்களும் இடியோசை போலக் கேட்கலாயின. குத்துவதும் வெட்டுவதுமான சப்தங்கள் கேட்டன. மந்திரவாதியின் கைகளும், கால்களும், முண்டமும் கீழே விழலாயின. மந்திரவாதியின் மனைவி தன் கணவனுடைய பிணத்தருகில் ஓடி வந்து அகோரமாக அழுதாள். அவள் தன் கணவனோடு உடன்கட்டை ஏற

உத்தேசித்தவளாக, அரசரிடம் சவ விறகுகளைக் கோரினாள். சவ விறகுகள் அடுக்கப்பட்டன. மந்திரவாதியின் மனைவி மந்திரவாதியின் பிணத்தோடு தீ மூட்டிக் கொண்டு எரிந்து போனாள். சற்று நேரம் கழிந்தது. நூலிழை வழியாக இறங்கி வந்தான் மந்திரவாதி. ராணா மகாராஜாவின் திருவடிகளை வணங்கித் தன் மனைவியைப் பற்றி விசாரித்தான். நடந்த செயல்களைப் பற்றி நவின்றார் மன்னர். ஆனால், மந்திரவாதி நம்பவில்லை. அவன் தன் மனைவியை அவள் பெயரால் உரக்கக் கூப்பிட்டான். என்ன ஆச்சரியம்! ராணாவின் அந்தப்புரத்திலிருந்து வெளியே வந்தாள் மந்திரவாதியின் மனைவி!

மந்திரவாதியின் செயல்களைப் போலவே மாயையின் செயல்களும் இருக்கின்றன. மாயாதேவியின் செயல்கள் நடுவானத்தினின்று தொங்கிக் கொண்டிருக்கும் நூலிழை போல ஆதாரமற்றவையாயிருக்கின்றன. ஆதாரமற்ற இழையின் மீது மந்திரவாதியின் அற்புதமான காட்சிகள் தோன்றின. மந்திரவாதி தொடுத்த போர், கடும் யுத்த கோஷங்கள், தோல்வி, மந்திரவாதியின் மரணம் இத்தனையும் நிகழ்ந்தன. மனைவி தன்னைத்தானே எரித்துக் கொண்டாள். ஆனால், கணவனும் மனைவியும் உண்மையிலே உயிரோடிருந்தார்களே. எதுவும் நிகழவில்லை. தோற்றம் வெறும் மாயை. இப்படியே, அவித்தையின் காரியங்களும் இருக்கின்றன. ஜனனம், அழிவு, மரணம், மாறுதல், உண்டாதல், மறைதல் இவை போன்றவை பிரம்மாண்டமான தோற்றங்களாகிய காட்சிகள். ஆனால் உண்மையில் எதுவும் நிகழவில்லை. எல்லாம் மாயத் தோற்றம். நித்தியத்துவ, பெருமைக்குரிய மஹிமையினால் மெய்ப்பொருளாகிய இறைவன் மாத்திரமே இருக்கிறார். தோற்றங்கள் யாவும் மாயையினின்று சிருஷ்டிக்கப்படுகின்றன.

## 12. ஆனந்தம் என்பது உனக்குள்ளே இருக்கிறது

கிருஷ்ணன் தன் மனைவியுடனும் இரண்டு குழந்தைகளுடன் சௌக்கியமாக வாழ்ந்து வந்தான். வாழ்க்கை அன்பும் இங்கிதமுமாய் இருந்தது. குடும்பத்தில் அவனுக்கு மிதமிஞ்சிய பற்று இருந்ததால், குடும்பத்தினரை விட்டு வாழ அவனால் முடியாது. இரண்டு குழந்தைகளும், ரூபவதியான மனைவியுமே ஆனந்தத்திற்கு மூலாதார ஊற்றுபோல அமைந்தார்கள். "என் மகள், என் மகன், என் மனைவி" என்ற எண்ணமே அவனுக்குள் குடி கொண்டிருந்தது.- நிறைய சொத்துகளும் உண்டு.

நதியின் அக்கரையிலிருந்த நல்லதொரு கிராமத்திற்குப் போய் வாழலாமென்று கிருஷ்ணன் முடிவு செய்தான். வீடு, தோட்டம், நிலம் இத்தனையும் விற்றுப் பணமாக்கினான். அவன் தன் அண்டை வீட்டார்களிடமும் நண்பர்களிடமும் விடை பெற்றுக் கொண்டு, தன் மனைவியுடனும் இரண்டு குழந்தைகளுடனும் கிராமத்தை விட்டுப் புறப்பட்டான். நதியை நெருங்கியதும், அதில் நிறைய தண்ணீர் போய்க் கொண்டிருந்ததைக் கண்டான். முழங்கால் ஆழம் தண்ணீர் ஓடிக்கொண்டிருந்ததென்று தெரிந்தவுடன், குழந்தைகளைத் தூக்கிக் கொள்ளுமாறு மனைவியிடம் சொல்லி, கிருஷ்ணன் பணமூட்டையைத் தலைமேல் தாங்கி ஆற்றில் நடக்கலானான். நாலைந்தடி தூரம் சென்றதுமே, நீர் மட்டம் அதிகரித்தது. புதிய கிராமத்தில் தன் மனைவி மக்களுடன் ஆனந்தமாய், அமைதியாய் வாழலாமென்கிற ஒரே எண்ணமானது கரைக்குத் திரும்புவதையே தடுத்தது. எப்படியேனும் ஆற்றைக் கடந்து புதிய கிராமத்தை அடைந்தே ஆக வேண்டுமென்பது அவனது குறிக்கோள்.

இளம் மனைவி நிரம்பவும் களைப்புற்றாள். இரண்டு குழந்தைகளையும் சுமந்து செல்ல அவளால் இயலவில்லை.

நீரோட்டத்தின் வேகமோ அபாரம். தன்னைச் சுமந்து செல்லும்படியான அளவுக்குப் பலவீனப்பட்டாள் மனைவி. கணவனிடம் கூறினாள். "பணமூட்டையைச் சுமப்பதா? அல்லது குழந்தைகளைச் சுமப்பதா? அல்லது மனைவியைக் கை கொடுத்து நடத்திச் செல்லுவதா?" என்று கணவன் எண்ணிடலானான். ஒருகணம் சிந்தித்தான். முடிவுக்கு வந்தான். குழந்தைகளைத் தியாகம் பண்ணலாம். தான் விரும்பினால் மனைவி இளமையாயிருப்பதால், இன்னும் இரண்டு குழந்தைகளைப் பெற்றுக் கொடுத்து களிப்பூட்டுவாள். குழந்தைகளிடம் வாஞ்சையும் பற்றும் உண்டென்பது உண்மைதான். ஆனால், தன் மனைவியிடம் காட்டும் அன்போடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது, குழந்தைகளின் மீது செலுத்தும் ஆசையின் அளவோ குறைவு. குழந்தைகளைக் காட்டிலும் மனைவியால் அவனுக்கு அதிகமான ஆனந்தத்தை வழங்க முடியும் என்பது நிச்சயம். வேறு நினைவு வேண்டியதில்லை. இரண்டு குழந்தைகளை வெள்ளத்திலே விட்டுவிட்டுத் தன் மனைவியைத் தன்னோடு இழுத்துக் கொண்டு ஆற்றைக் கடக்கலானான்.

நீரோட்டத்தின் வேகமும், நீர்மட்டமும் வர வரப் பெருகலாயிற்று. நட்டாற்றைப் போய்ச் சேர்ந்தானதும், தண்ணீர் மார்பு அளவு ஓடிக்கொண்டிருந்ததைக் கண்டான். வெள்ளம்! இளம் மனைவி மிக மிகக் களைத்துப் போனாள். ஒரு காலடிகூட எடுத்துவைக்க அவளால் முடியவில்லை. அவளை தன் தோள்களில் தூக்கிக் கொண்டலான்றி அவளைக் காப்பாற்றுவதென்பது முடியாது. அந்த நிலைமை உண்டானது. வாலிபன் தனக்குள் "பாரியா, பணமா? யார் எனக்குச் சந்தோஷம் தரவல்லது?" என்று எண்ணமிடலானான். ஒன்றைத்தான் அவனால் சுமக்க முடியும். மனைவி போனால், தன்னிடமுள்ள பணத்தைக் கொண்டு மீண்டும் மணந்து புதிய மனைவியிடம் அரிய இன்பத்தில் திளைக்கலாமென்றும், ஆனால் பணம் போனால், அதைச் சம்பாதிப்பது பயங்கரமான உழைப்பாகுமென்றும் கருதினான். தன்னிடமுள்ள பணத்தைக்காட்டிலும் அதிகமான ஆனந்தத்தை மனைவியால் வழங்க இயலாதென்றும்

நினைத்தான். ஆகவே, மனைவியைத் தியாகம் செய்வதற்குத் தீர்மானித்தான். முதலில் குழந்தைகள், பின் மனைவி - இரு அம்சங்கள் பலியாகின. தன்னிடமுள்ள பணத்தின் முன்னால் அவை துச்சமாகத் இருந்தன. பணம் தனக்கு உத்கிருஷ்டமான் ஆனந்தத்தை அள்ளிக் கொடுக்குமென்று அவாவினான்.

ஆனால், சில நிமிஷங்களில் வெள்ளம் மேலும் பெருகிவிட்டது. கழுத்துக்கு மேல் நீர்மட்டம் ஏறியது. எதையும் அவன் எடுத்துச் செல்ல இயலாத நிலைமை ஏற்பட்டுவிட்டது. தலைமீது ஏதேனும் சுமை தாங்கினால், ஓர் அடிகூட எடுத்து வைக்க முடியாது. இது நிச்சயம். வெள்ளம் அவனையும் அடித்துக் கொண்டு போய்விடும். இந்த எண்ணம் அவனைக் குழப்பியது. மீண்டும் அவன் தனக்குள் எண்ணமிடலானான். வாழ்வு மிகமிக அருமையானது. அது ஆனந்தத்திற்கு முக்கிய ஆதாரம். அது இழக்கப்பட்டால், எவ்வித ஆனந்தத்தையும் பெற இயலாது. பணம் பிரமாதம் அல்ல. அவன் அதைச் சம்பாதிக்கக் கூடும். ஆனால், வாழ்வு இழக்கக் கூடாதது. அதை அனுபவிக்க வேண்டும். எனவே, பண மூட்டையைத் தியாகம் பண்ணவேண்டுமென்று தீர்மானித்தான். வெள்ளத்தில் பணமூட்டையை எறிந்து, அப்பால் ஆற்றைப் பத்திரமாகக் கடந்து, அக்கரையிலுள்ள கிராமத்தை அடைந்தான்.

அன்பர்களே! இக்கதையிலிருந்து என்ன பாடத்தைக் கற்றுக் கொள்ளுகிறீர்கள்? ஒவ்வொரு மனிதனும் நித்திய சுகத்தை விரும்புகிறான். அத்தகைய சுகம் எங்கிருக்கிறதாக உணருகிறானோ, அங்கே அவன் தன்னுடைய அன்பையும் பற்றையும் பொழிகிறான். மேற் கூறப்பட்ட கதையில், உண்மையான சுகம் வெளிப் பொருள்களில் அல்லாமல் ஒருவனுடைய ஆன்மாவிற்குள் பொதிந்துள்ளது என்பதைக் காணலாம். உண்மையில் குழந்தைகள் ஆனந்தத்திற்கு மூல ஊற்று. ஆனால் இதைவிட இளம் மனைவி சுகத்திற்குப் பொருந்திய சிறந்ததோர் மூல ஊற்று. இதைக் காட்டிலும் சிறந்த மூல ஊற்று ஆன்மாவே. பிரமையாகிய ஆழ்ந்த தூக்கத்திலிருந்து விழித்தெழுங்கள். விவேகம், வைராக்கியம் ஆகியவற்றால் மோகத்தை வெட்டுங்கள். உள்ளத்தின் உள்ளே

ஆராய்ச்சி செய்யுங்கள். நிரந்தர ஆனந்தத்திற்கும், கலப்பற்ற சுகத்திற்கும், நித்திய மூலாதார ஊற்றாகிய அமரத்துவ ஆன்மாவைச் சாக்ஷாத்கரியுங்கள். ஸாந்தியிலும் ஆனந்தத்திலும் இளைப்பாறுங்கள்.

நீங்கள் யாவரும் நித்தியானந்தமாகிய அமிர்தத்தை அனுபவிக்கும் தீரர்களாகப் பிரகாசிப்பீர்களாக.

## 13. பொருளும் நிழலும்

ஒருவன் தன்னுடைய நிழலை விரும்பவில்லை. அது தன்னுடன் எப்போதும் வந்து கொண்டிருக்கிறதென்றும், ஒவ்வொரு நிமிஷமும் தன்னை நெருங்கியே இருக்கிறதென்றும் கண்டுகொண்டான். அவன் தனக்குள், "இந்த நிழலைப் புதைத்து விடுகிறேன். இதைத் தொலைத்துவிட வேண்டும்'' என்று சொல்லிக் கொண்டான். ஆழமான குழி ஒன்றைத் தோண்டினான். அதில் எட்டிப் பார்த்தான். அக்குழியின் அடிப்புறத்தில் தனது நிழலைக் கண்டான். அவனுக்கு அளவு கடந்த சந்தோஷம் உண்டாயிற்று. அப்பள்ளத்தை மண்ணால் மூட விரைந்தான், மண்ணை அதில் தள்ளிக் கொண்டிருக்கையில், நிழல் மேலே வந்து கொண்டிருப்பதைக் கண்டு பீதியடைந்தான்! வேகமாகப் பள்ளத்தை நிரப்பினான். மீண்டும் அந்த நிழல் அதன் மேலே விழுந்திருந்தது. அந்த வீண் வேலையை விட்டுவிட்டான்.

தன்னுடைய நிழலை விட்டு ஓடிப் போக விரும்பினான். ஓடத் தொடங்கினான். ஆனால் சூரியன் தனக்குப் பின்னால் வெயில் அடிக்க, அவன் ஓடினான். தன் நிழல் தனக்கு முன்னால் ஓடிக் கொண்டிருந்ததைக் கண்டான். எவ்வளவு வேகமாக ஓடினாலும், அதைத் தொடர்ந்து பிடிக்க அவனால் முடியவில்லை. அவன் திரும்பினான். சூரியனை நோக்கி ஓடத் தொடங்கினான். இப்போது மகிழ்ச்சியடைந்தான். ஏனெனில், அவன் தன் நிழலைத் தொடர்ந்து பிடிக்க முடிந்தது. இப்போது நிழலுக்கு முன்னால் நடந்து கொண்டிருந்தான். கடைசியில்,

ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டே குப்புறப் படுத்தான். அவன் தன் இடது வலது பக்கமாய்த் திரும்பிப் பார்த்தான் - எங்கேனும் நிழல் இருக்கிறதாவென்று - இல்லை. அவன் அதைப் "புதைத்து விட்டான்." ஆகையால் அவன் நிம்மதியாய்த் தூங்கினான்.

இதைப் போலவே, நான் என்னும் அகங்காரமும், எனது என்னும் மமகாரமும் எப்போதும் மனிதனுடைய காலடிகளை நாய் போலத் தொடர்ந்து வருகின்றன. புதைத்துத் தொலைக்க வேண்டிய துர்ப்பழக்கங்களுக்கெல்லாம் மேலாக அகங்காரம் வந்து நிற்கிறது. சாதகன் அதனை விட்டு ஓட ஆரம்பித்தால், அது அவனுக்கு முன்னால் ஓடுகிறது. கல்வி கற்றதால் ஏற்படும் அகங்காரம், தவஞ் செய்ததால் ஏற்படும் அகங்காரம், சேவாபிமானம் முதலிய பல்வேறு வடிவங்களை அது ஏற்றுக் கொள்ளுகிறது. கடவுளை நோக்கி நடக்கத் தொடங்கினான். பின்பு அது பின்புறம் விடப்படுகிறது. அவன் கடவுளிடம் தன்னை முற்றிலும் சரண்புகுத்திக் கொள்கிறான்; பின் அது பூரணமாக முறியடிக்கப்பட்டு விடுகிறது.

ஆகையால், ஜோதிகளுக்கெல்லாம் மேலான ஜோதியாகிய ஆத்மாவை நோக்கித் திரும்புங்கள். உத்கிருஷ்டமான ஆன்மாவிடம் முற்றிலும், பூரணமாய், கூச்சமில்லாமல் சரணாகதி அடையுங்கள். ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்து இந்த நிமிஷத்திலேயே முக்திப்பேறு அடைவீர்களாக.

## 14. இரண்டு சிஷ்யர்களின் கதை

குரு தன் இரண்டு சிஷ்யர்களை அழைத்து "இதோ இரண்டு புறாக்கள் - இரண்டு பேருக்கு, யாரும் பார்க்காத இடத்திற்குப் போய் புறாவைக் கொல்லு" என்று உத்தரவிட்டார். புறாவை எடுத்துக் கொண்டு ஒரு சிஷ்யன் காட்டுக்குப் போய் யாரும் தன்னைப் பார்க்காத இடத்தில் அதைக் கொன்றான். மற்ற சிஷ்யன் சிறிது வேகம்

படைத்தவன். புறா அதன் கண்களாலே தன்னைப் பார்க்கிறதைக் கண்டான். குருவிடம் திரும்பி வந்தான். அஹம் என்ற 'நான்' எப்போதும் செயலைக் காண இருப்பதை அவன் உணர்ந்தான். குருவிடம் "யாரும் என்னைப் பார்க்காத ஓர் இடத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. மௌன சாட்சி எங்கும் நிறைந்துள்ளது. எல்லா இடத்திலும் ஆண்டவன் சந்நிதியை நான் உணருகிறேன்" என்றான்.

## 15. இராஜாவின் பூனை

பண்டைக் காலத்தில் ராஜா ஒருவர் இருந்தார். அவர் பூனை ஒன்றைப் பிரியமாக வளர்த்தார். அதன் தலையில் விளக்கு வைத்து இரவு முழுதும் அவர் தமது வேலைகளைச் செய்து வந்தார். அவர் தமது மந்திரிகளிடம் "மந்திரிகளே! இந்த பூனையைப் போல் நீங்கள் ராஜவிசுவாச முள்ளவர்களாயில்லை. இதன் தலையில் விளக்கு வைத்து விட்டு இரவு முழுவதும் என்னுடைய எல்லா வேலைகளையும் பார்க்கிறேன்" என்றார். அதற்கு அவர்களில் புத்திசாலியான ஒருவர் "பாராட்டுதற்குரிய பாராளுமன்னரே! விசுவாசமுள்ள இந்த பூனையைப் பரிசோதிக்கிறேன்" என்றார். சிறு கூடையில் சில சுண்டெலிகளைப் பிடித்துக் கொண்டு வந்து அரசர் மாளிகையில் நுழைந்தார். சுண்டெலிகளை வெளியே விட்டுவிட்டார். அவற்றைப் பார்த்தவுடனே பூனை துள்ளிக் குதித்து அவற்றைக் கௌவிற்று. விளக்கு கீழே விழுந்தது. மந்திரி "அரசர் பெருமானே! பூனையின் விசுவாசம் எங்கே? இங்கே எலிகள் இல்லை. அதனால் பூனை அமைதியாக இருந்தது" என்று பதில் கூறினான். அரசர் அவமானத்தால் தலை குனிந்தார். விஷயப் பொருள்களை அடைய முடியாமலிருக்கிற வரைக்கும் சில காலம் மனம் நிம்மதியாய் இருக்கிறது. மிகக் குறைந்தபட்ச அளவு வாய்ப்பு கிடைக்குமானால் அது பூனையைப் போலத் துள்ளிக் குதித்து இந்திரிய சுக போகங்களில் திளைக்கிறது. ஓ, சாதகர்களே! எச்சரிக்கை! எச்சரிக்கை!! எச்சரிக்கை!!!

## 16. கோடீஸ்வரக் கஞ்சப் பிரபுவின் கதை

அமெரிக்காவில் நியூஜெர்ஸியில் 75 இலக்கமுள்ள மாளிகையில் ஓர் கோடீஸ்வரர் வசித்து வந்தார். அவர் பெயர் ஜோஸப் பௌலிங். அவர் ஒரு நாளைக்குச் சாப்பாட்டுக்கு இரண்டு ரூபாயும் 11 அணா மட்டும் செலவழிப்பார். வங்கியில் ரூ. 16,17,000 வைத்து விட்டு சமீபத்தில் இவர் பட்டினியால் இறந்தார். வருமான வரித்துறை இலாகாவில் இருபத்தைந்து வருடம் இவர் பணியில் இருந்தார். இவருடைய ஆடை உடைகள் அழுக்கடைந்து கந்தல் கந்தலாக இருந்தன. ஓர் இரவுக்கு 1-50 டாலர் வாடகையுள்ள அறையில் வசித்தார். ஒரு நாளைக்கு ஒரே முறைதான் சாப்பிட்டார், எவருடனும் இவர் பேசினது கிடையாது. சத்துக் குறைவினால் மருத்துவமனையில் இறந்தார். பௌலிங் ஒரு பைசா இல்லாத ஏழையாக புதைக்கப்பட்ட பின்னர் அவருடைய சகோதரன் பாங்கில் பதுக்கப்பட்டிருந்த செல்வத்தைக் கண்டுபிடித்தார். எல்லா உலோபிகளுடைய கதியும் இப்படித்தான்! ஓ, உலோபிகளே! உங்கள் பணத்தை பயன்தரத் தக்க நல்ல முறையில் உபயோகியுங்கள். மருத்துவமனைகள் சம்ஸ்கிருத கல்லூரிகள், யோக ஆஸ்ரமங்கள், அனாதை ஆஸ்ரமங்கள், பொது மக்களுக்குப் பயன்படும் வாசகசாலைகள், ஆராய்ச்சி நிலையங்கள், பல்கலைக் கழகங்கள் - இவற்றைக் கட்டுங்கள். தகுதி வாய்ந்த இச்செயல்கள் மூலம் நித்தியானந்த சாம்ராஜ்யத்தில் தாராளமாகச் செல்லுங்கள்.

## 17. கல் நாய்

"நாயைப் பார்த்தால் கல்லைக் காணோம், கல்லைப் பார்த்தால் நாயைக் காணோம்" என்பது ஒரு பழமொழி. இதில் ஆழ்ந்த தத்துவம் அடங்கியுள்ளது. மகாராஜா ஒருவரின் அரண்மனையில் ஒரு நாய் இருந்தது. இரவில் சில

பணியாளர்கள் அரண்மனைக்கு வந்தார்கள். புளிங்கினால் செய்யப்பட்ட அந்த பெரிய கல் நாயைப் பார்த்ததும், பெரிதும் பயந்தே போனார்கள். ஆனால் நாயோ குலைக்கவில்லை. மெல்ல அதன் பக்கத்தில் சென்றார்கள். அது கல் நாய் என்று கண்டுகொண்டார்கள். இப்போது நாய் மறைந்துவிட்டது. அது முழுதும் கல்தான். நாயாகத் தோன்றிய போது, கல் எனும் எண்ணம் இல்லை. கல் பார்க்கப்பட்ட போது நாய் இல்லை. இதே மாதிரி, உலகத்தை நீ பார்க்கும் போது, பிரஹ்மன் இல்லை. பிரம்மனைப் பார்க்கும் போது, உலகம் இல்லை.

## 18. உழவனும், பாம்பும்

உழவனின் மகன் பாம்பு கடித்து மரணமடைந்தான். உழவனுக்குக் கோபம் அதிகரித்தது. கோடரி எடுத்து பாம்பின் வாலை அவசரமாய்த் துண்டித்தான். பழி வாங்கும் பொருட்டு அந்தப் பாம்பு தன்னைக் கடிக்குமே என்று உழவன் கருதினான். அதனுடன் சமாதானம் செய்துகொள்ள விரும்பினான். பாம்புப் புற்றினருகில் போய் கொஞ்சம் பாலை வைத்தான். பாம்பு அங்கு வந்து "ஓ, உழவனே! இனி நாம் இருவரும் நண்பர்களாக இருக்கமுடியாது. உன்னைப் பார்க்கும்போது அல்லது நினைக்கும் போதெல்லாம், என்னுடைய அறுந்த வால் ஞாபகத்திற்கு வரும். என்னை நீ பார்க்கும் போதோ நினைக்கும் போதோ உன்னுடைய இறந்த மகன் ஞாபகத்திற்கு வருவான்" என்று கூறிற்று. அந்தர்முக மனத்தின் ஆழத்திலே யாராலோ செய்யப்பட்ட ஒரு குற்றத்தின் ஞாபகம் பதியும். ஓர் காலத்தில் பழிவாங்க வேண்டுமென்று மனிதன் விரும்புகிறான். தழும்பு ஆழமாக அடையாளமாகி விடுகிறது. ஆழ்ந்த அன்பை வளர்க்கவும். குற்றங்களை மறந்து மன்னித்து விடு. மித்ய திருஷ்டியை அபிவிருத்தி செய்யவும். எல்லா சமஸ்காரங்களையும் களைந்தெறிய உன்னால் சாத்தியமாகும்.

## 19. ஒரு சந்நியாசி

ஒருவன் தினந்தோறும் தன் மனைவியைப் பார்த்து "சந்நியாசம் எடுத்துக்கொள்ளப் போகிறேன்" என்று கூறுவான். அதற்கு மனைவி "சரி; சந்நியாசம் எடுத்துக் கொள்ளுங்கள்" என்று பதிலளிப்பாள். அவன் தலையை மொட்டையடித்துக் காவி அணிந்து ஆற்றங்கரையில் உட்கார்ந்தான். பொழுதெல்லாம் உட்கார்ந்தும் ஒருவனாவது அவனுக்குப் உணவு கொடுத்துக் கவனிக்கவில்லை. பசியோ வயிற்றைப் புரட்டி வாட்டியது. சரியாக இரவு 10 மணிக்கு வீட்டுக்குத் திரும்பிப் போய்க் கதவைத் தட்டினான். "யார் அது?" என்று மனைவி கேட்டாள். "நான்தான் உன் கணவன்" என்றான் அவன். மனைவி உடனே "சந்நியாசிக்கு இங்கே இடம் கிடையாது. ரிஷிகேசம், சிவானந்தாஸ்ரமத்திற்குப் போங்கள்" என்று வெருட்டினாள். அவன் "என் கண்ணே! உன்னிடம் வெறுமனே விளையாட்டாகச் சொன்னேனே தவிர வேறொன்றுமில்லை. தயவுசெய்து கதவைத் திற. பசியால் நான் சாகிறேன். இனிமேல் சந்நியாசத்தைப் பற்றி நினைக்கவே மாட்டேன். நிச்சயமாகச் சத்தியம் செய்கிறேன். உடனே ஏதாவது உணவு - பழையது ஆனாலும் சரி - கொடு" என்று கெஞ்சினான்.

## 20. விபசாரிணி பக்தி

ஒருவன் பத்து அடி ஆழம் கிணறு தோண்டினான். தண்ணீர் வரவில்லை. அந்த இடத்தை விட்டு வேறிடத்தில் போய் இருபது அடி ஆழம் தோண்டினான். அங்கேயும் தண்ணீர் இல்லை. பின்பு வேறிடம் போய், நாற்பது அடி ஆழம் தோண்டினான். தண்ணீர் பெற முடியவில்லை. ஆகையால், இன்னொரு இடத்திற்குப் போய் ஐம்பது அடி ஆழம் தோண்டினான். இங்கேயும் தோல்வியே. பின்னும் ஓர் இடத்திற்குப் போய் அறுபது அடி ஆழம் தோண்டினான்.

தண்ணீர் கிடைத்தது. ஆரம்பத்திலேயே அறுபது அடி தோண்டியிருந்தால், முதலாவது முயற்சியிலேயே வெற்றி கண்டிருப்பான். இதைப் போலவே சாதகர்கள் பல குருமார்களைத் தேடிச் செல்லுகிறார்கள். ஒரே குருவை அண்டிச் சாதிக்கிறதில்லை. அவர்கள் விபசாரிணி பக்தி செலுத்துகிறார்கள். சிவபெருமானை இரண்டு மாதம் வழிபடுகிறார்கள், மகா விஷ்ணுவைப் பின் மூன்று மாதம் சேவிக்கிறார்கள். அப்பால், காயத்திரிதேவியை நான்கு மாதம் வணங்குகிறார்கள். பிறகு ஸ்ரீ கிருஷ்ண பகவானை ஆறு மாதமும், ஸ்ரீ ராமரை ஆறு மாதமும் துதிக்கிறார்கள், இதற்கு விபசாரிணி பக்தி என்று பெயர். ஒரே கோட்பாட்டிற்கு உறுதியான பக்தி (நிஷ்டை) புரிவீர்களாக. ஒரே குருவைப் பற்றுங்கள் - ஒரே தேவதையைத் தொழுங்கள். இந்த வ்யவிசார புத்தியைக் கொல்லுங்கள். விரைவில் கடவுளைச் சாக்ஷாத்கரிப்பீர்கள்.

## 21. லக்ஷ்மி - பார்வதி சம்வாதம்

பார்வதியின் கணவரான சிவபெருமானைக் கேலி செய்து பார்வதியின் மனத்தைப் புண்படுத்த லக்ஷ்மி விரும்பினாள். சாதுர்யமான பார்வதியோ லக்ஷ்மிக்குச் சளைத்தவள் அல்ல. அவமானத்தால் தலை குனிந்து, லக்ஷ்மி அவ்விடத்தை விட்டு மெதுவாக நழுவினாள்.

ஓ! பார்வதி! பாம்பை அணிந்து கொள்கிறவர் எங்கே? பதில் :- ஓ! லக்ஷ்மி! அவர் அனந்தன் மீது அயர்ந்து சயனிக் கிறார். ஓ! பார்வதி! சுடுகாட்டில் சோறு சாப்பிடுகிறவர் எங்கே? பதில்:- ஓ! லக்ஷ்மி! துவாரகாபுரியிலே சுதாமருடைய தானியங்களைத் தின்கிறார். ஓ! பார்வதி! காளை மீதேறுகிறவர் எங்கே? பதில்:- ஓ! லக்ஷ்மி! அவர் பிருந்தாவனத்திலே காளைகளையும் பசுக்களையும் கண்காணிக்கிறார். ஓ! பார்வதி! மண்டை ஓட்டைக் கையிலேந்தும் அந்தப் பிச்சைக்காரர் எங்கே? பதில் ஓ! லக்ஷ்மி! அவர் பலியினுடைய யக்ஞசாலையில் இருக்கிறார்.

*பிறரை வெற்றி கொள்பவன் பலசாலி - தன்னை வெல்பவனோ மஹான்.*

## 22. "எடக்கு" குதிரையின் கதை

கல்கத்தா நகரிலே அழகு பொருந்திய குதிரை ஒன்று இருந்தது. அது தாஷ்டிகமாகத் தசைப்பற்றுடன் நேர்த்தியான புள்ளிகளுடன் இருந்தது. புகழ் வாய்ந்த குதிரை அது. ஒட்டப் பந்தயத்தில் பரிசுகளைப் பெற்றிருக்கிறது. வேகமாக ஓடும். நான்குகாற் பாய்ச்சலில் பறக்கும் பரி அது. இதற்குப் பெயர் 'எடக்கு' என்பது. பின்னங் கால்களில் சில நேரம் நின்று, வண்டியைப் பின்புறமாகத் தள்ளிவிடும் - ஜனங்கள் காயம் அடைவார்கள் அல்லது கொல்லப்படுவார்கள்.

இம்மாதிரி புகழ் பெற்ற எடக்குதிரையைப்போல, சில பேர்வழிகள் இருக்கிறார்கள். அவர்கள் சாமர்த்தியமும், திறமையும் பெற்றவர்கள். எல்லாத் துறைகளிலும் கைதேர்ந்தவர்கள். அவர்களை மக்கள் வியப்புடன் பார்ப்பார்கள். நிரம்பவும் பெருமைப்படுத்துவார்கள், மகிமையைப் பேசுவார்கள். அடிக்கடி அவர்களும் பின்னங் கால்களில் நின்று, மனிதர்களைப் பாதாளத்தில் நாக்கினால் தள்ளி விடுவார்கள். ஆகையால், இந்த குதிரைகளுக்கு எல்லோரும் பயப்படுகிறார்கள் - அவர்கள் உலகத்தார்க்குப் பயன்படுவதே கிடையாது. ஓ! மனிதா! இத்தகைய அபாயகரமான மனுஷ்ய "எடக்குகளைப்" பற்றி எச்சரிக்கையாய் இருப்பாயாக.

## 23. குருநானக் சோதனை

குருநானக் தமது சிஷ்யனைச் சோதிக்கலானார். சிஷ்யன் மீது அவருடைய இரண்டு குமாரர்களும் பொறாமை கொள்ளலானார்கள். மேம்பட்ட குணங்கள் சிஷ்யனுக்கு உண்டு என்பதைத் தமது பிள்ளைகளுக்குக் காட்ட

விரும்பினார். குருநானக் சாக்கடையில் டம்ளரை எறிந்தார். தம் பிள்ளைகளை அதை எடுக்கச் சொன்னார். அவர்களோ தோட்டியைக் கூப்பிட்டு அதை எடுக்கச் சொன்னார்கள். ஆனால் குருநானக்கின் சிஷ்யன் வெடுக்கென்று எடுத்தான் டம்ளரை. அழுக்குப் போகத் தேய்த்துச் சுத்தம் செய்து குருதேவரிடமும் கொடுத்தான். உண்மையான சிஷ்யன் தனது குருவிடத்தில் ஆழ்ந்த பக்தி பூண்டு, அவருடைய கட்டளைகளை மிகுந்த உற்சாகத்துடனும், சிரத்தையுடனும் நிறைவேற்றுவான்.

## 24. கனவின் பலன்கள்

அரசன் ஒருவன் எட்டு மணி நேரம் வரை, தான் ஒரு பிச்சைக்காரனாகக் கனவு கண்டான். கண் விழித்த பிறகும் கூட, அக்கனவின் பலனை உணர்ந்தான். பிச்சைக்காரன் ஒருவன் எட்டு மணி நேரம் வரை, தான் ஓர் அரசனாகக் கனவு கண்டான். கண் விழித்த பிறகும் கூட, அக்கனவின் பலனை உணர்ந்தான். உலகம் நீண்ட கனவு; அதாவது உலகம் தீர்க்க சொப்பனம். இத்தீர்க்க சொப்பனத்தினின்று எழுந்திருங்கள். ஜாக்ரதா, ஸ்வப்பன, சுஷுப்தி அவஸ்தைகள் யாவும் அபத்தம். ஒரே உண்மையாயிலங்கும் நான்காவது நிலையாகிய துரிய நிலையைப் பெறுங்கள். இந்த மூன்றுவிதமான அவஸ்தைகளோடு தொடர்பு கொண்டுள்ளது துரிய நிலையே ஆகும்.

## 25. இக்கணமே தருமம் செய்க

கோபூஜை செய்து கொண்டிருந்த கோமானிடம் போயிற்று ஓர் பன்றி. "அரசரே! என்னை எப்போது பூஜை செய்வீர்?" என்று கேட்டது. இராஜா கோபத்துடன், "சீ போ வெளியே, இல்லாவிடில் கொல்லுவேன்" என்று கடிந்தார். "தாராளமாகக் கொல்லுங்கள்" என்று பன்றி அழத் தொடங்கியது. "எனது மாமிசத்தை நீர் விரும்புகிறீரென்று

எனக்குத் தெரியும். உமக்கு இறைச்சி தருவதற்கு நான் சாகிறேன். எனினும், பசுவைத்தான் பூஜிக்கிறீர், என்னை அல்ல'' என்று பேசிற்று. ''முட்டாள் பன்றியே! செத்த பிறகல்லவா எனக்குப் படைக்கிறாய். ஆனால், இந்த புனிதமான பசுவோ உயிருடன் இருக்கும்போதுகூட எந்த நாளும் எனக்குப் பால் தருகிறது. சுயநலமின்மை, தருமம் - இவற்றின் பிரதிபிம்பமாகப் பசு விளங்குகிறது. ஆகையால் இதை நான் பூஜிக்கிறேன்'' என்றார் அரசர். உயிருள்ள போதே தருமம் செய்யுங்கள். நீங்கள் இறந்த பிறகு ஏதோ ஒரு தருமத்திற்கு உங்களுடைய சொத்து உபயோகப்பட வேண்டுமென்று 'உயில்' எழுதாதீர்கள். இது மறைக்கப்பட்ட சுயநலம். உங்களிடமுள்ளதைப் பகிர்ந்து கொடுக்க நீங்கள் விரும்பவில்லை. எதையாவது கொடுக்க விரும்பினால், இக்கணமே தருமம் செய்க. இக்கணமே செய்க!

## 26. சுயசரணாகதியின் மகிமை!

ஸ்ரீ ஜகந்நாத சுவாமி கோயில் கொண்டிலங்கும் புண்ணிய க்ஷேத்திரம் பூரி என்பது. கோயில் பிரசித்தி பெற்றது. நற்குணமுள்ள எளிய பிராமணர் ஒருவர் பூரியில் மனைவியோடு வாழ்ந்து வந்தார். பிராமணர் கீதைப் பிரியர். ஸ்ரீமத் பகவத் கீதையை இரவும் பகலும் படித்து கீதை சுலோகங்களைப் பற்றித் தியானித்து வருவது வழக்கம். பற்றற்ற தன்மையை (விரக்தி) அவர் இன்னமும் விருத்தி செய்யவில்லையெனினும், கடவுளிடத்தில் மிகுந்த பக்தி கொண்டவர்.

ஒரு நாள் அவர் கீதை சுலோகத்திலுள்ள ஒவ்வொரு வார்த்தையையும் அனுபவ ரீதியாக ஆராய்ச்சி புரிய விரும்பினார். இக்கோட்பாட்டுடன் கீதையைப் படித்துக் கொண்டே போகையில் ஒன்பதாவது அத்தியாயத்தில் 22-வது சுலோகம் வந்தது.

"அனன்யாஸ் சிந்தயந்தோமாம் யேஜனா: பர்யுபாஸதே
தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்"

"வஹாம்யஹம்", என்னும் சொற்றொடரை ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொண்டார். "நானே பாரத்தைத் தாங்குகின்றேன்" என்பது இதன் பொருள். ஒரு பக்தனுக்குத் தேவையான சகல பொருள்களையும் பரந்தாமனே சுமந்து கொண்டு வருகிறார் என்பது இதன் அர்த்தமாகுமா? இவ்வெண்ணம் அவரது உள்ளத்தில் உதிக்கலாயிற்று. இல்லை, இது அதன் அர்த்தமல்ல. பரம்பொருள் இதர நிர்வாகிகளின் மூலம் இப்பொருள்களை வழங்குகிறார் பக்தனுக்கு. எனவே, அவர் வஹாம்யஹம் என்னும் சொற்றொடர் உத்தேசிக்கும் கருத்தை விளக்கத் தவறி விட்டதென்று எண்ணினார். ஆனதால், அதைப் பேனாவினால் கீறிவிட்டு அதன் மேலே கதோம்யஹம் என்று எழுதினார். கதோம்யஹம் என்பதற்கு "நானே ஏற்பாடு செய்கிறேன்" என்று அர்த்தம் ஆகும்.

ஆண்டவருடைய போக்குகள் ஆராய்ந்தறியக்கூடாதவை. அந்தபிராமணர் பிச்சையேற்றுக் காலங் கழிப்பவர். ஒரு நாள் கனத்த மழை பெய்யலாயிற்று. பிச்சைக்கு அன்று வெளியே போக முடியாமையால் அவரும் அவரது மனைவியும் பட்டினி கிடந்தார்கள். மறுநாள் மழை விட்டதும், பிராமணர் யாசகத்திற்கு வெளியேறினார். வீட்டை விட்டுப் புறப்பட்ட சிறிது நேரத்திற்கெல்லாம், உடலெங்கும் இரத்தம் கசிய அழகான பையன் ஒருவன் அங்கே வந்தான். பிராமணருடைய தர்மபத்னியைப் பார்த்து "அம்மா, இந்த உணவுப் பிரசாதம் பண்டிட்ஜீ (பிராமணர்) கொடுத்தனுப்பினார்கள்" என்று கூறினான். பிராமண மாது அப்பையனுடைய அழகிய முகத்தைப் பார்த்தும், அவனுடைய இனிய கவர்ச்சிமிக்க சொற்களைக் கேட்டும் பரவசப்பட்டாள். அதே வேளையில் அவனுடைய உடலினின்றும் இரத்தம் கசிவதைக் காணப் பெரிதும் வேதனைப்பட்டாள். கண்களில் நீர் ததும்பிய வண்ணம், அவள் அவனைப் பார்த்து "குழந்தாய்! உன்னை இப்படி அடித்துத் தீங்கு புரியும் அளவுக்குக் குரூர குணம்

படைத்தவன் யார்?" என்று வினாவினாள். அவருடைய கணவராகிய பிராமணரே தன்னை அடித்தாரென்று பையன் பதிலியம்பினான். இதைக் கேட்டதும் அவள் திடுக்கிட்டுப் போனாள். அவள், "எனது கணவர் மிகவும் எளியவர், நற்குணம் பண்டைத்தவர்; பெரும் பக்தரும் கூட. உன்னைப் போன்ற அழகிய குழந்தையை அவர் எதற்காக அடித்தார்?" என்று கூறியதும், பையன், "அம்மா! நிஜத்தை அப்படியே சொல்லி விடுகிறேன். ஓர் ஆயுதத்தின் முனையால் எனது உடலைக் குத்தியது தங்கள் கணவரேதான். ஏன் அப்படிச் செய்தார் என்பது அவருக்கு மட்டுமே தெரியும்" என்று மறுமொழி கூறினான்.

இவ்வாறு கூறிக் கொண்டே, உணவுப் பதார்த்தங்களின் சுமையை அம்மையாரின் முன்னால் வைத்து விட்டுப் பையன் மறைந்து போனான். சோக சம்பவத்தைப் பற்றியே சிந்தித்து கொண்டிருந்த அவ்வம்மையார் பையன் எப்போது மறைந்து போனான் என்பதைக் கவனிக்க இயலாமற் போயிற்று. தமது கணவரின் ஆச்சரியகரமான அந்த நடவடிக்கைக்கு நியாயமோ காரணமோ எதையும் அறிய மாட்டாமல் தடுமாறியவளாக மிகுந்தவருத்தத்துடன் தம் கணவரின் வருகையை எதிர்நோக்கினாள். பிராமணர் வழக்கப்படி வீடு வந்து சேர்ந்தார். மனைவி தன் கணவரிடம் மரியாதையான சொற்களில், ஆனால் வருத்தமும் கோபமும் தொனிக்கும் பாணியில், முழுக் கதையையும் கூறி முடித்தாள். தம் மனைவி கூறின ஆச்சரியகரமான கதையைக் கேட்ட பிராமணர் வாய்பேசா ஊமையைப் போலானார். ஸ்ரீமத் பகவத் கீதையில் ஒரு வார்த்தையைப் பேனாவினால் கீறி விட்டதை நினைவுக்குக் கொண்டு வந்த போது, அவர் ஆழ்ந்த கவலை அடைந்தார். அவரது இரு விழிகளினின்றும் அருவி போல நீர் வழியலாயிற்று. கடவுளிடம் பக்தி சிரத்தை பூண்டு, அவரையே நம்பியிருக்கும் உண்மையான பக்தனுக்குக் கடவுள் உணவுப் பொருள்களைத் தாமே சுமந்து கொண்டுபோய்க் கொடுக்கிறாரென்ற தத்துவத்தை எழுத்துக் கெழுத்து உறுதியென இப்போது உணரலானார். கீதை என்பது பரம்பொருளின் வாசாவிக்கிரகம். ஆகையால்,

அக்கீதையில், ஒரு வார்த்தையைக் கீறுதல் என்பது பரம்பொருளின் உடலைக் குத்துவதற்குச் சமம் ஆகும். தமது குற்றத்திற்காக நிரம்பவும் பச்சாதாபமடைந்தவராக அந்தபிராமணர் மூர்ச்சித்துக் கீழே வீழ்ந்தார். கடவுள் உடனே பக்தரின் முன்னால் பேரின்பத்தைத் தருகிற திவ்ய தரிசனத்தைத் தந்து ஆசி கூறினார். பிராமணர் எழுந்து நின்று வணங்கித் தமது குற்றத்திற்கு மன்னிப்புக் கோரினார். அமோகமாக ஏற்பட்ட பக்திப் பெருக்கால் அவர் தமது கீதைப் புத்தகத்தில் காலியாயிருக்கும் ஒவ்வொரு அங்குல இடத்திலும் வஹாம்யஹம் என்ற சொற்றொடரை எழுதத் தொடங்கினார்.

## 27. ஆத்மபரித்தியாகம்

சிந்துப் பிரதேசத்தில் ஸ்ரீ கிட்டுமுல் என்பவர் இருந்தார். அவர் பம்பாயில் பெரிய நீதிபதியாக உத்தியோகம் வகித்து வந்தார். மகத்தான சமூக சீர்திருத்தவாதி. அவர் தமது சம்பளத்தில் சொந்தச் செலவுகளுக்காக நாற்பது ரூபாய் மட்டும் வைத்துக்கொண்டு, எஞ்சிய பணத்தையெல்லாம் ஏழைகளையும், அனாதைகளையும், கணவனால் கைவிடப்பட்ட பெண்களையும் காப்பாற்றுவதில் செலவிட்டார். பம்பாயில் ஓர் ஆசிரமத்தைக் கட்டினார். தினந்தோறும் அவரது உபந்நியாசங்களைக் கேட்பதற்காக யுவர்களும் யுவதிகளும் திரளுவார்கள்.

அவ்வாறு கூட்டம் கூடுவதில் ஓர் இளைஞன் ஓர் யுவதியைக் காதலிக்கும்படி ஆகிவிட்டது. கௌரவம் மிகுந்த குடும்பத்திலிருந்து தோன்றியவள் அந்த யுவதி. அவர்களிடையே வளர்ந்தது காதல் வளர்பிறை போல். இதன் பயனாக, கன்னி கருவுற்றாள் கலியாணமாகு முன்பே. இதனையுணர்ந்த அக்கள்ளக் காதலி ஸ்ரீ கிட்டுமுல் அவர்களைச் சந்தித்து, "ஐயா, தற்கொலையின் மூலமாகவேதான் நான் என் குடும்ப கௌரவத்தைப் பாதுகாக்கக் கூடும்" என்று கண்ணீர் விட்டுக் கதறினாள். ஸ்ரீ கிட்டுமுல், "பெண்ணே! தற்கொலை புரிந்து கொள்வது

பாவம். உன் காதலனையோ அல்லது வேறு உன்க்குந்த யுவனையோ மணந்து கொள்வதுதான் ரொம்பவும் நல்லது" என்று பதில் கூறினார். அந்தமடந்தை தன்னாலான முயற்சிகளையெல்லாம் செய்தாள். அவை யாவும் விழலுக்கு இறைத்த நீர் போல் வீணாயின. இதற்கிடையில் கரு வளர்ந்து கன்னிப்பெண் கர்ப்பவதியாயிருக்கிறாள் என்று பலருக்கும் தெரியும்படியாக உடல்நிலை மாறியது. இதன் காரணமாக அந்த மங்கை மீண்டும் கிட்டுமுல்லைப் பார்க்க வந்தாள். கண்ணும் கண்ணீருமாய் கலங்கிய வண்ணம், "ஐயா, என் மானத்தைக் காப்பாற்றுவோர் யாருமே இல்லை. என்னை முடித்துக் கொள்வதைத் தவிர வேறு எந்த வழியும் கிடையாது" என்று அங்கலாய்த்தாள். அவ்வாறு அந்த இளம்பெண் பேசியது கிட்டுமுல்லைப் பெரிதும் பாதித்தது. அவர் தமது கண்களை இறுக மூடிக் கொண்டு சிந்தனை புரிந்தார் சில நிமிஷங்கள். பிறகு "கன்னிகையே! கவனமாகக் கேள். உன் மானத்தைக் காப்பாற்றுவதற்கு எவரும் இல்லையென்றால், அதை நான் ரக்ஷிக்கிறேன்" என்று அறுதியிட்டு உரைத்தார்.

பிறகு ஸ்ரீ கிட்டுமுதல் அப்பருவ நாயகியை முறையாகத் திருமணம் பண்ணிக் கொண்டார். அதற்குப் பின் அப்புனித புருஷர் ஆசிரமத்தை மூடிவிட்டு, ஒரு வீட்டை வாடகைக்கு அமர்த்திக் கொண்டு அங்கே தமது 'மனைவி'யுடன் வசித்து வரலானார்.

உடனே, ஏறக்குறைய எல்லாச் செய்தித் தாள்களும் நிந்திக்கும்படியான தலைப்புகளுடன் இச்செய்தியைப் பகிரங்கப்படுத்தின. எல்லாப் பகுதிகளிலிருந்து பலர் இப்புண்ணிய புருஷரைப் பாய்ந்து தாக்கலானார்கள். இதற்கெல்லாம் மறுப்பு அளித்துப் பதில் கூறாது சும்மா இருந்து விட்டார். அந்தநேரத்தில், அவருக்கு நண்பரான ஆசிரியர் ஒருவர் ஸ்ரீ கிட்டுமுல்லிடம் உண்மைகளை ஆராய விசாரித்தார். இதற்கு அவர் சுருக்கமாக, "நீங்கள் உங்கள் கடமைகளை நிறைவேற்றுங்கள், நான் எனது கடமையைப் புரிகிறேன்" என்று பகன்றார்.

ஒன்பது ஆண்டுகள் ஓடி ஒளிந்தன. அம்மாது க்ஷய ரோகத்தினால் பீடிக்கப்பட்டாள். பாயும் படுக்கையுமானாள். அவளுடைய பெற்றோர்கள் அவளைப் பார்க்க வந்தார்கள். அப்புண்ணியவதி இறக்குந்தறுவாயில், தன் தாயாரைப் படுக்கைக்கு அருகில் வருமாறு அமைதியுடன் அழைத்து, "அம்மா! என்னோடு கூடவே கொண்டு போக விரும்பவில்லை ஓர் இரகசியத்தை. இப்போது அதை உனக்குச் சொல்லுகிறேன். கடந்த ஒன்பதாண்டுகளாக என்னை மணந்து கொண்ட இவருக்கு நான் மனைவியாக இருந்து வருகிறேனென்று உலகம் பேசும், ஆனால், நாம் தகப்பனும் மகளுமாக வாழ்க்கை நடத்திக் கொண்டு வந்தோம்" என்று கூறினாள்.

தாயாருக்கு இது பெருத்த வியப்பும் திகைப்பும் விளைவித்தது. வெகு காலத்திற்குப் பிறகுதான் இப்பேருண்மை மக்கள் எல்லோருக்கும் புலனாகியது. பிறருக்காகத் தன் கௌரவத்தைத் (மானத்தை) தியாகம் புரிந்த ஒருவருடைய இந்த ஆத்மபரித்தியாகம் ஓர் உணர்ச்சியை ஊட்டியது எனக்கு. எனினும் மக்கள் சமுதாயத்திற்குத் தொண்டு புரிய வேண்டுமென்ற எனது ஆசைக்கு பிரத்தியக்ஷமான அனுபவவடிவமளிப்பது எப்போதென்பது எனக்குத் தெரியாது.

புதுடில்லி ஸ்ரீ துவாரகாதாஸ் என்பவர் எனக்கு இச்சம்பவத்தை விரித்துரைத்தார். சுபம்.

## 28. பகவானின் திருவருள்

பகவானின் திருவருள் பக்தர்களிடத்தில் எப்போதும் எல்லா இடங்களிலும் எல்லாக் காலத்திலும் இருந்து வருகிறது. பக்தியுடன் இதயத்தின் ஆழத்திலிருந்து பகவானை ஒருமுறை சிந்தித்தால், ஆபத்துக் காலத்தில் அவர் ஓடி வந்து உன்னை ரக்ஷிப்பார். பக்தர்களுக்கு அவர் தாசனாகி விடுகிறார். பகவானுக்கு தமது பிராமணங்களைவிட பக்தர்களின்

பிராமணங்கள் பிரமாதுமானவை. பக்தர்களிடத்தில் பகவான் கொண்டுள்ள ஓர் அன்பை அடியிற் கண்ட மகாபாரதக் கதை புலப்படுத்துகிறது.

குருக்ஷேத்திரத்தில் மகாபாரத யுத்தம் மும்முரமாக நடந்து கொண்டிருக்கிறது. கர்ணன் நாகாஸ்திரத்தை விட்டு விட்டான். ஸ்ரீ கிருஷ்ண பகவானின் திருமேனியின் அழகில் ஈடுபட்டுச் சொக்கிப் போயிருந்த அர்ஜுனன் மீது அஸ்திரம் ஏவப்பட்டது. அது வேகமாகத் தன்னை நோக்கி வந்து கொண்டிருப்பதை அவன் பார்க்கவில்லை. எதையும் பஸ்மீகரப்படுத்தும் சக்தி கொண்டது அந்த நாகாஸ்திரம், அர்ஜுனனின் கழுத்தைத் துருவிக் கொண்டு போய்விடும் போலிருந்தது. பகவான் இதை அறிந்தார். பக்தனைக் காப்பாற்றும் கடமை அவர் மீது விழுந்தது. அர்ஜுனனுக்கு வெறும் தேரோட்டியாக இருப்பதைத் தவிர யுத்தத்தில் போரிடவோ அல்லது துணை புரியவோ ஈடுபடுவதில்லை என்று பகவான் பிரமாணம் எடுத்துக் கொண்டிருந்தார். அப்படிப் பிரமாணம் எடுத்துக் கொண்டிருந்த போதிலும், தமது பிரமாணத்தைப் பகவான் புறக்கணிக்க நேர்ந்துவிட்டது - பக்தர்களைக் காப்பாற்றும் பொருட்டு. பகவான் தமது காலினால் பூமியை அழுத்தவே, தேர் சிறிது கீழே செல்ல நேர்ந்தது. இதனால் அர்ஜுனன் கழுத்தின் நிலை தாழ்ந்தது. நாகாஸ்திரம் தனது கிரீடத்தைப் பாய்ந்து தள்ளிக் கொண்டு போன பிறகுதான் அர்ஜுனன் தனது சுய அறிவுக்கு வந்தான். அபாயத்திலிருந்து பகவான் தன்னை எப்படி ரக்ஷித்தாரென்று அப்போதுதான் அறிந்தான். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவின் போதனைப்படி நாராயணாஸ்திரம் விடுவிக்கப்பட்ட போது ஸ்ரீ தர்மரும் அர்ஜுனன் உள்பட பாண்டவர்கள் சேனை முழுதும் நாராயணாஸ்திரத்தை வணங்கிக் காப்பாற்றப்பட்டார்கள்.

ஆனால், எதிரியின் அஸ்திரம் விடப்பட்ட போது அதனை வணங்குதல் பீமனுக்கு அவமானமான செயலாகத் தோன்றிற்று. ஸ்ரீ கிருஷ்ண பகவானின் யோசனையைப் பின்பற்றவில்லை. அவன் உறுதி படைத்தவனாக இறுதிவரை வீரனைப் போலப் போர் புரிவதெனத் தீர்மானித்தான்.

நாராயணாஸ்திரத்தின் சக்தி பகவானுக்குத் தெரியுமல்லவா! பீமனை எதிர்நோக்கி நிற்கும் அபாயத்தையும் அறிவார். வார்த்தைகள் பீமனைச் சாந்தப்படுத்தா. ஆகையால் பகவான் நல்லதோர் காரியத்தைச் செய்தார். ஸ்ரீ கிருஷ்ணனும் அர்ஜுனனும் பீமனைத் கீழே தள்ளி சாஷ்டாங்க நமஸ்காரம் செய்யச் செய்தார்கள். அதனால் நாராயணாஸ்திரம் பீமனைப் பாதிக்கவில்லை.

பீமன் தனது சுயேச்சையாக ஒருபோதும் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டதே இல்லை. ஆனால் இது பகவானுக்குத் திருப்தியே - அரை மனத்துடன் அவரை சாஷ்டாங்க் நமஸ்காரம் செய்தாலும்கூட நீ அவருடைய பக்தனென்று பகவான் அறிகிறார். இது உனக்குத் தெரியாது. இன்று நீ பலவந்தமாகச் சாஷ்டாங்க தெண்டம் சமர்ப்பித்தால் நாளை நீ பகவானுடைய உண்மைப் பக்தனாகி விடுவாய் என்பது நிச்சயம். எப்படி பகவான் ஸ்ரீ பீமனையும், அர்ஜுனனையும், பாண்டவ சேனை முழுவதையும் ரக்ஷித்தாரோ அப்படியே நீ ஒரு தடவை அவரைச் சிந்தித்து வணங்கத் தொடங்கினால் பகவான் உன்னை எல்லா அபாயங்களிலிருந்தும் எப்போதும் காப்பாற்றக் கூடிய தாசனாகிவிடுவார்.

பகவானுடைய பாதாரவிந்தங்களில் செலுத்தும் பக்தியை விருத்தி செய்க. அவரது திருநாமம், மஹிமையைப் பாடுங்கள். அவர் நினைவாகவே வாழுங்கள். அவரை நீங்கள் புறக்கணித்தாலும் உங்களை அவர் புறக்கணிக்கமாட்டார். அவர் உங்களுடைய நண்பர், நன்மை நாடுபவர், ரக்ஷகர்.

சர்வ சக்தி படைத்த சர்வேசுவரன் திருவருள் உங்கள் எல்லோருக்கும் உண்டாகுக. உண்மையான பக்தி சிரத்தையின் மூலம் நீங்கள் எல்லோரும் அவரை அடைவீர்களாக! சுபம்

## 29. சிபக் மஹாதேவ்

விவாகமான இரண்டு மாதங்களுக்குப் பின், மாமனார் வீட்டுக்குப் புதுமாப்பிள்ளை ஒரு நாவிதனுடன் விஜயம் செய்ய வேண்டுமென்ற சம்பிரதாயம் இந்தியாவில் ஒரு கிராமத்தில் இருந்து வந்தது. நமது கதாநாயகன் புது மாப்பிள்ளை; ஆனதால், நாவிதன்னத் தேடினான். அவனுக்கு வாய்த்த நாவிதனோ மகாகெட்டிக்காரன். மாப்பிள்ளை வைத்திருப்பவை போன்ற அதே ஆடை உடைகளைத் தனக்கும் கொடுக்கும் பட்சத்தில் அவனுடன் வருவதாக நாவிதன் வற்புறுத்தினான். அவ்வாறே கொடுக்கப்பட்டன. மாப்பிள்ளை நாவிதனுடன் புறப்பட்டான்.

மாமனார் வீட்டுக்குச் சமீபத்தில் போனவுடன், கெட்டிக்கார அந்த நாவிதன் மாப்பிள்ளையை அங்கு ஒரு வினாடி நேரம் தங்கியிருக்கச் சொன்னான் - மாமனார் வீட்டில் தான் போய் கௌரவம் மிகுந்த மாப்பிள்ளையின் வருகையைப் பற்றி முன்கூட்டிச் சொல்லி வருவதற்காக. எளிய சுபாவம் படைத்த நமது மாப்பிள்ளை அவன் சொற்படி காத்திருந்தான். தந்திரக்கார நாவிதன் வீட்டுக்குள் போய் மாமியாரிடம் தன் மூட்டை முடிச்சுகளை ஒரு வேலைக்காரன் கொண்டு வருவதாகவும், அவனுக்காக ஆளை அனுப்பும்படியும் கூறினான். எனவே, மாமனார் வீட்டுக்காரர்கள் அனைவரும் மாப்பிள்ளையை வேலைக்காரனாகவே மதித்து வரலானார்கள். நாவிதன் இளவரசன் போல உபசரிக்கப்பட்டு வந்தான். மாப்பிள்ளையோ மௌனமாக அவஸ்தைப்பட்டு வந்தான்.

ஒரு நாள் விறகு இல்லை; காட்டுக்கு வேலைக்காரனை அனுப்பி விறகு கொண்டு வரும்படி நாவித மாப்பிளையை மாமியார் கேட்டுக் கொண்டாள். மனப்பூர்வமாக அனுமதி கொடுக்கப்பட்டது. பாவம்! மாப்பிள்ளை வனத்திற்கேகினான். விறகுகளைச் சேகரித்தான். கட்டுவதற்குக் கயிறு கொண்டு

வர மறந்தான். என்ன செய்வதென்று தோன்றாமல் வருத்தத்துடன் தன் விதியை நொந்து அழலானான். அதிர்ஷ்டவசமாக அவ்வழியே பார்வதி சமேதராக பரமேஸ்வரர் செல்லலானார். வேலைக்காரன் அழுது கொண்டிருப்பதைக் கண்ட பார்வதி தேவிக்குக் கருணை பொங்கியது; இரக்கம் மேலிட்டது. அவனை விசாரிக்கும்படி பரமேஸ்வரரை வேண்டினாள். அதைப் புறக்கணிக்கப் பார்த்தார் அவர். தேவி வற்புறுத்தவே, பரமேஸ்வரர் அவன் அழக் காரணம் என்ன என்று கேட்டார். அவன் நடந்த கதையை நவின்றான். பரமேஸ்வரர் அவனை ஆற்றித் தேற்றி, "பக்தா! 'சிபக் மஹாதேவ்' என்ற மந்திரத்தை நீ உச்சரித்தால், எதுவானாலும் ஆச்சரியப்படும் வகையில் ஒட்டிக்கொள்ளும்" என்று வரம் கொடுத்தார். உடனே மந்திர உச்சாடனம் பண்ணினான். எல்லா விறகுகளும் ஒன்றாய்ச் சேர்ந்தன. அவ்விறகுக் கட்டைத் தலைமேல் வைத்துக் கொண்டு நடந்தான் மாமியார் வீட்டுக்கு.

நாவிதன் பாலைக் குடிக்கிற சமயம்; பால் கோப்பை உதட்டருகில் இருந்தது. மாயா சக்தி வாய்ந்த 'சிபக் மஹாதேவ்' எனும் மந்திரத்தை உச்சரித்தான் வேலைக்கார மாப்பிள்ளை. கோப்பை உதட்டில் ஒட்டிக்கொண்டது. நாவிதன் வியப்பும் திகைப்பும் அடைந்தான். கோப்பையை எடுக்காமலிருப்பதைக் கண்ட மாமி அதியாச்சரியப்பட்டு, கோப்பையைப் பிடுங்க வந்தாள். கோப்பையின் மீது மாமி கை வைத்தவுடன், மந்திரம் மீண்டும் உச்சரிக்கப்பட்டது. மாமி இருந்த இடத்தை விட்டு நகராமலும் கையை அசைக்கக் கூட முடியாமலும் அவஸ்தைப் பட்டாள். வீட்டிலுள்ள அனைவரும் ஒருவர்பின் ஒருவராக வந்து இந்த மாயவலையில் சிக்குண்டார்கள்; ஒன்றும் தோன்றாமல் மருண்டார்கள்.

பக்கத்தில் வசித்துக் கொண்டிருந்த பண்டிதர் ஒருவர் அழைக்கப்பட்டார். குதிரை மீது சவாரி செய்து வந்த அப்பண்டிதர் அதை விட்டிறங்கி, குதிரையின் வாலைப்பற்றிக் கொண்டு நின்றார். அமைதியுடன் மாப்பிள்ளை மாயமந்திரத்தை உச்சாடனம் பண்ணினான். பண்டிதர் தம்

கையை வாலை விட்டு எடுக்க முடியாமல் தத்தளித்தார், ஆச்சரியப்பட்டார். ஒட்டிக் கொள்ளும் சக்திக்கு ஒருவனைத் தவிர இதர நபர்கள் இலக்காவதை அவர் தம் மனக் கண்ணிலே ஆராய்ந்தார். அன்பும் மரியாதையும் ததும்பும் முகத்தோற்றத்துடன், பண்டிதர் வேலைக்கார மாப்பிள்ளையைப் பக்கத்தில் அழைத்து, அதெல்லாம் எவ்வாறு நடக்கின்றன என்றும் அத்தண்டனையினின்று அவன் மாத்திரம் எப்படித் தப்பித்துக் கொண்டானென்றும் கேட்டார். நற்குணமும் எளிய சுபாவமும் படைத்த நமது கதாநாயக மாப்பிள்ளை கதை முழுவதையும் கக்கினான். எல்லோரும் பிரமித்துப் போனார்கள். நிஜமான தமது மாப்பிள்ளையை அத்தகைய அவமான நிலையில் நடத்தியதற்காக மாமனாரும் மாமியாரும் வெட்கித் தலைகுனிந்தார்கள். மாப்பிள்ளை பரமேஸ்வரரைப் பிரார்த்தித்தான். உடனே எல்லாரும் மாயா சக்தியினின்று விடுதலையடைந்தார்கள். நாவிதன் கடுமையாகச் சவுக்கடி கொடுக்கப்பட்டான். அது அவன் செய்த வஞ்சகத்திற்கு ஏற்றதே. வீட்டை விட்டுத் துரத்தப்பட்டான்.

*நீதி : யாரையும் மோசஞ் செய்யாதே*

## 30. அன்பு - அன்பு மட்டுமே தீமையை எப்போதும் மாற்றக்கூடியது

வடதேசத்தில் முன்னொரு காலத்தில் நாடு நகரங்களுக்கு அப்பால் பெரியதோர் மலையின் சாரத்தில் காடு ஒன்று இருந்தது. அதில் வேகமாகப் பாய்ந்தோடும் அருவி ஒன்று உண்டு. பல்வேறு மரங்களும் செடிகளும், வளர்ந்துள்ள தோட்டத்தால் சூழப்பட்ட ஒரு கோவிலும் சில குடிசைகளும் ஒரு சிறிய ஆஸ்ரமும் காணப்பட்டன. ஒரு தவசி தம்முடைய ஆறு சீடர்களுடன் அந்த ஆஸ்ரமத்தில் வசித்து வரலானார். ஸ்ரீகோபாலபகவானுடைய பக்தர் என்று கூறிக்கொள் வாராதலால், அவர் கோபால்தாஸ் என்றே அழைக்கப்பட்டார்.

அவரது ஆஸ்ரமம் "கோபால ஆஸ்ரமம்" என்று அழைக்கப்பட்டு வந்தது.

கோபால்தாஸ் தபசி, மூலிகை ஆராய்ச்சி நிபுணர்கூட. ஏழை, பணக்காரர், சாதி மதம் வித்தியாசம் பார்க்கமாட்டார். கம்பீரம், அன்பு, தூய்மை. நல்லொழுக்கம் முதலிய உயரிய குணங்களினால் அவர் விளங்கி வந்ததன்றி, எல்லா நோய்களையும் வெற்றிகரமாகக் குணப்படுத்துவதால் நல்ல புகழும் பெற்றிருந்தார். யாரும் அவருடைய ஆஸ்ரமத்தில் இலவசமாகச் சாப்பிடலாம். பணக்காரப் பிரபுக்கள் எப்போதேனும் பிரியப்பட்டு தாமாகவே ஏதேனும் பொருள் உதவி புரிந்தால், அத் தொகை முற்றிலும் மருந்துகளைத் தயாரிப்பதிலும், ஏழை நோயாளிகளுக்கு உணவளித்தலிலும், இதர ஆஸ்ரம மேற்பார்வையாளர்களை உபசரிப்பதிலும் செலவிடப்படும். ஆனால், அவரும் அவரது சீடர்களும் யாசக உணவினால் வயிறு வளர்த்தார்கள். கிராமங்களுக்கு இரண்டு சீடர்கள் முறைக்கிரமமாய் யாசிக்க வீடு வீடாகப் போவார்கள். கிடைத்த உணவில் திருப்தி அடைவார்கள்.

அந்தத் தாலுகாவில் ஜகதீஷ்சிங் என்ற ஜமீன்தார் ஒருவர் இருந்தார். யௌவன வாலிபர். அவர் குரூரமும் கொடிய குணமும், துர்நடத்தையும் கொண்டவரென்று, ஊர் முழுதும் தெரியும். கோபால்தாஸ் மீது அவருக்கு மிக்க அச்சம் ஏற்பட்டிருந்தது. தேன் ஊறும் நாவும், துவேஷம் சீறும் இதயமும் அவருக்கு உண்டு. கோபால்தாஸை எப்போதும் விரும்பியதில்லை. ஆனால், அவர் தபசியைச் சந்திக்கும்போதெல்லாம் அவரை மரியாதையாக நடத்துவதாகப் பாசாங்கு செய்வார். கோபால்தாஸையும், ஆஸ்ரமத்தையும் தொலைத்து ஒழித்துக்கட்ட அந்த ஜமீன்தார் பாபமும் குறும்பும் துர்நடத்தையும் கொண்ட நபர்களை எத்தனையோ தடவை அனுப்பியுள்ளார். அவர்களில் சிலர் திரும்பிவந்தனர். ஒரு சிலர் தபசியை நெருங்கவும்கூட துணியவில்லை. பின்னும் சிலர் ஆஸ்ரமத்தில் போய் கோபால்தாஸைத் தரிசித்தவுடன், அவர்களுஉடைய மனம் மாறிப்போய்த் தாம் வந்துள்ள தீய காரணத்தை

வெளிப்படுத்தினார்கள். எல்லா விஷயங்களையும் அமைதியாகக் கேட்டு கோபால்தாஸ் புன்முறுவல் கொண்டு சும்மா இருந்துவிடுவார். தம்முடைய கருத்துகள் வெளிப்பட்டுப் போனதால் ஜமீன்தார், குற்றவாளியும் கொள்ளைக்காரனுமாகிய கரன்சிங் என்பவனுடன் நட்பு பாராட்டி நன்கு குடித்து வெறிபிடித்தவராகச் சதியாலோசனை புரிந்தார். கரன்சிங் பக்கத்துக் காட்டில் தனது சகாக்களுடன் வசித்து வந்தான்.

கோபால்தாஸ் சகல அம்சங்களிலும் சிறந்த நல்லதொரு குதிரை ஒன்றை வளர்த்து வந்தார். அது பார்வைக்கு அழகாய்க் கவர்ச்சிகரமாக இருந்தது. அருகிலிருந்த கிராமத்திலுள்ள ஒரு நோயாளியைப் போய்ப் பார்க்க கோபால்தாஸ் குதிரை மீதேறிப் புறப்பட்டார். கரன்சிங் தபசியைக் கண்டு அவரைத் தாக்கத் தீர்மானித்தான். *போதிய தைரியம் பிறக்கவில்லை. இருந்தபோதிலும், தபசி திரும்பிவரும்போது, கரன்சிங் காலூனமுற்ற பிச்சைக்காரன் போல மாறுவேடம் புனைந்து சாலையில் நின்று தேம்பித் தேம்பி அழலானான். தபசி அவனைப் பார்க்கவே, அன்பும் கருணையும் ஏற்பட்டன. பிச்சைக்காரனை குதிரையின் மீதேற்றி உட்காரச் செய்து தபசி நடக்கலானான். சிறிது தொலைவு சென்ற பிறகு, குதிரையை விரட்டி வேகமாய்ச் சவாரி செய்தான் கரன்சிங். உரத்த குரலில், "ஏ, மூட சாதுவே! நான் கரன்சிங். உன் குதிரையைக் கொள்ளையடிக்க நினைத்தேன். எவ்வளவு சாமர்த்தியமாக அதைக் கொண்டு போகிறேன், பார். அதை உன்னால் திரும்பவும் அடைய முடியாது" என்று கத்தினான். கோபால்தாஸ் சிரித்துக் கொண்டே, "குதிரை நல்ல பயிற்சி உள்ளது. நான் ஊதுகுழல் எடுத்து ஊதினால் இப்போதுகூட அது என்னிடம் திரும்பிவரும். ஆனால் அதைச் செய்ய விரும்பவில்லை. கோபால பகவானை உன் வடிவத்தில் சேவிக்க முடிந்ததைக் காண எனக்குப் பெரு மகிழ்ச்சி உண்டாகிறது" என்று பதில் கூறினார். சிறிது நேரம் கழிந்ததும், தபசி "தயவு செய்து முடியுமானால் ஓர் உபகாரம் செய்யுங்கள்" என்று வேண்டினார். "கரன்சிங்கிடமிருந்து

என்ன தயவை நீ எதிர்பார்க்கிறாய்? என்னை முட்டாளாக்க முயலாதே" என்று கடுமையாகக் கர்ஜித்தான்.

கோபால்தாஸ்:- அப்படிக் கருத வேண்டாம். குதிரையை நீங்கள் எடுத்துக் கொள்ளுங்கள். ஆனால் இச்சம்பவத்தைப் பற்றி வேறு யாரிடமும் தயவுசெய்து தெரிவிக்க வேண்டாம்.

கரன்சிங்:- அப்படிச் செய்தால் உனக்கு என்ன தீங்கு வரும்?

கோபால்தாஸ்:- இச்சம்பவத்தைக் கேட்டான பிறகு மக்கள் ஏழை எளியவர்கள் மீது இரக்கம் கொண்டு எந்த உபகாரமும் இனிமேல் செய்யமாட்டார்கள். அதற்காகத்தான் சொல்லவேண்டாமென்கிறேன் - என்றார். ஆஸ்ரமத்திற்குத் திரும்பினார் கோபால்தாஸ்; ஆனால், தபசியின் கடைசி வார்த்தைகள் கரன்சிங்கைக் கவர்ந்தன. கொள்ளைக்காரனான கரன்சிங் தான் செய்த செயலைப் பற்றி அவமானமடைந்ததன்றி இரவு முழுவதும் தூங்கவே இல்லை. மறுநாள் காலை குதிரையுடன் அவன் ஆஸ்ரமத்திற்குப் போன போது, சினேகிதரைப்போன்று அவன் வரவேற்கப்பட்டான். கோபால்தாஸின் கால்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டான். ஆழ்ந்த நன்றியறிதலும் கெஞ்சும் பாவனையும் கொண்டவனாகத் தழுதழுத்த குரலில், "தவசியே! கொள்ளைத் தொழிலை முற்றிலும் விட்டுவிடத் தீர்மானித்துள்ளேன். தங்களுடைய மன்னிப்பும் அன்பும் கோருகிறேன்" என்று பிரார்த்தித்தான். கோபால்தாஸ் அன்புடன் கரன்சிங்கைத் தழுவிக் கொண்டு, 'கவலைப்படாதீர்கள். அமைதியாக இருங்கள். நேற்றிரவு முழுவதும் தூங்கவில்லை போலும், ஆகையால் உள்ளே போய்ப் படுத்துக் கொள்ளுங்கள்" என்று பிரேமையுடன் உபசரித்தார். அதே நேரத்தில், அவர் தமது சிஷ்யர்களுள் ஒருவனைக் கூப்பிட்டு அவருக்கு வேண்டிய உணவும் வசதியான இடமும் அமைத்துக் கொடுக்குமாறு கட்டளையிட்டார்.

இந்தச் செய்திகளெல்லாம் தெரியவந்ததும் ஜமீன்தார் கண்களில் நெருப்புப்பொறி கக்கியது. மீசை துடிதுடித்தது. ஜமீன்தார் தாமே நேரில் போய் ஆஸ்ரமத்தைத் தீக்கு இரையாக்கிக் கோபால்தாஸையும் கரன்சிங்கையும் எமலோகத்திற்குள் புகுத்திவிடுவதாகத் தீர்மானித்தவராகத் தமக்கு நம்பிக்கைக்குப் பாத்திரமான சில ஆட்களை அழைத்துக் கொண்டு நள்ளிரவில் புறப்பட்டார். அக்கூட்டத்திற்குத் தலைவராக ஜமீன்தார் குதிரை மீதேறி முன்னால் சென்றார். ஆஸ்ரமக் குன்றை அடைந்ததும், ஒன்றைத் தவிர எல்லாத் தீவட்டிகளையும் அணைத்து விடுமாறு ஆணையிட்டார். அக்கூட்டம் குன்றின் மீதேறத் தொடங்கியது. ஆஸ்ரமத்திற்குப் பக்கத்தில் சென்றவுடனே, குதிரை காலிடறிப் பெருத்த கனைப்புடன் அருகிலிருந்த பள்ளத்தாக்கில் ஜமீன்தாருடன் சடாரென்று வீழ்ந்தது. ஆஸ்ரமத்துக் காவல் நாய்கள் குலைக்கத் தொடங்கின. ஜமீன்தாருடைய ஆட்கள் கதிகலங்கித் திகைத்து இன்னது செய்வதென்று உணராமல் குழப்பமடைந்தார்கள். வெகு சீக்கிரத்தில் எரிகிற தீவட்டிகளுடன் சிலர் தம்மை நோக்கி விரைந்து கொண்டிருப்பதைக் கண்டார்கள். ஆனால், "தயவுசெய்து பயப்படாதீர்கள். உங்களைக் காப்பாற்ற நான் வருகிறேன்" என்று இரக்கம் ததும்பிய குரலோசை ஒன்று எழுந்ததும், அவர்கள் நின்றார்கள். கோபால்தாஸ் தமது நான்கு சீடர்களுடன் கரன்சிங்குடனும் அங்கே வந்து விஷயத்தைக் கேட்டார். ஒரு நபர் விஷயங்களை ஒளிக்காமல் உண்மையைக் கக்கினார். இதைக் கேட்டதும் கரன்சிங்குக்கு அடங்கா உணர்ச்சி பீறிட்டது. ஆனால் கோபால்தாஸ் கையில் எரிகிற தீவட்டியோடும் தமது சிஷ்யர்களுடனும் ஜமீன்தார் ஆட்களுடனும் உடனே கீழே இறங்கினார். கரன்சிங்கோ நின்றவிடத்திலேயே ஸ்தம்பித்துப் போனார். பள்ளத்தாக்கில் ஒரு மரக்கிளையில் ஜமீன்தார் சிக்கி பலத்த காயங்களுடன் நினைவற்றுப் போயிருந்ததை அக்கூட்டம் கண்டுபிடித்தது. கோபால்தாஸ் ஜமீன்தாரை வெகு ஜாக்கிரதையோடு தமது ஆஸ்ரமத்திற்கு சுமந்துகொண்டு வந்து, காயங்களுக்கு மருந்து போட்டுப் பத்திரமாகக் கட்டினார். சிறுது பானத்தை வாயில்

ஊற்றி ஜமீன்தாருக்கு நினைவு வரும்படி செய்தார். பக்கத்தில் அமர்ந்துகொண்டு கவனித்தார்.

இவற்றையெல்லாம் கோபம் கலந்த பகைமையுடன் புதிய பார்வையோடு கவனித்து வந்த கரன்சிங் இப்போது மரியாதையாக கோபால்தாஸை நோக்கி, "தேவரீர் என்னை மன்னிக்கவேண்டும். இந்தத் துஷ்ட ஜகதீஷ் ஜமீன்தார் ஒருவரால் மாத்திரமே எத்தனையோ முறைகளில் தேவரீர் அவதிப்பட நேர்ந்துள்ளது. இப்போதும்கூட பெருங்கருணையுடன், சிரமமும் கவனமும் கொண்டு அவரை உயிர்ப்பிக்க முயலுகிறீர்கள்" என்று கூறினான். உதட்டில் விரலை வைத்துக்காட்டி, தபசி கரன்சிங்கைப் பேசாமலிருக்கும்படி கேட்டுக் கொண்டார்.

மறுநாள் காலை சூரியன் உதித்தது. ஜகதீஷ்சிங் மெதுவாகக் கண்களைத் திறந்தார். எல்லாப் பக்கங்களிலும் ஒருமுறை பார்த்துவிட்டுக் கண்களை மூடிக் கொண்டார். கோபால்தாஸ் கோபால பகவானை நோக்கிப் பிரார்த்தனை செய்து, மௌனமாக அவருக்கு நன்றி செலுத்தினார். ஆஸ்ரமத்திற்கு வெளியே அவர் கரன்சிங்குடன் வந்ததும், அவரைப் பார்த்து, "பகை பகையை உண்டு பண்ணும். ஆனால் அன்பு பகையை அன்பாக மாற்றுகிறது. அதிகாரத்தால் வெல்வதற்கும் அன்பால் வெல்வதற்கும் உள்ள வித்தியாசமோ மண்ணுக்கும் விண்ணுக்குமுள்ள வித்தியாசம் போல் இருக்கிறது. இரண்டும் ஒன்றுக்கு ஒன்று முரண்பட்டவை. முன்னது விஷம் போன்றது; பின்னது தேவாமிர்தம் போன்றது. இதனுடைய நன்மைகள் இரண்டுக்கும் பரிணமிக்கிறது. ஒன்று தாற்காலிகமாக எதிரியை முழங்காலிட்டுப் பணியவைக்கிறது. மற்றொன்றோ எதிரியை சாசுவதமாக அடக்கி விடுகிறது. அன்பே கடவுள்; கடவுளே அன்பு. அன்பு - அன்பு மாத்திரமே தீமையை எப்போதும் ..." என்று உபதேசம் கூறிக் கொண்டிருக்கையில், ஒரு சீடர் அங்கே ஓடிவந்து இடைமறித்து, "ஜகதீஷ்சிங் கண்களைத் திறந்தார். யாரையோ தேடுவது போலத் தெரிகிறது" என்று கூறினார். கோபால்தாஸ் ஆஸ்ரமத்திற்குள்

உடனே விரைந்தார். சீடரும் கரன்சிங்கும் பின் தொடர்ந்தார்கள். ஜமீன்தாரின் தாடையில் சரியான காயம். அவரால் பேசமுடியவில்லை. ஜகதீஷ்சிங்கின் கண்கள் மூடியிருந்தாலும், கோபால்தாஸின் காலடிச்சத்தம் எழுந்ததைக் கவனித்தார். ஒரு நிமிஷத்திற்குப்பின், ஜமீன்தார் மீண்டும் கண்களைத் திறந்தார். ஆனால், இந்தப்பார்வை முன்னதைவிட அதிக நூதனமாக இருந்தது - முன்செய்த துர்ச்செயல்களின் உஷ்ணத்தாலும், அவமானத்தாலும், பச்சாத்தாப உணர்ச்சியாலும் உருகிக் கொதித்துக் கொண்டிருந்தது அவருடைய இருதயம். அதே எண்ணங்களும் உணர்ச்சிகளும் கூடி அன்பும் மன்னிப்புமே சொரூபமா விளங்கிய கோபால்தாஸை நோக்கி, கவலை ததும்பிய கண்ணீர்த் துளிகளின் வடிவத்திலே அவருடைய கன்னங்களின் வழியாகப் புரண்டோடிக் கொண்டிருந்தன.

ஜகதீஷ்சிங்கின் எண்ணங்களையும் உணர்ச்சிகளையும் உணர்ந்து கொண்ட கோபால்தாஸ் தபசி அவருடைய தலையின்மீது மெதுவாகத் தமது உள்ளங்கையை வைத்து ஆறுதல் கூறி ஆசீர்வதித்தார்.

ஓம் தத் ஸத் .

## 31. சாக்ரடீஸும் குதிரையும்

சாக்ரடீஸுக்கு ஒரு குதிரை இனாமாக வழங்கப்பட்டது. குதிரையை கொடுத்தவர்.'மகரிஷியே! இது மிகவும் நல்ல குதிரை. இதற்கு நூறு நல்ல குணங்கள் உண்டு. ஆனால், ஒரே ஒரு துர்க்குணமுண்டு'' என்றார். அதற்கு சாக்ரடீஸ், "இந்தக் குதிரையை நான் வைத்துக்கொள்கிறேன். ஒரே ஒரு துர்க்குணந்தானே இருக்கிறது. நூறு நல்ல குணங்கள் உண்டா! அந்த துர்க்குணம்தான் என்ன, சொல்லுங்கள்'' என்று கேட்டார். அம்மனிதர்: "துர்க்குணம் என்பது என்னவென்றால், குதிரை செத்த குதிரை'' என்று பதில் கூறினார். சாக்ரடீஸ்: "இக் குதிரையை நான் விரும்பவில்லை, இதை நீங்களே

வைத்துக்கொள்ளுங்கள்" என்றார். வாழ்க்கை என்பதுதான் என்ன? அது இறப்புடன் கலந்துள்ளது. நித்தியத்துவம் அடைந்து இறப்பை வென்று கொள்க. அப்பால்தான் நீங்கள் மிக்க சந்தோஷமாக இருக்கக் கூடும்.

## 32. இரு லோபிகளின் கதை

ராமன் என்னும் லோபி ரொட்டியைத் தின்று கொண்டிருந்தான். அவன் நெய்யைச் சிறிதளவு தொட்டுக்கொண்டான். மற்ற லோபி கிருஷ்ணன் மேலே ஆணியில் நெய்த் தகர டின்னைத் தொங்கவிட்டான். தன்னைக்காட்டிலும் கிருஷ்ணன் மகா கெட்டிக்காரன் என்று ராமன் எண்ணினான்; ஏனெனில் அவனுடைய நெய்யில் சிறிதளவுகூட குறையவே இல்லை. கிருஷ்ணனின் உதாரணத்தை அவன் பின்பற்றினான்.

இரண்டு குரங்குகள் இப்போது ஓடிவந்து, இரு லோபிகளுடைய நெய்ப் பாத்திரங்களையும் அபகரித்துக் கொண்டுபோய் நேர்த்தியாகத் தின்று குதூகலித்தன. எல்லா லோபிகளுடைய விதியும் இப்படித்தான். அவர்களுடைய புத்திரர்கள் அவர்களுடைய செல்வத்தைப் பாழாக்குகிறார்கள். உலோபித்தனம் என்பது பெரியதொரு சாபம். உண்மை பார்க்குமிடத்து உலோபிகளின் கதி மிகவும் வருந்தத்தக்க தாயுள்ளது. இகத்திலோ பரத்திலோ அவர்களுக்கு உய்வு கிடைப்பதில்லை. ஓ, உலோபிகளே! தரும இனங்களில் உங்கள் பணத்தைச் செலவிடுங்கள். இப்போதே பெருமையைச் சம்பாதித்துக் கொள்ளுங்கள். தருமம் இதயத்தைத் தூய்மைப்படுத்தி, விரிவடையச் செய்து, ஈஸ்வர சாக்ஷாத்காரத்திற்கு வழிகாட்டுகிறது. கந்தைகளை அணிந்தும், அழுகிய பண்டங்களைத் தின்றும் காலங்கழிக்காதீர்கள். நன்கு சாப்பிடுங்கள்; நன்கு உடை தரித்துக்கொள்ளுங்கள்.

## 33. சிரத்தையோடு முன்னேறுக

தென்னிந்தியாவிலுள்ள காஞ்சிபுரத்தில் விளங்குகின்ற ஸ்ரீ காமாட்சியம்மன் கோவிலுக்குச் சில விதவைகள் போனார்கள். அவர்கள், "ஏ, ஜகத்மாதாவே! விரைவில் எங்களுக்கு முக்தி வழங்குவாயாக. சம்ஸாரமெனும் அக்கினியில் நாம் தகித்துக் கொண்டிருக்கிறோம்" என்று வழக்கம்போல் பிரார்த்தனை செய்தார்கள். இங்ஙனம் சில மாதங்களாக அவர்களுடைய பிரார்த்தனை நடந்துகொண்டிருந்தது. அக்கோவிலிலுள்ள அர்ச்சகர் அவர்களுடைய பக்தியைச் சோதிக்க விரும்பினார். ஓரிரவு அவர் விக்ரஹத்தின் பின்னால் நின்று, தமது கையில் தேவியினுடைய தங்கக் கரத்தைத் தரித்துக்கொண்டார். பின் தமது கையை ஆட்டி, "முக்தியை விரும்புகிறவர்களே! இப்போதே வாருங்கள்" என்று அழைத்தார். யாரும் தேவியின் அருகே செல்லத் துணியவே இல்லை. ஒரு பெண், "எனது பேத்திக்கு கலியாணம் ஆகவில்லை, எனக்கு இப்போது முக்தி எதற்கு?" என்றாள். மற்றொருத்தி "மூத்தவனுக்குக் குழந்தையே இல்லை, கொஞ்ச காலத்திற்குப் பிறகு எனக்கு முக்தி வேண்டும்" என்று பதிலளித்தாள். அந்த விதவைகள் இவ்வாறே ஏதேதோ சாக்குச் சொல்லிவிட்டார்கள். இதுதான் உண்மையான நிலை. யாருமே யதார்த்தமாக முக்தியை விரும்பவில்லை. அதெல்லாம் வெறும் மேற்போக்கான உதட்டுப் பிரார்த்தனையும் பொய்ப் பக்தியுமே தவிர வேறில்லை.

## 34. கன்னாவின் பக்தி

கன்னா என்பவன் ராம்தாஸ் சேட்டின் வேலைக்காரன். எப்போதும் அவன் தன் யஜமானுடைய பெயரை ஆணையாக வைத்துப் பேசுவது வழக்கம். அவன் "ராம்தாஸ் சேட்டின் பெயரை ஆணையாக வைத்து இந்த உண்மை பேசுகிறேன்"

என்று உறுதிமொழி கூறுவான். சேட், "ஓ, கன்னா! என் பெயரை ஏன் ஆணையாக வைத்து எப்போதும் பேசுகிறாய்? நீ இனி உன் தந்தையின் பெயரை ஆணையாக வைத்துப் பேசு" என்று உத்தரவிட்டார். அதற்குக் கன்னா, "மரியாதைக்குரிய எஜமானரே! எனக்கு எல்லாமாக உயிராகத் தாங்கள் இருக்கிறீர்கள். தாங்கள் எனக்குச் சம்பளம், உணவு, ஆடை அவ்வளவும் தந்து ஆதரிக்கிறீர்கள். எல்லாவற்றிற்கும் நான் தங்களையே நம்புகிறேன். உண்மையில் தாங்கள் எனக்குத் தந்தையாரும் ஆதரவாளரும் ஆவீர்கள். ஆகையால்தான் தங்கள் பெயரை ஆணையாக வைத்து உறுதி பேசுகிறேன்" என்று நயந்து கூறினான். கன்னாவிடத்தில் சேட்டிற்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. சின்னஞ்சிறு லோகாயத விஷயங்களில்கூட ஒரு மானிடன் தன் வேலையாளின் பக்தியை மெச்சி மகிழ்ச்சி கொள்கிறானென்றால், இறைவனிடத்தில் நீ பரிபூரண சரணாகதி பண்ணினால், அவருடைய திருவருளைப் பற்றி எப்படித்தான் பேசுவது? சர்வேஸ்வரனிடத்தில் பக்தியைச் செலுத்து! அவருடைய மகிமைகளைப் பாடு; உனக்கு முக்தியும் நித்யானந்தமும் சித்திக்கும். ஓம் தத் ஸத்.

## 35. ரயில் வண்டி நகர மறுத்தது

சாது ஒருவர் ஒருநாள் ரயில் நிலையத்திற்குப் போய் டிக்கட் கலெக்டரிடம் ரயிலிலேற உத்தரவு தருமாறு வேண்டிக்கொண்டார். தாம் சாதுவானபடியால் டிக்கட் வாங்குவதற்குப் பணம் இல்லை என்றார். ஆங்கில இந்தியரான அந்த டிக்கட் கலெக்டர் அவருடைய வேண்டுகோளை மறுத்ததன்றி, முரட்டுத்தனமாக அவரை அப்பால் தள்ளிவிட்டார். சாது அமைதியாகவே இருந்தார். தமக்குள்ளே "ரயில் இப்போது புறப்படுமாவென்பதை நான் பார்க்கிறேன்" என்று முணுமுணுத்துக் கொண்டார். ரயில் வண்டி ஓட்டுபவர் குழல் ஓசை செய்தார். ரயிலை ஓட்டத் தொடங்குகிறார். ஆனால் முடியவில்லை. ரயில் வண்டி நகர மறுத்தது.

மற்றவர்கள் வந்து முயன்றார்கள். எல்லோரும் தோல்வியடைந்தார்கள். இதர ரயில் வண்டிகள் அடிக்கடி போக வர வேண்டியபடியால், அவை புறப்படுவதற்குத் தடைப்பட்டன - முதல் வண்டி கிளம்பாததால். தலைமை அலுவலகத்துக்கு தந்திகள் பறந்தன. நிபுணர்கள் வந்தார்கள். தம்மாலான மட்டும் முயன்றும் அவர்களால் முடியவில்லை. ஒரு மணி நேரம் போக்குவரத்து தாமதப்பட்டது.

இறுதியில், ரயில் நிலையத் தலைவர் (ஓர் இந்தியர்) சாது ஒருவர் அங்கே குறுக்கிட்டதை அறிந்தவராக, அதிகாரிகளை நெருங்கி, "வாசலுக்கு அப்பால் நின்று கொண்டிருக்கும் சாதுவுக்கு வண்டியில் இடங்கொடுத்தாலல்லாது, ரயில் புறப்படுவதற்கு வழி இல்லை' என்று கூறினார். எல்லோரும் அவரைப் பரிகசித்தார்கள். சிறிது நேரத்திற்குப் பின் நுண்ணறிவு வேலை செய்யத் தொடங்கியது. சாதுவுக்கு முதல் வகுப்பு வண்டியில் வசதியாக ஓர் இடம் அளிக்கப்பட்டது. உடனே ரயில் புகை கக்கிக் கொண்டு புறப்பட்டது. இது பிரத்தியட்ச அனுபவம். எவ்வளவு அறிவாளி களாயிருந்தாலும், அலுவலர்கள் இதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டியிருந்தது. அன்றுமுதலாக அந்தசாது முதல் வகுப்பு ரயில் வண்டியில் பிரயாணம் செய்ய அனுமதிக்கப்பட்டார். (இச்சம்பவம் 1906-ம் ஆண்டில் பம்பாய் செய்தித் தாளில் வெளியிடப்பட்டிருந்தது)

## 36. மானுஷ்ய அன்பு வெறுமையானது

கணவன் தன் மனைவியைப் பார்த்து, "அன்புள்ள கண்மணி! நான் உன்னை அபாரமாக நேசிக்கிறேன். நீ எனது உயிரும் ஆன்மாவும் ஆவாய். நான் கணப்பொழுதுகூட உன்னைவிட்டு உயிர் வாழ மாட்டேன். உண்மையில் நீ எனக்கு அத்யந்த பிரேமையானவள்" என்று கூறினான். மனைவி தன் கணவனைப் பார்த்து "எனக்குத் தாங்கள் இனிய கண்மணியாக இருக்கிறீர்கள். எந்தளவு தங்களை நேசிக்கிறேன் என்பது ஆண்டவனுக்குத் தெரியும். தங்களை

ஒரு வினாடி நேரம் கூட பார்க்காமல் இருக்க நேரிட்டால், என் உயிர் வெளியேறி விடும்" என்று கொஞ்சுவாள். இரவில் இப்படி சம்பாஷணை நடக்கும். மறுநாள் அதிகாலையில் அவன் அவளை விவாகரத்து செய்வான் அல்லது அவள் அவனை விவாகரத்து செய்வாள். அவர்களுடைய அன்பின் ஆழம் இவ்வளவேதான். மேல் தோல் சம்பந்தப்பட்ட காதல் இது. மானுஷ்ய அன்பு இதுதான். காமம் மூங்கில்போல் அது உட்குழிவானது. ஆன்மீகம் சம்பந்தப்பட்ட, தெய்வீகமான தூய்மையான அன்பை வளர்ப்பீர்களாக, அது எப்போதுமே நிலையாகவே நிற்கும்.

## 37. நாயும் குரங்கும்

நல்ல அமைதியான நாய் ஒன்று குரங்கைச் சந்தித்தது. சின்னஞ் சிறு நாயே! உன் முதுகில் ஏறுகிறேன். புண்ணிய தலங்களையெல்லாம் உனக்குக் காட்டுகிறேன்" என்று கூறிற்று. அதற்கு நாய், "சரி நல்ல கூத்து! நீ என்னைச் சிரிக்கும்படி செய்துவிட்டாய். என் முதுகில் குதித்தேறு" என்று பதிலளித்தது.

அவை சாலைவழி சென்றன. நாய் தன்னாலான மட்டும் வேகமாக ஓடவும், அதன் முதுகில் ஏறிக்கொண்ட குரங்கோ புன்சிரிப்பு கொண்டது. ஆனால் தினந்தோறும் குரங்கினாலே அந்த நாய்க்குச் சில தொல்லைகள் ஏற்பட்டன. முதல் நாள், நாய் காய்கறி தோட்டத்திற்கு குரங்கைச் சுமந்து சென்றது. எல்லாத் தக்காளிப் பழங்களையும் குரங்கு தின்று கொண்டிருந்தது. வீட்டிற்குள்ளிருந்து ஓர் மாது வேட்டைநாய் ஒன்று பின்தொடர அங்கே வந்தாள். பாவம்! அச்சிறிய நாயின் மூக்கைக் கடித்தது வேட்டை நாய். அது ஓடிப்போயிற்று; ஆனால் மூக்கிலிருந்து ரத்தம் பீறிட்டுக் கொண்டிருந்தது. இரண்டாவது நாள் பள்ளிக்கூடத்து வீட்டிற்குள் நேராகச் செல்லுமாறு குரங்கு நாய்க்கு உத்தரவிட்டது. சிற்றுண்டி புசித்துக் கொண்டிருந்தார்கள் குழந்தைகள். குரங்கு குழந்தைகளிடமிருந்து பழங்கள்

அனைத்தையும் திருடியது. வெகுண்ட குழந்தைகள் சின்ன நாய் மேல் கற்களை எடுத்து வீசினார்கள். கண் மீது படவே, நாய் குருடாகிவிட்டது. மூன்றாவது நாளில், குரங்கு ஓர் முனிவர் இல்லத்தின் ஜன்னலுக்குக் குதிக்குமாறு நாயை வற்புறுத்தியது. அப்பால் குரங்கு அங்கிருந்த கூடையிலுள்ள சர்க்கரைக் கட்டிகளைத் திருடிக் கொண்டது. ஜன்னல் வழி அது ஓடிப்போயிற்று.

ஆனால் சிக்கியது சின்ன நாய் முனிவரின் கையில், முனிவர், "சின்ன நாயே! கெட்டவர்களைச் சுமந்து கொண்டு போகாதே. கெட்டவர்களின் நட்பு எப்போதும் உன்னைக் கஷ்டங்களுக்கு இழுத்துச்செல்லும்" என்று உபதேசித்தார்.

நீதி :- கெட்டவர்களுடன் நட்பு கொள்ளாதே. கெட்ட எண்ணங்கள்கூட கெட்ட நட்பு என்பதை உணர்ந்துகொள். உன் மனத்தில் நல்லெண்ணங்கள் எல்லாவற்றையும் வைத்துக்கொள். நல்ல தலங்களுக்குச் செல்லுங்கள். நல்லவர்களுடன் பேசுங்கள் முனிவரின் உபதேசத்தைப் பின்பற்றுவீர்களாக.

## 38. துறவின் சக்தி

யுதிஷ்டிரர் நரகத்தின் பக்கமாகப் போனார். ஏனெனில், அவர் ஒரு முறை கெடுதலில்லாத பொய் ஒன்றைக் கூறினார். நரகத்தில் தத்தளிக்கும் வாசிகள் பெரிதும் குதூகலித்தார்கள். அவர்களுடைய வேதனைகள் தணிந்தன. ஏனெனில் அவர்களுடைய பக்கத்தில் யுதிஷ்டிரர் இருந்தாரல்லவா! யுதிஷ்டிரரை மோக்ஷலோகத்திற்கு அழைத்துச் செல்ல அங்கு விமானம் ஒன்று வந்தது. அதில் ஏற அவர் மறுத்தார். "ஆயிரக்கணக்கான பேர் இங்கு நான் இருப்பதால் குதூகலிக்கிறார்கள். நான் செய்த புண்ணியங்கள் எல்லாவற்றையும் தியாகம் பண்ணுகிறேன். இந்த நரகலோகவாசிகள் எல்லோரும் மோக்ஷத்திற்குச் செல்லட்டும். இங்கு நான் இருப்பதைப் பற்றிக் கவலைப்படவில்லை"

என்றார். எண்ணிறந்த விமானங்கள் வந்து நரகலோக வாசிகளை ஏற்றிச் சென்றன. பிறகு ஒரு பெரிய விமானம் யுதிஷ்டிரருக்காக வந்தது. அவர் "என் புண்ணியங்களெல்லாம் அவர்களுக்குக் கொடுத்துவிட்டேன். நான் வர முடியாது" என்றார். தூதர்கள், "புண்ணியங்களைத் தியாகம் செய்ததால் (துறந்ததால்) அவை பலகோடி மடங்கு பெருகிவிட்டன. மோக்ஷலோகத்திற்கு வாருங்கள். இதோ விமானம்" என்று கூறினார்கள். யுதிஷ்டிரரும் மோக்ஷலோகத்திற்குச் சென்றார். துறவின் சக்தி இத்தகையது. ஆகையால் துறவு மனப்பான்மையை பழக்கத்திற்குக் கொண்டு வருக.

## 39. பயம் : காலராவைக்காட்டிலும் கொடியது

நாட்டில் 50,000 உயிர்களை வாங்கிவிட்டது அந்தக் காலராபுழு. விஞ்ஞானியின் பரிசோதனைக் கூடத்தில் அப்புழு கொண்டுவரப்பட்டது - செய்தி எட்டியவுடன், விஞ்ஞானி ஆவேசத்துடன் அப்புழுவைப் பார்த்தான். ஆனால் காலராப் பு ழு தயவு காட்டுமாறு மன்றாடியது."50,000 உயிர்களைப் பலிவாங்கிய உன்னை பூண்டோடு நசுக்காமல் வேறு என்ன செய்வது?" என்று கேட்டான் விஞ்ஞானி.

"தாங்கள் கூறுவது தவறு, பிரபு! 5000 மக்களைத் தான் கொன்றேன்" என்றது காலராப் புழு. "சீ! பொய் பேசுகிறாய்!" என்று கடிந்தான் விஞ்ஞானி. "நான் பொய் பேசவே மாட்டேன், எஜமானரே! பாக்கி 45,000 பேர் பயத்தினால் இறந்தார்கள். என்னைக்காட்டிலும் பன்மடங்கு வலிமை படைத்தது பயம் என்பது. இந்தப் பயத்தை மனிதனுடைய இதயத்திலிருந்து அப்புறப்படுத்த வழிகளைக் கையாளுங்கள் தயவுசெய்து" என்று பணிவுடன் பகர்ந்தது புழு.

"நான் தயாரிக்கிறேன் மருந்துகளை. எந்தவித மருந்தும் மனிதனுடைய . இதயத்திலிருந்து பயத்தைப் போக்கக் கூடியதாயில்லை. முனிவர்களின் சரணாரவிந்தங்களில்

சரண்புகுந்து, அவர்களுடன் சத்சங்கம் செய்து கடவுளின்மீது அசைக்கவொண்ணாத நம்பிக்கையை வளர்க்க வேண்டும். மஹாமிருத்யுஞ்ஜய மந்திரத்தை அவன் ஜபித்து நோயற்ற, பிறப்பற்ற, இறப்பற்ற ஆன்மாவின்மீது தியானம் புரிய வேண்டும்" என்று பதிலியம்பினான் விஞ்ஞானி.

## 40. அறிவில்லாத ஒட்டகம்

"மரியாதைக்குரிய மஹானுபாவரே! எந்தக் காரியங்களைச் செய்வதால் ஓர் அரசன் மகிழ்ச்சியுடன் இருக்கலாம்? இதைத் தயவுசெய்து விவரித்துக் கூறுங்கள். மன்னர் கடமைகளைப் பற்றிய ஞானம் தங்களுக்கு நிரம்பவும் உண்டு. சகல சாஸ்திர சம்பன்னரே! சாற்றுங்கள்" என்று கேட்டுக் கொண்டார் யுதிஷ்டிரர்.

அதற்கு பீஷ்மர் கூறலானார். "அன்புள்ள யுதிஷ்டிரனே! ஒட்டகத்தின் கதையைத் தயவுசெய்து கவனமாகக் கேள்- கிருதாயுகத்தில் பெரிய ஒட்டகம் ஒன்று இருந்தது. அது பூர்வஜன்ம சம்பவங்களையெல்லாம் ஞாபகப்படுத்திக் கொள்ளும் சக்தி படைத்தது. காட்டிலே அது கடுமையான விரதங்களையும் தவங்களையும் அனுஷ்டித்து வந்தது. அது இயற்றி வரும் தவத்திற்குப் பெரிதும் மகிழ்ச்சியடைந்தார் பிரம்ம தேவர். ஒட்டகத்தின் முன்னால் தோன்றி, "எந்த வரத்தையாவது கேள். உடனே தருகிறேன்" என்று திருவாய் மலர்ந்தருளினார் பிரம்மா. "இறைவா! இவ்வரத்தைத் தாருங்கள். நூறு யோசனைகள் தொலைவுக்கு அப்பால் இருக்கும் எந்தவொரு ஆகாரத்தைக்கூட அனாயாசமாய்ப் பற்றும் வண்ணம் அவ்வளவு நீளமாக என் கழுத்து வளருமாறு வரந் தாருங்கள்" என்றது ஒட்டகம். "அப்படியே ஆகுக" என்று வரந்தந்து மறைந்தார் பிரம்மா.

வரம்பெற்றபின் காட்டில் வசித்து வந்தது ஒட்டகம். அது முதல் அது மகா சோம்பேறியாகிவிட்டது. மேய்வதற்குச் செல்லுவதே கிடையாது. அது நீளமான தனது கழுத்தை நூறு

யோசனைகள் தொலைவு வரை நீட்டி, எவ்வித ஆயாசமுமின்றி ஆகாரத்தைப் பெற்று வந்தது. ஒரு நாள் பலமாகப் புயல் அடித்தது. மலைக் குகையில் ஒட்டகம் தனது தலையையும் கழுத்தின் ஓர் பாகத்தையும் வைத்துக் கொண்டு புயல் எப்போது நீங்குமோவென்று காத்துக் கொண்டிருந்தது. மழை விடாமல் பொழியலாயிற்று. அதனால், அது இரை தேட முடியாமல் பட்டினி கிடந்தது. ஒட்டகம் தங்கியிருந்த அதே குகையில், மழையில் முற்றிலும் நனைந்த நரியொன்று நுழைந்தது. அது கடும்பசியால் தவித்துக்கொண்டிருந்தது. அது ஒட்டகத்தின் கழுத்தை முடிந்த மட்டும் தின்னத் தொடங்கியது. தன் கழுத்தைச் சுருக்கிக் கொள்ள வீணில் முயன்றது அது. நூறு யோசனைகள் நீளம் வளர்ந்துள்ள கழுத்தைப் பெற்றபடியால், ஒட்டகம் கழுத்தை இழுத்துக் கொள்ள முடியாமல் போய் விட்டது. பேராசையும் மகிழ்ச்சியும் ததும்ப நரி, ஒட்டகத்தின் கழுத்தைத் தின்றுகொண்டே இருந்தது. முடிவில் ஒட்டகம் உயிர்விட்டது. அன்று நரிக்கு நல்ல விருந்து. மழை நின்றது. ஆனந்தமாக வெளியேறியது நரி மலைக்குகையிலிருந்து. இங்ஙனம் ஒட்டகம் தனது அறிவின்மையால் மரணம் அடைந்தது".

மேலும் பீஷ்மர், "யுதிஷ்டிரனே! வெறும் இழிவான சோம்பலும் மடமையும் உள்ள வாழ்க்கையை நடத்துவதால் ஒருவனுக்கு எத்தகைய பயங்கரமான முடிவுகள் உண்டாகும் என்பதைக் கவனியுங்கள். ஆகையால், சோம்பலை நீக்குங்கள். புலன்களை அடக்குங்கள். புத்தியை உபயோகியுங்கள். உலகத்தில் எதையும் புத்தியுடன் செய்யுங்கள். பின்னர் நினைத்தபடி வெற்றி பெறலாம். அனுபவ அறிவினால் ஒருவன் வெற்றியைப் பெறலாம் என்று மனுவே கூறியுள்ளார். ஞானிகளின் உபதேசங்களைக் கேட்டு, ஆராய்ச்சி, சிந்தனை, பழுத்த விவாதம் ஆகியவற்றின் பிறகு அவற்றின்படி நடப்பவர்கள் எப்போதும் தங்கள் கருத்துகள் நிறைவேறுவதில் வெற்றி காண்கிறார்கள். புத்தியை உபயோகித்து உலகில் ஒழுக வேண்டும். ஓ, அரசரே! மகிழ்ச்சியுடன் இருங்கள்" என்று கூறினார்.

## 41. திருப்தியை வளர்க்கவும்

ராய்பூரில் ஏழை ஒருவன் இருந்தான். யதார்த்தவாதி; கடவுளுக்கு அஞ்சி நடப்பான். சின்ன வியாபாரம் பண்ணினான். நல்ல பாலை விற்று நூறு ரூபாய் ஊதியம் பெற்றான். வாடிக்கைக்காரர்கள் ஒழுங்காகப் பணம் கொடுத்தார்கள். மெதுவாகப் பேராசை புகுவதாயிற்று. லாபம் 1000 பெற வேண்டுமென்று அவாவினான். மூன்று நல்ல பசுக்களை வாங்கினான். முதல் தரமான பாலை விற்று ஆயிரம் ரூபாய் சம்பாதித்தான். மேலும் பேராசையால் பீடிக்கப்பட்டான். ஐயாயிரம் விரும்பினான். இப்போது ஐம்பது சதவீதம் தண்ணீர் சேர்த்தான். ஐயாயிரம் ரூபாய் சம்பாதித்தான். பெரிய பணக்காரனாக ஆக வேண்டுமென்று விரும்பினான். பெரிய நகரத்திற்குப்போய் பெரிய வியாபாரத்தைத் தொடங்க எண்ணி வழி நடக்கும்போது ஆறு குறுக்கிட்டது. கரையில் பணமூட்டையை வைத்து விட்டு ஆற்றில் இறங்கிக் குளித்தான். குரங்கு ஒன்று வந்து பணமூட்டையைப் பற்றிக்கொண்டு மரத்தின் மீது ஏறிற்று. அங்கிருந்து ஆற்றில் 2500 ரூபாயை எறிந்தது; பாக்கி 2500 ரூபாயை அந்தமனிதனிடம் வீசிற்று. பால்காரன் மனத்திற்குள்ளாக "தண்ணீர் சேர்த்துச் சம்பாதித்த பணம் தண்ணீரிலே திரும்பிவிட்டது" என்று எண்ணமிட்டான். இப்போது புதியதொரு பாடத்தை அவன் கற்றுக் கொண்டான். மனத்தை அவன் மஹேஸ்வரன் மீது திருப்பினான். திருப்திகரமான வாழ்க்கையை நடத்தலானான். பேராசை என்பது மிகவும் அபாயகரமான சத்துரு. பேராசையை விட்டொழித்துத் திருப்தியை வளர்க்கவும்.

## 42. மன்னனும் மஹரிஷியும்

கங்கா நதிக்கரையில் மன்னர் ஒருவர், மஹரிஷி ஒருவரைச் சந்தித்தார். மஹரிஷிக்கு கௌபீனமொன்றே

இருந்தது. திருவருளும் ஆனந்தமும் வடிவெடுத்தவராயிருந்தார். அவரது முகத்தில் தேஜஸ் ஒளிவீசிற்று. மன்னருக்கு வியப்பு மேலிட்டது. மஹரிஷியுடன் பேசத் தொடங்கினார். "தாங்கள் சந்தோஷமாயிருப்பதற்குக் காரணம் என்ன? பணமில்லையே மஹரிஷியே!" என்று வினவ, மஹிரிஷி, "எனக்கு ஆசைகளே கிடையாது. பணம் எனக்கு ஏன் தேவை?" என்று பதில் கூறினார்.

"போர்வீரர்கள் கிடையாதே" என்றார் மன்னர். மஹரிஷி, "எனக்கு எதிரிகள் இல்லை. போர் வீரர்கள் எனக்கு எதற்கு" என்று கூறினார். "அரண்மனைகூட இல்லை" என்றார் மன்னர். அதற்கு மஹரிஷி, "என் அரண்மனை பெரியது, அழகானது, உலகம் முழுவதும் என் அரண்மனை. ஆகாயம் பந்தல். புல் என் வெல்வெட்டுக்கம்பளம். எனது கைகளே தலையணைகள் என்றார்.

"மகனில்லை, மனைவியில்லையே!" என்றார் மன்னர். மஹரிஷி, "ஸாந்தி எனது அழகிய மனைவி. பிரம்ம ஞானம் என் மகன்" என்று கூறினார். மன்னர்பிரான் மஹரிஷியின் பதில்களைக் கேட்டுப் பெரிதும் கவரப்பட்டார். அவர் தமது நாட்டைத் துறந்தார் - மஹரிஷிக்கு சிஷ்யர் ஆனார். வைராக்கியமும் விரக்தியும் ஒருவனை அரசர்களுக்கு அரசனாக ஆக்கும்.

## 43. தயா கிருஷ்ணனும், தான வீர ராமனும்

கல்கத்தாவில் தயா கிருஷ்ணன் என்ற பெரிய அதிகாரி இருந்தார். ஆனால், உண்மையில் அவருக்கு பாவத்தினால் கடினமான, வறட்டுக் கல்நெஞ்சம் இருந்தது. லஞ்சம் வாங்கிக் கீழ்நிலை அலுவலர்களை அலைக்கழிப்பார். பூமிக்கு அவர் பாரமாக இருந்தார். ஓ! கடவுளே, இம் மனிதனைக் கடுமையாகத் தண்டிக்கவும். அவனைத் திருத்திப் பண்படுத்தி உண்மையில் தயாளனாகச் செய்யவும்.

பம்பாயில் தான வீர ராமன் என்ற பெரிய வர்த்தகர் இருந்தார். வடிகட்டின லோபி அவர். தருமமாகப் பைசா ஒன்றுகூடத் தரமாட்டார். திரவியத்தைச் சேகரித்துச் சேகரித்து வைக்கிறார். இரவும் பகலும் நோட்டுகளை எண்ணுவதுதான் வேலை. இரும்புப் பெட்டியின் பக்கத்தில் படுத்துக் கொள்கிறார். ருசியற்ற மரக்கறி உணவைப் புசிப்பார். பூணூலில் சாவிக்கொத்தைக் கட்டிக் கொண்டிருக்கிறார். ஓ! கடவுளே! இவருக்கு ஓர் பாடம் கற்பிப்பாயாக. பூமியில் இவன் வசிப்பதால் என்ன உபயோகம்? அவனுடைய இதயத்தை இளக்கித் தருமவானாகச் செய்.

டில்லியில் குஷ்தில் ராம் என்ற டாக்டர் இருந்தார். சொத்துகள் ஏராளம். ஆனால், அடிக்கடி கவலைப்படுவார் பணத்திற்காக. நோயாளி இறந்துபோனாலும்கூட, பில்லை தகப்பனாருக்கோ, சகோதரர்களுக்கோ அனுப்பிப் பணம் வசூலிப்பார். இது தினசரி ஆன்மீக நாள் குறிப்பு. தயாளமும், இரக்கமும் இன்னவை என்று அவருக்குத் தெரியாது. ஓ! பகவானே! மோக்ஷத்தைப் பற்றி அவர் கனவு காண்பாரா? அவருக்கு ஏதாவது கதிமோக்ஷம் உண்டா? தினசரி பயங்கரமான பாவங்களைச் செய்கிறார். ஓ! ஈஸ்வரா! இந்தபாவிக்குக்கூட கருணை பாராட்டுமாறு பிரார்த்திக்கின்றேன். அவர் செய்வது இன்னது என்று அவருக்கே தெரியாது. அவரும் தங்கள் சிருஷ்டி. ஆனால் கொடிய அடங்காத குழந்தை.

லாகூரில் பவித்திர ராம் என்ற பெயருடைய எஞ்சினீயர் ஒருவர் இருந்தார். ஆனால் தூய்மை என்பது இன்னது என்று அவருக்கு தெரியாது. கிளப்பில் மாமிசம், மீன், வெள்ளைப்பூண்டு, புசித்து, நன்றாய்க் குடிக்கிறார். எப்படி எப்படியோ பணத்தைச் சம்பாதிக்கிறார். பரிசுத்தமற்ற இடங்களில் போகிறார். பொய்க் கணக்குகள் எழுதுகிறார். சத்தியம் என்பது என்ன என்று அறியாதவர். கணக்கைத் திருத்தித் தப்பில்லாமல் காட்டிக் கபட நாடகமாடுகிறார். ஓ! இறைவனே! பவித்திரங்களுக்கு எல்லாம் பவித்திரமான பகவானே! இவரை உண்மையில் பவித்திர ராம் ஆகச்

செய்யுங்கள். இவரை கெட்ட வழியில் செல்லவிடாமல், தடுத்துக் காப்பாற்றி வழிகாட்டுவீராக. இன்னும் கடைத்தேறுவதற்கு வழி இருக்கிறது.

## 44. கடைதல்

பண்டைக்காலத்தில், தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்தார்கள். பதினான்கு ரத்தினங்கள் வெளிப்பட்டன. 'ஓம்' என்ற கோலைக் கொண்டு, ஞானயோகிகள் கடைந்து, நிர்விகல்ப சமாதியின் போது ஆன்மா என்ற ஆபரணத்தை உண்டாக்குவார்கள். திறமைவாய்ந்த ஹடயோகிகள் அடிவயிற்றைக் கடைந்து நௌலி கிரியை செய்து யோகாக்கினியைக் கிளப்புகிறார்கள். அத்வார்யு, ஹோத்ரி என்ற வகுப்பினர் அரணியைக் கடைந்து யக்ஞத்திற்கு யாகாக்கினியை மூட்டுகிறார்கள்.

நாகரீகமுள்ள மனைவி கோபங் கொண்டு கணவனோடு போராடி அவனைக் கடைகின்றாள் - ஏதாவது நகை போடாவிட்டால் இங்கே குரோத அக்கினி கொழுந்துவிட்டு எரியும்.

ஸ்ரீசங்கராச்சாரிய சுவாமிகள் திக்விஜயத்தின் போது ஜைனர்களைத் துரத்தினார்கள். சுவாமிகள் தமது கேவல அத்வைதம் என்ற கோலினால் பண்டிதர்கள் அனைவரையும் கடைந்து விரட்டினார்கள்.

## 45. சங்கின் கதை

மாயையின் இன்றியமையாத குணம் அல்லது ஸ்வரூபம் பொறாமையே. எங்கும் பொறாமையே குடி கொண்டுள்ளது. பொறாமைக்காரன் முடிவில் இழக்கிறான் என்பதையும் மனிதன் பொறாமை வசப்பட்டவனாகத் தனக்குக் கிடைத்த நல்ல வரத்தைக்கூட துஷ்பிரயோகத்தினாலே இழக்கிறான் என்பதையும் விளக்கிக் காட்டக்கூடிய ஒரு கதை உண்டு.

கடவுளின் கருத்து யாவரும் நலமாயிருத்தல் வேண்டுமென்பதே. அவரிடம் மங்களகரம் நிறைந்துள்ளது.

ஒரு தேவதையை வணங்கித் தவம் செய்து சங்கு ஒன்றைப் பெற்றான் ஒரு பக்தன். சங்கை ஊதினால், ஊதுகிறவனுடைய ஆசைகள் நிறைவேறும். ஆனால் சங்குக்காரன் வீட்டுக்குப் பக்கத்து வீட்டிலிருப்பவனுக்கு இரு மடங்குப் பலன் கிடைக்கும். அப் பக்தன் தனக்கு ஓர் மாளிகை வேண்டுமென்று ஆசைப்பட்டுச் சங்கை ஊதினான். உடனே அழகான மாளிகை ஒன்று உண்டாயிற்று. அண்டை வீட்டுக்காரனுக்கோ 2 மாளிகைகள் உண்டாயின. யானை ஒன்று தேவை என்று ஊதினான். அவனுக்கு ஒரு யானையும், அயலானுக்கு இரண்டு யானைகளும் கிடைத்தன. அயல் வீட்டானிடம் இப்பக்தனுக்குப் பொறாமை அதிகரித்தது. அண்டை வீட்டான் சுகமடையக்கூடாதென்று கருதினான். தனக்கு ஒரு கண்பார்வை போய்விட வேண்டுமென்று கருதிச் சங்கை ஊதினான். கருத்து உடனே நிறைவேறியது. அவனும் அவனுடைய குடும்பத்திலுள்ள ஒவ்வொரு அங்கத்தினரும் கண் ஒன்றை இழந்தார்கள். அண்டை வீட்டுக்காரனும் அவனுடைய குடும்பத்திலுள்ளவர்கள் ஒவ்வொருவரும் இரண்டு கண்களையும் இழந்தார்கள். அவர்கள் தம்முடைய வீட்டைவிட்டு வெளியேறியதும், கிணற்றில் வீழ்ந்து உயிர் துறந்தார்கள். இரண்டு கண் பார்வையும் இல்லாமையால்.

இச்செய்திகளையெல்லாம் அறிந்துகொண்ட தேவதை பொறாமையே வடிவெடுத்த தன் பக்தனிடமிருந்து சங்கைப் பறித்துக் கொண்டது. பக்தனைக் கடிந்து பலிவாங்கிக் கொண்டது.

மேற்கண்ட கதை நமக்கு என்ன நீதி புகட்டுகிறது? முக்கியமாகத் தள்ள வேண்டியவற்றில் பொறாமை என்பது ஒன்று என்று நமது சாஸ்திரங்கள் முழங்குகின்றன. நாம் பொறாமையை அகற்ற வேண்டும். நாமெல்லோரும் பிறருடைய நலத்தைக் கோர வேண்டும். ("பிறருக்காக வாழ்" என்ற கோட்பாட்டை நடைமுறையில் அனுஷ்டிப்போமாக.)

- ஓம் தத் ஸத்.

## 46. சத்சங்கத்தின் மஹிமை

சத்சங்கத்தினால் எதைச் சாதிக்க முடியாது? முன் காலத்தில் பரத்தை ஒருத்தியைச் சத்சங்கமானது பகவானுடைய பரம பக்தையாக மாற்றிவிட்டது. சிற்றூர் ஒன்றில் சிறந்த பக்தரான பெரிய மஹான் ஒருவர் வசித்து வந்தார். தினசரி இரவில் பக்தியோடு சங்கீர்த்தனம் செய்து வந்தார். நூற்றுக்கணக்கான பக்தர்கள் அந்தசத்சங்கத்தில் கலந்து கொள்வது . வழக்கம். அம்மஹானுடைய வீட்டுக்குப் பக்கத்து வீட்டிலிருப்பவன் ஓர் நாத்திகன். சூதாடுவதிலும், விபசார விடுதிகளில் பொழுதுபோக்குவதிலும் அவன் ஈடுபடுவான். இந்த சத்சங்கமும் சங்கீர்த்தனமும் அவனுக்குப் பிடிக்கவில்லை. இவற்றினால் அவன் பெரிதும் தொந்தரவு அடைந்தான். இவற்றை நிறுத்திவிட வேண்டுமென்று மிகவும் ஆத்திரப்பட்டான்.

இதற்கு ஒரு தந்திரம் கண்டுபிடித்தான். அந்தப் பகுதியிலிருந்த மிகுந்த அழகான பரத்தை ஒருத்தியை அமர்த்தி அந்த பக்தனை ஆசைகாட்டி மயக்குமாறு கட்டளையிட்டான். மாலைப்பொழுதில் அந்த பரத்தை பக்தனிடம் சென்று, அவனை மயக்குவதற்காகத் தன்னுடைய கவர்ச்சிகளை யெல்லாம் பிரயோகித்தாள். பக்தரோ அக்கவர்ச்சிகளுக்கு மயங்காமல், உறுதியோடு தமது சங்கீர்த்தனத்திலே தொடர்ந்து ஈடுபட்டு வந்தார்.

பரத்தை பக்தரை விட்டுவிடக் கூடியவள் அல்ல. மறுநாளிரவும் அங்கே சென்றாள். பக்தர் அவளைக் கும்பிட்ட கரங்களுடன் வரவேற்று, சங்கீர்த்தனத்தைச் சிறிது நேரம் கேட்கத் தங்குமாறு பணித்தார். அவள் தன்னுடைய மோகாவேசத்தைப் பற்றி விளக்கினாள். பக்தர் அவளை மறுநாள் வருமாறு கேட்டுக் கொண்டார். அப்பால், சங்கீர்த்தனப் பிரார்த்தனையைத் தொடர்ந்து நடத்தலானார்.

இங்ஙனம் இரவும் இரவும் கழிந்து கொண்டே போயின. பக்தர் அவளுடைய ஆசாபாசத்திற்கு அசையவே இல்லை. ஓர் நாள் இரவு, "என்னுடன் சேர்ந்து சுகிப்பதில் பெறக்கூடிய இன்பத்தைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமான ஆனந்தத்தை இப்பக்தர் நிச்சயமாகக் கண்டுபிடித்திருக்கிறார்; அதனால்தான் என்னுடைய வசிய மாய்மாலங்களை எதிர்த்து நிற்கும் திறமை பெற்றுள்ளார். நானுங்கூட அப்பொருளை அடையலாம்' என்று தனக்குள் அப்பரத்தை எண்ணமிடலானாள். அவள் அப்பக்தருடைய திருவடிகளில் வீழ்ந்து வணங்கி ஞானோபதேசம் புரியுமாறு பிரார்த்தித்தாள். ஆனந்தத்தின் மூல ஊற்றாகிய ஆண்டவனுடைய மஹிமை வாய்ந்த நாமத்தை அவளுக்கு உபதேசித்து தீட்சை புரிந்தார் அந்தமஹான்.

## 47. உத்தமமான தேர்ந்தெடுப்பு

கோடீசுவரன் ஒருவன் உயிலை எழுதி வைத்து இறந்தான். அவனுக்கு நான்கு புத்திரர்கள் இருந்தார்கள். "எனது புத்திரர்கள் ஒவ்வொருவரும் தத்தமக்கு இஷ்டமான பொருள் ஒன்றை எடுத்துக் கொள்ளட்டும். என் சொத்துகளில் பாக்கியெல்லாம் என்னுடைய அடிமைகளில் உத்தமமான அடிமைக்குச் சேரும்" என்று அந்த உயிலில் எழுதப் பட்டுள்ளது.

நீதிமன்றம் அப்புத்திரர்களுக்கு தத்தமக்குப் பிரியமானதை எடுத்துக் கொள்ளுமாறு கட்டளையிட்டது. கோடீசுவரனின் அரண்மனை வேண்டுமென்றான் ஒருவன். விலையுயர்ந்த ஆபரணத்தை விரும்பினான் மற்றொருவன். தோட்டத்தை ஆசைப்பட்டான் இன்னொருவன். கடைசியில், நான்காவது புத்திரனோ எழுந்து, "நீதிபதி ஐயாவே! என் தகப்பனாருடைய அடிமை தான் எனக்குத் தேவை" என்றான். அங்கிருந்த அனைவரும் திக்பிரமை அடைந்தார்கள். எவ்வளவு கேவலமான தேர்ந்தெடுப்பு அது!

இல்லை, ஒரே அடிமையைத் தேர்ந்தெடுப்பதன் மூலம், இதர மூன்று சகோதரர்கள் தத்தம் இஷ்டப் பிரகாரம் விரும்பியவை போக எஞ்சியுள்ள ஆஸ்தி முற்றிலும் அப்புத்திரனுக்குச் சேர்ந்துவிடுகிறது. சட்டப்படி, அடிமையின் சொத்து யஜமானனுக்கே சேரும். நான்காவது புத்திரன் சுயேச்சையாக சொத்து முழுதுக்கும் உரிமையாளனாக ஆகிவிடுகிறான். உண்மையுள்ள அடிமையும்கூட அவனுக்கே உரியவனாகிறான்.

இதுபோலத்தான் அறிவுள்ள சாதகனுக்கும்! அவன் மிகவும் பணிவுள்ள நிலையையும், மிகவும் எளிய வாழ்க்கையும், மிகச் சாதாரண ஆடையுடையையுமே விரும்புகிறான். வறியவர்களுக்கும் நோயாளிகளுக்கும், துன்புறுவோருக்கும் சேவை புரிவதில் அவனுக்கு உற்சாகம் தென்படுகிறது. அவர்களிலேயே ஆண்டவனை அவன் காண்கிறான். அவன் எதைப் பெறுகிறான்? இப்பிரபஞ்சக் கர்த்தாவினோடு பேரிணக்கம் பெறுகிறான். தெய்வீக ஐஸ்வரியங்கள் அனைத்துக்கும் அவன் எஜமானன் ஆகிறான். இதைக் காட்டிலும் மகத்தானது வேறு உளதா? சிற்றின்ப விஷயங்களையும், அற்பாயுளுள்ள புலனுணர்வுப் பொருள்களையும் விரும்பி சிரேஷ்டமானது எதையும் பெறாதவர்களாக வாழ் நாளை வீண் நாளாக்கிவிடுகிறார்கள் ஈஸ்வர சாக்ஷாத்காரத்திற்கு முயலுங்கள். பிரபஞ்சப் பேருணர்வாகிய உயர்தரமான செல்வத்தைப் பெற்றுக் கொள்வீர்களாக. இதர இனங்கள் எல்லாம் உங்களைச், சார்ந்துவிடும்.

## 48. கூட்டத்தில் குமாரனின் குரல்

தந்தையும் மைந்தனும் சந்தைக்குப் போனார்கள். மைந்தன் எங்கோ தவறிவிட்டான். சந்தைக்கூட்டத்தில் எங்கும் அமளியாயிருந்தது. தந்தை உற்றுக் கேட்டதில், தன் மைந்தன் அக்கூட்டத்திலே இருக்கிறானென உணர்ந்தான். தன் குமாரனின் குரலை உணர்ந்து கொள்ள முடிந்தது - சந்தைச்

சந்தடி தாறுமாறாக இருந்தும்கூட, குரலெழுந்த பக்கமாக தந்தை சென்று, மைந்தனைக் கண்டுபிடித்துக் கொள்கிறான்.

தந்தை என்பவன் ஜீவன், மைந்தன் ஆன்மா. "ஆன்மா" உலகாயதப் பொருள்களிலே மறைந்துள்ளது. ஆழ்ந்த தியானத்தின்போது ஆன்மாவின் சான்னித்தியத்தை ஞானம் படைத்த ஜீவனால் உணர முடியும். ஆன்மா என்பது ஒன்று இல்லையானால் அதைச் சாட்சாத்கரிக்கும் யத்தனங்கள் வீணாகிவிடும். மறைக்கும் கோசங்களே இல்லாமல் ஆன்மா மாத்திரம் இருந்ததென்றால், அதைப் பெறவேண்டிய சாதனை எதுவும் தேவையில்லாமற் போய்விடும். நித்திய ஸாந்தியாயும், ஆத்மானந்தமாயும், உள்ள ஜீவஜோதியானது கோசங்களின் வாயிலாகவும், உலகாயதப் பொருள்களின் மூலமாகவும் அடிக்கடி ஜ்வலிக்கிறது. கபடமான மாயையானது இந்த ஜோதியை அகோரமாக முறுக்கிவிடுகிறது. மெய்ஞானியோ ஆன்ம ஜோதியை உணர்ந்து கொண்டவனாக, ஏகாக்ர சித்தத்துடன் அதைப் பின்பற்றியவனாக, அந்தமில்லாத அமரத்துவம் படைத்த ஆன்மாவை, ஜோதி, ஸாந்தி, ஆனந்தம் ஆகியவற்றிற்கு மூல ஊற்றை இறுதியில் போய்ச் சேருகிறான்.

## 49. கடவுளின் விவேகம்

எதுவும் காரணமின்றி படைக்கப்படுவதில்லை. ஒவ்வொரு தெய்வீகச் செயலும் முடிவான நன்மையை நோக்கியே செலுத்தப்படுகிறது.

ஸ்ரீ அஹங்கார் கேசரி ஆச்சார்யர் மிகுந்த புலமை பெற்றவர். இருபுறமும் கூர்மையான கத்தி போன்றது அவரது நாக்கு. தனது நாவின் வலிமையால் தன்னுடன் வாதம் புரியும் அனைத்து எதிராளிகளையும் ஆயிரம் துண்டுகளாக வெட்டித் தள்ளிவிடக் கூடியவர். தான் ராஜகுருவாகப் பணிபுரியும் அரசவையில் இடியையும் மின்னலையும் தனது சொற்பெருக்காலும் சொல்லலங்காரத்தாலும் கொண்டு வரக்கூடியவர் கேசரி.

அருஞ்சுவை கொண்ட பழங்கள் நிறைந்த பெருந்தோட்டமொன்றை ஆச்சார்யருக்கு அரசன் அன்பளிப்பாக வழங்கியிருந்தான். அவர் காலையிலும் மாலையிலும் உலாவும்போது, அங்கிருக்கும் வண்ணமயமான மலர்கள் அவரை அவருக்குள்ளாகவே பேசிக் கொள்ளத் தூண்டும்.

அன்று ஞாயிற்றுக்கிழமை - கார்காலத்து நண்பகல் நேரம். பகலுணவு அருந்திய ஆசார்யர், தோட்டத்தில் உலாவலாம் என்று எண்ணினார். உலாவும் போது கண்ணில் பட்ட பழங்கள் அவரது சிந்தனையைக் கிளர்த்தியன. ஆண்டவனின் சிருஷ்டி பற்றி அவர் சிந்திக்கலானார். தாழ்வாரத்தில் பரவிக் கிடக்கும் பூசணி எவ்வளவு பெரியது. ஆனால், அதன் கொடியோ மிகவும் மெல்லியது. புத்தம் புதிய செந்நிற ஆப்பிள்கள்! ஆஹா, என்ன சுவை! நிஜமாகவே மரங்கள் ஆசீர்வதிக்கப்பட்டவை." இவ்வாறாக பழவர்க்கங்கள் குறித்தும் வண்ண மலர்கள் குறித்தும் சிந்தித்தபடியே கேசரி உலாவினார்.

"நல்லவேளை இங்கு பெஞ்ச் இருக்கிறது. நான் மிகவும் சோர்ந்து விட்டேன்" என்றபடி ஆச்சார்யர் பெஞ்ச் மீது அமர்ந்தார். மிகப் பழைய - பெரிய ஆலமரத்தின் கீழ் அந்த பெஞ்ச் இருந்தது. ஆலமரத்தின் வலிமையான கிளைகளை, அடர்த்தியான இலைகளை ஆச்சார்யர் கூர்ந்து கவனித்தார். "என்ன வெட்கக் கேடு!" என்ற ஆச்சார்யர், ஆலமரம் மிகப் பிரம்மாண்டமாக - இலைகள் அடர்ந்து இருக்கிறது. ஆனால், அதன் பழங்களோ மிகச் சிறியவை. என்னே கடவுளின் முட்டாள்தனம். இந்த மரம் எந்தப் பலனையும் தருவதில்லை. அதே நேரத்தில், வயற்பரப்புக்கு அப்பால் - பளிச்சிடும் திராட்சைகள், புன்னகைக்கும் ஆப்பிள்கள், மனதை ஈர்க்கும் மாதுளம் பழங்கள் - இவ்வளவு ஏன், மெலிந்த கொடியில் இணைந்திருக்கும் வலிய பூசணிகள் இவற்றில் எதுவும் இந்த மரம் போல் பெரியவை அல்ல. ஆயினும், அவை பலன் தருகின்றன. ஆனால், அதே நேரத்தில், என் தலைக்கு மேல் விதானம் போல் விரிந்திருக்கும் இந்த மரத்தில்

உண்ணுவதற்குரிய கனிகள் இல்லை. என்ன அவமானம்! உண்மையிலேயே இது முட்டாள்தனமான படைப்புதான்' - இவ்வாறு சிந்தனை செய்தபடி ஆச்சார்யர் அயர்ந்து தூங்கிவிட்டார். மெல்லிய தென்றல் இதமாக வீச, நேரம் கடந்து கொண்டிருந்தது.

'டப்'. சின்னஞ்சிறிய ஆலம் பழமொன்று ஆச்சார்யரின் பளபளக்கும் வழுக்கைத் தலையில் விழுந்தது. தூக்கத்திலிருந்து பதறி விழித்த ஆச்சார்யர், "நல்லவேளை எப்படியோ தப்பித்து விட்டேன், நூலிழையில் பிழைத்துவிட்டேன்! கருணை வடிவானவர் கடவுள்! அவரது கடாட்சமும் புத்திக் கூர்மையும் நீதியும் எவ்வளவு தீர்க்கதரிசனம் பொருந்தியவை!" என்று அரற்றினார். "இறைவா, உனது கலைகள் யாவும் விவேகமானவை. ஆலம்பழம் சற்றுப் பெரியதாக இருந்திருந்தால், என் தலை சுக்குநூறாகப் போயிருக்கும். என் சரீர வாழ்க்கையும் அத்துடன் முடிந்திருக்கும்" என்று ஆச்சார்யர் கூறினார்.

அந்தப் படித்த மேதை தன் வாழ்க்கையில் புதிய பரிமாணத்தை பெற்றார். தவறான எண்ணங்கள் நீங்கப் பெற்று கடவுள் மீதான நன்றிப் பெருக்குடன் அவர் வீடு வந்து சேர்ந்தார்.

ஒவ்வொரு நாளும் தான் எதிர்கொள்ளும் தெய்வீகச் செயல்கள் குறித்து அறிவிலிகள் அவசரமாக முடிவெடுத்து விடுகின்றனர். எல்லாமே நன்மைக்குத்தான். ஒவ்வொரு தெய்வீகச் செயலும் முடிவான நன்மையை நோக்கியே செலுத்தப்படுகிறது.

கடவுளின் எந்தச் செயலும் காரணமற்று இருப்பதில்லை. கடவுள்பால் பிரியங் கொண்டவர்கள், அவசரமாக முடிவெடுப்பதனின்று தங்களைக் காத்துக் கொள்ள வேண்டும். அவர்கள் அமைதியான, சாந்தமான மனோ நிலையை வளர்த்துக் கொள்ள வேண்டும்; புத்தியை கூர்மைப்படுத்த வேண்டும். தற்போது காரணமின்றியும் உங்களது நலனுக்கு விரும்பத்தகாததாகவும் கடவுளின் சில செயல்கள்

தோன்றலாம். ஆனால், கடவுளின் எந்தச் செயலும் விவேகமற்றவை அல்ல. அவை அனைத்தும் உங்களது முடிவான நலனுக்காக தெள்ளத் தெளிவான காரணங்களுடன் கூடியவை. எனவே, அவசரமாக முடிவெடுப்பதை எப்போதும் தவிர்த்திடுங்கள்!

## 50. முற்றிலும் பாவமில்லாதவனே தொட வேண்டும்!

ஆகாய மார்க்கமாக பார்வதியும் பரமேஸ்வரரும் பிரயாணஞ் செய்து கொண்டிருந்த ஒரு நேரம் ஹரித்துவார் எனும் புண்ணிய க்ஷேத்திரத்தின் மீது போக நேர்ந்தது. புனிதமான கங்கை இங்கேதான் சமவெளியில் பாய்கிறது. கும்பமேளா எனும் பிரசித்தி பெற்ற திருவிழாவும் நிகழ்ந்து கொண்டிருந்தது. இங்கே பல பாகங்களிலிருந்தும் பக்தர்கள் ஆயிரக்கணக்கில் கூடி, இந்த புனிதமான கங்கையில் மூழ்கித் தத்தம் பாவங்களைத் துடைத்துக் கொண்டிருந்தார்கள். ஒரே கூட்டமாக பக்தர்கள் ஒரே இடத்தில் கூடியிருந்த காட்சி விண்ணுலக தம்பதிகளுக்கு விசித்திரக் காட்சியாயிருந்தது. பல்வேறு மொழிகளைப் பேசி பல்வேறு வகைகளில் ஆடை உடைகளையணிந்து ஆடவரும் பெண்டிரும் திரண்டு வந்தார்கள்.

அந்த நேரம் பார்வதிதேவி பரமேஸ்வரருடன் மறுபிறப்பைப் பற்றிப் பேசிக் கொண்டு சென்றாள். கங்கா தீரத்திலே லட்சக்கணக்கில் மக்கள் கூடியிருந்ததைக் கண்டதும் பார்வதி பரமேஸ்வரரைப் பார்த்து, "இந்தத்தூய்மையான நதியிலே நீராடுவதற்குத் திரண்டு வந்துள்ள பக்தர்களைப் பார்த்தீர்களா! ஸ்வாமி! கங்கையில் ஒரு முறை நீராடினால் அது ஜனன மரணத்தினின்று மானுட ஜன்மத்தைக் கரையேற்றி நித்திய மோட்சத்திற்குச் சேர்க்கிறது என்று ஸ்ருதிகள் முழங்குகின்றன. இன்று இங்கே கூடியுள்ளவர்கள் முக்தி பெற்று விடுவார்கள். உலகத்தில் வசிப்பவர்களின் எண்ணிக்கை அந்த அளவில், குறைந்துவிடும். இந்தத்

திருவிழா ஆறு வருஷங்களில் ஒரு முறை நடைபெறுவதால் கோடிக்கணக்கான மக்கள் குறைந்த காலத்திலே முக்தியடைந்து விடுவார்கள். முற்றிலும் வேதனையிலும் பாவத்திலும் தோய்ந்துள்ள பாமர மக்களுக்கு இது உற்சாகத்தை ஊட்ட வல்ல நிகழ்ச்சியாயிருக்கிறது" என்று கூறினாள்.

பரமேஸ்வரர், "பார்வதி! அது உண்மையில் இங்கு அப்படியல்ல. நீ காணும் இத்தனை மானுடர்களும் கதிமோட்சம் பெற விதிக்கப்படவில்லை. சற்றேறக்குறைய பத்து லட்சம் மக்களில் ஒருவன் மாத்திரமே முக்தி பெறுவதற்குத் தக்க தகுதிகள் வாய்ந்தவன்" என்று மொழிந்தார். இதைக் கேட்டதும் பார்வதி முற்றிலும் திகைப்பும் வியப்புமடைந்து, "இப்புனித நதியில் நீராடும் ஒவ்வொருவருக்கும் முக்தி நிச்சயமென்று முழங்குகிற ஸ்ருதிகள் பொய்யாகிவிடுமே" என்று சங்கையுற்றாள். பரமேஸ்வரர், "இல்லை, பார்வதி! ஸ்ருதிகள் முற்றிலும் உண்மையானவை! நான் கூறியதற்கு அறிவுறுத்தும் சான்று ஒன்று காட்டுகிறேன். அருவருக்கத்தக்க குஷ்டரோகத்தால் பீடிக்கப்பட்டுப் பலமொடுங்கிய வயோதிகனாக நான் மாறுவேஷம் புனைந்து, கங்கா தீரத்திலே குற்றுயிராகக் கிடக்கிறேன். அழகிய யௌவன ஸ்திரீயாக நீ மாறி, நான் உனது கணவனென்றும் நமது பாவங்களைக் கழுவிக் கொள்ள ஹரித்துவாருக்கு வந்தோமென்றும் சொல்லு. சிறிது நேரத்தில், நான் இறந்து விடுகிறேன். அப்பால், கதறி நீ அழ வேண்டும், பிணத்தைத் தகனஞ் செய்வதற்குத் துணை செய்யுமாறு அந்த மக்ககளைக் கூப்பிட்டுக் கேள். அவர்கள் நெருங்கி வந்தால் முற்றிலும் பாவமில்லாதவர்களும் பூரணமாகத் தூய்மை வாய்ந்தவர்களுமே பிரேதத்தைத் தொட்டு ஈமக்கிரியைகளைச் செய்தல் வேண்டும் என்று கூறிவிடு. எல்லாவிதமான பாவங்களினின்றும் நிவாரணம் பெற்றவனென்று உறுதிமொழி கூறாத எவனையும் உன் அருகில் நெருங்கவிடாதே. புனித கங்கையில் நீராடுவோர்களுக்கு அளிக்கப்பட்ட நிச்சய உறுதி மொழிகளின் உண்மை அல்லது பொய்மையைப் பற்றிய

வினாவுக்குரிய விடையைப் பின்னர் நீ பெறுவாய்" என்று விவரித்தார்.

பரமசிவனார், தாம் கூறியபடியே, குஷ்டரோகம் பீடித்து தாடி மீசையுடன் கூடிய கிழவனாக மாற்றிக் கொண்டார். இவரது கையைப் பிடித்துக்கொண்டு செல்கிறாள் அழகிய யௌவன மாது - கவலையும் துக்கமும் படர்ந்த வதனத்துடன். அப்புனித குண்டத்தின் அருகிலே அத்தம்பதிகள் அமர்ந்தார்கள். மிகுதியும் வியாதியால் தாக்குண்டதாகக் காணப்படுகிற அக்கிழவன் தரையில் தள்ளாடித் தளர்ந்து படுத்தான். சில வினாடிகளில் அவன் இறுதி சுவாசத்தை விட்டு இயற்கை எய்தினான். எழில் வழியும் வனிதையோ ஒரே ஏக்கத்துடன் கல்லும் கரைந்துருகும் வண்ணம் அழத் தொடங்கினாள். பரிதாபகரமான அக்குரல் பல மக்களைக் கவர்ந்தது. அவளைச் சுற்றி ஓர் கூட்டம் திரண்டது. சிலர் ஆறுதல் தேறுதல் கூறினார்கள். அக்காரிகையின் கண் கொள்ளாக் கட்டழகை ரசித்துக் கொண்டே மதுவைக்குடித்த மந்தி போன்று இமை கொட்டாமல் நின்றவர்கள் சிலர். அப்பரிதாபகரமான காட்சியைக் கண்டு மிகவும் கவலைப்பட்ட சிலர் அந்த அழகிய விதவைக்கு உதவி செய்யக்கருதி, பிணத்தை எடுத்து புனித கங்கைக்குள் விட நெருங்கினார்கள். அவ்விளம் பெண் கையால் மறுத்து "நீங்கள் மனம், வாக்குக். காயத்தில் தூய்மையானவர்களாயும், பாவமில்லாதவர்களாயும் இருந்தாலொழிய தொடாதீர்கள். இந்த ஜன்மத்திலும் பூர்வ ஜன்மங்களிலும் செய்த எல்லாப் பாபங்களிலிருந்தும் விடுதலை பெற்று இதயம் தூய்மையான பளிங்குக் கல் போன்று மாசு மருவற்றுள்ளதென்று பிரமாணமாக எனக்கு வாக்குறுதி கொடுக்காத எவரும் வந்து பிணத்தைத் தொடலாகாது" என்று வற்புறுத்திக் கூறினாள்.

இதைக்கேட்டதும், இளம் விதவைக்குத் துணை புரிய முன் வந்த ஒரு சிலரும் பின் வாங்கினார்கள். பிணத்திற்கு இறுதிச் சடங்கு செய்ய யாராவது துணை புரிவார்கள் என்று வெகு நேரம் அவள் காத்துக் கொண்டிருந்தாள். பிணத்தைத் தொடுவதற்குள்ள நியந்தனையைத் தெரிந்து கொண்டு

எவருமே அருகில் நெருங்கவில்லை - துரதிர்ஷ்டவசமாக இதனால், தன் கணவன் பிணத்தைப் போட்டுக் கொண்டு அவ்விளம் விதவை கங்காதீரத்திலே நாள் முழுவதும் காத்திருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது. உதவிக்காக அவள் பரிதாபகரமான குரலில் கெஞ்சிக் கேட்டாள். அவள் அழுகைக்குரல் நூற்றுக்கணக்கானவர்களை இரக்கப்படச் செய்ததானாலும் தடுக்கமுடியாத அவளது சத்திய விரதத்தை தெரிந்து கொண்டதும் அவர்கள் உதவி செய்ய முடியாமல் அப்பால் நின்றார்கள். மேற்குத் தொடுவானத்தில் சூரியன் மூழ்கி, பகற்பொழுது அனேகமாக முடிவுறுந் தருணத்தி லிருந்தது. ஆயிரக்கணக்கில் மக்கள் அங்கு திரண்டிருந்தாலும், அவளுக்கு உதவி புரிய தன்னைத் தகுதி வாய்ந்தவனென்று ஒரு நபர் கூட கருதவே இல்லை. அநாதையான அவ்விளம் பெண் அகோர வேதனையில் சிக்கி அவதிப்படலானாள்.

அந்த நேரம் நிரம்பவும் பரிதாபத்துடன் நெருங்கினான் ஒருவன். அவளைப்பார்த்து, "தாயே, பிணத்திற்குப் புரியவேண்டிய இறுதிச் சடங்குகளைச் செய்யத் தயவுசெய்து எனக்கு அனுமதி தாருங்கள்" என்று கூறினான். அதற்கு, "என் மகனே, முற்றிலும் பாவமில்லாமல் புனிதமுள்ளவனென்று எனக்கு வாக்குறுதி செய்து கொடுக்கும் பட்சத்தில், உதவியை ஏற்றுக் கொள்ள எனக்கு ஆட்சேபணையில்லை. எனது விரதத்தைப் பற்றி நீ தெரிந்து கொண்டிருப்பாயென்று நான் கருதுகிறேன்" என்று அவள் கூறினாள்.

அந்தமனிதன், "தாயே, இவ்வுலகில் மகாபாவம் செய்தவன் நான். ஆனால், கங்கையில் நீராடினால் என்னுடைய பாவங்களும், மாசுகளும் போய்விடுமென்ற உறுதியான நம்பிக்கை எனக்கு உண்டு என்று கூறிவிட்டு, கங்கையில் இறங்கி நீராடினான். கரைக்கு வந்ததும் அவன் "தாயே இப்போது எனது பாவங்களையெல்லாம் முற்றிலும் கழுவி விட்டேன். பளிங்குக்கல் போன்று பரிசுத்தமாய் இருக்கிறேன். மதிப்பிற்குரிய தங்கள் கணவரின் இறுதிச் சடங்குகளைப் புரிவதற்கு நான் தகுதி பெற்றுவிட்டேன். இதிலே எனக்கு எள்ளளவு சந்தேகமும் கிடையாது" என்று

கூறினான் அந்தமனிதன். உறுதியான அவ்வார்த்தைகளைக் கூறியதும் அந்த விதவையும் அவளுடைய இறந்த கணவரும் அந்தர்த்தானமானார்கள்.

பார்வதிதேவியார் நமது கணவரைப் பழைய தெய்வீக வடிவத்தில் பார்த்து, "மகா பிரபுவே, தங்கள் ஆலோசனை கூறியபடி ஆடிய பரிகாசக் கூத்தானது எனது வினாவுக்குப் முழுமையான விடையை உண்மையாகவே வழங்கிவிட்டது. எனக்கு இப்போது சந்தேகமே கிடையாது. கங்கையின் புண்ணிய தீர்த்தத்தில் நீராடப் பல்லாயிரக்கணக்கான மக்கள் கூடினார்கள் என்ற உண்மையிருந்த போதிலும் புனிதத்துவமும் தூய்மைப்படுத்தும் சக்திகளும் வாய்ந்த கங்கைத் தீர்த்தத்தில் விரல்விட்டு எண்ணக் கூடிய சொற்ப ஆன்மாக்களுக்கே உண்மையான நம்பிக்கையும், விசுவாசமும் பிறந்துள்ளன. தங்கள் பாவங்களினின்று நீங்கி முக்தி பெறும் உத்தேசத்தைத் தவிர வேறு நோக்கத்துடனே அவர்கள் எல்லோரும் அங்கு வந்துள்ளார்கள் என்று தெரிகிறது. மனித சமுதாயக் குழுவிலே, அவ்வளவு பெரிய கூட்டத்திலே சாஸ்திரத்திலும் கங்கையின் புனித தீர்த்தத்திலும் உண்மையான அசையாத நம்பிக்கை கொண்டு இறுதியில் முக்தியடையும் பேற்றைப் பெற்றவன் ஒருவனேதான். எவ்வளவு அதிசயம்! முக்திக்கு இரகசியமான வழி நிஜமான நம்பிக்கை மட்டுமே என்பதை நான் அறிகின்றேன். தற்காலத்தில் இந்த யுகத்தில் இத்தகைய (நம்பிக்கை) சிரத்தையை மனிதன் கொள்ளாத வரையில் அவனுக்கு முக்தியென்பது கிடையாது" என்று கூறினார்.

சாஸ்திரப் பிரமாண வாக்கியங்களில் அவ்வளவு யதார்த்த சிரத்தை கொண்டு உதவியைச் செய்ய முன்வந்த தாராள மனத்தையுடைய அந்த மனிதன் முன்னால் பார்வதிதேவியும், பரமேஸ்வரரும் தோன்றி தரிசனம் அளித்தார்கள். எவரும் திரும்பி வராத தங்கள் நித்திய பரமானந்த பதத்திற்கு அவனை அழைத்துச் சென்றார்கள். சாஸ்திரங்களிலேயும், ஆத்ம போதகரின் உபதேசங்களிலும் தவறாத நம்பிக்கை கொள்வதால் மனிதன் (உண்மையைத்

துறையில்) சத்தியநெறியில் அஞ்சாமல் முன்னேறி சுதந்திரமும் பூரணத்துவமும் முக்தியும் பெற்றான் என்ற பேருண்மையை இங்கே அறிவுறுத்துகிறோம்.

## 51. ஆத்மாவே அதிசிரேஷ்டமானது

பல ஆண்டுகளுக்கு முன் அக்பர் எனும் அரசர் ஆண்டு வந்தார். அவருக்கு பீர்பால் என்னும் பெயருடைய அறிவுள்ள அமைச்சர் ஒருவர் இருந்தார். அக்பருக்கு மகத்தான சாம்ராஜ்யம் உண்டு. அதைப் பற்றிக் கர்வித்துக் கொள்வார். அறிவுள்ள அமைச்சர் பீர்பால் அவர் மீது இரக்கம் கொண்டு, அவரைத் திருத்தி, ஞானமார்க்கத்திற்குத் திருப்ப விரும்பினார்.

ஒரு நாள், அக்பரும் பீர்பாலும் வேட்டைக்குச் சென்றார்கள். கானகத்தில் வேட்டையாடிய பிறகு மிகுந்த மரியாதையாக பீர்பால் அக்பரை நோக்கி, "மதிப்பிற்குரிய மன்னர் பெருமானே! மகத்தான சாம்ராஜ்யம் தங்களுக்கு இருக்கிறது. கடுமையான தாகத்தால் தாங்கள் தவிப்பதாக வைத்துக் கொள்வோம். அருகிலே தண்ணீர் கிடைக்காவிட்டால் தங்களுக்கு என்ன நேரும்? என்று வினவினார். அதற்கு அக்பர், "எனக்குத் தண்ணீர் கிடைக்கவில்லையென்றால், நிச்சயமாக நான் இறந்து போவேன்" என்றார். பீர்பால் தொடர்ந்து பேசத் தொடங்கி, "அரசரே! தாங்கள் தங்கள் ராஜ்யத்தில் பாதியைத் தருவதாக வாக்குத்தத்தம் செய்யும் பட்சத்தில் தங்களுக்கு ஓர் கோப்பை தண்ணீர் தருவதாக யாரேனும் சொன்னால், அந்த நிவேதனத்தைத் தாங்கள் ஒப்புக்கொள்வீர்களா?" என்று கேட்க, அவர், "அதை நிச்சயமாக ஒப்புக்கொள்வேன். தனது உயிர் காப்பாற்றப்படுகிறபோது பாதி ராஜ்யத்தைக் கொடுக்க யார் தான் விரும்பமாட்டார்கள்?" என்றார். பின்னர் பீர்பால், "தண்ணீர் குடித்துவிடுகிறீர்கள், ராஜாவே! சிறுநீர்க் கோளாறினால், சிறுநீர் கழிக்க முடியாது அவதிப்படுகிறீர்கள். கடுமையான இந்த நோயை எல்லா மருத்துவ நிபுணர்களும் பரிசோதித்துப் பார்த்து, சிகிச்சை செய்வதில் தவறி

விடுகிறார்கள். பின் தங்கள் கதி?" என்று கேட்டார். அக்பர் "வைத்தியர்கள் என்னைச் சுகப்படுத்தா விட்டால் நான் சாவது நிச்சயம்" என்று பதிலியம்பினார். பிறகு பீர்பால், "கோவே! உற்றுக் கேளுங்கள். தங்கள் உயிர் ஊசலாடித் தவிக்கிற இறுதிக் காலத்தில், யாரோ ஒருவர் முன் வந்து சிறுநீர் கழிக்கும்படி செய்வதாகத் தங்களிடம் கூறி, அப்படிச் செய்தால் மறுபாதி ராஜ்யம் தரவேண்டுமென்ற நிபந்தனை பிறப்பிக்கிறார். அதை தாங்கள் ஒப்புக் கொள்வீர்களா?" என்று கேட்டார். அக்பர், "பேஷாக ஒப்புக் கொள்வேன். தன் உயிரையே காப்பாற்றியவனுக்கு யார்தான் பாதி ராஜ்யம் வழங்க மாட்டார்கள்?" என்றார். மறுபடியும் பீர்பால் 'வேந்தே! கோப்பைத் தண்ணீருக்காகப் பாதி ராஜ்யத்தை வழங்கவும், அதே தண்ணீரை உடம்பினின்று வெளியேற்றச் செய்வதற்காக மறுபாதி ராஜ்யத்தை அளிக்கவும் ஆயத்தமாயிருக்கிறீர்கள். அப்படியானால், தங்கள் ராஜ்யத்தின் மதிப்பு இவ்வளவுதானா? உள்ளே ஒரு கோப்பை தண்ணீர் அனுப்புவதற்காகவும், அதையே வெளியே தள்ளுவதற்காகவும், தங்கள் ராஜ்யம் முழுவதையும் விட்டுப்பிரிய ஆயத்தமாயிருக்கிறீர்கள். இவ்வளவு பெறுமானமுள்ள உங்கள் ராஜ்யத்தைப் பற்றித் தாங்கள் ஏன் கர்வித்துக் கொள்ள வேண்டும்?" என்றார்.

அறிவுள்ள மந்திரியின் அறிவுரையானது, அரசரின் இதயத்தின் ஆழத்தில் ஊடுருவிப் பாய்ந்து நின்றது. அக்பர் மந்திரியின் அறிவுரையின் உட்கருத்தைச் சிந்தித்தவண்ணம் தலையைத் தொங்கப் போட்டார்! தமது ராஜ்யத்தைப் பற்றித் தாம் அகந்தை கொண்ட பேருண்மையினை நினைக்க நினைக்கப் பெருந்திகில் உண்டாயிற்று. மன்னருடைய இதயத்தில் விவேகம் உதயமாயிற்றென்பதை உணர்ந்து கொண்ட மந்திரி மேலும் உபதேசிக்கத் தொடங்கி, "பூஜிக்கத் தகுந்த பூமானே! துக்கத்திற்குக் காரணம் இல்லை. தங்கள் ராஜ்யத்தின் விலைபெறாத நிலையை, அற்பத்தனத்தைப் பற்றித் தங்கள் கவலைப்படுகிறீர்கள் என்று நான் கண்டுகொண்டேன். கவலைக்கு மேலாக இருக்க அதாவது கவலைப்படாமல், சாசுவதமான ஆழ்ந்த ஸாந்தியைப்

பெறுவதற்கு வழி ஒன்றுண்டு. அதைத் தங்களுக்குச் சொல்லுகிறேன். கவனமாகக் கேளுங்கள் - புலன்களுக்கு இன்பம் தருபவை - மனிதனுக்குச் சிரேஷ்டமானதென்பதில் சந்தேகமில்லை. பொருள்களைவிட புலன்கள் சற்று அதிக சிரேஷ்டம் வாய்ந்தவை. உதாரணமாக, கண் அதிக சிரேஷ்டம் வாய்ந்தவை. உதாரணமாக, கண் பார்வையைக் கெடுத்துக் கொள்ளக்கூடாதென்றும் இனிமேல் சினிமா பார்க்கப் போகலாகாதென்றும் வைத்திய நிபுணர் புத்திமதி கூறும்போது, ஒருவன் சினிமாவுக்குப் போவதை முற்றிலும் விட்டு விடுகிறான். ஆனால் பிராணன் புலன்களைக் காட்டிலும் சிரேஷ்டமானது. கண்நோய் ஏற்பட்டதன் காரணமாகக் கண் எடுக்கப்பட்டுவிட்டால் அதற்காக மனிதன் கவலைப்படாமல் உயிர் காப்பாற்றப்படுகிறான். இந்த உயிர், அல்லது பிராணனைக் காட்டிலும் அதி சிரேஷ்டமானது ஆத்மனே. தீராத நோயால் துன்புறுகிறவன் தன் பிராணனையே துறக்கத் துணிகிறான். ஆன்மாவை மனிதன் மிகவும் நேசிக்கிறான். ஏனெனில் அது ஆனந்த சுபாவமாக அமைந்துள்ளது. மண்ணரசே! மனக்கவலையை விட்டொழியுங்கள். ஆன்மாவைத் தேடுங்கள். ஆத்மனைத் தெரிந்து கொள்ளுங்கள். ஆத்மனிலேயே வாசம் செய்யுங்கள். இவ்வாறு செய்வதால், பொருள்களிடத்துப் பெறமுடியாத ஓர் ஸாந்தியையும் ஒரு ஆனந்தத்தையும் சதாகாலமும் நீங்கள் அனுபவிப்பீர்கள். அமைதி உள்ளே கிடக்கிறது. ஆனந்தம் உள்ளே உள்ளது. வெளிப்புறப் பொருள்களிடத்தில் ஆனந்தத்தைத் தேடுவது வீண் ஆகும். செல்வமோ, ராஜ்யமோ ஸாந்தியை வழங்கா. ஆனால் அவை அஞ்ஞானிக்கு துக்கம் தரத்தக்க ஊற்றுக்கண்களாகும். உலகாயதப் பொருள்களால் கிடைக்கும் ஆனந்தம் மாயையானது. அவை கற்பனையின் விளைவுகளேயன்றி வேறல்ல. அவை நிலையற்றவை. அவை உடலையும் புலன்களையும் களைப்புறச் செய்து பாவத்தை உண்டு பண்ணக்கூடியவை. முடிவில், அவை துக்கத்தின் விளைவுகளாகப் பரிணமிக்கின்றன. (One anna of pleasure is mixed with fifteen annas of pain) ஒரு அணா இன்பமானது பதினைந்து அணா துன்பத்தோடு கலக்கப்பட்டுள்ளது. பணம்

மதிப்பற்றது. ஆரோக்கியமுள்ள தனது கண்ணை எவ்வளவு பணத்திற்கேனும் கொடுக்க எவரும் தயாராக இல்லை. அரசர் பெருமானே! ஆத்மனை அறியுங்கள். முக்தியடையுங்கள்" என்று சாங்கோபாங்கமாக ஞானோபதேசம் புரிந்தார்.

பீர்பாலின் உபதேசங்களைக் கேட்ட அக்பர் மந்திரிக்குத் தலை தாழ்த்தி வணக்கமும், பணிவும், நன்றியதலும் உணர்த்தினார். ஞான ஒளி விசும் அந்த உபதேசங்களை மனமாற வரவேற்றார். அவரது கட்டளைப்படி அனுஷ்டானங்களை மேற்கொள்வதாக வாக்குறுதி தந்தார் அக்பர். அவ்வளவு விசாலான ஒரு ராஜ்யத்தின் இழிந்த தன்மையை உணர்ந்து கொண்டு உலக இன்பங்களில் வெறுப்புற்று, பக்தியை வளர்த்து மதாசார சிரத்தையுடன் மகத்தான ஸாந்தி பெற்றார்.

## 52. குருதேவரின் கிருபை!

"குருதேவரே! எவ்வளவுதான் அடக்க முயன்றாலும் என் மனம் இவ்வுலக சுகபோகங்களை நாடியே அலைகிறது. தங்களிடம் சொல்லாமல்கூட ஓடிப்போய் விடலாமென்று அடிக்கடி நினைப்பேன். ஆனால், தங்கள் பாதாரவிந்தங்கள் மீது கொண்ட பக்தி அத்தகைய நன்றிகெட்ட செயலை அனுமதிக்கவில்லை. குருபகவானே! அடியேன் என்ன செய்யலாம்? எனக்கு ஓர் வழி கூறுங்கள்" என்று ராம் என்பவர் தமது குரு பிரேமானந்தரிடம் விவாதித்தான். ராம் அந்த ஆசிரமத்திற்கு வந்து கிட்டத்தட்ட ஒரு மாதமே ஆகிறது.

"குழந்தாய்! ஆம். உன்னுடைய மனோ நிலையையும், அதில் நடக்கும் போராட்டத்தையும் நான்கூட கவனித்த வண்ணம் இருக்கிறேன். ஆழமாகப் பதிந்துள்ள வாசனைகள் போராடி வெற்றி காணமுடியாத அவ்வளவு கடினமாக உள்ளன. அஞ்சாதே. உலகில் செல். சிலகாலம், கிரஹஸ்தாஸ்ரமத்திலே வாழ்க்கை நடத்து. உன் மனத்திலே அடர்ந்து குவிந்துள்ள ஆசாபாசங்களையெல்லாம்

தீர்த்துக்கொள். ஆனால், எக்காலத்திலும் ஆண்டவனின் அரவிந்த பாதங்கள் மீது உன் மனத்தைப் பதிய வை. உனது இலட்சியத்தை ஒருபோதும் விட்டுவிடாதே. பத்து வருஷங்களுக்குப் பின் திரும்பிவா. அதற்குமேல் தங்க வேண்டாம்'' என்று பிரேமானந்தர் ஹிதோபதேசம் புரிந்தார்.

ராம் தனது குரு தேவரிடம் விடைபெற்றுக் கொண்டு தன்னுடைய வீட்டுக்கு வந்து திருமணம் செய்துகொண்டு, குடும்ப வாழ்க்கையை மேற்கொள்ளலானான். உண்மையான பக்தி சிரத்தையுடன் அவன் குருதேவருக்குப் பணிவிடை புரிந்தபடியால், அவனுக்கு குருதேவரின் கிருபை பிறந்தது. வெற்றி அவனுக்காகக் காத்துக்கொண்டிருந்தது. சில காலத்திற்குள், அவன் தன் காதல் கண்மணியுடனும், வாஞ்சையுள்ள புத்திரர்களுடனும் திகழ்ந்து ஊரிலே உள்ள பெருத்த பிரமுகர்களில் ஒருவனாகச் சிறப்புற்றான். இங்ஙனம், பத்து வருஷங்கள் பறந்தோடின.

ராம் பங்களாவின் வாசற்படியில் ஓர் பிட்சு நின்றான். அவனைக் கண்டு குழந்தைகள் அஞ்சி உள்ளே ஓடிப்போயின. அந்த சாதுவை வாய்க்கு வராத கொடிய வசவுச் சொற்களால் அதட்டினாள் அவனுடைய சஹதர்மிணி. அதற்கெல்லாம் அசையவில்லை அந்த சாது. வீட்டு யஜமானரைப் பார்க்க வேண்டுமென்று விரும்பினார். ராம் தன் குருதேவர்தான் அவர் என்று அடையாளம் கண்டுகொண்டான். கௌரவமான முறையிலே அந்தப் பெரியாரை வரவேற்று அவருக்கு ஓர் ஆசனம் சமர்ப்பித்தான். "ராம்! நிரம்பவும் நல்லது. பத்து வருஷங்கள் தீர்ந்தன. உன்னைத் திருப்திப்படுத்திக்கொள்ள இப்போதாவது சாத்தியப்பட்டதா?" என்று குருதேவர் வினவினார். அதற்கு "குருதேவரே! உலகம் எனக்கு வழங்க முடிந்ததெல்லாம் சுகித்து மகிழ்ந்தேன். நானாக, ஆஸ்ரமத்திற்குத் திரும்பி வந்து சேர்ந்திருப்பேன். ஆனால், இச்சிறு குழந்தைகளைத் திக்கற்றவையாக விட்டுவிட்டு எப்படி வருவது? இவர்களைப் படிக்கவைத்து, வாழ்க்கையில் பதியவைத்து விட்டால், மனோ நிம்மதி ஆகும். இன்னும் சில வருஷங்கள் எனக்கு அனுமதி தாருங்கள். பின், நிச்சயமாகத்

தங்களுடன் வந்து சேருகிறேன்'' என்று பணிவன்புடன் பகர்ந்தான்.

பின், பத்து வருஷங்களும் கழிந்தன. குருதேவர் பங்களாவிற்குப் போனார். இந்தத் தடவை வயது முதிர்ந்து தள்ளாடிய ராம் அவரை வரவேற்றான். அவனுடைய மனைவி இறந்து போய்விட்டாள். அவனுடைய குழந்தைகள் வயதடைந்து திருமணம் செய்து கொண்டு வாழ்க்கையில் ஈடுபட்டிருந்தார்கள். "பிரேமை தங்கிய குருபகவானே! கிரஹஸ்தாஸ்ரமத்தின் கடமைகளையெல்லாம் நான் நிறைவேற்றினேன். புத்திரர்கள் வாழ்க்கையில் முன்னேறுகிறார்கள். ஆனால் அவர்கள் சிறியவர்கள். உலக சுக போகங்களிலே மூழ்கிக் கிடக்கிறார்கள். அவர்களுக்குப் பொறுப்பு என்கிற உணர்வு இல்லை. அவர்களிஷ்டப்படி விட்டுவிட்டால், மிகவும் கஷ்டப்பட்டுச் சம்பாதித்த தந்தையின் செல்வத்தை விரயம் பண்ணி விடுவார்கள் - பின்பு பட்டினி கிடப்பார்கள். அவர்களுடைய குடும்ப வரவு செலவுத் திட்டங்களை நிர்ணயித்து அவர்களை வாழ்க்கை நடாத்துவற்கு வழிகாட்ட வேண்டும். அவர்கள் பூரணமாக யௌவனப் பருவமடைந்து குடும்பப் பொறுப்புகளை ஏற்றுக் கொள்ளும் வரைக்கும் இன்னும் சில வருஷங்கள் என்னை தயவு செய்து இங்கிருக்க அனுமதி தாருங்கள். பின், நிச்சயமாக நான் வெளியேறி ஆஸ்ரமத்தில் வந்து சேருகிறேன்'' என்று கூறினான் ராம்.

ஏழு வருடங்கள் கழிந்தன. பிரேமானந்தர் ராமின் வீட்டிற்குச் சென்றார். பெரிய நாயொன்று வாசலிற் காவல் காத்துக் கொண்டிருந்தது. அதுதான் ராம் என்று தெரிந்துகொண்டார் பிரேமானந்தர். வீட்டுக்குள் போனார். இரண்டு வருஷங்களுக்கு முன் அவர் இறந்து விட்டாரென்று தெரிந்து கொண்டார். நாயாகப் பிறந்து வீட்டையும் தனது குழந்தைகளையும் காவல் காத்துக் கொண்டிருக்கும் அளவுக்குக் குடும்பத்தின் மீது பற்று வைத்திருந்தார் ராம். பிரேமானந்தர் நாயின் ஆத்மாவில் புகுந்து, "குழந்தாய்! நல்லது என்னைத் தொடர்ந்து வர இப்போது நீ தயாரா?'' என்று கேட்டார்.

அதற்கு நாய் - ராம். "குருதேவரே! இன்னும் இரண்டு வருஷத்திற்குப்பின் நிச்சயமாக வருகிறேன். நல்ல அதிர்ஷ்டத்தின் உச்ச நிலையில் எனது புத்திரர்கள் சீராக இருக்கிறார்கள். அவர்களுக்கு கடுமையான விரோதிகள் சிலர் இருக்கிறார்கள். இரண்டு வருஷங்களில் அவர்கள் எவ்வித பயமும் கவலையும் இல்லாமல் நிம்மதியா யிருப்பார்கள். பிறகு ஆசிரமத்திற்கு ஓடிவந்து விடுகிறேன்" என்றான்.

மேலும் இரண்டு வருடங்கள் கழிந்தன. ராமின் வீட்டுக்குச் சாது வந்தார். நாய்கூட செத்துப்போய் விட்டதாம். அவர் தமது திவ்ய ஞான திருஷ்டியால் விஷமுள்ள நாகப்பாம்பு வடிவத்துடன் ராம் இருக்கிறானென்றும் வீட்டில் இரும்புப் பெட்டியைக் காவல் காத்து வருகிறானென்றும் கண்டுகொண்டார். மாயா பாசத்தினின்று விடுதலை செய்வதற்குத் தன் சிஷ்யனுக்குக் காலம் வந்து விட்டதென்று தீர்மானித்துக் கொண்டார்.

ராமின் பேரனைப் பார்த்து, "சகோதரா! உங்கள் வீட்டில் உள்ள இரும்புப் பெட்டியின் பக்கத்திலுள்ள பொந்தில் விஷமுள்ள நாகப்பாம்பு ஒன்றிருக்கிறது. அது அபாயகரமானது. அதைத் தயவு செய்து அங்கிருந்து அகற்றி விடுங்கள். தயவு செய்து கொல்ல வேண்டாம். அதை நன்றாக அடித்து முதுகை ஒடித்து என்னிடம் கொண்டுவந்து கொடுங்கள்" என்று சாது கேட்டுக்கொண்டார்.

பேரன் சாதுவினுடைய சொற்கள் உண்மையாயிருந்தமை பற்றிப் பெரிதும் வியப்படைந்தான். வீட்டிலுள்ள இளைஞர்களையெல்லாம் திரட்டி பாம்பைப் பிடிக்க முற்பட்டார்கள். சாது கட்டளையிட்டபடி, அவர்கள் நாகப்பாம்பைக் கொல்லவில்லை. ஆனால் நகர முடியாதவாறு அதைக் காயப்படுத்திவிட்டார்கள். சாது பாம்பின் தலையை பிரியத்துடன் தடவிக் கொடுத்துவிட்டு, அதைத் தன் தோள் மீது போட்டுக்கொண்டு, ராமினுடைய பேரப் பிள்ளைகளிடம் விடை பெற்றுக்கொண்டார். சாதுவினால் இங்ஙனம்

அற்புதமாகக் காப்பாற்றப்பட்டமைக்காக அவர்கள் மகிழ்ச்சியடைந்தார்கள்.

போகும் வழியில், சாது பாம்பின் ஆத்மாவில் புகுந்து, "அன்புள்ள ராம்! ஐம்புலன்களையும் மனத்தையும் திருப்திப்படுத்த இதுவரை யாரும் இப்படி முயன்றதில்லை. ஆசைகள் திருப்திப்படுத்த முடியாதவை. ஆசை ஒன்று மறைந்தால் பின் டஜன் கணக்கில் இதர ஆசைகள் கிளம்பும். பகுத்தறிவுதான் உன்னுடைய ஒரே புகலிடம். விழித்துக்கொள். மிகக் குறைந்தபட்ச அளவில், நீ பரம்பொருளை அடுத்த பிறவியிலாவது அடைய வேண்டும்" என்றார் பிரேமானந்தர்.

ராம் அகோரமாக அழுதான். ஒடிந்த முதுகுடன் குற்றுயிராக நாகப்பாம்பு வடிவத்திலிருந்த ராம், "குருதேவரே! தாங்கள் எவ்வளவு கருணையுடன் என்னைப் பாராட்டுகிறீர்கள்! தங்களுக்கு நான் நன்றி கெட்டவனாக நடந்துங்கூட, என்மீது கருணை பாலித்து என் வாழ்க்கைத் தொடரைக் கவனித்து, என்னை மறக்காமல் பின்தொடர்ந்தும் தங்கள் பாதார விந்தங்களுக்கே என்னைத் திரும்ப வழிகாட்டி விட்டீர்கள். தெய்வீகக் கருணை நிறைந்தவர், ஒரு குருவைப்போல் இவ்வுலகத்தில் நிச்சயமாக வேறு எவருமே இல்லை. உண்மையான ஒரு குருவுக்கும் அவனது சிஷ்யனுக்கும் இடையிலுள்ள தன்னலமற்ற அன்பைத் தவிர உலகத்தில் வேறு எங்கும் இந்த அன்பைக் காண முடியாது. தங்களுடைய திவ்ய பாதாரவிந்தங்களுக்குச் சரணங்கள், சரணங்கள்" என்று அழுதான்.

## 53. கௌபீனமும் எருமையும்

முன்னொரு காலத்தில், தன்னை அணிந்து கொண்டிருந்தவனின் உடலில் தனக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள பதவியை வெறுத்து ஒரு கௌபீனம், அந்த உடலை விட்டுக் காசிக்குப் போயிற்று. கங்கையின் தீரத்தில் அது கிடந்தது. கௌபீனம் மாத்திரமே தரித்துக் கொண்டு நடமாடும் சாது

ஒருவன் கங்கையில் நீராடும் போது வேகமாய் ஓடும் தண்ணீரில் தன் கௌபீனத்தை இழந்துவிட்டான். மானத்தை மறைத்துக்கொள்ள வேறு துணி இல்லாததாலும் கரையில் கௌபீனம் கிடந்ததாலாலும், அக்கௌபீனத்தைத் தரித்துக் கொள்ளக்கூடிய நபர் வேறு யாருமே அங்கு இல்லாததாலும், சாது விரைந்து போய் அதை எடுத்துத் தரித்து மானத்தைக் காப்பாற்றிக் கொண்டான். முன்பு தன்னைத் · தரித்துக் கொண்டவனின் உடலில் எப்பாகத்தை மறைக்க விரும்பவில்லையோ, சாதுவின் உடலில் அதே பாகத்தை மறைக்க நேர்ந்தது பற்றி கௌபீனம் கடுந் துயரமடைந்தது. இரண்டு மூன்று நாள்கள் கூட செல்லவில்லை. கௌபீனம் தனது புதிய எஜமானன் முன்னவனைக் காட்டிலும் மகா கொடியவன் என்று அறியத் தொடங்கிற்று. ஏனெனில், வேறு கௌபீனம் ஒன்று இல்லாமையால், சாது நாள்தோறும் இருபத்து நான்கு மணி நேரமும் அதையே தரித்துக்கொண்டிருந்தான். முன்னிருந்த எஜமானனோ ஒரு நாள் விட்டு ஒரு நாள் அதைத் தரித்துக் கொண்டிருந்தான். "ஐயோ, என்ன பிழை நான் செய்து விட்டன்! முந்திய எஜமானனை விட்டுப் பிரிந்திருக்கலாகாது. புதிய எஜமானனோ எனக்கு ஒரு நாள் கூட ஓய்வுதந்தபாடில்லை" என்று கௌபீனம் சிந்திக்கலாயிற்று தனக்குள்.

இதைப் போலவே, எருமை ஒன்று காலை தொடங்கி இரவு வரை தனது எஜமானனின் வயல்களில் உழுவதாகிய கஷ்டமான வேலை மீது பெரிதும் வெறுப்பு கொண்டது. ஒரு நாள் இரவு மேய்வதற்கு அது அவிழ்த்து விடப்பட்டபோது தொலை தூரத்திலுள்ள ஓர் இடத்திற்கு ஓடிப்போயிற்று. புதிய இடத்தில் அந்த எருமையை ஓர் உழவன் பார்த்துவிட்டான். எங்கேயோ இருந்து அது ஓடிவந்திருக்கிறதென்று அறிந்தவனாக அதை நுகத்தடியில் பூட்டி, இரவும் பகலும் உழுவதற்கு உபயோகித்து வந்தான். சில நாட்களில் அந்த எருமை மெலிந்து பலவீனமடைந்தது. ஏனெனில் அது இரவும் பகலும் வயலை அத்தகைய கடினமான உழைப்புக்குப் பழக்கப்பட்டதே இல்லை. "முந்திய எஜமானனை விட்டு ஓடிவந்தது தவறு. அவன் என்னை அன்புடன் வளர்த்து

வந்தான். இரவில் ஒருபோதும் என்னை வேலை வாங்கியதில்லை. ஆனால், இப்போதுள்ள கொடிய எஜமானனோ சவுக்கால் கொடூரமாக அடித்து இரவும் பகலும் வேலை வாங்குகிறான். முந்திய எஜமானனை விட்டுப் பிரிந்திருக்கலாகாது'' என்று எருமை தனக்குள் எண்ணமிடலாயிற்று.

இறைவனுடைய திட்டத்தில் இடப்பட்டுள்ள தனது கடமையை நிறைவேற்றுவதினின்றும் எவனும் தப்பித்துக்கொள்ள முடியாது என்பதையும், தப்பித்துக் கொள்ளுவதற்கான முயற்சி வீணாகிப்போவதன்றி, அதிகரித்த கஷ்டங்களில் அவனைத் தள்ளி அவனுக்கு விதிக்கப்பட்டுள்ள கடமையைப் பலவந்தமாக நிறைவேற்றும்படி செய்யும் என்பதையும் கௌபீனமும் எருமையும் உணரலாயின. இறைவனின் இஷ்டத்திற்குத் தன்னைச் சரண்புகுத்தித் தனக்கு இடப்பட்டுள்ள கடமையாகிய கர்மாவை அதில் எழுகிற கஷ்டங்களையும் அசௌகரியங்களையும் எல்லாம் சகித்துக்கொண்டு சாந்தமாகச் செய்துகொண்டிருப்பதுதான் ஞானம் என்று அவை கற்றுக்கொண்டன.

தனக்கிஷ்டமான சூழ்நிலைகள் எங்கும் பரவியிருக்குமென்று ஒருவன் எதிர்பார்க்க முடியாது. தனக்கிஷ்டமான சூழ்நிலைகளை ஒருவன் பெற்றபோது, அவற்றில் சில குறைகள் இருப்பதை மனம் கண்டுபிடித்து அவற்றினும் சிறந்த சூழ்நிலைகளைப் பெற ஆசைப்படும், கட்டுப்பாட்டினின்று மனம் தப்பித்துக் கொள்ளுவதற்குச் செய்யும் தந்திரம்தான் அது. கட்டுப்பாடான வாழ்வைக் கடைப்பிடிப்பவன் எல்லா சூழ்நிலைகளிலும் சமாளித்து, தனக்கிடப்பட்ட கடமைகளை, எவ்வளவு கஷ்டமானவையாயிருந்தபோதிலும் உற்சாகமாயும் பிரியத்துடனும் நிறைவேற்றுகிறான். கட்டுப்பாடான அத்தகைய மனிதனே உண்மைப் பக்தன் ஆகிறான். ஆத்ம நிவேதனமே உண்மையான பக்தி. ஒருவன் தன்னை இறைவனின் இஷ்டத்திற்கு இலக்காக்கி, தனக்காக இடப்பட்ட

கடமையைச் சுணங்காமலும், முகங்கோணாமலும் நிறைவேற்றி, அலுவல் ஆண்டவனின் ஆராதனை என்ற ஊக்கத்தோடு, தான் விரைவில் முன்னேறி நற்கதி பெறுவதற்காக இறைவனால் அனுப்பப்பட்டவை என்று ஒவ்வொன்றையும் ஏற்று சர்வேஸ்வரனிடம் சரண் புகுவதைப் போல் அவ்வளவு சிறந்த பக்தி ஜபம் செய்வதிலும், பரவசமாகக் கீர்த்தனங்களைப் பாடுவதிலும் அல்லது சிரத்தையோடு செய்யப்படும் சாஸ்திர விதிகளை அனுசரித்த தெய்வ வழிபாட்டிலும் இல்லை. இந்த கொள்கையைப் பின்பற்றுகிறவனுக்கு ஒவ்வொரு கஷ்டமும், ஒவ்வொரு தடையும் படிப்படியாக, முன்னேறுவதற்கு ஏற்ற துணையாக அமைகின்றன. இறைவனிடத்தில் தன்னைச் சரண் புகுத்திய உண்மையான பக்தனுக்கு எந்த உழைப்பும் கடினமல்ல. எந்த உழைப்பும் கேவலமானதல்ல, எந்த வேலையும் முட்டுக் கட்டையல்ல; ஏனெனில், இறைவனின் இஷ்டத்தை நிறைவேற்றுதல் அல்லது அது இறைவன் வழிபாடு என்று உணர்ந்து ஒவ்வொரு காரியத்தையும் செய்து வருவதால், சதா சர்வ காலமும் இறைவன் மீது சிந்தனையாகவே இருந்து வருவான். தெய்வ சிந்தனையை எக்காலத்திலும் வைத்துக் கொள்ளுகிற யோகத்தின் பிரதான அம்சம் உத்தர காசியிலோ கங்கோத்திரியிலோ அல்லது இன்னும் உயரமான எந்தப் பிரதேசத்திலோ இருப்பது யோகம் அல்ல. ஆனால் யோகம் என்பது சர்வமும் சர்வேஸ்வரன் என்றும், எல்லாவிதமான அலுவலும் ஆண்டவனின் ஆராதனை என்றும் நல்லுணர்வாக ஏற்று ஒழுகுவதே ஆகும். பல முமுக்ஷுக்கள் உலகத்தைத் துறந்து ஏகாந்த வாசத்தை நாடி ரிஷிகேசத்திற்கு வருகிறார்கள். சில காலத்திற்குப் பின் ரிஷிகேசத்தை விட்டு உத்தரகாசியிலோ கங்கோத்திரியிலோ ஏகாந்தத்தை நாடி அலைகிறார்கள். இறுதியில் அவர்கள் அதை எங்கேயும் காண முடியவில்லை. உத்தர காசியிலாகட்டும், கங்கோத்திரியிலாகட்டும் பிச்சைக்காக ஒருவன் பிறரைத் தேடியே ஆக வேண்டும். ஆகையால் ஒருவன் எங்கே வசித்தாலும் அங்கேயே ஏகாந்தத்தைச் சிருஷ்டித்துக் கொள்ள வேண்டும். ஏகாந்தம் ஸ்தூலத்தைக்

காட்டிலும் மானசீகமானது. உலகத்தில் முற்றிலும் ஸ்தூல ஏகாந்த வாசம் பெற இயலாது. ஸ்தூல ஏகாந்த வாசம் மனோமய ஏகாந்தமில்லாதுபோனால், பயனற்றதாகும். உருண்டோடுகிற கல்லில் பாசிபடராதது போல, ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்லுகிற முமுக்ஷுக்கள் ஆத்மீக முன்னேற்றத்தை அடைகிறார்களில்லை. அவர்கள் ஆரோக்கியத்தைக் கெடுத்துக் கொண்டு இறுதியில், கௌபீனமும் எருமையும் போல, இறைவன் அவர்களைப் பிறப்பித்த இடத்தை விட்டு அதனினும் சிறந்த ஸ்தலங்களைத் தேடிச் சென்ற தமது குற்றத்தை உணருகிறார்கள்.

*நீதி : உனது கடமை நிறைவேற்றுவதற்கான ஸ்தலத்தை விட்டு ஓடிப்போகாதே. அதற்கு ஏற்ப நீ சீர்திருத்திச் சமயோசிதம் போலச் சரிப்படுத்திக் கொள்வாயாக. ஓம் தத் ஸத்.*

## 54. ஓர் மஹான் எப்படி அரசாண்டார்?

பண்டைக் காலத்தில், அரசர் ஒருவர் இறந்தால், அவரது மந்திரிகள் பிரத்தியேகமான ஓர் யானையை அனுப்புவதும், அந்த யானை தன் இஷ்டப்படி தன் தலைமேல் தூக்கிக் கொணரும் ஒருவனை - அவன் யாராயிருந்தாலும் சரி - எவ்வித கேள்வியும் இல்லாமல் அவனை அரசனாக முடிசூட்டுவதும் வழக்கமாயிருந்து வந்தது. இவ்வழக்கம் நெடுங்காலமாயிருந்து வந்தமையால், இதைப் புறக்கணிப்பதற்கில்லை.

ஒரு காலத்தில், அவ்வழக்கப்படி, ஒரு சந்நியாசியை, ஆத்ம சாக்ஷாத்காரம் பெற்ற உண்மையான மஹானை யானை பற்றிக் கொண்டு வந்துவிட்டது. அரசருடைய நீதிஸ்தலத்திற்கு ஆடம்பரத்துடன் அவரை அழைத்து வந்தார்கள். அந்த மகானுக்கு ஒரே குழப்பமாயிருந்தது. அவர் மந்திரிகளை நோக்கி " என்ன செய்தி? இங்கே என்னை ஏன் அழைத்து வந்தீர்கள்"? என்று வினவினார்.

"ஐயா! தங்களை மன்னராக முடிசூட்டப் போகிறோம். இந்த நகரத்தில் உள்ள வழக்கப்படி யானை தங்களை அரசராகத் தேர்ந்தெடுத்துள்ளது" என்றார்கள். அதற்கு அந்தமஹான், "வேண்டாம், வேண்டாம். எனக்கு நாடு எதுவும் வேண்டாம். நான் ஒரு சந்நியாசி" என்றார். ஆனால், மந்திரிகளோ அவரை விட்டபாடில்லை. "தயவு செய்து எங்களை ஏமாற்ற வேண்டாம், மஹானுபாவரே!" என்று பணிவுடன் கூறி, சிங்காதனமேறுமாறு வற்புறுத்தினார்கள்.

மஹான் அரசராக முடிசூட்டப் பெற்றார். அரசாங்கத்தில் நடைபெறும் விவகாரங்கள் எவற்றிலும் அவர் தலையிடாமல் இருந்து வந்தார். அந்நகரத்துக்குப் பக்கத்திலுள்ள நகரத்தினை ஆட்சி புரிந்து வந்த அரசர் இதை ஒரு நல்ல வாய்ப்பாகக் கொண்டு அந்நகரின் மீது படையெடுத்தான். இச்செய்தியை மந்திரிகள் மஹான் - மன்னரிடம் தெரிவித்தார்கள். "அவன் ஏன் படையெடுத்து வந்தான்? அவனுக்கு நாம் ஏதாவது தீங்கு இழைத்தோமா?" என்று கேட்க மந்திரிகள், "எங்களுக்கு ஒன்றும் தெரியாது. வெளிப்படையான காரணம் எதுவும் கிடையாது. அவனுடைய படைகள் நம்முடைய நாட்டுக்குள் பிரவேசிக்கின்றன. எங்களுக்கு உத்தரவு தாருங்கள். அவனை எதிர்த்துப் போர் புரியச் செல்லுகிறோம்" என்றார்கள் மந்திரிகள்.

"இல்லை, இல்லை. பேசாமல் இருங்கள். நாம் ஏன் போர் செய்ய வேண்டும்?" என்றார் அரசன், மந்திரிகளுக்கு ஒரே குழப்பமாயிருந்தது. என்ன செய்வதென்று தோன்றாமல் திகைத்தார்கள். மஹான் - மன்னரின் படைகள் யுத்தத்திற்கு வராததைத் தெரிந்து கொண்ட பகை அரசன் மஹானை நோக்கி வந்தார். மஹான் அசட்டையாக இருந்தார். பகை மன்னன், "அரசரே! தங்களை எதிர்த்துப் போராட வந்துள்ளேன். இப்போது தாங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?" என்று கேட்டான்.

"அதனால் தாங்கள் என்ன லாபமடைவீர்கள்? எங்களோடு தாங்கள் ஏன் போரிட விரும்புகிறீர்கள்?"

"தங்கள் நாட்டைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டுமென்று நான் விரும்புகிறேன்."

"மகிதல மன்னரே! அதன் பொருட்டு எனது போர் வீரர்களோடு புரிய வேண்டாம் சண்டை. இச்சிம்மாசனத்தை எடுத்துக் கொள்ளுங்கள். நான் வெறும் சந்நியாசிதானே. எப்போதும் சந்நியாசியாக இருந்தவனே நான். நான் வெளியேறுகிறேன். வாருங்கள், ஏறுங்கள் இந்த அரியணை! இந்த க்ஷணம் முதல் தாங்கள் இந்த நாட்டிற்குங்கூட அரசராகிவிட்டீர்கள்!" என்று கூறிக்கொண்டே மனச்சாந்தியுடன் வெளியே புறப்படலானார் மஹான்.

பகை அரசன் மிக்க அவமானமுற்றான். முற்றிலும் திகைப்பும் வியப்புமடைந்து அவன் மஹான் - மன்னர் சன்னிதானத்தில் சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு வணங்கித் தனக்கு மன்னிப்புத் தருமாறு கோரியதன்றி, மஹானுடைய நாட்டை எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக தனது நாட்டையே மஹானுக்கு வழங்கலானான். அம்மஹான் பின்னர் இரண்டு நாடுகளுக்கும் மன்னரானார்.

அச்சமும் திகிலும் கலந்த முகத்தோற்றத்துடன் அமர்ந்திருந்த அமைச்சர்கள் தேற்றமடைந்து முகப் பொலிவைப் பெற்றார்கள். துறவு மனப்பான்மையின் மஹிமையைப் பற்றித் தெளிவாகத் தெரிந்து கொண்டார்கள். ஒரு நாடு முழுவதும் இரத்தம் சிந்துதல் என்ற யுத்தத்தினின்று காப்பாற்றப்பட்டது. மேலும் கேட்காமலேயே ஓர் நாட்டைப் பெற்றார் மஹான் - மன்னர்!

## 55. மாயையின் மாவஞ்சகமான சக்கரம்

ஓர் விறகு வெட்டியை, விறகை ஏன் வெட்டுகிறாய் என்று கேட்டேன். அதற்கு அவன், "என் வயிற்றை வளர்ப்பதற்கு" என்று பதிலளித்தான். மீண்டும் நான் அவன் நோக்கி, "ஏன் வயிற்றை வளர்க்கிறாய்?" எனக் கேட்க,

அவன், "விறகை வெட்டுவதற்கு" என்றான். இதுதான் வஞ்சகமான சக்கரம் அல்லது வட்டம்.

தட்டிலே சாம்பார் அதிகம் இருந்தது. அம்மனிதன் சோறு அதிகம் வேண்டுமென்றான். இப்போது சோறு அதிகமாகிவிட்டது. இன்னும் சாம்பார் அதிகம் வேண்டுமென்கிறான். இதுவும் வஞ்சகமான சக்கரம் அல்லது வட்டம்.

அவனுக்கு முதல் மனைவி இறந்தாள். குழந்தைகளினால் துன்பமுற்றான். முதல் தாரத்துக் குழந்தைகளை வளர்த்துக் காப்பாற்றுவதற்கு இரண்டாவது தாரத்தை மணந்துகொண்டான். இன்னும் சில குழந்தைகள் பிறக்கின்றன. இதுவும் வஞ்சகமான சக்கரம் அல்லது வட்டம்.

மனிதன் கர்மாவைப் புரிகிறான். அதன் பலன்களை அனுபவித்துத் தன் வாசனைகளைப் பெருக்கிக் கொள்ளுகிறான். வாசனைகள் அவனை கர்மாக்களைச் செய்யத் தூண்டுகின்றன. வேலை செய், பிறகு வாசனை, பின் வேலை செய், அப்பால் வாசனை. இது வஞ்சகமான வட்டம். ஓ, ஆன்மீக வீரனே! ஆன்மீக ஞானத்தைப் பெறுவாயாக. இத்தகைய வட்டங்களை உடைத்தெறிந்து, முக்தி அடைவாயாக.

## 56. பூரண நம்பிக்கை வை

"இந்தத் தாமரைத் தடாகத்தில் ஸ்நானஞ் செய்கிறவர்களுக்கெல்லாம் தாங்கள் முக்தியைத் தருகிறீர்களா?" என்று வினவினாள் பார்வதி. "இல்லை" என்றார் பரமேஸ்வரர். "ஏன்? வெகு தொலைவிலிருந்து அவர்கள் எல்லாம் இங்கு வந்திருக்கிறார்களே" என்றாள் பார்வதி. பரமேஸ்வரர் அதற்கு "பூரண நம்பிக்கை வைக்கவில்லை. இத்தடாகத்தில் ஸ்நானஞ் செய்தால் தங்கள் பாவங்கள் கழுவப்பெற்று விடுமேயென்ற பூரண நம்பிக்கை

அவர்கள் வைக்கவில்லை. கண் முன்னால் உனக்குக் காட்டுகிறேன்". என்றார் பரமேஸ்வரர்.

சிவபெருமானும் பார்வதியும் தடாகத்திற்குப் போனார்கள். சிவபெருமான் தடாகத்தில் இறங்கி, நீரில் அமிழ்ந்து இறந்து விடுவார் போன்று தத்தளிக்கின்றார். பார்வதி, "அன்பர்களே! நீரில் அமிழ்ந்து இறந்து விடுவார்போலத் தத்தளிக்கிற என் கணவரைக் காப்பாற்றிக் கரையேற்றுங்கள். பாவங்கள் இல்லாதவர் மட்டுமே என் கணவரைத் தொட முடியும்" என்று கதறினாள். எவருமே அவரை அணுகத் துணியவில்லை. சுந்தரமூர்த்தி நாயனார் அப்போது அங்கே வந்தார். தடாகத்தில் ஸ்நானஞ் செய்து விட்டுத் தத்தளிக்கிறவரைக் காப்பாற்றிக் கரைக்குக் கொணர்ந்து வந்தார். இப்போது சிவபெருமான், "பார்வதி! கவனி. இங்கே பூரண நம்பிக்கையுள்ளவர் ஒருவரே உண்டு. ஸ்நானஞ் செய்தால் பாவங்கள் நசியுமென்ற நம்பிக்கை இவர் ஒருவருக்கே இருந்தது. இவருக்கே நான் முக்தி அளிக்கிறேன்" என்றார்.

## 57. உன் மனைவி விதவையானாள்

ஒரு காலத்தில் ஒருவர் தமது நண்பரை ரயில்வே நிலையத்தில் வரவேற்று உபசரிப்பதற்காக அங்கே காத்துக் கொண்டிருந்தார். வெகு நேரத்திற்குப் பிறகு ரயிலிலிருந்து இறங்கிய நண்பர் "இதர நண்பர்களும் எல்லா உறவினர்களும் நலமா?" என்று கேட்டார். அவர் "ஆம், எல்லோரும் சுகம், ஆனால் ஒரே ஒரு கெட்ட செய்தி உண்டு. அதாவது சமீபத்தில் உன் மனைவி விதவை ஆகிவிட்டாள்" என்றார்.

நண்பரோ எளியவர்; நுண்ணறிவு அற்றவர். கோவெனக் கதறியழத் தொடங்கிவிட்டார். மார்பில் இரண்டு கரங்களாலும் கடுமையாக அடித்துக் கொண்டார். அந்த நண்பரைப் பார்த்து, "ஒ! ராம! என்ன மதியீனம் இது! நீ உயிருடனிருக்கும்போது, உன் மனைவி எங்ஙனம் விதவை

ஆவாள்?" என்று விளக்கிக் கேட்டார். பிறகு, மெதுவாக ராமன் மனந்தேறி வாளா இருக்கலானான்.

உலகாயதர்களின் மாயையும் இப்படிப்பட்டதே. அழியக்கூடிய இந்த உடலை நித்தியத்துவமான ஆன்மாவென்றே பாவிக்கிறான். உடலுக்கு உரியதாகிய "என்னுடையது" என்கிற பாசங்களைக் கற்பித்துக் கொள்ளுகிறான். மோகத்தினால் அவன் அழுகிறான். தயாளகுணம் படைத்த தபசி அவனைத் தேற்றி,"மனிதனே! சரீரம் நீ அல்ல. சரீரமாகிய ஸ்வரூபத்தில் நீ திளைத்துள்ளாய். அஞ்ஞான உறக்கத்தினின்று எழுந்திருப்பாயாக. "தத்துவம் அஸி". நீ அதுவாக இருக்கிறாய்" என்று உபதேசிக்கின்றார். அதன்பின், ஆன்ம பலம் கைவரப் பெற்றவனாகத் தியானித்து ஆன்ம சாக்ஷாத்காரத்தை அடைகிறான்.

## 58. F. F. S. & F. T. D. பட்டதாரி

தலைமையாசிரியர் பதவிக்கு ஒருவர் மனுச்செய்து கொண்டார். மூன்றாவது படிவத்தில் தேறியிருந்தார் அவர். தமது பெயருக்குப்பின் F. F. S. & F. T. D. என்ற பட்டங்களைச் சேர்த்துக் கொண்டார். உயர்தரப் பள்ளியின் நிர்வாக அதிகாரிகள் பெரிய பட்டங்களைப் பார்த்து மதிமயங்கி அவரையே தலைமையாசிரியராக நியமித்துவிட்டார்கள். தலைமையாசிரியர் ஒரு வாரமே வேலை பார்த்தார். சொற்பொழிவுகளை ஆற்ற அவரால் இயலவில்லை. மாணவர்கள் அவரைச் சொற்பொழிவு ஆற்றும்படி வற்புறுத்தினார்கள். ஆனால், தலைமையாசிரியரோ விழித்தார். நிர்வாக அதிகாரிகள், "இப்பட்டங்கள் என்ன? சொற்பொழிவாற்றத் தங்களால் முடியவில்லையே" என்று கேட்டார்கள். அவர், "நான் ஐந்து மகன்களுக்குப் தந்தையும், பத்து மகள்களுக்குத் தந்தையும் Father of Five Sons (F.F.S.) Father of Ten Daughters (F.T.D) பட்டங்களைப் பெற்றேன்" என்றார். அதிகாரிகள் "மோசக்காரனே! உடனே வெளியேறு. உன்னை நாங்கள் விரும்பவில்லை" என்றார்கள்.

உலகத்தில் மோசக்காரர்கள் நிறைந்திருக்கிறார்கள். எச்சரிக்கையாயிருங்கள். விழித்திருங்கள். F.F.S., F.T.D. என்ற பட்டங்களினால் மோசம் போகாதீர்கள். அமெரிக்கா வெகு மலிவான பட்டங்களை வழங்குகின்றது. தற்பெருமை கொண்டுள்ளவன் பட்டங்களை அவாவுகிறான் - உலகத்தில் ஒரு பெரிய மனிதனாகத் தன்னைப் பிறர் மதிக்கும் பொருட்டு. எளியவனாயும், அடக்கமுள்ளவனாயும், மோசம் செய்யாதவனாயும் இருப்பாயாக.

## 59. கரும்புக் கதை

உழவன் ஒருவன் கரும்புக்கட்டு எடுத்துக் கொண்டு ரயிலேறி கல்கத்தாவுக்குச் சென்றான். அங்கு அவற்றை அதிக லாபத்திற்கு விற்கலாமென்று நினைத்தான். ஹௌரா ரயில்வே ஸ்டேஷனில் பயணச் சீட்டு பரிசோதகர் வந்து, "இந்தக் கரும்பு கட்டு யாருடையது?" என்று கேட்க, சொந்தக்காரனான உழவன் "என்னுடையது" என்று கூறவில்லை. இதர பிரயாணிகளையும் கேட்டார். அக்கட்டு தம்முடையது என்று உரிமை பாராட்டிக் கொள்ள எவருமே முன்வரவில்லை. பேராசை கொண்ட பேர்வழி ஒருவன் முன் வந்து "இது என்னுடையது; ஐயா!" என்றான். பரிசோதகர் "இதற்கு 20 ரூபாய் செலுத்தி கரும்புக்கட்டை கொண்டு போ" என்றார். "என்னுடையது" என்று சொன்னதால் அவன் சிக்கிக்கொண்டான். துக்கத்திற்கு மூல காரணம் (மமதை) என்னுடையது என்பது. நான் எனும் அகங்காரத்தைக் களைந்துவிடு. நீ சுதந்திரமடைவாய். நான் எனும் அகங்காரம் முதலில் வரவும், அதைத் தொடர்ந்து எனது எனும் மமகாரம் வரவும் செய்கிறது.

## 60. ஓய்வு அற்ற குதிரை மனம்

பாதுஷா ஒருவர் பத்து ஆயிரம் ரூபாய்க்குச் சிறந்ததோர் குதிரையை வாங்கினார். குதிரை எப்போதும் சுறுசுறுப்பாகத்

துள்ளுகிறது. அதன்மேல் ஏறிச் சவாரி செய்ய எவருக்குமே முடியவில்லை. ஆனால் அவருடைய மகன் சிக்கந்தர் என்பவர் "நான் சவாரி செய்கிறேன். அன்புள்ள தந்தையே" என்றான். குதிரை மேலேறிச் சிக்கந்தர் வெயில் படும்' 'பாக சூரியனை நோக்கி ஓட்டினான். குதிரை நாலுகால் பாய்ச்சலில் சென்றது. பாதுஷாவுக்குப் பெரும்வியப்பாயிருந்தது. "சிக்கந்தர்! இதன் மேலேறி எப்படிச் சவாரி செய்தாய்?" என்று கேட்க, சிக்கந்தர், "குதிரை தனது நிழலைப்பார்த்துப் பயப்பட்டது. ஆகவே முகத்துக்கெதிராகச் சூரியன் வெயில் படும்படியாகக் குதிரை மேலேறிச் சவாரி செய்தேன்" என்றான்.

இதைப் போலவேதான் ஓய்வு அற்ற குதிரை மனமும்கூட. ஆன்மாவின் பக்கமாக மனத்தைத் திருப்பினால் அது அமைதியை அடையும். மாயையின் பக்கமாகத் திருப்புவாயானால் அது குதித்துக் கூத்தாடும்.

## 61. முடிமன்னராக்கும் முகூர்த்தம்

இவ்வுலகம் புலன் உணர்வுகள் நிறைந்த ஒரு பிரதேசம். மனமும் புலன்களும் மிகவும் நம்பத்தகாதனவாயும் வஞ்சிக்கக் கூடியனவாயும் உள்ளன. ஆகையால், பஞ்சேந்திரியங்களின் வாயிலாகப் பெறப்படும் தோற்றங்களும் அனுபவங்களும் முற்றிலும் தடுமாற்றத்தையும் அபாயகரமான ஏமாற்றத்தையும் விளைவிக்கக் கூடியன. எல்லாம் நல்லவையாகத் தோன்றி பிறகு மாறினவையாகப் போய் விடுகின்றன. துன்பம் இன்பப் போர்வை போர்த்துக் கொண்டும் தீமை நன்மையான மாறுவேஷம் போட்டுக் கொண்டும் நடிக்கின்றன. இது ஆராய்ச்சிக்கு எட்டாத மாயையின் விளையாட்டு. இதனைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்து நன்கு தெரிந்து கொள்கிறவன் ஒளிநெறியில் நடந்து செல்லுகிறான். இந்த ஏமாற்றத்திற்கு உட்பட்டவன் அஞ்ஞானமாகிய இருளடர்ந்த நகரத்தில் வசிப்பவனாகிறான். பராதீனமான வாழ்க்கையை நடத்தி முடிவற்ற அல்லல்களுக்கு ஆளாகிறான். உண்மையான மோட்ச சுகம் ஆன்மாவில் தங்கியுள்ளது. புலன் உணர்வுப்

பூலோகமானது ஆன்மாவுக்கு நேரடியான முரண்பாடுகள் நிறைந்தவையாய் அமைக்கப்பட்டுள்ளது. ஆன்மாவில் நித்திய வாழ்வும் சாஸ்வதமான ஆனந்தமும் குடிகொண்டுள்ளன; ஆனால் புலனுணர்வு சுகமானது வாழ்க்கையை அழித்துவிடக் கூடிய ஓர் விஷமேயாகும். ரசமான இக்கதையைக் கேளுங்கள்.

முன்னொரு காலத்தில் நாடோடி சந்நியாசி ஒருவனும் அவனுடைய சிஷ்யனும் இருந்தார்கள். சந்நியாசி ஜாக்கிரதையுள்ளவனாயும் ஞானம் படைத்தவனாயுமிருந்தான். இளமைப் பருவத்திலுள்ள சிஷ்யனோ அவசர புத்தியுடையவன். இன்பத்தில் நாட்டமுள்ளவனானபடியால் சிலநேரம் மூர்க்கத்தனமாக நடந்து கொள்வான். அவர்கள் ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருக்கையில், ராஜராஜேஸ்வர் பிருஹத்மூடபகதூர் எனும் பெயர் பூண்ட அரசருடைய பட்டணத்திற்கு வந்து சேர்ந்தார்கள். மகா அந்தர்நகரி என்பது அந்தப்பட்டணத்தின் பெயர். அவர்கள் ஒரு சத்திரத்தில் தங்கினார்கள். சில உணவுப் பொருள்களை வாங்கி வரும்படி சிஷ்யனைக் கடைக்கு அனுப்பினார் குரு. சிஷ்யனோ போய்த் திரும்பி வந்தான். ஆட்டம்பாட்டத்துடன் தின்பண்டங்கள், தித்திப்பு பட்சணங்கள், பழங்கள், இன்னும் பல்வேறு பொருளையும் ஒரு மூட்டை நிறையக் கொண்டுவந்தான் நிரம்பவும் குதூகலத்துடன். அதெல்லாம் என்ன என்று குரு கேட்டதற்குச் சிஷ்யன், "ஓ, குருஜீ! இந்த ஊரிலேயே சாஸ்வதமாகத் தங்கிவிடலாம். பூலோகத்தில் இப்பட்டணம் தான் சொர்க்கம். இங்கே எல்லாம் எதுவானாலும் சரி, ஒரு சேர் எடைக்கு விலை ஒரு பைசா தான். இந்த ஒரு சீரான விலைதான் எல்லாப் பொருள்களுக்கும், சுகவாசஸ்தலமான இந்தப் பட்டணத்திலே ஒரு குண்டூசி அல்லது ஊசி முதல் பட்டு, வெல்வெட்டு அல்லது தங்கம், இரத்தினங்கள் வரை உங்களுக்குத் தேவையான எதையும் ஒரே சீராக சேர் ஒரு பைசா வீதம் வாங்கலாம். அரசர் வாழுகின்ற டாம்பீகமான வாழ்க்கையை சிறிது பணத்தைக் கொண்டு வாழலாம். நமது வாழ்நாள் முழுவதும் இங்கேயே தங்கிவிடுவோம்" என்று பதில் கூறினான்.

இதைக் கேட்டவுடனே குரு தமது மான்தோல் ஆசனத்தைச் சுருட்டி, இடுப்பு வேட்டியைக் கச்சங்கட்டி, கைத்தடி, பிக்ஷாபாத்திரம் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு சத்திரத்தை விட்டுச் சாலைக்குப்போய், "சிஷ்யா! இந்த துரதிர்ஷ்டமான நகரத்தை விட்டு உடனே புறப்படுவோம். இது சொர்க்கம் அல்ல. இது சாத்தானுடைய சொந்த நகரம். அஞ்ஞான இருள் சூழ்ந்த இந்த நகரத்திலே ஒரு க்ஷணப்பொழுதுகூட தாமதிக்காதே! புறப்படு; புறப்படு. நீ இங்கு தங்குகிற ஒவ்வொரு வினாடியும் உன்னுடைய உயிருக்கு ஆபத்து விளைவித்துக் கொள்ளப் போகிறாய். கேட்ட மாத்திரத்தில் எல்லாம் இலவசம்போல் கிடைக்கிற போது, இங்கே வாழ்க்கை முற்றிலும் குளறுபடியாகவே இருக்கும். இங்கு இன்பம் என்பது விரைவில் மிகுந்த அபாயகரமாக மாறும். உன்னுடைய புன்சிரிப்புகள் கொடிய துயரக் கண்ணீர்த் துளிகளுக்கு இடம்கொடுக்கும் வா. இதை விட்டு உடனே போய்விடுவோம்" என்று அழைத்தார்.

சிஷ்யனின் முகத்தில் தோன்றிய புன்முறுவல் மறைந்தது. அந்தர் நகரில் கிடைக்கும் சேர் ஒரு பைசா விற்பனைப் பொருள்களை வாங்கி அனுபவிக்கும் இன்ப வாழ்க்கையைத் தவறவிட்டுப் போவதைப் பற்றி அவன் ஏமாற்றமும் வேதனையும் அடைந்தான். ரோஜா புஷ்பங்களைப் போன்ற அழகிய சொப்பன அரண்மனைகள் இடிந்து பூமியில் விழுந்து தூளாயின. அதிகத் தொந்தரவோ உழைப்போ இல்லாமல் பாட்டுப் பாடுவது போல உல்லாசமாக எல்லாம் சொற்ப விலைக்கு வாங்கி வாழ்க்கை நடத்துவதால் இன்பத்தைத் தவிர வேறெதுவும் நிகழாது என்று சிஷ்யன் குருவோடு வாதாடினான். குருவோ பதற்றமில்லாத திடசித்தம் படைத்தவர். பாலும், தயிரும், பழங்களும் தித்திப்புப் பட்சணங்களும் சேர் ஒரு பைசா வீதம் கிடைக்கிற இந்த சொர்க்க லோகத்தில் தங்கியிருக்கவும், குருவை விட்டு விடவும் சிஷ்யன் திடீரென்று தீர்மானித்தான். இப்பட்டணத்தைத் தவிர வேறு எங்கே இத்தகைய வாய்ப்பை அடைய நினைக்கக் கூடும்? முட்டாள்தனமாகத் தனக்குள் யோசித்து விட்டு குருவைப் பார்த்து, "சரி, குருதேவரே! போக

வேண்டுமென்று கருதினால் தாங்கள் போகலாம். தாங்கள் விரும்பாவிட்டாலும் நான் இந்த நகரிலேயே தங்குவதற்கு முடிவு செய்துள்ளேன்" என்று கூறிவிட்டான். "உன் இஷ்டம். நான் போய்வருகிறேன்" என்று கூறிவிட்டு குரு அந்தப்பட்டணத்தை விட்டுப் புறப்பட்டுவிட்டார். முடிவான எச்சரிக்கையும் செய்தார்.

இங்ஙனம் அந்தர் நகரில் சிஷ்யன் தனித்து வாழலானான். ஒரு அணாக் காசிலே ராஜபோகமாகச் சாப்பிட்டுக் குடித்துக் காலம் போக்கலாம். சிஷ்யனின் வாழ்க்கை ஆனந்தமாகப் போய்க் கொண்டிருந்தது. ஹிருதய பூர்வமாக நன்றாகத் திருப்தியாகச் சாப்பிட்டான். ஆசைப்பட்டவையெல்லாம் சுலபமாகக் கிடைத்துவிடும். அவனுடைய பஞ்சேந்திரியங்கள் விரும்பினவற்றை அடைந்து அனுபவித்தான். எனவே, மனத்திற்கும் இந்திரியங்களுக்கும் தேவைப்பட்ட அனைத்தும் கிடைத்தன. தினசரி காலையில் பணக்காரர்கள் வீட்டிற்குச் சென்று அரை மணி நேரத்தில் சில காசுகளைப் பிச்சை ஏற்று வந்தால் போதுமானது. சுவையான பட்சணங்களைத் தின்றான். நவீன நாகரிக வாசனை சென்டுகளை பூசிக்கொண்டான். சில நேரங்களில் பூமாலையும் போட்டுக் கொள்வான். தாம்பூலம் தரிப்பதால் உதடுகள் எப்போதும் சிவப்பாயிருந்தன. பட்டு உடைகளைத் தரித்துக் கொண்டு ஆரஞ்சு வர்ணமுள்ள தலைப்பாகையுடன் காட்சியளித்து வந்தான். தர்மசத்திரத்தில், வண்டிச் சத்தம் உள்பட இரண்டரையணாவுக்கு வாங்கிய நேர்த்தியான கட்டிலைப் போட்டுக்கொண்டான். மிருதுவான படுக்கை அதை அலங்கரித்தது. வேலைப்பாடுகள் அமையப்பெற்ற கருங்காலி ஆசன பீடம் அதன் பக்கத்தில் இருந்தது. வெள்ளியால் தயாரிக்கப்பட்ட சிறந்ததோர் 'ஹுக்கா' ஒன்று அந்த ஆசனத்தில் அமைக்கப்பட்டிருந்தது. தரையில் அழகான இரத்தின கம்பளம் விரிக்கப்பட்டிருந்தது. ஐந்தாறு ஆண்டுகள் கழிந்தன. சிஷ்யன் தொந்தி தொப்பை முதலிய பெரிய மனிதச் சின்னங்களுடன் விளங்கினான். குருவை அறவே மறந்தான். தான் முன்பு எப்படி இருந்தோமென்பதையும் மறந்தான். அந்த அதிசயமான நகரில் அதிகப்படி அளவு

சுகத்தை எப்படிப் பெறலாமென்ற சிந்தனையே செய்து வந்தான். இங்ஙனம் ஆனந்தமாக நாள்கள் கழிந்துகொண்டே போயின. சிற்றின்ப நுகர்ச்சியிலும் நாட்டம் செலுத்திய சிஷ்யன் தடித்துக் குண்டன் போலானான். சத்திரத்தின் வாசலை அகலப்படுத்தினான் - அவ்வளவு பருத்துவிட்டது அவனுடைய உடல்.

இங்ஙனம் சிஷ்யன் இருந்து வருகையில், தலை கீழான, தாறுமாறான அந்தப் பட்டணத்தில் வாழ்க்கை வழக்கம்போல அதன் பைத்தியக்காரப் போக்கில் கழிந்து கொண்டிருந்தது. மந்திரியோ ஒரு வடிகட்டின முட்டாள். அவரது யஜமானரான மன்னர்தான் அவரைத் தோற்கடிக்கக் கூடியவர் முட்டாள் தனத்தில். நாட்டின் சட்டமோ அசாதாரண பாங்கு உடையது. நீதிபதிகளும் சட்டத்தைச் செயல்படுத்தும் வக்கீல்களும் அரசரோடும் மந்திரியோடும் போட்டியிட்டுப் போராடினார்கள். இந்த அதிசயமான பட்டணத்தில் ஒரு நாள் எதிர்பாராத விபத்து ஒன்று நிகழ்ந்தது. ஒடுக்கமான சாலை வழியே புதிதாகக் கட்டப்பட்டுள்ள ஒரு சுவரருகிலே ஒருவன் செல்ல நேர்ந்தது. அப்படிச் செல்லும்போது அந்தச் சுவரின் ஒருபகுதி நொறுங்கி அம்மனிதன் மீது விழுந்து ஊறுபடுத்தியது. உடனே அவன் நீதிபதியிடம் அச்சுவரின் உரிமையாளன் மீது புகார் செய்தான். ஆனால் அன்று வெள்ளிக்கிழமை. வெள்ளிக் கிழமைகளில் மட்டும் காலை 10 மணிக்குமேல் திறந்த வெளியில் விசாரணை நடத்துவதென்பதும் காலை 10 மணி முதல் மத்தியானம் 1 மணி வரை நிகழ்ந்த வழக்குகளையெல்லாம் அரசரிடம் நேரடியாக ஒப்புவிப்பதென்பதும் மன்னர் வழக்கமாகக் கொண்டுள்ள சம்பிரதாயம். எனவே தீங்கடைந்த நபரின் புகார் திறந்த வெளியில் மன்னரால் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. நடுநடுங்கிய சுவரின் சொந்தக்காரன் அவர் முன் இழுத்துக் கொண்டுவரப்பட்டான்.

**மன்னர்** :- உம். உமக்குச் சொந்தம் அச்சுவர் தானே?

**சொந்தக்காரன்** :- ஆம்; மன்னரே.

மன்னர் - . வாரும், நீர் என்ன சொல்ல வேண்டும்? அம்மனிதன் அடைந்த தீங்குக்காக நீர் ஏன் தண்டிக்கப்படலாகாது?

சொந்தக்காரன் :- அரசின் தலைவனே! அதற்குச் சொந்தக்காரன் நான் தான். எனினும், அச்சுவரைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. கட்டிய நிருமாணியினால் அது கட்டப்பட்டது. சுவர் நிலையாக நிற்பதற்கும் வீழ்ந்து விடுவதற்கும் அவனே பொறுப்பாளி - என்றான்.

மன்னர் உடனே "கட்டிட நிருமாணியைப் பிடித்து வாருங்கள் இக்கணமே" என்று உரக்கக் கர்ஜித்தார். அரசியல் சிப்பந்திகள் உடனே அனுப்பப்பட்டார்கள். கட்டிட நிருவாகி கோர்ட்டில் ஆஜர்படுத்தப்பட்டான். "மனிதா!" என்று இராஜா இடிஇடித்தார். மந்திரி அதற்கு ஒத்து ஊதுவது போலச் சிரித்தான். இராஜா, "மனிதா! உன் சுவர் விழுந்து என் குடிமகனுக்குத் தீங்கு செய்தது. உன்னைத் தூக்கு மரத்துக்கு அனுப்புவதற்கு முன், இப்போது என்ன சொல்லப்போகிறாய்?" என்று முழங்கினார். கட்டிட நிருமாணி, "கட்டிட நிருமாணத்தை நான் மேற்கொண்டது வாஸ்தவம், வேந்தரே! ஆனால் அச்சுவரை முற்றிலும் கட்டியது கொத்தன் என்று உறுதி கூறுவேன். அவரே இந்த வேலை செய்தது. அதை நன்கு கட்டியிருந்தால் எல்லாம் சரியாயிருந்திருக்கும். ஏதோ கோளாறாகக் கட்டியிருப்பான், ஆகையால் அது விழுந்து தீங்கு விளைவித்தது" என்று விரிவாகச் சாற்றினான்.

கட்டிட நிருமாணியின் மீது மகிழ்ச்சிகொண்டார் மன்னர் பெருமான். அவர் வேகமாகத் தலையை மேலுங்கீழுமாக ஆட்டிக்கொண்டே, "ஆம், ஆம், என் மனிதா, நீ சொல்வது சரி. எமது அரண்மனைக்குள் போய் மோரைக் குடி" என்று கூறிவிட்டுக் காவலாளிகளைப் பார்த்து "புறப்படுங்கள், எங்கிருந்தாலும் கொத்தனைத் தேடிப்பிடித்து வாருங்கள்" என்று ஆணையிட்டார்.

காவலாளிகள் பாலத்தைப் பழுதுபார்த்துக் கொண்டிருந்த கொத்தனைக் கண்டுபிடித்தார்கள். கழுகு தன் இரையைக் கவ்வுவது போல அவர்கள் கொத்தனைப் பிடித்துக்கொண்டு எவ்வித எச்சரிக்கையுமின்றி அவன் பிடரியைப் பற்றிக் நீதிமன்றத்துக்குத் தள்ளிக்கொண்டு போனார்கள் விரைவாக.

அரசன் பயங்கரமான குரலில், "கழுத்தில் தூக்குக் கயிறு ஏறுவதற்கு முன்னால், நீயே விஷயத்தைக் கக்கு அற்பத்தனமான கொத்தனே! (மன்னர் கண்ணீர் விட்டார். மூக்கைச் சிந்தினார்) தள்ளாடும் சுவர்களைக் கட்டுகிற தறுதலையே! இப்பேர்ப்பட்ட கொடுமையை நீ எப்படிச் செய்யத் துணிந்தாய்?" என்று கர்ஜித்தார்.

கொத்தன் இடதுகையால் தன் தொண்டையைத் தடவிக் கொண்டான். நரைத்த கிழவன் அவன், மிகவும் விபரீத நிலையில் எப்படியோ சிக்கிக்கொண்டதாக அறிந்தான். ஆனால் அதிர்ஷ்டவசமாக அரசர் எப்படிப்பட்ட ஞானம் படைத்தவர் என்பதை அவன் கேள்விப்பட்டிருந்தான். அவன் "மகாராஜா! குற்றம் என்னுடையதல்ல. சுவர் கட்டப்படும் போது உபயோகித்த சுண்ணாம்பு சரியானபடி கலக்கப்படவில்லை. அதனால் சுவர் கட்டடம் திருப்திகரமானதாயில்லை" என்று பதில் இயம்பினான்.

"சுண்ணாம்புக் கலவையைச் செய்தவன் யார்?" என்று கேட்டார் அரசர் அபசகுனமாக. கொத்தனுக்கு ஆறுதலாயிற்று. அவசரமாக அவன் "எனது ஞான ராஜாவே! சுண்ணாம்புக் கலவை செய்தவன் புத்துசிங் காட்பாடி என்பவன்" என்று பதிலளித்தான்.

காவலாளிகளுக்கு விஷயம் புரியலாயிற்று. அடுத்து என்ன நிகழும் என்பதில் கவனம் செலுத்தலானார்கள். ஆகையால் அரசர் அவர்களைப் பார்த்து உத்தரவு போடுவதற்கு முன், அவர்கள் வெளியே போய்விட்டார்கள். குடித்துச் சிறிது போதையில் இருந்த புத்துசிங்கைக் கையும் மெய்யுமாகத் தேடிப் பிடித்துக்கொண்டு வந்தார்கள். குடித்தாலும் சரி குடிக்காவிட்டாலும் சரி அரசர் அவனை

விசாரித்தே ஆக வேண்டும். நீதிமன்றத்துக்கு அவன் இழுத்துக் கொண்டு வரப்பட்டான். சிங் அரசர், மந்திரிகளோடு கை குலுக்க விரும்பினான். அக்கெடுபிடியில் அவன் கை குலுக்க முடியாதபடி காவலாளிகள் தடுத்துவிட்டார்கள். ஏன் அப்படிச் செய்தார்கள் என்பது அவனுக்குப் புரியவில்லை. இறுதியில், ஒரு காவலாளி அவன் தலையில் ஒட்டுத்துணி ஒன்றைப் போட்டான். அப்போது மன்னர் பெருமான் கடுமையான குரலில் "சுண்ணாம்புக் கலவையை ஏன் நன்றாய்ச் செய்யவில்லை?" என்று கேட்டார். புத்துசிங் விழித்தான். 'எந்தக் கலவை?' என்று கேட்டான். மந்திரி பேசத் தொடங்கி, கொத்தனைச் சுட்டிக்காட்டி "அக்கல் கும்பலால் என்ற இக்கொத்தனுக்குச் செய்து கொடுத்த சுண்ணாம்புக் கலவை" என்றான். அந்தக் கொத்தன் பெயரைக் கேட்டதுமே சிங் வியப்படைந்தான். எதையோ நினைத்துக் கொண்டவன் போலத் தோன்றினான். கொத்தனை உற்றுக்கூர்ந்து நோக்கிய பிறகு "ஹொதூர் சர்க்கார்! எனக்கு இவர் இரண்டரை ரூபாய் கொடுக்க வேண்டும். அதை அவர் கேட்டார். நான் கடன் கொடுத்தேன். என்னிடம் வாங்கியதை இன்னும் திருப்பிக் கொடுக்கவில்லை" என்று ஊளையிட்டான்.

அரசர், "முட்டாள், உன் பண விஷயத்தைப் பற்றிப் பேசாதே. சுண்ணாம்புக் கலவையைப் பற்றிச் சொல்லு" என்று கர்ஜித்தார். தான் எங்கு பேச ஆரம்பித்தோமென்பதை புத்துசிங் கண்டு கொண்டவனாக, "எந்தச் சுண்ணாம்புக் கலவை?" என்று கேட்டான்.

நீதிமன்றத்தார் அவனிடம் மேற்படி நிகழ்ச்சி நடந்த தேதி, இடம், காலம், இதர குறிப்புகளுடன் விவரித்தான பிறகு, மூளையில் சிறிது அறிவு தோன்றியவனாகத் தெளிவடைந்து "சர்க்கார்! என் பாட்டியின் பெயர் மீது ஆணை. நான் உங்களைக் கேட்கிறேன். பக்கத்திலிருந்த குழாயிலிருந்து எனக்குத் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தவன் விஷமம் பிடித்தவனாயிருந்ததால் நான் எப்படிச் சுண்ணாம்பைச் சரியானபடி கலந்து கொடுத்திருப்பேன் என்பதைச் சொல்லுங்கள்" என்று கூறினான். "அவன் விளையாடினான்.

தாமதித்தான். எதற்காகவோ எனக்குத் தெரியாது. சரியான நேரத்தில் எனக்குத் தண்ணீர் கொண்டு வந்து கொடுக்கவில்லை ஆனதால், கலவை அதிகத் தண்ணீர் பசையுள்ளதாகவோ தண்ணீர் குறைவுள்ளதாகவோ போயிற்று. கொத்தன் விரும்பியபடி கலவை இல்லை. நான் என்ன செய்யட்டும்" என்று மேலும் பேசினான்.

அரசருக்குச் சினம் பெருகலாயிற்று. விசாரணை நீண்ட நேரமாயிற்று. அரசரது சாப்பாடு வேளையும் போயிற்று. யாரைத் தூக்கிலிடுவது என்பது இன்னும் சிக்கலாகவே இருந்தது. ஒவ்வொருவனும் தன்னளவு உண்மை பேசியவனாகத் தோன்றினான். நீதி வழங்கியாக வேண்டும். தண்ணீர் கொண்டுவந்தவனைத் தேடலானார்கள். அவன் பெயர் மக்குப் பிளாஸ்திரி. அப்பட்டணத்தின் கோடியில் எங்கோ ஒரு மூலையில் அவன் வசித்து வந்தான். சங்கீதப் பிரியன். பட்டிக்காட்டில் தயாரிக்கப்பட்ட ஒரு புல்லாங்குழலை வாசிப்பான். தோற் பையைக் கொண்டு அவன் தன் தோட்டத்தில் செடி கொடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்தான். அப்போது அவன் பிடிபட்டான். தண்ணீர் கொட்டிக் கொண்டிருக்கிற தோற்பையுடன் அப்படியே நீதிமன்றத்தார் முன்வந்து சேர்ந்தான்.

"தூக்கு மேடைக்குக் கொண்டு போங்க்ள்" என்று இரைந்தார் மன்னர் மந்திரி பாராட்டினான். உடனே மன்னர், "ஒரு நிமிஷம் தாமதி. குற்றவாளியை ஒரு கேள்வி கேட்போம். மக்குப் பிளாஸ்திரி! நீ ஏன் விளையாடித் தாமதித்தாய். புத்துசிங் கொத்தனுடைய சுண்ணாம்புக் கலவையைப் பாழாக்கிவிட்டாயே, காரணம்?" என்று கேட்டார். அதற்கு மக்குப்பிளாஸ்திரி, "மகாராஜா! நான் குற்றஞ்சாட்டப்படுபவன் அல்ல. தெருவில் குறுக்காக நடந்துபோய்த் தண்ணீரைக் கொண்டுவர வேண்டிய வேலை அது. அங்ஙனம் தண்ணீரைக் கொண்டுவரும்போது, சாளரச் சாய்ப்பிலே அமர்ந்துகொண்டு ஒரு நாட்டியக்காரி இன்னிசை பாடிக்கொண்டிருந்தாள். இன்னிசையில் எனக்கு விருப்பம் உண்டு. அதை நின்று உற்றுக் கேட்டு வந்தேன். என்

தோற்பையோ ஓட்டையானது. அப்பெண்ணின் பாட்டைக் கேட்டுக்கொண்டிருக்கும் போது தண்ணீரெல்லாம் ஓட்டையின் வழியாகப் போயிற்று. சாளரச் சாய்ப்பிலிருந்து நாட்டியக்காரி பாடியிராவிட்டால் எனது கடமையை ஒழுங்காகவும் திறமையாகவும் செய்திருப்பேன். அதனால் நாட்டியக்காரியைத் தான் கேளுங்கள்" என்று இயம்பினான்.

"விடுதலை செய் இவனை" என்று அரசர் உத்தரவிட்டு, "விலைமாதுவை கூட்டிக் கொண்டுவா" என்று கர்ஜித்தார். தன் அலங்கார அறையில் நாட்டிய அணங்கு கூந்தலை வாரிப் பின்னிக் கொண்டிருந்தாள். அப்போது காவலாளிகள் அவளைக் நீதிமன்றத்துக்கு அழைத்தார்கள்.

"தூர்த்த ஸ்திரீயே! சாளரச் சாய்ப்பிலிருந்து ஏன் பாட்டுப் பாடினாய்?" என்று வினவினார் வேந்தர் பெருமான். அவள் ஒன்றும் தோன்றாதவளாக அஞ்சி நடுங்கியவாறு கேள்விக்குச் சரியான பதில் இன்னது என்று ஊகிக்க முடியாமல் தவித்தாள். அவளுக்குத்க அந்தக் கணமே தூக்கு உத்தரவு போடப்பட்டது. காவலாளிகள் நாட்டிய நங்கையைத் தூக்குமேடைக்கு இட்டுச் சென்றார்கள். நீதிமன்றம் கலைந்தது.

பாவம்! தூக்கு மேடையில் விலைமாது நிறுத்தப்பட்டாள். தூக்குக்கயிறு அவள் தலையில் தாழ்த்தப்பட்டது. துரதிர்ஷ்டப் பெண் அச்சத்தால் பாதி உயிர் இழந்தவள் போலாகிவிட்டாள். ஆனால் அசாதாரமான ஒரு சூழ்நிலை தலை தூக்கியது. பெண் ஒல்லியாய் சதைப்பிடிப்பில்லாமலிருந்தாள். தூக்குக் கயிற்றுச் சுருக்கு மிகப்பெரியதாக இருந்தது. ஒல்லியான தலை, சிறு கழுத்து ஆகிய அவயவங்களின் சுற்றளவுக்கு எத்தனையோ மடங்கு பெரிதாக இருந்தது. வியப்பும் திகிலும் எங்களும் வியாபித்தன. அதிகாரிகள் அனைவரும் தூக்கு உத்தரவை எப்படி நிறைவேற்றுவதென்ற குழப்பத்தில் மூழ்கினார்கள். இப்பிரச்சினை எல்லா உள்ளங்களையும் உலுக்கி ஆட்டியது. வாயுவேக மனோ வேகமாக மந்திரிக்குச் செய்தி அனுப்பிவைத்தார்கள். மந்திரி குளித்துக் கொண்டிருந்தார்.

தூர்க்கித் துணியை அரையில் கட்டிக் கொண்டவாறே இச்செய்தியை மன்னருக்குத் தெரிவித்தான். அப்போது அரசர் சமையல் கூட்டத்திலே ஒரு பணியாரத்தைத் தின்று கொண்டிருந்தார். வலது கையைத் தூக்கி சைகை காட்டியபடி மந்திரிக்கு "பெண்ணின் கழுத்து கயிற்றுச் சுருக்குக்குச் சிறிதாயிருந்தால், 'அச்சுருக்குக்கேற்ற தக்க நபரைக் கண்டுபிடித்து தூக்கிலிடவும். இந்த உத்தரவு என்னுடையதென்று நீர் போய்ச் செல்லும்" என்று கட்டளையிட்டார். உடனே மந்திரி போய்விட்டார்.

அரசி கொழுத்த ஸ்திரீ, பெரிய பற்களும் தடித்த சரீரமும் படைத்தவள். நெய், தித்திப்புப் பண்டங்கள், வெண்ணெய் ஆகியவற்றின் மீது அவளுக்கு அபாரமான பிரியம். அரசர் அரசியைப் பார்த்து, "கண்மணி! என் குடிமக்கள், மேலிருந்து கீழாக, முற்றிலும் வடிகட்டிய முட்டாள்கள்" என்று கூறிவிட்டுச் சாப்பிடலானார். கட்டளை தூக்கு மேடைக்கு எட்டியது. விலைமாதுவை இனிமேல் சாளரச் சாய்ப்பிலிருந்து பாடலாகாதென்று எச்சரித்து விட்டு வீட்டுக்கு ஓடுமாறு கூறி விடுதலை செய்தார்கள்.

தூக்குக் கயிற்றுச் சுருக்குக்கேற்ற ஓர் மனிதனைக் கண்டுபிடிக்க காவலாளிகள் அனுப்பப்பட்டார்கள். அவர்களில் இருவர் தர்மசாலையின் வழியாகப் போய்க் கொண்டிருந்தார்கள். சிஷ்யன் அங்கேதான் வசித்து வருகிறான். அவன் நன்றாகச் சாப்பிட்டுவிட்டு அப்போதுதான் திறந்த திண்ணையில் அமர்ந்து கொண்டு பல்லைக் குச்சியால் குத்திக் கொண்டிருந்தான். இரவுச் சாப்பாட்டிற்கு எதைச் சாப்பிடலாமென்ற சிந்தனையில் ஆழ்ந்திருந்ததன்றி, கொஞ்சம் தூங்கலாமென்ற அலுப்புத்தட்டிக் கொண்டிருந்தது. இந்த நிலையில் காவலாளிகள் இவனைக் கண்டு கொண்டார்கள். தடித்த சரீரமும் பரந்த குறுகிய கழுத்தும் கயிற்றுச் சுருக்குக்கேற்றவாறு அமைந்துள்ளனவென்று பறைசாற்றின. காவலாளிகள் ஆரவாரித்துக்கொண்டு சிஷ்யனை இழுத்துக் கொண்டு போகலானார்கள். அவன் தடுத்தான், வாதாடினான், குய்யோ

முறையோ எனக் கூக்குரலிட்டான்; எல்லாம் வீணாயின. சிஷ்யன் தூக்கு மேடை மீது நிறுத்தப்பட்டான். முற்றிலும் அச்சங் கொண்டவனாகச் சிஷ்யன் தன்னிடம் எதை எதிர்பார்க்கிறதென்று கேட்டான். அங்கிருந்த நீதிபதி "நீர் தூக்கிலிடப்பட வேண்டியவரே" என்று பதில் பகர்ந்தார். சிஷ்யன், "ஏன்? நான் ஒன்றும் செய்யவில்லையே" என்றான். நீதிபதி "ஆனால் அதெல்லாம் நமக்கு எதற்கு? அந்த ஒரு மனிதன் தீங்கடைந்தான்; குற்றவாளியைத் தூக்கிலிட வேண்டியதுதான்" என்றார். அதற்குச் சிஷ்யன், "ஆனால் நான் குற்றவாளி அல்லவே" என, அவர்கள், "அப் படியில்லை யென்றால் அளவுப்பிரகாரம் நீர் வளர்ந்திருக்கிறீர். சுருக்குக்குச் சிறியவளாகப் போய்விட்டாள் அவள். அதற்குச் சரியானபடி நீர் பொருந்தியிருப்பதால், உயிரை விடுங்கள் இந்த மேடையில்" என்றார்கள். அரசாங்க விகடகவி பின்வருமாறு பாடலானார் :-

குற்றம் உண்டோ இல்லையோ
குண்டனே கூக்குர லிடாதே
கற்றார் உற்றார் செத்தார்
கணக்கிலார் அவர்தம் முடன்சேர்
மற்றும் விவாதஞ் செய்யினும்
மன்னவன் கட்டளை மாறுமோ?
முற்றும் அயன்தீர்ப் பென்றே
முடிவுசெய் உயிர்விடக் கடவாய்

நன்கு கொழுத்த சிஷ்யனுடைய பருத்த கழுத்தின் மீது தூக்குக் கயிற்றுச் சுருக்கு போட்டார்கள். அப்போது தான் சிஷ்யனுக்கு தன் குருதேவருடைய கடுமையான எச்சரிக்கை ஞாபகத்திற்கு வந்தது. "ஹே, சிஷ்யா! சாத்தானுடைய சொந்த நகரம் இது. இங்கு இன்பம் விரைவில் உயிருக்கு ஆபத்தான துன்பமாக மாறும். உனது புன்சிரிப்புகள் கொடிய கண்ணீர்த் துளிகளுக்கு இடந் தரும்" என்பது குருதேவரின் எச்சரிக்கை! அகோரமாகச் சிஷ்யன் அழுது கொண்டிருந்தான். பெரும் பீதியினால் அவன் நடுநடுங்கினான். நெற்றியில் வியர்வை குபீரென்று கிளம்பி கழுத்தின் வழியாக வழிந்து கொண்டிருந்தது. வேதனையில் சிக்கிக் கொண்ட சிஷ்யன்,

"ஓ குருதேவரே! என்னைக் காப்பாற்றுங்கள். தங்களுக்கு நான் ஏன் கீழ்ப்படியாமலிருந்தேன்? இருள், அஞ்ஞானம் நிறைந்த இந்த நகரில் நான் நன்றாக உண்டு கொழுத்துப் போனேன். ஆரம்பத்தில் நான் தங்களை எதற்காக அண்டினேன் என்பதை அறவே மறந்துவிட்டேன். உண்மையான சிஷ்யத்துவம் இன்னது என்பதை மறந்தேன். குருவுக்குக் கீழ்ப்படிதலும் தன்னடக்கமுள்ள வாழ்க்கையுமல்லவா உண்மையான சிஷ்யத்துவம் என்பதன் உறுபொருள்! இன்ப நுகர்ச்சியின் கவர்ச்சி என்னை குருதேவரின் இதோபதேசத்தைப் புறக்கணிக்கச் செய்தது. அவருடைய எச்சரிக்கையைக் கவனிக்கவில்லை. துறவு, பிரம்மச்சரியம், தன்னடக்கம் ஆகிய எனது கடமையை மறந்தேன். இந்திரியங்களின் அழைப்புக்கு இணங்கினேன். இன்பத்தில் விருப்பங் கொண்ட எனது உள்ளத்தின் போக்குகளுக்கெல்லாம் இடம் கொடுத்தேன். அமிதமான, அளவு கடந்த வகைகளில் இன்ப வாழ்க்கை நடத்தினேன். சாதனையை அசட்டை பண்ணினேன். கடமையைக் கருதவில்லை. எனது இன்பத்திற்காகவும் சுயேச்சைக்காகவுமே எனது குருதேவரை விட்டுப் பிரிந்தேன். அதனால் வந்த விளைவு இது. குருவை அவமதித்ததன் பலன் என்னைப்பற்றி விட்டது. ஓ, தெய்வமே! நான் என் செய்வேன்! என்று இங்ஙனம் மிகவும் வருத்தமடைந்து புலம்பி அழலானான்.

தூக்குமேடையைச் சுற்றிலும் திடீரென்று ஏதோ சந்தடி ஏற்பட்டது. யாரோ ஒருவர் "நிறுத்து, நிறுத்து" என்று கத்திக் கொண்டே முன்னால் தள்ளிக் கொண்டு வந்தார். தூக்கிலிடுபவன் ஒரு கணம் ஸ்தம்பித்து விட்டான். கம்பீரமான உருவத்துடன் சடை முடியோடு ஒரு சந்நியாசி சிஷ்யனுக்கு அருகில் வந்து நின்றார். குருதேவரேதான்! சகஜ ஞானம் படைத்த வராதலால் வழுக்கி விழுந்த நமது சிஷ்யன் உயிருக்கு ஆபத்தான நிலையில் சிக்கிக் கொண்டிருக்கிறானென்பதை முன்கூட்டியே தெரிந்து கொண்டவராய் தொலைவிலிருந்து அதிவேகமாக அந்த விபத்து விநாடியிலே வந்து சேர்ந்தார். சிஷ்யன் இடைமறித்து, "இல்லை, இல்லை, நிறுத்த வேண்டாம், என்னைத்

தூக்கிலிடுங்கள். சீக்கிரம்" என்று கூறினான். ஆனால் குருதேவர் அதைக் கேட்பதாயில்லை. அக்கயிற்றுச் சுருக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமென வற்புறுத்தினார். தூக்கிலிடுபவனோ ஒன்றுந் தோன்றாமல் திகைத்தான். நீதிபதியைப் பார்த்த வண்ணம், "இதெல்லாம் என்ன?" என்று வினாவினான். ஆனால் குருவும் சிஷ்யனும் ஒவ்வொருவரும் தாமே தூக்கிலிடப்பட வேண்டுமென்றும் மற்றவருக்கு இடம் கொடுக்கலாகாதென்றும் கடுமையான விவாதத்தில் ஈடுபட்டார்கள். இது அசாதாரணமான ஒரு சூழ்நிலை! நீதிபதியின் அறிவுக்கும் எட்டாத சம்பவம் இது! மீண்டும் ஒரு தூதன் கொற்றவனிடம் போய்ச் செய்தி கூறலானான். இது மிகவும் அசாதாரணமானது. ஆனதால் அரசரே அந்த இடத்துக்கு விஜயம் செய்தார்.

"குருவே! ஏன் தாங்கள் தூக்கிலிடப்பட வேண்டுமென்று விரும்புகிறீர்கள்?" என்று மகிபதி கேட்டார். குருமகான் முதலில் பதில் கூற விரும்பவில்லை. மகாராஜா மீண்டும் வற்புறுத்திக் கேட்டதன்மேல், குருதேவர், "எனது மதிப்பிற்குரிய மன்னர் பெருமானே! எனது விருப்பத்திற்கு நல்ல காரணம் ஒன்று இருக்கத்தான் செய்கிறது. ஹிந்து ஜோதிட சாஸ்திரத்தில் நான் ஒரு நிபுணன். இன்று இந்த முகூர்த்தம் மிகவும் மங்களகரமான முகூர்த்தம் என்பதையும், இந்தத் தூக்குமேடை நிறுவப்பட்ட அக்ஷாம்சம் ரேகாம்சம் அனுசரித்து இதே தூக்குக் கயிற்றுச் சுருக்கில் இந்த புண்ணிய முகூர்த்தத்திலே சாகிறவன் இப்பூமண்டலம் முழுதையும் ஆளவல்ல மகா சக்கரவர்த்தியாக அடுத்த பிறப்பில் அவதரிப்பானென்பதையும் சரியான கணிதத்தின்படி நான் அறிந்தேன். மகா சக்கரவர்த்தியாகப் பிறக்க வேண்டுமென்று நான் விரும்புகிறேன். ஆகையால் சரியான நேரத்தில் துரிதமாக இந்த இடத்திற்கு ஓடோடி வந்தேன். நல்லது; காரணத்தை அறிந்தீர்கள். முகூர்த்தம் கழிந்து போகுமுன்னமேயே சீக்கிரமாக என்னைத் தூக்கிலிடுங்கள்" என்று குருதேவர் மன்றாடினார்.

கோமகனுக்குக் கோபம் கொதித்தது. "விபரீதம்! நீயா மகா சக்கரவர்த்தியாக ஆவது! என்ன நெஞ்சழுத்தம்! என்ன துணிச்சல்! சக்கரவர்த்தியாகப் பிறப்பவன் நான் தானே! இப்போதே நான் தூக்கிலிடப்பட வேண்டும்" என்று கூறிக்கொண்டே, ராஜ ராஜேஸ்வர் பிருஹத் மூட பகதூர் தம் கழுத்தை கயிற்றுச் சுருக்கில் மாட்டிக் கொண்டார். பெருங்குழப்பம் ஏற்பட்டது. முடிமன்னராக்கும் முகூர்த்தத்திலே மூட பஹதூர் ராஜா கடைசி மூச்சை விடுத்தார்.

குரு தமது சிஷ்யனின் கையைப் பற்றிக்கொண்டு வேகமாக நடந்து அந்த இருளடர்ந்த நகரை விட்டுப் போய்விட்டார். சிஷ்யன் காப்பாற்றப்பட்டான். குருதேவரின் பாதாரவிந்தங்களில் சிஷ்யன் வேரற்ற மரம் போல விழுந்து சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டுப் பாதங்களைப் பற்றிக் கொண்டான். சிஷ்யன் தான் செய்த தவறை ஒப்புக்கொண்டு, அதற்காக வருந்துவதாகக்கூறி தன்னை மன்னிக்குமாறு குருதேவரை மன்றாடினான். குருதேவர் கைகொடுத்துச் சிஷ்யனைத் தூக்கி நல்லாசிகள் கூறி, 'என்னைப் பின்பற்றுவாயாக" என்று திருவாய் மலர்ந்தருளினார். இன்பங்களும் வளமும் செழிப்பும் இருளும் அஞ்ஞானமும் பொதிந்த அந்த நகரத்தை விட்டு இமயமலையை நோக்கிப் பயணமானார்கள். அங்கு மகான்கள் எளிய தூய தன்னடக்கமுள்ள வாழ்க்கையை நடத்துகிறார்கள். கங்கா தீரத்திலே மகான்கள் வசிக்கும் குக்கிராமத்திலே குருவும் சிஷ்யனும் தங்கினார்கள். அங்கு சிஷ்யன் எளிமை, தன்னடக்கம், குருசேவை, இறை வணக்கம் ஆகிய சாதனைகளை மேற்கொண்டான். குருவின் திருவருளாலே, அச்சிஷ்யனுக்குக் கடவுள் சாக்ஷாத்காரம் கைகூடியது. இப்பிரபஞ்சம் முற்றிலும் பெறுகிற புலன் உணர்ச்சி இன்பங்களையெல்லாம் ஒன்று குவித்தால் ஏற்படக்கூடிய இன்பங்களைக் காட்டிலும் எத்தனையோ கோடி மடங்கு அதிகமான இன்பமே நித்தியானந்தம். சிஷ்யனுக்கு நித்தியானந்த நிலை சித்தித்துவிட்டது. அவன் குருதேவரைப் பின்பற்றி, இருளிலிருந்து ஜோதி மயமாகிய ஒளி நிலைக்கு வந்து விட்டான்.

ஓம் தத் ஸத்.

# 62. ஆண்ட செட்டியார் அறியாமை

ஆண்ட செட்டியார் பிறவியிலேயே பார்வையற்ற வாலிபன். கடற்கரையில் அமர்ந்திருந்தார். அவருடைய நண்பர் சத்குரு கவுண்டர். நயம் கொம்புத்தேன் நிறைந்த புட்டியைக் கொண்டுவந்து கையில் கொடுத்தார். செட்டியாருக்குத் தேன்மீது அத்தியந்த ஆசை. கவுண்டர் பக்கத்தில் இல்லாத வேளையில், தேனை ருசி பார்க்க வேண்டுமென்று ஆசை எழுந்தது. புட்டியைக் கையில் எடுத்து அவசரத்தாலும் அறியாமையாலும் தலைகீழாகப் பிடித்துக் கொண்டார். தேன் மணலில் சொட்டுச் சொட்டாகக் கசிந்து கொண்டிருந்தது. தேன் எங்கிருக்கிறதென்று செட்டியாருக்குத் தெரியாது. கைகளினால் அங்குமிங்குமாய்த் தேடினார். அவர் தமக்கு முன்னால் ஏதோ ஈரமாக இருந்ததை உணர்ந்தார். அதில் ஒரு கை எடுத்து வாயில் போட்டுச் சுவைத்தார். இன்பமாயிருந்தது. இப்படி, கை நிறைய கைநிறைய தேன் கலந்த மணலை வாரி வாரிச் சாப்பிட்டுக் கொண்டிருந்தார். சத்குரு கவுண்டர் திரும்பி வந்து பார்த்தார். உடனே நிறுத்தினார். "ஐயோ, செட்டியாரே! மணலும் புழுதியுமல்லவா சாப்பிட்டீர். நயம் கொம்புத்தேன் உங்கள் கையிலுள்ள புட்டியிலுள்ளது" என்றார். ஆண்ட செட்டியார் அதற்கு நன்றிகூறி, நயம் தேனைச் சுவைத்துப் பருகினார்.

ஓ, மனிதா! ஆத்மானந்தம் என்ற தேன் உனக்குள் கிடக்கிறது. அதை நீ அறியவில்லை. குருட்டுத் தனத்தினால், இந்த ஆத்மானந்தத்தில் ஓர் அணுவுடன் அல்லல்கள் பலவும் கலந்த உலக இன்பங்களாகிய மண்ணையும் புழுதியையுமே நீ புசிக்கின்றாய்! விழித்தெழு! தியானி! ஆத்மானந்தத்தைப் பருகுவாயாக.

ஓம் தத் ஸத்.

## 63. கோடீஸ்வரன் மகன்

பண்டைக் காலத்தில் பல கோடி ரூபாய் படைத்த பெரிய பணக்காரன் ஒருவன் இருந்தான்.. வரையறைக்கும் அடங்காத செல்வம் வளர்ந்திருந்தது. அவனுக்கு ஒரே ஒரு ஆண் குழந்தை உண்டு. கோடீஸ்வரன் தனது சொத்துகள் அனைத்தையும் அச்சிறுவனுக்கு உரிமையாக்கினான். அந்தபெருந்தனத்திற்கு நிரந்தரமான உரிமையாளன் இப்பாலனே ஆனான். ஆகவே, கிட்டத்தட்ட ஒரு வயது அடைந்த அக்குழந்தை பெரிய கோடீஸ்வரனானான். மலை போன்ற செல்வத்திற்கு அதிபதி அச்சிறுவன். அவனுக்கு வேறு எதுவும் தேவை இல்லை. சொத்துகளுக்கெல்லாம் அவனே உரிமையாளன். இது அவனுடைய உண்மையான நிலைமை.

ஆனால், அனுபவபூர்வமாகக் கவனித்தால், அவனுடைய யதார்த்த நிலை என்ன? இதைச் சற்று நாம் கவனிப்போம். பல கோடி ஐஸ்வர்யத்திற்கு அப்பாலன் அதிபதியாயிருப்பது உண்மையெனினும், பல்வேறு சூழ்நிலைகளின் காரணமாக தான் பல கோடி செல்வத்திற்கு அதிபதி என்கிற உண்மையை அவன் அனுபவிக்கக் கூடாத ஒரு நிலையில் இருந்து வருகிறான். முதலாவதாக, குறிப்பிட்ட வயது வராத மைனர் ஆனபடியால், வாரிசு உரிமைச் சட்டங்களின்படி, தனது ஆதிக்கத்தைச் செலுத்தக் கூடாதவனாகிறான். வயது வந்த மேஜர் ஆகிவிட்டால், அப்போதுதான் பெருஞ் செல்வத்திற்கு உரிமையாளனாக ஆகிறான். ஆகையால், அச்சிறுவன் சட்டத்திற்கு அடங்கியவனாக, தக்க பருவமாகிய மேஜர் ஆகும் வரையில் தனது போஷகரின் சொற்படி நடக்க வேண்டியதாகிறது. தனது பிரத்தியேக ஆசைகள் பூர்த்தியாக வேண்டுமென்று கருதினால் அவன் தனது போஷகனைச் சந்தோஷப்படுத்த முயலல் வேண்டும். இரண்டாவதாக 18

வயதோ, 21 வயதோ, அந்நாட்டுச் சட்டப்படி பிரகாரம் மேஜர் ஆகும் வரையில் தகப்பனார் எழுதி வைத்துள்ள சில நிபந்தனைகளைப் பையன் பூர்த்தி செய்ய வேண்டும். நிபந்தனைகளை அனுசரிக்கத் தவறினால் பின் அவன் செல்வத்திற்கு உரிமை பெற இயலாது.

உதாரணமாக, தகப்பனார் உயிலில், பையன் புகைக்கக் கூடாதென்றும், பிராந்தி முதலியவை குடிக்கக் கூடாதென்றும், சூதாட்டம் ஆடக் கூடாதென்றும் அல்லது குடும்பத்தின் பெயரை அவமானப்படுத்தக் கூடிய ஏதாவது தீய காரியத்தைச் செய்யக் கூடாதென்றும் இவ்வாறு சில நிபந்தனைகள் குறிப்பிட்டு, இவை செய்யாத நிலையில் மேஜர் ஆகிய பின் பெருஞ் செல்வத்தைப் பெறலாமென்று எழுதியிருக்கலாம். இதிலிருந்து நாம் என்ன தெரிந்து கொள்கிறோம்? பல கோடி மதிப்புள்ள ஐஸ்வர்யத்திற்கு அந்தப்பையன் உரிமை பெற்றவன் என்பது உண்மையான விஷயம். இதை எவரும் மறுக்க முடியாது; எவராலும் இது மாற்றவொண்ணாதது. சட்டப் படியும் தகப்பனாருடைய உயில் படியும், பையன் நிபந்தனைகளைப் பூர்த்தி செய்யும் வரைக்கும், பெரிய கோடீஸ்வரன் என்ற வெறும் விஷயம் மாத்திரம் எவ்வளவு உண்மையாயும் நிஜமாயும் இருந்த போதிலும், தற்போதைய கட்டுப்பாடுகளினின்று அவனை விடுவிக்கவோ, அல்லது வாழ்க்கையில் காணப்படும் குறைகளைப் போக்கிச் சுகிக்கவோ இடந்தராது. அதிருப்தியென்பதே இல்லாமல் தன்னிச்சையாக அனுபவிக்கும் நிலைமையைப் பெற விரும்பினால், அவன் பொறுமையுடன் தக்க வயது அடையும் வரை காத்திருந்து, தன் தகப்பனார் உயிலில் குறித்துள்ள நிபந்தனைகளைப் பூர்த்தி செய்யக் கவனம் வேண்டும். அதன் பிறகுதான் இறுதியிலே, செல்வமும், செல்வாக்கும், சுதந்திரமும் நிறைந்த பெரு நிலையை அனுபவிக்கப் பெறலாம்.

ஆனால், இவற்றைச் செய்து முடிப்பதற்கு முன், தான் ஒரு பெரிய கோடீஸ்வரன் என்ற நிலையின் வலிமையின் பேரில் செயலாற்ற முற்பட்டால், வெற்றி காண முடியாதென்பதை

உணருகிறான். பத்தாயிரம் டாலர் பெறுமானமுள்ள ஒரு மோட்டார் வண்டி வாங்குவதற்கு உத்தரவு போட்டால், வியாபாரி வெறுமனே புன்முறுவலிக்கிறானேயன்றி, அவனிடமிருந்து எதுவும் வெளிப்படாது. ஆனால், வாரிசின் சார்பாகப் போஷகர் எதையும் வாங்க இயலும். செல்வத்திற்குப் உரிமைப்பட்டவனாக இருந்த போதிலும் வாரிசுப் பையனால் அதைச் செய்ய முடியாது. உண்மை பார்க்குமிடத்து இது மிகுந்த விசித்திரமான விஷயமல்லவா?

இது போலவே, நீங்கள் உண்மையில் சச்சிதானந்த சொரூபியாயிருந்த போதிலும், நற்பண்புகளை வளர்த்தலும் தீயவைகளை அகற்றலுமாகிய எல்லா நிபந்தனைகளையும் பூர்த்தி செய்யவும், ஏகாக்ரம், தியானம் ஆகிய பூர்வாங்கமான எல்லா பயிற்சிகளையும் மேற்கொள்ளவும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும்.

## 64. மறைந்துள்ள பொக்கிஷம்

கணவனும் மனைவியும் ஒரு சில குழந்தைகளும் கொண்ட எளிய குடும்பம். வயிற்றைக் கழுவுவதற்கு அவர்கள் பட்டபாடு கொஞ்சநஞ்சமல்ல. சந்தை சந்தையாக அலைந்து அவர்கள் பிச்சை எடுத்தார்கள். பரம ஏழைகளானபடியால், பணக்காரர்களின் கையில் பணம் புரளுவதைக் கண்ட மாத்திரத்திலே, இதயங்களில் ஆனந்த எழுச்சி உண்டாகும். கருணை உள்ளம் படைத்தவர்களிடமிருந்து சில்லறைக்காசுகள் பெற்ற பிறகு, சந்தையில் தேவையானவற்றை வாங்கிக் கொண்டு வீட்டுக்குத் திரும்பி களைப்பாறுவார்கள். பலவேளைகளில் பட்டினி கிடந்து தங்கள் விதியை நொந்து அழுவார்கள். கண்ணீருக்கும், புன்சிரிப்புக்கும், சுக துக்கங்களுக்கும், லாப நஷ்டங்களுக்கும், இன்ப துன்பங்களுக்கும் இடையில் அவர்கள் வாழ்க்கை நடைபெற்றது.

ஆனால் உண்மையில், அவர்களுக்குப் பெரியதோர் பொக்கிஷம் ஒன்று உரிமை பாராட்டத்தக்கதாக உள்ளது. அந்தோ! பாவம், முற்றிலும் இது அவர்களுக்குத் தெரியாது. எங்கு அவர்கள் குடிசையோ அங்கு பூமியின் ஆழத்தில் அது புதையுண்டு கிடந்தது. அதன் மேல் இளைப்பாறினார்கள். தூங்கினார்கள். கிடைத்த சிறு அளவு உணவைக் கொண்டு திருப்தியடைந்து மகிழ்ந்தார்கள். துயரமான வாழ்க்கை நடத்தினார்கள் - பொக்கிஷம் இன்ன இடத்திலுள்ளது என்று அறியாமல். பூமியின் அடியில் தோண்டி இருப்பார்களேயானால், பொக்கிஷத்தைக் கண்டெடுத்துத் தங்கள் துன்பத்தைப் போக்கிக் கொண்டிருப்பார்கள்.

இது போலவேதான் ஆன்மாவின் நிலைமையும். அஞ்ஞானத்தின் காரணத்தினால் ஆத்மன் என்ற உத்கிருஷ்டமான ஐஸ்வரியத்தை அறியாதவனாயிருக்கிறான். ஆன்மா ஆனந்தமய கோசத்தின் அடியில் உள்ளது. புலனுணர்வுப் பொருள்களைப் போகித்துச் சம்ஸாரத்தில் திளைத்து அலைகிறான். ஆனந்தமய கோசத்தினின்று ஆனந்தம் உற்பத்தியாகிறது. இதற்கு மூன்று விருத்திகள் உண்டு - பிரிய, மோத, ப்ரமோத ஆகிய மூன்று. ஆசைப்படும் பொருளைக் காணுமிடத்து எழுகின்ற உணர்ச்சிக்குப் பிரியம் என்று பெயர். ஆசைப்படும் பொருளை அடையுமிடத்துத் தோன்றுகிற அதிக உற்சாகத்திற்கு மோத என்று பெயர். ஆசைப்படும் பொருளை அனுபவிக்குமிடத்து உண்டாகின்ற மிகுந்த உற்சாகத்திற்கு ப்ரமோத என்று பெயர். ஆசை பூர்த்தி பெற்றபின் உள்ளத்தின் எழுச்சி தணிகிறது. மனிதனுடைய புத்தி உட்புறமாகத் திரும்பி அவித்தைத் திரையின் வழியாக ஆத்மானந்தத்தைக் காணுகிறது. திரையைக் கிழித்தெறிந்தால், சம்ஸார சந்தையில், மிகுந்த இழிவு, கஷ்டம், துன்பம் ஆகியவற்றோடு கலந்துள்ள புலனுணர்வுச் சிற்றின்பத்தை நாடி அங்குமிங்குமாக அலைகின்ற ஏழைக் குடும்பத்தைப்போல் இருக்கமாட்டான். தினந்தோறும், ஆழ்ந்த தூக்கத்தில் ஜீவன் பொக்கிஷத்தின் அருகிலே சென்று ஆனால், அவித்தைத் திரையின் காரணமாக அதை அடைய முடியாமல் திரும்பும்.

விவேகம், வைராக்கியம் ஆகிய வலிமையோடு, விசாரணை எனும் பாறையைக் கொண்டு ஆன்மாவிற்குள் தோண்டினால், அவன் ஆத்மன் எனும் மறைந்த பொக்கிஷத்தைக் கண்டுபிடித்து, ஆன்ம சாம்ராட் அல்லது ஆன்மராஜா ஆகிறான்.

## 65. தீமையினின்று நீ ஓடிவிட முடியாது

"இடையறாத முயற்சியின் பயனாக பாவி ஒருவன் பரம சாதுவாக மாறலாம். ஆனால் தீமையினின்று நீ ஓடினால், அது அதிகமாக உன்னைப் பற்றிக் கொள்ளும்". ஒரு நாட்டில் ஆடுகளைத் திருடுகிறவர்கள் பெரிய குற்றவாளிகளாகக் கருதப்பட்டு வந்தார்கள். இந்தத்திருட்டுத் தொழிலில் இரண்டு சகோதரர்கள் சிக்கிக் கொண்டார்கள். தண்டனையை நிலைக்கச் செய்யும் பொருட்டு அந்த மலை நாட்டுப் பிரமுகர்கள் இந்த இரண்டு சகோதரர்களின் நெற்றியில் "ஆடு திருடன்" என்பதைச் சுட்டிக்காட்டும் முறையில் "ஆதி" என்று சூட்டு முத்திரை இட்டார்கள். பின்னர் அவர்கள் விடுவிக்கப்பட்டார்கள்.

இரண்டு சகோதரர்களும் பெருத்த அவமானமுற்றுக் கவலைப்பட்டார்கள். அந்தக்கிராமத்தார் எல்லோருக்கும் இவர்கள் ஆடுகளைத் திருடியவர்கள் என்ற கதை தெரிந்துவிட்டது. பொது ஸ்தலங்களில் இவர்கள் போய்க் கொண்டிருந்தால், "ஆதி என்றால் என்ன?" என்று கேட்பதும், "ஆபரணத் திருடன்" என்று சிலர் பதில் கூறுவதும், இல்லை, "ஆடுகளைத் திருடியவர்கள்" என்று விடை சொல்லுவதுமாக குழந்தைகள் இவர்களை கேலி செய்யலானார்கள். "ஆ" என்றால் ஆடுகளை "தி" என்றால் திருடியவர்கள் என்று பொருள் - இவ்வாறு சில பிள்ளைகள் "ஆதி" என்று சூட்டு முத்திரைச் சகோதரர்களைப் பார்த்துக் கைகொட்டி நகைத்தார்கள்.

மூத்தவன் இந்த அவமானத்தைச் சகிக்கமாட்டாதவனாக இவற்றினின்று நான் ஓடிவிடுகிறேன் என்று தீர்மானித்து அந்தகிரமாத்தைவிட்டு வெளியேறினான். காடு, மலை, வனாந்திரங்களில் சஞ்சாரம் பண்ணினான். அந்தோ! எங்கு சென்றாலும் அவன் நெற்றியில் இடப்பட்ட முத்திரையினால் நிம்மதி இம்மியும் கிடைத்தபாடில்லை. "ஆதி என்றால் என்ன?" என்று சிலர் வினவினார்கள். "தங்கள் நெற்றியில் யார் இந்த எழுத்துகளைச் சூடு போட்டார்கள்?" என்றும் பின்னும் கேள்வி எழும். தடுக்கவொண்ணாத இக்கேள்விகளைக் கேலியாக விலக்கிவிடச் சிலகாலம் அவன் முயன்றான். ஆனால், எவ்வளவு காலம் அப்படி இருக்கக் கூடும்? எனவே, அவன் அங்கும் இங்குமாக இடம் விட்டு இடம் மாறினான். நாள்கள் ஏற ஏற, அமைதியின்மை வளர்ந்தது. வாழ்க்கையில் ஏற்பட்ட கசப்பும் ஏமாற்றமும் பெருகவே உயிர் துறந்தான் அவன். வீட்டுச் சௌகரியம் இல்லாமல் அன்புள்ளவர்கள் அழாமல் அநாதையாக அவனுடைய உடல் எங்கோ புதைக்கப்பட்டது.

ஆனால், இளைய சகோதரன் தன் சொந்த கிராமத்திலே தங்கி இருக்கலானான். "எனது குற்றத்தினின்று ஓடிப்போவதால் பயன் இல்லை" என்று நினைத்து உறுதியான நெஞ்சத்துடன் சகித்துக் கொள்ளலானான். கடந்த செயலைப் பற்றிக் கருதாமல் தனது வாழ்க்கையில் புதியதோர் படலத்தைத் துவக்கத் தீர்மானித்தான். அஞ்சாத உற்சாகத்துடன் வாழ்நாளைக் கழித்து வருகையில், யதார்த்தம், நேர்மை ஆகிய உயரிய பண்பாடுகளை வளர்த்தான். அக்கம்பக்கத்தார்களிடையில் யதார்த்தத்திற்கும் நன்மைக்கும் அறிகுறியாக அவன் தன்னை விளக்கிக் கொண்டான். படிப்படியாக அவனைப் பற்றிய புகழ் எங்கணும் பரவலாயிற்று. காலம் என்ற பிரபஞ்ச வைத்தியனால் அவனுடைய "ஆதி" என்ற நெற்றிச்சூட்டு முத்திரை ஆறியது. அவனுடைய பழைய வரலாற்றை மக்கள் காலப்போக்கில் மறந்தார்கள்.

பல ஆண்டுகள் கழிந்தன. அந்தகிராமத்திற்கு ஓர் மஹான் விஜயஞ் செய்தார். நெற்றியில் "ஆதி" என்ற எழுத்துகளைக் கண்டு பக்கத்தில் நின்றவரை விசாரித்தார். "அது ஆதி காலக்கதை! விவரங்கள் சரியாகத் தெரியவில்லை. ஆதியைப்பற்றி நினைப்பவர் இவர். மிக்க உண்மைவாதி, நேர்மையானவர், ஆதிமூலம் என்ற பெயரில் முதற்கூறாக இருக்கலாம் என்று கருதுகிறேன்" என்று கூறினான். வந்த மஹான் இவனை சர்வ வல்லமை படைத்த ஆதிமூலமெனக் கொண்டு வணங்கிப் போற்றினார்.

இடைவிடாத முயற்சியின் மூலம் பாவி ஒருவன் பரம சாதுவாக மாறலாமென்ற நீதி இக்கதையினின்று வெளியாகிறது. தனது செயலின் தவறு அல்லது தீமையினின்று எவனும் ஓடிவிட முடியாது. அது அவனை நிழல் போன்று தொடர்ந்து வருகிறது. தனது இறந்த கால நிகழ்ச்சிகளை நினைக்கும் அளவு ஒருவன் தனது மனச்சாட்சி, பேயால் அடிக்கப்பட்டவன் போன்று கலங்குவதைக் காணுகின்றான். எங்கெங்கு சென்றாலும் ஆங்காங்கு அவனுடைய மனம் ஒட்டிக் குழப்பமடைகிறது.

தவமுனியாகப் பிறக்கிறவர்கள் அரிது. இன்று உள்ள பாவி ஒருவன் நாளைய பரம சாது என்ற கருத்தைச் சித்திரித்துக் காட்டுகிறது இக்கதை. மனப்பூர்வமான உழைப்பினாலும், வெற்றிகாண வேண்டுமெனும் தீர்மானத்தினாலும் மிகுந்த துன்மார்க்கச் சுபாவத்தையும் கூட தெய்வீகத்தன்மை வாய்ந்த சுபாவமாக மாற்றியமைக்கக் கூடும். இரத்தினாகர் என்பவன் வால்மீகியாக மாறிய மாறுதல் இந்த உண்மைக் கருத்தினை விளக்கவல்ல இதிகாச உதாரணம்.

ஆகையால், ஓ ராம்! உன்னுடைய முன்னைய குற்றங்களைப் பற்றித் துக்கப்படாதே. நீ எவ்வளவு கொடியவனாயிருந்த போதிலும், கூசாமல் மனோ உறுதியுடன் உன்னுடைய குறைகளை நிச்சயமாக நீக்கி வெற்றி மேற் கொள்வாய். பின் உன்னைச் சுற்றிலும் உள்ளவர்களுக்கு நீ நற்பண்புக்கும் நீதி ஒழுக்கத்திற்கும் உதாரண புருஷனாகப்

பிரகாசிப்பாய் என்பதில். ஐயமில்லை. உற்சாகங்கொள்! ஓ ராம்! இப்பொழுதிருந்தே உனது சாதனையைத் தொடக்குவாயாக.

## 66. திருவள்ளுவர் மனைவி

ஒரு தட்டு நிறையத் தண்ணீர்! அதைத் தலையின் மீது வைத்து, நாட்டியம், இசை, பல்வேறு ஆடல் பாடல்கள் ஆகியவற்றுடன் புறப்பட்டுச் செல்லும் ஊர்வலம் ஒன்றின் பின்னால் தொடர்ந்து போகுமாறு திருவள்ளுவர் தமது மனைவிக்கு உத்தரவிட்டார். தென்னிந்தியாவில் பிரசித்தி பெற்ற கவிஞர் திலகம் திருவள்ளுவ நாயனார் என்பது உங்களுக்குத் தெரியும். "தட்டிலிருந்து ஒரு துளி நீர் சிந்தினால், உன் தலை கீழே உருளும். ஜாக்கிரதை!" என்பது அவரது ஆக்ஞை. திருச்சினாப்பள்ளியைச் சேர்ந்த ஸ்ரீரங்கம் திருக்கோவிலினின்று இவ்வூர்வலம் புறப்படலாயிற்று. திருவள்ளுவரின் ஆக்ஞைப்படியே மனைவி தண்ணீர் நிறைந்த தட்டுடன் அதனைப் பின் தொடர்ந்தாள். அவளுடைய மனம், பிராணன், முழு இதயம், அவளுடைய சொரூபம் அத்தனையும் முற்றிலும் தண்ணீர்த் தட்டின் மீது பதியலாயின. நான்கு வீதிகள் வழியே அந்த ஊர்வலம் மும்முறை சென்று முடிவில் துவங்கிய இடத்திலேயே முற்றுப் பெற்றது. அப்பத்தினித் தெய்வமோ தண்ணீர்த் தட்டைப் பத்திரமாக, துளி தண்ணீர் சிந்தாதபடி, தலையில் சுமந்து வெற்றிகரமாகத் திரும்பி வந்து சேர்ந்தாள்.

திருவள்ளுவர், தமது பத்தினியைப் பார்த்து "சரஸ்வதி தேவியே! ஊர்வலத்திலே நிகழ்ந்த பாண்டு வாத்திய இசையையும், சங்கீத ஒலியையும், புல்லாங் குழலோசையையும் நீ கேட்டாயா?" என வினவினார். அதற்கு அம்மையார் "இல்லை, பிராணநாதா" என்றாள். "வாண வேடிக்கைகளைக் காணவில்லையா?" என்ற கேள்வி எழுந்தது. அதற்கும் எதிர்மறையில் விடை கொடுத்தாள்.

"அப்படியானால், உன் மனமெல்லாம் எங்கிருந்தது?" என்று அவர் கேட்டார்."பிராணநாயகரே! என் மனமெல்லாம் தண்ணீர்த் தட்டின் மீதே லயித்திருந்தது. எனக்கு எதுவுமே தெரியாது. எதையும் நான் கேட்கவில்லை. எதையும் நான் பார்க்கவில்லை. எதையும் ஞாபகத்திலிருத்திக்கொள்ளவும் கிடையாது. எனக்கு ஒரே ஏகாக்ரமான எண்ணம் - தண்ணீர்த் தட்டைப் பற்றிய எண்ணமே தவிர மற்றொன்றுமில்லை" என்று பணிவன்புடன் பகர்ந்தாள்.

"கண்மணி சரஸ்வதி! இதோ, உற்றுக்கேள். தியானத்தின் போதுங்கூட இதே நிலையில் மனம் இருத்தல் வேண்டும். ஒரே நினைவு ஏகாக்ரம் என்பது. இருமைப்படாத திறமை ஒருமைப்பட்டு நிற்றல் வேண்டும் - யாவையும் இறைவன்பால் லயிக்கச் செய்தல் வேண்டும். பிறகுதான் ஆண்டவனைத் தரிசிக்கலாம். ஆண்டவனிடத்திலே நீ வாசம் செய்வாய்" என்று உபதேசித்தார்.

## 67. நெறி பிறழாத நேர்மை!

ஒவ்வொருவனுக்கும் வாழ்க்கையானது இடைவிடாமல் மதிப்பிடத் தக்க நீதிப் பாடங்களை வழங்கிக் கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு க்ஷணந்தோறும் போதனை கொடுக்கப்படுகிறது. ஆனால், அப்பாடங்களை அந்தக் கணமே மறந்துவிடும்படியான அவ்வளவு அஜாக்கிரதையாய் இருக்கிறாய். ஆயினும், பிரகிருதித் தாய் வாழ்க்கை அனுபவம் என்ற வடிவத்திலே மீண்டும் மீண்டும் புதிய பாடங்களைப் புகட்டிக் கொண்டே வருகிறாள். அந்தத்தாய் சலிப்படையாத ஆசிரியை முன்னைய அனுபவங்களை மட்டும் நீ முன்னெச்சரிக்கையுடன் ஞாபகத்தில் வைத்துக் கொள்வாயானால், ஒருபோதும் பிழை செய்யமாட்டாய் அல்லது நன்னெறியை விட்டு வழி தப்ப மாட்டாய். இப்பாடங்களை பொக்கிஷமாகக் கொண்டு, முந்தைய அனுபவங்களை ஞாபகப்படுத்திக் கொள்வாயானால், பின்

உனக்கு ஞானம் பிறக்கும். அறிவிலும் பெருமையிலும் பாராட்டு பெறுவதற்குரிய நிலையில் இருப்பாய்.

தாரா என்பவன் பாரசீகத் தேசத்தில் வளர்ந்த எளிய இடைப் பையன். தாழ்ந்த வகுப்பில் பிறந்தவன், பரம ஏழை. ஆனால் அவன் மிகுந்த அறிவு படைத்தவன். மக்கள் இயல்பைப் பற்றியும் சகல விஷயங்களின் தார்தம்மியத்தைப் பற்றியும் நுண்ணறிவு பெற்ற கண்ணியன்; பாரசீகத் தேசத்து மன்னன் தாராவினுடைய புத்திசாதுரியத்தைப் பற்றிக் கேள்விப்பட்டு, அரசியல் துறையில் அவனை அலுவலராக ஏற்றுக் கொண்டார். தாரா படிப்படியாக வேலையில் உயர்வு பெற்று, இறுதியில் தலைமை அமைச்சர் பதவியையும் வகிக்கலானார். இது இதர பிரமுகர்களைப் பொறாமையடையச் செய்தது. அவ்வளவு உயர்தரமான பதவியினின்று விழச் செய்து கீழே கொணருவதற்கும் தாரா மீது அவமானமும் பழியும், சுமத்துவதற்கும் தக்கதொரு சந்தர்ப்பத்தை அவர்கள் மிக்க ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

அரசருக்குத் தாராவின் மீது அபாரமான நம்பிக்கை வளர்ந்தது. அவர் தமது நாட்டில் முக்கியமானதொரு மாகாணத்திற்குத் தாராவைப் பிரதான அதிகாரியாக நியமித்து அங்கே அனுப்பி வைத்தார். தாரா அந்தமாகாணத்திற்கு மாற்றப்பட்டதும், பொறாமையும் பகைமையும் பூண்ட பிரமுகர்கள் ஒன்றுகூடி தாராவைப் பற்றி அருவருக்கத் தக்க பல புகார்களை வழங்கினார்கள். தாராவை லஞ்சம் வாங்கும் வஞ்சகன் என்று வைது குற்றஞ் சாட்டினார்கள். குடிகளின் வரிப் பணத்தையெல்லாம் கள்ளத்தனமாக அபகரித்து ஒரு பெட்டியில் பத்திரமாகக் குவித்து வைக்கிறான். அவ்வழியில் பெரிய தனவானாகிவிட்டான். அது மட்டுமல்லாமல், அவன் எங்கு செல்லுகிறானோ அங்கு ஒட்டகத்தின் மீது இந்தப்பெட்டி தொடர்ந்து போகும். கூடாரத்தில் இரவு வேளையில் அதிமர்மமாகத் திறந்து பார்ப்பான் பெட்டியை. இப்பெட்டியை விட்டு ஒருபோதும் பிரிந்ததே கிடையாது. எப்போதுமே

பெட்டியை பகிரங்கமாகத் திறந்ததே இல்லை. இம் மாதிரியாக பலமான குற்றஞ்சாட்டுக்கு ஆளானான் தாரா.

பெருந்தன்மையான அரசர் பெருமான் தாராவைப் போற்றினார். குற்றத்தைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. பொறாமை கொண்ட பிரமுகர்கள் தாராவை சோதித்துக் குற்றத்தைப் பகிரங்கப்படுத்துமாறு வற்புறுத்தலானார்கள். இதற்கு இராஜா இறுதியில் இசைந்தார். ஒருநாள் இரவில் அரசர் திடீரென்று தாராவின் கூடாரத்திற்கு விஜயம் செய்து, "தாரா! நம்பிக்கைக்குப் பாத்திரமான நண்பா! அதோ அந்தப்பெட்டியைத் திறந்து காட்டு. அதில் என்ன இருக்கிறதோ என்ற பேராவலால் துடிக்கிறேன்" என்று கூறினார். வெறுப்பாயிருந்தாலும்கூட தாரா அரசர் ஆக்ஞையை மீறவில்லை. அரசர் தம் பரிவாரங்களுடன் போயிருந்தார். எல்லோரும் பார்க்கும்படியாகப் பகிரங்கமாக மெதுவாக பெட்டியைத் திறந்து காட்டினான். என்ன ஆச்சரியம்! கிழிந்து போய்த் தூசி படிந்து செங்கல் மங்கலான நிறமடைந்ததோர் இடைப் பையனுடைய எளிய பழைய துணி வியப்படையும் மன்னர்பிரானின் கண்களுக்குக் காட்சியளித்தது. இதைத் தவிர அப்பெட்டியில் வேறு எதுவுமே காணப்படவில்லை. தங்கமோ, ரத்தினமோ, வெள்ளியோ, பித்தளையோ, செப்புக்காசு ஒன்றோ இல்லை. திகைப்பும் வியப்பும் அடைந்து பிரமித்துப் போன வேந்தர் பேசாமல் நின்றுகொண்டிருந்த தாராவை வினவும் கண்களால் பார்த்தார். "மண்ணுலகம் போற்றும் மன்னரே! இத்தனை ஆண்டுகளாகப் பத்திரமாகக் காவல்புரிந்து வந்ததைத் தாங்கள் இன்று கண்கொண்டு பார்க்கிறீர்கள். தாங்கள் என்னைக் கண்டு அரசு அதிகாரத்திற்குப் பாத்திரனாக்குவதற்கு முன்னர் இந்த இடைப்பையன் துணியைத்தான் இடுப்பில் கட்டித் திரிந்தேன் அந்த நாள்களில். ஆனால், முன்னெச்சரிக்கையில்லா மூடாத்மாக்களுக்கு பதவியும், அதிகாரமும், சுதந்திரமும் அபாயகரமான அம்சங்கள். இவை ஒருவனை விண்ணளவு உயர்த்தினாலும் உயர்த்தும் அல்லது மண்ணளவு விழச் செய்தாலும் விழச் செய்யும். சுபிட்சமும் செழுமையும், மரியாதையும் மதிப்பும் மனிதன் குணத்தையே மாற்றி நெறி

பிறழாத நேர்மையினின்று இழுத்துச் செல்லும். இறைவன் திருவருள் வருகைதந்து செல்வம் தன்னைப் புன்முறுவலுடன் தழுவிய காலத்திற்கு முன்னால், தான் எப்படியிருந்தவன் என்பதை இடையறாது நினைவுபடுத்திக் கொள்பவன் மட்டுமே அபாயத்தினின்று தப்புபவன் ஆகிறான். உண்மையில் அவன் எத்தகையவன் என்பதை இந்த அறிவு மட்டுமே நினைவில் பதிவு பெறச் செய்து, அவனை எளியவனாயும், சத்தியவானாயும், நேர்மையுடையவனாயும் ஆக்குகிறது. ஆகையால், பழைய எனது இந்த கந்தலாடையை முன்னைய வாழ்க்கையை நினைவூட்டும் பொருட்டு வைத்துக் கொண்டிருக்கிறேன். ஒவ்வொரு இரவிலும் இதை உற்றுப் பார்ப்பேன்; இன்றேல் தற்காலத்திய பதவியும் அதிகாரமும் நிறைந்ததோர் வெறிமயக்கத்தினால் இதை மறந்துவிடுவேன். இது என்னை எப்போதும் எளியவனாயும், சத்தியவானாயும், பணிவடக்கமுள்ளவனாயும் ஆக்கும் ஆற்றல் படைத்துள்ளது. ஹே! குவலயம் கொண்டாடும் கோமகனே! வெளிப்பார்வைக்கு இந்த தாரா தங்களுடைய கருணா கடாட்சத்தினால் பிரதம அதிகாரியாயும், அரசு அலுவலனாக இருந்தாலும் இன்றளவுகூட இவன் ஏழையாயும் அடக்கமுள்ளவனாயும் எளிமையாயும் லஞ்சத்திற்கு இலக்காகாமலும் இருந்த பழைய இடையனே என்பதை உண்மையில் உரைக்கிறேன். அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகராகிய தெய்வீக யஜமானரிடம் இந்த குணாதிசயங்களுடன் இவன் தொடர்ந்து வாழும்படி அனுக்கிரகிக்குமாறு இடையறாத பிரார்த்தனையைச் செலுத்தி வருகிறேன்" என்று மிகுந்த பணிவும் அடக்கமும் பயபக்தியும் தோன்றக் கூறினான்.

முமுக்ஷுக்களே! உண்மை நாடுவோர்களே! ஞானி தாராவிடமிருந்து இந்த பெரிய பாடத்தைக் கற்றுக் கொள்ளுங்கள். இதயத்துக்குள் இதயமாகத் தாங்கள் உண்மையில் இன்னார் என்பதை எப்போதும் மறக்காதீர்கள். வெளிப்படையாக ஏற்படும் அற்பச் செல்வமாற்றங்கள், உங்களைத் தலை தடுமாறச் செய்து நேர்மையற்ற நெறியிலும் மயக்கத்திலும் வீழ்த்தும்படி செய்யாதிருக்குமாக. தாரா தன்

எளிய கந்தலைப் பொக்கிஷமாகப் போற்றியது போன்று, வாழ்க்கைப் பாடங்களைக் கவனமாக நினைவிலிருத்துங்கள். வாழ்கைப் பாடத்தை தினசரி நினைவு கூர்ந்து அற்பசொற்பப் புறத்தோற்றங்களுக்கு அடிமையாகா வண்ணம் நன்னெறியை கைக்கொள்ளுங்கள். தனது இடையப்பிறவி பற்றிய எண்ணத்திலே இடையறாமல் ஊறிய தாராவைப் போல, எல்லாக் காலமும் உங்களுடைய ஆன்மீக அஸ்திவாரத்தை உள்ளத்தில் கொள்ளுங்கள். நிலையற்ற லௌகிக அபிமானத்தினால் ஏற்படும் சக்திக்குச் சதா ஆளாகாமல் இருப்பீர்களாக.

சர்வ ஜீவாதார விசாரத்துடனும் சொந்த ஆன்மீக மகிமையைப் பற்றிய இடையறா உணர்வோடு இருக்க இறைவன் உங்களை ஆசீர்வதிப்பாராக.

## 68. ஆண்டவன் செயல் அனைத்தும் நன்மைக்கே!

பேரும் புகழும் வாய்ந்தவர் விக்ரம ராஜா. சிங்கத்தை வேட்டையாடுவதில் சிறந்த பலசாலி. அவரது பிரதம மந்திரி அஜித் ஆவார். சமயோசித புத்தி, யதார்த்தம், ராஜவிசுவாசம், அரசுநிர்வாகம், சிவபக்தி ஆகியவற்றில் மேம்பட்டவர். "அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகனின் செயல்கள் அனைத்தும் உயிர்களின் நன்மைக்காகவே இயங்குகின்றன" என்கிற மகத்தான கோட்பாட்டைக் கடைப்பிடித்த உத்தம சீலர். நற்குண நற்செயல்களுடையவர்.

விக்ரம ராஜாவுக்கு இளையவர் **பான்பீர்** என்பவர். எளிய சகோதரனின் போர்வைக்குள் பூதம் மறைந்துள்ளது என்பது பான்பீர் விஷயத்தில் உண்மை; அண்ணனைச் சிம்மாசனத்திலிருந்து நீக்கிவிட்டுத் தான் ஆள வேண்டும் என்பதற்கான இரகசிய நடவடிக்கைகளை மேற்கொண்டிருந்தான். அந்த வகையில் கெட்டிக்காரன்தான்! பான்பீர் செய்த பல சூழ்ச்சிகளுக்குத் தோல்வி ஏற்பட்டதற்குக்

காரணம் பிரதம மந்திரி அஜீத்தின் எச்சரிக்கையும், சமயோசித அறிவும், உண்மை விசுவாசமுமே. பான்பீர் விஷயத்தில் அஜீத்திற்குச் சந்தேகமே; எனினும், போதுமான நிரூபணம் கிடைக்காத வரைக்கும் பான்பீருக்கு எதிர்ப்பாக ஒரு சொல் கூட அஜீத் மூச்சுவிட்டது கிடையாது.

ஒரு நாள் அரசர் தமது விரலைத் துண்டித்துக் கொள்ளும்படியான விபத்திலே சிக்கிவிட்டார். இதை அஜீத்திடம் தெரிவிக்கவே அஜீத் நிரம்பவும் மரியாதையுடன் "ஆண்டவன் செயல் அனைத்தும் நன்மைக்கே. ஒரு விதத்தில் இது நலத்திற்கு ஏற்பட்ட சம்பவம்" என்றார். விரல் துண்டிப்பினால் அப்போது துடி துடித்துக்கொண்டிருந்த விக்ரம ராஜா, அஜீத்ஜின் வார்த்தைகளைத் தவறாகப் பொருள் கொண்டதன்றி, அவற்றை அவமரியாதையாகவும் கருதினார். அதுதான் தக்க சந்தர்ப்பமென்றறிந்த பான்பீர் தமது அண்ணன் செவியில் ஏதேதோ ரகசியமாகச் சொல்லிவிட்டார். விக்ரம ராஜாவுக்குக் கோபமாகிப் பிரதமரைச் சிறையிலிருத்துமாறு சீறினார். அந்தக் கணமே அரசர் கட்டளை நிறைவேறிற்று. அப்போதுகூட அஜீத் புன்சிரிப்புடன் "இதுவும் ஓர் நன்மைக்கே" என்று கூறினார்.

பான்பீர் வகுத்துக் கொடுத்த நிகழ்ச்சி நிரல்படி விக்ரம ராஜா சில நாள்களுக்குப் பிறகு, வேட்டையாடப் புறப்பட்டார். வேட்டையாடும் போது, விக்ரம ராஜா ஒரு சிங்கத்தைத் துரத்திக் கொண்டே ஓடினார். தமது துணைவர்களிடமிருந்து பிரிந்து அடர்ந்த காட்டுக்குள்ளே போய்விட்டார். ஒரு மர நிழலில் துணைவர்களின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தார். மிகுந்த களைப்பு அவரை நித்திராதேவி வசம் ஒப்புவித்தது. பயங்கரமான கர்ஜனை ஒன்று அவரைத் திடுக்கிடும்படி செய்தது. வெகு சமீபத்தில் வெகுண்ட சிங்கமொன்று தம்மை நோக்கி விரைந்து வருவதைக் கண்டார். தப்பியோடுவதற்கு வழி இல்லை. அவர் தமது கண்ணை மூடியவாறு சுவாசத்தை அடக்கிக் கொண்டார். சிங்கம் வந்து அரசரை மோப்பம் பிடிக்கத் தொடங்கியது. துண்டிக்கப்பட்ட விரலை மோந்து பார்த்தவுடனேயே சிங்கம்

திரும்பிவிட்டது. "துண்டிக்கப்பட்ட விரல்தான் இன்று என்னை உயிர் பிழைக்கச் செய்தது" என்று தமக்குள் கூறிக்கொண்டார். அஜித்தைச் சிறையிலிட்டமை பற்றி ஆறாத் துயரமடைந்தார். அவர் எழுந்து வேட்டைக் கூடாரத்தை நோக்கி விரைந்தார்.

பான்பீரும் தமது துணைவர்களும் தம்மைத் தேடிக் கொண்டிருப்பார்களே என்று எதிர்பார்த்ததெல்லாம் வீணாகியது. தட்டுத் தடுமாறிக் கூடாரத்தை அணுகும்போது இரவு வெகு நேரமாயிற்று. தீ மூட்டிக் கொண்டு ஐந்து போர் வீரர்கள் மெதுவாகப் பேசியவாறு சுற்றி உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் பேசும் தோரணையினால் சந்தேகித்தவராக, விக்ரமராஜா அருகிலிருந்த புதருக்குள் ஒளிந்து கொண்டு உற்றுக் கேட்கத் தொடங்கினார். விக்ரமரையும் அஜித்தையும் கொலை புரிந்து தாமே அரசராக முடிசூட்டிக் கொள்ள வேண்டுமென்ற பான்பீரின் தீய சதியாலோசனையின் ரகசியத்தைப் பற்றி அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். அந்தக் கூடாரத்தைச் சுற்றிலும் வேலி போடப்பட்டிருந்தது. அதில் போகாமல், உடனே அரசர் தமது தலைநகரத்தை நோக்கி விரைந்தார். அரண்மனைக்குள் சென்று தமது தளகர்த்தரை அழைத்து, நம்பத்தகுந்த சில வீரர்களுடன் உடனே புறப்பட்டுப் போய் பான்பீரையும் அவரது துணைவர்களையும் கைது செய்து, வேட்டைக் கூடாரத்திலுள்ள வீரர்களைத் தாக்கி முறியடித்துத் திரும்புமாறு கட்டளையிட்டார்.

மறுநாள் காலையில், அஜித் அரசர் சந்நிதானத்தில் கொண்டுவரப்பட்டார். அஜித் வந்தவுடனே, விலங்குகளை நீக்குமாறு கட்டளை பிறந்தது. விக்ரம ராஜா அஜித்தை நன்றியுடனும், களிப்போடும் தழுவிக் கொண்டு தாம் முன் செய்த செயல்களையெல்லாம் மன்னிக்கும்படியும் பிரதமர் பதவியை ஏற்றுக் கொள்ளும்படியும் வேண்டினார். அரசர் விசேஷமாக வெகுமானம் அளித்தார் அஜித்திற்கு. வேட்டை, சிங்கம், சதியாலோசனை ஆகிய கதை முழுவதையும் கூறினார். பிறகு "சிறையிலிருந்தீரே, அது எந்த வகையில்

நன்மை செய்துள்ளது?'' என்று அரசர் கேட்டார். அதற்கு அஜித் சிரித்தவாறு, நீண்ட காலமாக என்னுடைய கிராமத்தில் அழகான பெரிய கோவில் ஒன்றைக் கட்ட வேண்டுமென்று கருதியுள்ளேன். பணம் இல்லாததால் அது முடியாமலிருந்தது. தாங்கள் இப்போது எனக்கு வழங்கியுள்ள விசேஷ வெகுமானம் நீண்டகால எனது ஆவலைப் பூர்த்தி செய்யத் துணை புரிகிறது. ஆண்டவன் எப்போதும் நன்மையே செய்கின்றார்; ஆனால் அவருடைய வழிமுறைகளோ மிகவும் மர்மமானவை, அறிந்து கொள்ள நிரம்பவும் கடினம்'' என்று பதில் கூறினார்.

## 69. சோம்பலை ஒழிப்பாயாக!

சாலையிலே மகாராஜா பிரதாப்சிங் என்பவர் ஒரு குழி தோண்டினார். அதற்குள் தங்கத்தினால் செய்த சலாகை ஒன்றைத் திணித்துப் பெரியதோர் கல்லை வைத்து மூடிவிட்டார். சாலை வழி செல்லுவோர் அத்தனை பெரிய கல்லை வழியில் வைத்தவரை வைது திட்டிச் சபித்துக் கொண்டே சென்றார்களே தவிர, மக்களுக்கு இடைஞ்சலாக வைக்கப்பட்ட அந்தக்கல்லை எடுத்து அப்புறப்படுத்துவோர் யாருமில்லை.

ஒரு நாள், மகாராஜா தமது மந்திரியிடம் அந்தப்பெரிய கல்லுக்குச் சமீபத்தில் ஒரு கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யுமாறு ஏவினார். அரசர் ஆணை நிறைவேறியது. அரசர் தமது ஏவலாளனைக் கல்லை அப்புறப்படுத்துமாறு ஏவினார். எல்லோரும் தங்கச் சலாகையைப் பார்த்து வியப்படைந்தார்கள். ''இந்த உலகத்தில் எல்லோரும் சோம்பேறியாயிருக்கிறார்கள். கல்லை எடுத்து அப்புறப்படுத்தக்கூட அவர்கள் எண்ணிப் பார்த்ததில்லை. பிறரை வைது சபிக்கிறார்கள். எல்லாச் சிதைவு அல்லது அழிவுக்குக் காரணம் சோம்பலே தான். தைரியவானாக எவனாதிருந்தால், அவனுக்குத் தங்கச் சலாகை கிடைத்திருக்கும்'' என்று பிரசாரம் பண்ணினார். சோம்பலை விட்டொழிப்பாயாக. எப்போதும்

எச்சரிக்கையுடனும், புத்திசாலியாயும் இருப்பாயாக. உன்னுடைய ஒவ்வொரு முயற்சியிலும் வெற்றி பெறுவாய். சோம்பேறிக்கு அல்ல யோகநெறி!

## 70. ஒரே இரவிலே நீண்ட தாடி!

வாதுமையினால் தயாரிக்கும் பானத்தைக் குடித்துப் பழகியவன் ராம் என்பவன். அவன் ஒரு கடைக்குப்போய் வாதுமை பருப்பை எட்டணாவுக்குக் கேட்டான். அப்போது இரவு பத்து மணி இருக்கும். ஒரு ரூபாயைக் கொடுத்தான். கடைக்காரன் ராமைப் பார்த்து, "ஐயா, நான் கடையை மூடப் போகிறேன் நாளை வாருங்கள்" என்று கூறினான்.

" இல்லை வாதுமைப் பருப்பு அவசியம் வேண்டும்" என்று கேட்க, கடைக்காரன் எட்டணாவுக்கு வாதுமைப் பருப்பைக் கொடுத்தான். "சில்லறை இல்லை, நாளைக்குத் தருகிறேன்" என்றான் கடைக்காரன். ராம் வாதுமைப் பருப்பை எடுத்துக்கொண்டு திரும்பும்போது, கடையின் அடையாளத்தைத் தெரிந்து கொள்வதற்காகச் சுற்றுமுற்றும் உற்றுப் பார்த்தான். கடைக்கு முன்னால் ஓர் எருது இருந்தது. அதை அடையாளமாக வைத்துக் கொண்டான்.

மறுநாள் காலையில், அவன் கடைக்குப் போனான். ஓர் தையற்காரன் கடைக்கு முன்னால் அதே எருது இருந்தது. தையற் கடைக்குள் போய் எட்டணாவை திருப்பிக் கொடுக்கும்படி கேட்டான். அவன் "ஐயா! உங்களிடத்தில் எதையும் கொடுக்கவும் இல்லை, வாங்கவும் இல்லை" என்று மொழிந்தான். அதற்கு ராம் "கலிகாலம் இது! தாங்கள் பொய் சொல்லுகிறீர்கள். ஆனால் எனக்குத் தரவேண்டிய எட்டணா பாக்கிக்காக இவ்வளவு நீளமான தாடியை எப்படி ஒரே இரவில் வளரவிட்டீர்கள்" என்று கேட்டான்.

## 71. மாயை நாய் குரைக்கிறது

கிருஷ்ணன் பெரிய பணக்காரன். ராமன் அவனுடைய நண்பன். கிருஷ்ணனுக்குப் பல பங்களாக்கள் உண்டு. கிருஷ்ணனுடைய பங்களாவுக்குப் போக விரும்பினான் ராமன். கிருஷ்ணா கிருஷ்ணா என்று உரக்கக் கூப்பிட்டான். கிருஷ்ணன் தனது நண்பன் ராமன் தன்னைப் பார்க்கும் பொருட்டு அங்கு வந்திருக்கிறானென்று கருதினான். நாயைப் பார்த்து "அமைதியாய் இரு" என்று கூறி அதை அடக்கினான். ராமன் பங்களாவில் புகுந்தான்.

மாயை என்பது கொடியதோர் நாய். அது குரைக்கிறது. இறைவனை அணுகுவதற்கு அது யாவரையும் விடுவதில்லை. ஆனால் இறைவனிடம் பூரண சரணாகதி செய்தால், மாயை எதுவும் செய்யச் சக்தியற்றுவிடும். இறைவனுடைய சாம்ராஜ்யத்தில் பிரவேசிக்க அனுமதிக்கும். ஆகையால் இறைவன் "தெய்வீகம் பொருந்திய எனது இந்த மாயையானது குணங்களால் ஆக்கப்பட்டது. துளைப்பதற்கு இது மிகவும் கடினம். என்னிடம் பூரண சரணாகதி அடைந்தவர்கள் இந்த மாயையைக் கடக்கலாம்" என்று முழங்கியுள்ளார்.

## 72. சாதுவும் பிரபுவும்

ஸாது ஒருவன் ஓர் பிரபுவை நாடி ஹரித்துவாரத்திற்குப் (டிக்கட்) பயணச் சீட்டைக் கேட்டான். அவனுடைய குணத்தைச் சோதிக்கத்தான். இவ்வாறு சாது கேட்டான். அதோடு, நீதிப்பாடத்தைப் போதிக்கவும் விரும்பினான். பிரபு அதைக் கேட்டதும் "உங்களுக்கு ஓர் பயணச் சீட்டு வாங்கித் தரமாட்டேன். எல்லா சாதுக்களும் தங்களுக்குக் கிடைக்கும் பயணச் சீட்டுகளை விற்றுவிடுகிறார்கள்" என்று கூறினார். பிறகு, சாது பிரபுவின் வீட்டிற்கு முன்னால் அமர்ந்து, உண்ணாவிரதத்தை அனுஷ்டிக்கலானான். பிரபுவினுடைய

நண்பர்கள் "பிரபுவே, மூன்றாவது வகுப்புப் பயணச் சீட்டை வாங்கிக் கொடுத்துவிடுங்கள்" என்று வற்புறுத்தவே, பிரபுவும் அப்படியே வாங்கிக் கொடுக்க இசைந்தார்.

"இப்போது எனக்கு இண்டர் வகுப்புப் பயணச் சீட்டைத்தான் கொடுக்க வேண்டும்" என்று சாது கூறினான். சாதுவை அங்கிருந்தவர்கள் அனைவரும் கண்டனம் செய்யலானார்கள். "சாதுவைப் பாருங்கள், இவருக்கு இண்டர் வகுப்பு டிக்கட் வேண்டுமாம்" என்று கேலி செய்து சிரிக்கலானார்கள். சாதுவோ மௌனமாக உபவாசத்தை அனுஷ்டிக்கலானான். நண்பர்கள் "பிரபு ஐயா, இண்டர் வகுப்பு டிக்கட்டை வாங்கிக் கொடுங்கள்" என்று கூறினார்கள். பிரபு அதற்கு உடன்பட்டார். ஆனால் சாதுவோ "இப்போது இரண்டாவது வகுப்பு டிக்கெட்டைத் தான் ஒப்புக்கொள்வேன்" என்று பதிலியம்பினான். பிரபுவின் நண்பர்கள் சாதுவைக் கண்டபடி வைது திட்டினார்கள். சாதுவோ பேச்சு இல்லாமல் அமைதியாக விரதமிருந்து வந்தான். பிறகு நண்பர்கள் பிரபுவை இரண்டாவது வகுப்பு டிக்கட் வாங்கும்படி வற்புறுத்தினார்கள். பிரபுவும் ஒப்புக் கொண்டார். ஆனால், சாது "இப்போது முதல் வகுப்பு டிக்கெட் கொடுத்தால்தான் ஒப்புக்கொள்வேன்" என்றான். பிரபுவின் நண்பர்கள் சாதுவைக் கடுமையாக அடித்துவிட்டார்கள். அமைதியாக அடிகளை வாங்கிக் கொண்டு உண்ணாவிரதத்தைத் தொடர்ந்து நடத்தினான் சாது.

நண்பர்கள் "ஐயா! முதல் வகுப்பு டிக்கெட்டை வாங்கிக் கொடுத்து விடுங்கள்" என்று சிபாரிசு செய்தார்கள். அவ்வாறே பிரபு முதல் வகுப்புப் பயணச்சீட்டை வாங்கி ஸாதுவுக்குக் கொடுத்தார். சாதுவோ அதை எறிந்துவிட்டு அமைதியாக வெளியே போய்விட்டான். முற்றிலும் நிராசையுடைய நல்ல சாதுக்கள் மண்ணுலகினில் இருக்கிறார்கள் என்பதைப் பிரபுவுக்குப் போதிக்கத்தான் அந்த சாது விரும்பினான்!

- ஓம் தத் ஸத் -

## 73. எல்லாவற்றையும் நம்பாதே!

சாது ஒருவருக்குப் பித்தம் அதிகரிக்க, கறுப்பாக எதையோ வாந்தியெடுத்தார். உடனே ஒரு செய்தி வெளிப்பட்டது - சாது கருங்காக்கை ஒன்றை வாந்தி எடுத்தாரென்று. குடும்பஸ்தர் சாதுவைப் பிச்சைக்கு அழைத்தார். அவரது மனைவி தித்திப்புப் பண்டத்தில் தவறுதலாகச் சர்க்கரைக்குப் பதிலாய் உப்பு போட்டுவிட்டாள். அந்தப்பண்டத்தைச். சாது அமைதியாகச் சாப்பிட்டார். இடையில் அவர் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. உடனே செய்தி ஒன்று கிளம்பியது - உப்பைச் சர்க்கரையாக மாற்றினார் ஒரு சாது என்று. சாது தமது சிஷ்யனை அவித்த பயறு கொண்டு வரச்சொல்லி, "இதை வைத்துக் கொள், இரண்டு மணி நேரம் பொறுத்து, இது லட்டாக மாறியதும் எடுத்துக் கொள்கிறேன்" என்று கூறினார். இரண்டு மணி நேரம் கழிந்ததும் சாது, "ஏ, சிஷ்யனே! இப்போது பசி அதிகரிக்கிறது. லட்டைக் கொண்டு வா" என்று உத்தரவிட்டார். சிஷ்யன், "அது இன்னமும் பயறாகவே இருக்கிறது; லட்டாக மாறவில்லையே" என்று இயம்பினான். சாது, "நான் மிகவும் பசியோடிருக்கிறபடியால், இப்போது பயறு லட்டைக் காட்டிலும் அதிக ருசியுள்ளதாயிருக்கும்" என்றார். செய்தி எல்லா இடங்களுக்கும் பறந்தது - சாது பயறை லட்டாக மாற்றினாரென்று.

உலகம் இத்தகையது. ஒரு சம்பவம் நடந்தால் அது மிகைப்படுத்தியோ மாற்றியமைத்தோ திருகியோ மறுநாள் எல்லாச் செய்தித் தாள்களிலும் பிரசுரிக்கப்படுகிறது. **எல்லாவற்றையும் நம்பாதே!** சிந்தனை செய்க; ஆராய்க; அறிவு செலுத்திப் பார்க்கவும். சம்பவத்தின் உண்மை - சத்தைக் கிரகிக்கவும்.

## 74. பண்டித விஷயப்பிரியா!

பண்டைக் காலத்தில், அவந்தி நகரத்தில், நல்ல படிப்பாளி ஒருவர் வசித்து வந்தார். அவர் ஒரு பெரிய பண்டிதரும்கூட, சாஸ்திரங்களிலும், தர்ஸனங்களிலும், புராணங்களிலும் அவர் மிகவும் தேர்ச்சி பெற்றிருந்தார். சதுர்வேதப் பிராமணர். வேதங்களின் சரியான பொருளை உணர்ந்த ஆராய்ச்சியாளர். பண்டித விஷயப்பிரியா என்பது அவன் பெயர்.

விஷயப்பிரியா பகவானுக்குப் பிரீதியாக யக்ஞம் ஒன்றை நடத்துவதென்று விரும்பினார். பொருளுதவிக்காகப் பிரமுகர்களை நெருங்கினார். ஒவ்வொருவரும் மனமுவந்து பொருள் கொடுத்தார்கள். ராஜாக்களும் ஜமீன்தார்களும் தத்தம் மேற்பார்வையில் யக்ஞத்தை நடத்த அவாவினார்கள். கட்டடங்கள், வேலையாள்கள், பசுக்கள், திரவியம், தானியங்கள், இன்னும் பண்டிதர் விரும்பின எதையும் கொடுக்கப் பலர் முன் வந்தார்கள். ஆனால் அப்படிக் கொடுக்கப்படும் பொருள்களில் ஏதாவது குறை இருப்பதால் பண்டிதருக்குத் திருப்தி ஏற்படவில்லை. விளக்கு வசதி நிறைந்த வீட்டிலே தண்ணீர் வசதி இராது. மற்றொரு வீட்டில் தண்ணீர் வசதி அதிகம், ஆனால் இட வசதி போதாது. எனவே, ஒவ்வொன்றிலும் ஏதேனும் குறை ஒன்று இருந்தே வந்தது. கடைசியில் தாராளமான இடவசதியும் மின்சார விளக்குகளும், தண்ணீர்க் குழாய்களும் சிங்காரத் தோட்டமும் கொண்ட ரமணீயமான தர்மசாலை ஒன்று யக்ஞம் நடத்துவதற்கென நிர்ணயிக்கப்பட்டது. பண்டிதர் இந்தத்தர்மசாலையைப் பெரிதும் விரும்பினார்.

யக்ஞத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் சிறப்பாக நிறைவேறின. பணக்காரர்கள் யாவரும் அந்தமகத்தான கைங்கரியத்தில் முழுமனதுடன் ஈடுபடலானார்கள். பண்டிதர் அங்கே வந்து பார்க்கவே ரேடியோ ஒலிபெருக்கிகள்,

யக்ஞகுண்டம், தண்ணீர்க் குழாய்கள் முதலிய சகல ஏற்பாடுகளையும் கண்டு அப்படியே பிரமித்துப் போனார். அந்த யக்ஞசாலையின் பேரெழில் பண்டிதரைக் கவர்ந்தது. நல்ல முறையில் யக்ஞத்தைத் தொடங்குவதற்குப் பதிலாக பண்டிதர் லாகிரி அடைந்தவராக அவ்விடத்திய சூழ்நிலைகளில் மதிமயங்கிச் சிற்றின்ப சுகங்களில் திளைத்துப் பரவசமடையலானார்.

இங்ஙனம் சில காலம் கழிந்தது. யக்ஞ ஆதரவாளர்கள் யக்ஞசாலையில் என்ன ஏற்பாடுகள் செய்யப்பட்டன வென்பதையும் யக்ஞம் எவ்வாறு நடத்தப்படுகிறதென்பதையும் அறிய அங்கே வந்து பார்வையிட்டார்கள். பண்டிதர் சகலவித சிற்றின்ப போகங்களில் திளைத்து மெய்மறந்திருப்பதைக் கண்டார்கள். அவர் அவ்விடத்திற்கு வந்ததன் நோக்கத்தையும், மக்களிடத்தில் செய்துள்ள யக்ஞத்தைப் பற்றிய வாக்குறுதியையும் அறவே மறந்து போனார். ஆதரவாளர்கள் பண்டிதர் மீது கொண்ட அபிமானத்தால், அவரை உடனடியாகத் துரத்தவில்லை. அவர் அனுபவித்து வந்த ஆடம்பர அம்சங்களை முதலில் துண்டித்தார்கள். ரேடியோ, மின்சார விளக்குகள் ஆகிய ஆடம்பர வசதிகள் குறைக்கப்பட்டன. பிறகு படிப்படியாக இதர சுகபோக அம்சங்களை விலக்கி னார்கள். இறுதியில் அவருக்குக் குறைந்தபட்ச அளவிலே ஆகார, உடை வசதிகள் மட்டும் அனுமதிக்கப்பட்டன.

ஆதரவாளர்களால் புறக்கணிக்கப்படுவதைக் கண்ட பண்டிதர் அதிர்ச்சி அடைந்தார். நோய்வாய்ப்பட்டார். ஒரு நாள் காலையில் மண்ணுலக வாழ்வை நீத்தார். இங்ஙனம் ஆடம்பர பண்டிதர் விஷயப்பிரியாவின் வாழ்வு முற்றுப்பெற்றது.

மகத்தான நீதி கொண்டதோர் உவமைக் கதை இது. பண்டித விஷயப்பிரியா ஜீவாத்மா. தர்மசாலை நிர்ணயிக்கப்படுமுன் பண்டிதர் வேண்டாமெனத் தள்ளிய பல்வேறு வீடுகள், இந்த மானுட சரீரத்திற்கு வருமுன் ஜீவன் எடுத்துக் கொண்ட பல்வேறு ஜன்மங்கள் ஆகும். இங்கே

மானுட சரீரம் தர்மசாலைக்கு ஒப்பிடப்படுகிறது. கடவுள் உணர்வையோ, கடவுள் சாக்ஷாத்காரத்தையோ பெறும் பொருட்டு மேற்கொள்ளும் சாதனையே யக்ஞமாகக் குறிக்கப்பட்டுள்ளது. யக்ஞத்திற்காக ஏற்பாடுகள் செய்தல் என்பது சாஸ்திர ஆராய்ச்சியில் நிபுணத்துவம் வாய்ந்த ஒரு பிராமணனுடைய ஆண் சரீரம் ஆகும்.

ஆத்ம சாக்ஷாத்காரத்திற்கு முயலுவதற்குப் பதிலாக, இந்த சுகபோக சூழ்நிலைகளைப் பயன்படுத்திக் கொண்டு ஜீவன் கதையிலுள்ள பிராமணனைப் போல, ரேடியோ பொருத்தப்பட்ட வீட்டிலே மோட்டார் வண்டி வசதிகளுடன் குழந்தைகள் மழலை பேச அழகிய மனைவிகளிடம் சிற்றின்ப நுகர்ச்சிகளில் திளைத்திருக்கவே முயலுகிறது. அவன் கண்கள் மின்சார விளக்குகளாகவும், காது இனிய இசையை ரசிக்க வசதியான ரேடியோ பெட்டியாகவும் உவமிக்கப்படுகின்றன. இதர பொறிகளால் அனுபவிக்கப் பெறும் போகங்கள் யாவும் ஜீவன் இந்த லோகாயதத் துறையில் ஆசீர்வதிக்கப் பெற்ற இதர சௌகரியங்களாகும்.

யக்ஞ ஆதரவாளர்களால் பிராமணன் அனுபவித்து வந்த வசதிகளும் இன்பங்களும் அகற்றப்படுவதென்பது மூப்பு வந்து மூளுதலைக் குறிக்கிறது. முதலில் காதுகள் பாதிக்கப்படுகின்றன. நன்றாகக் கேட்கமாட்டீர்கள்! பின் பற்கள் விழும். பிறகு கண் பார்வை மங்கும். பின்னர் உண்ட உணவை செரிக்க முடியாத நிலை வந்து எய்துகிறது. பல்வேறு நோய்களுக்குப் பாத்திரமாகிறீர்கள். இறுதியில் கவலைகளும் துயரங்களும் நிறைந்த இதயத்துடன் நீங்கள் கடைசி மூச்சை விடுகிறீர்கள்!

ஓ! மனிதா! விழித்துக் கொள், இப்போதேனும்.

# 75. தரித்திர நாராயணனுடைய பிரார்த்தனை

இந்தப்பூலோகத்தில் தரித்திர நாராயணனைக் காட்டிலும் அதிக ஏழை மனிதன் எவனுமே இல்லை. அவனுக்கு இரண்டு பசுக்களே ஆஸ்தி. இதன் மூலம் கிடைக்கும் வருமானம் தவிர, அவனுக்கு வேறு வகை சம்பாத்தியம் இல்லை. சொத்தும் இல்லை. பெரிய குடும்பம் உண்டு. அந்த பசுக்கள்கூட ஒரு ராத்தல் தவிடு தின்றாலன்றி அவுன்ஸ் பால் கொடுப்பதரிது.

ஒரு நாள் அவனுடைய மகன் தவிட்டுப் பானையைக் கொண்டு வரும்போது வழுக்கிக் கிணற்றிலே விழுந்துவிட்டான். இதனால் தரித்திர நாராயணனுக்கு விரக்தி ஏற்பட்டது. வீட்டை விட்டுப் புறப்பட்டு ரிஷிகேசத்துக்குப் பயணமானான்.

வழியில் ஒரு மரத்தடியில் தியானித்துக் கொண்டிருந்த பெரிய யோகி ஒருவரைச் சந்தித்தான். அவர் முன்னால் போய் வணங்கினான். யோகி தமது கண்களைத் திறந்து தரித்திர நாராயணனைப் பார்த்தார். அவன் தனது சோகக் கதையைச் சொல்லி அழுது தன்னை ஆசீர்வதிக்குமாறு வேண்டினான். யோகி அவனுக்கு குபேர மந்திரத்தை உபதேசித்தார்.

அந்த மந்திரத்தை தரித்திர நாராயணன் ஜபித்தான் குபேரர் அவன் முன் தோன்றினார். "உனக்கு என்ன வேண்டும்? வேண்டியதைக் கேள்" என்றார் குபேரர். அதற்கு தரித்திர நாராயணன், "4 சேர் தவிடு கொடுங்கள், குபேரா!" என்று பிரார்த்தித்தான். குபேரர் அவனுடைய மூடத்தனத்திற்குச் சிரித்துக் கொண்டு தவிடு கொடுத்துவிட்டு அந்தர்த்தானமானார். இவ்விஷயத்தைக் கேட்ட யோகி, "எவ்வளவு பெரிய முட்டாள் நீ! ஐசுவர்ய தேவரே தோன்றியபோது நீ நான்கு சேர் தவிட்டை மட்டும் கேட்டாய்.

இழிவாகிய செல்வத்தையோ லோகாயதப் பொருள்களையோ விரும்பி, மூவுலகத்திற்கும் கர்த்தாவாகிய மூர்த்தியை வழிபடும் பக்தனைப் போல் இருக்கிறாய். ஆம், அது நிஜமாகிவிட்டது உன் விஷயத்தில்" என்றார் யோகி.

## 76. மூன்றாவது மனைவியுடன் பண்டித ராம் சாஸ்திரி

பண்டித ராம் சாஸ்திரி சிறந்த படிப்பாளி. அவர் இன்று கூட கோயம்புத்தூரில் வசித்து வருகிறார். யாவரும் பிரமிக்கும்படியாக உபந்நியாசங்களைச் செய்வார். ஷட்தர்ஸன் சாஸ்திரி அவர். கீதை, உபநிஷதங்கள், பிரம்மசூத்திரங்கள் ஆகிய நூல்களை மனப்பாடம் செய்திருந்தார். ஒருநாள் அவர் புஷ்பாஞ்சலி பாராயணம் செய்தார். கர்மாக்களினாலோ, குழந்தைகளினாலோ, செல்வத்தினாலோ ஒருவன் சிரஞ்சீவித்துவம் அடைய முடியாது. துறவினால் மட்டுமே சிரஞ்சீவித்துவம் அடைய முடியும் என்ற பொருளைக் கொண்ட பகுதியைப் படித்ததும், எல்லா மக்களும் இதயபூர்வமாகச் சிரித்தார்களாம். ஏனெனில், அவர் தெய்வீக வாழ்க்கையை நிஜமாக கடைப்பிடிக்கவில்லை. மூன்றாவது மனைவியுடன் வசித்து வருகிறார். துறவு ஒரு சிறிதுமில்லை. இளம் வயதான மூன்றாம் மனைவி மீது அவர் பற்று வைத்துக் கொண்டு வாழ்க்கை நடத்துகிறார். வெறும் பொருள் விளக்கம் கூறுவதும் பாடம் ஒப்பித்தலும் பயன்தரமாட்டா. எது தேவையென்றால், நிஜமான வாழ்க்கை அனுஷ்டானங்கள் ஆகும். நிஜமான சாதனைகளைக் கைக்கொள்ளுங்கள்-ஆத்ம சாக்ஷாத்காரத்தை அடையலாம்.

- ஓம் தத் ஸத் -

## 77. தைரியமாயிருங்கள்

பிரேம்தேவியும் அவள் குமாரன் ரகுவீரனும் தங்கள் முன்னோர்கள் வீட்டைப் புறக்கணித்து விட்டார்கள்; ஏனெனில் அவளுடைய உறவினர்களின் உயிர்களையெல்லாம் அந்த வீட்டில் தங்கியிருந்த பிசாசு ஒன்று பலி கொண்டுவிட்டது. அவளுடைய பெற்றோர்களும், ஆறு சகோதரர்களும் அந்தப் பிசாசுக்குப் பலியானார்கள். பிறகுதான், அந்த வீட்டைக் காலி செய்து வேறு எங்காவது போய் காலந்தள்ளலாமென்று பிரேம்தேவி எண்ணமிட்டாள்.

சில வருடங்கள் கழிந்தன. ரகுவீரன் இளம் வாலிபனாக வளர்ந்து விட்டான். ஒருநாள் அவன் தன் தாயைப் பார்த்து, "அம்மா! எந்த இடத்தில் நான் பிறந்தது? என் நண்பர்கள் கேட்கிறார்கள். நமது வீட்டைவிட்டு ஓடிவந்து விட்டதாகச் சொல்லுகிறார்கள்; அப்படித்தானா அம்மா?" என்று கேட்டான்.

"மகனே! அது உண்மை" என்றாள் தாய். ரகுவீரன், "அம்மா வீட்டை விட்டு தாங்கள் ஏன் ஓடிவந்து விட்டீர்கள்?" என்று வினவ, தாய், "ரகு! ஒரே மாதத்தில் எட்டுபேர் அந்த வீட்டில் இறந்து போனார்கள். அப்படிப்பட்ட வீட்டில் வசிப்பது நல்லதல்ல, அது பேயடைந்த வீடு" என்றாள்.

"தாயே! மற்றவர்கள் அந்த வீட்டில் இறந்தார்கள் என்றால் எங்களுக்கு என்ன அபாயம் வரும்? வாருங்கள் நமது வீட்டுக்குத் திரும்பிச் செல்வோம்" என்றான் ரகு. மகனின் வற்புறுத்தலினால் பழைய வீட்டுக்கே பிரேம்தேவி திரும்பவும் குடியேறினாள்.

தாய் இதயத்தைவிட்டு அச்சம் அகன்றபாடில்லை. பிசாசுக்கு தனியே உணவு படைத்து வந்தாள். தினந்தோறும் பிசாசுக்குப் படைத்தான பிறகுதான், அவர்கள் புசிப்பார்கள். அதெல்லாம் என்னவென்று தெரிந்து கொள்ள ரகு ஆவல் கொண்டான்.

வாய்ப்பு வந்தது. ஒரு நாள் ரகுவிற்குப் பிரியமான பட்சணங்கள் தயாரித்தாள் தாய். பிசாசுக்குக் கொடுக்கிற பங்கு பட்சணங்களையும் தின்றுவிட வேண்டுமென்று ரகு விரும்பினான். அதற்கு தாய் இசையவில்லை.

"ஏன் அம்மா, அது யாருக்கு?" என்று ரகு கேட்க, தாய் "உன் மாமன்மார்களைப் பலி கொண்ட அந்தப் பிசாசுக்கு" என்றாள்.

"என்ன! உன் அண்ணன் தம்பிகளைக் கொன்ற பிசாசுக்கா உணவு படைப்பது? முட்டாள்தனம், அதை நானே புசிக்கிறேன்" என்று ரகு கூற தாய், "வேண்டாம். நம்மைக்கூட கெடுதல் பண்ணிவிடும், உணவை அதற்குக் கொடுத்துவிடு" என்று புத்திமதி சொன்னாள்.

அன்றைய தினம் பிசாசுக்காகக் கவனித்து வந்தான். உணவைப் புசிக்கப் பிசாசு வந்தது. "ஏ பிசாசே! நீ யார்?" என்று ரகு வினவினான். "வாலிபனே! உன் பாட்டனுடைய மூன்றாவது தாயாதி நான், உன் பாட்டனையும், மாமன்மார்களையும் கொன்றவன் நானே" என்று பிசாசு இயம்பியது.

"ஏன் அப்படிக் கொன்றாய்?" என்று ரகு கேட்க, பிசாசு "அவர் என் சொத்துகளைக் கொள்ளை அடித்து என்னை ஏழையாக்கிச் சாகடித்தார்" என்றது.

"உன் வலிமை என்ன?" என்று ரகு கேட்க, பிசாசு, "நான் அபாரமான சக்தி படைத்தவன். நீ எப்படி மூட்டைப் பூச்சிகளைக் கொல்வாயோ அப்படி உன் மாமன்மார்களையும், முன்னோர்களையும் நான் கொன்றேன். உன் தாயைக்கூட கொன்றிருப்பேன், ஆனால் அவள் தப்பித்துக் கொண்டாள்.

இப்போது அவள் எனக்குப் உணவு படைக்கிறாள். ஆதலால் அவளைக் கெடுதி பண்ணமாட்டேன். தேவர்கள் வாழும் உலகத்திற்கும், பிசாசுகள் வாழும் உலகத்திற்கும் க்ஷணப்பொழுதில் நான் பறந்து போவேன். இது கவனமாய்க் கேள்" என்று தன் பெருமையைக் கூறிக் கொண்டது.

"எனக்கு ஓர் உதவி செய்வாயா? தேவர்கள் உலகத்திற்கு என்னை இட்டுக் கொண்டு போவாயா?"

"இல்லை, அது என்னால் இயலாது"

"அதுசரி, தேவர்களுக்கு ஒரு செய்தியைக் கொண்டு போ"

"அதைச் செய்வேன். அது என்ன?"

"அங்குள்ள தேவரிடம் நான் இந்த பூலோகத்தில் இன்னும் எவ்வளவு காலம் வாழ்வேன் என்று கேள்"

"நிரம்பவும் நல்லது" என்று கூறிக்கொண்டே பிசாசு புறப்பட்டது. மறுநாள், பிசாசு வந்து "ரகுவீர், அறுபதாண்டு வரை வாழ்வாய்" என்ற செய்தியைச் சொல்லியது.

"இன்னொரு சிறிய உதவி, நண்பா! என்னை ஐம்பதில் சாகும்படி செய்ய முடியுமா என்று தேவரைக் கேள். அல்லது அது சாத்தியமில்லை என்றால் நூறு வயது ஜீவிக்கும்படி செய்யட்டுமே!"

"நல்லது. இதற்குப் பதில் கொண்டுவருகிறேன்" என்று பிசாசு கூறிச் சென்றது. மறுநாள் பிசாசு, "உனது விண்ணப்பத்தைத் தேவரிடம் கூறினேன். உனது ஆயுள் காலத்தை ஒரு நாள்கூட நீடிக்கவோ குறைக்கவோ சாத்தியமில்லை என்றார்" என்று பதில் சொல்லிற்று.

பிசாசுக்கு வைக்கப்பட்ட பங்கு பக்ஷணங்களையும் ஏற்கனவே புசித்துவிட்டான் ரகு. இந்த பதிலைத்தான் அவனும் எதிர்பார்த்தது. இப்பதில் சொல்லப்பட்டவுடனே அடுப்பிலிருந்து எரிகிற கொள்ளிக்கட்டை ஒன்றை எடுத்துக்

கொண்டுவந்து பிசாசை அடிக்கலானான். "வீட்டை விட்டு ஓடிப்போ. திரும்பியே வராதே" என்று பிசாசை விரட்டி விரட்டி அடித்தான்.

அழுது கொண்டிருந்த தன் தாயைப் பார்த்து, "அம்மா! இந்தபிசாசு என்னை என்ன செய்யும், அது ஒரு நாள் முன்னதாக என்னைக் கொல்லமாட்டாது. என் பிராரப்தப் பிரமாணத்திற்கும் அதிகமான தீங்கை எனக்கு இழைக்க முடியாது. எல்லா ஆவிகளையும் இந்த வீட்டை விட்டுத் துரத்திவிடுகிறேன். தைரியமாயிருங்கள். பகைவர்களின் கையிலோ, பூச்சி புழுக்களின் மூலமாகவோ, மிருகங்களின் மூலமாகவோ, பிசாசுகளின் கோபத்தினாலோ, தேவர்களின் கோபத்தினாலோகூட நாம் அவதிப்படுவதில்லை; ஆனால் நம்முடைய பூர்வ ஜன்மத்துக் கர்மாவினாலேயே நாம் அவதிப்படுகிறோம். நமது சொந்த ஆன்மாக்களைத் தவிர, வேறு எதனிடமும் நாம் பயப்படத் தேவையில்லை. தைரியத்தைக் கடை பிடியுங்கள். அம்மா! இறைவனைப் போற்றி தெய்வீக வாழ்க்கையை நடத்துவோமாக. எதனிடமிருந்தும் நமக்கு எவ்வித பயமும் வேண்டியதில்லை" என ஆறுதல் கூறினான் ரகுவீர்.

## 78. காய்ச்சல் சிரங்கைச் சந்திக்கிறது

வியாபாரி ஒருவனுக்குக் காய்ச்சல். அவன் ஏழு முறை உண்ணாவிரதம் அனுஷ்டித்தான். காய்ச்சல் அவனைவிட்டது. உழைப்பாளி ஒருவன் இருந்தான். தேகப் பயிற்சி செய்வான். அவனுக்குச் சிரங்கு பரவியது உடலிலே. உலர்ந்த வாழை இலைகளின் சாம்பலைச் சிரங்குக்குப் போட்டுத் நன்றாகத் தேய்த்தான். உடனே சிரங்கு அவனை விட்டுப் போயிற்று.

ஒரு நாள், வியாபாரியை வாட்டிய காய்ச்சல் உழைப்பாளிக்குத் தொந்தரவு தந்த சிரங்கைச் சந்தித்தது. காய்ச்சல், "நீர் யார்" என வினவ, அதற்குச் சிரங்கு, "உழைப்பாளியை விட்ட சிரங்கு நான்" என்று கூறி "நீர்

யார்" என்று கேட்டது. "நான் வியாபாரியை விட்ட காய்ச்சல். நாம் நமது வாசஸ்தலத்தை மாற்றிக் கொள்வோம்" என்றது காய்ச்சல்.

அதன்படி, வியாபாரி உடலில் வந்து நிம்மதியாகத் தங்கியது. வியாபாரி உடம்பெங்கும் எண்ணெய் பூசிக்கொண்டானாதலால், சிரங்கு வசதியாக இருந்து வரலாயிற்று. சிரங்கைச் சொறிவதற்குப் போதுமான அவகாசமும் அவனுக்கு இருந்தது. ஒரு கையால் சொறிந்து கொள்ளவும் மற்றொரு கையால் பேரேடு எழுதவும் முடிந்தது. உழைப்பாளியைப் போல, கரடுமுரடான சாம்பலை உடலில் பூசித் தேய்த்துக் கொள்ளமாட்டான்.

உழைப்பாளியின் உடலில் காய்ச்சல் வந்து தங்கியது. காய்ச்சல் இருந்துங்கூட, அவன் தினந்தோறும் 'பைடக்ஸ்' (Biataks) முதலிய தேகப் பயிற்சிகளைச் செய்தான். தினசரி உடற்பயிற்களினாலே காய்ச்சல் தணியலாயிற்று.

உடம்பை வலிமையாகவும், எதையும் சகித்துக் கொள்ளும்படியாகவும் வைத்துக் கொள்க. சுக வாசத்தையும் சௌகரியத்தையும் சட்டை செய்யாதே. உஷ்ணத்தையும் குளிரையும் எதிர்த்து நிற்கும் கடினமான உடம்பைப் பேணிவளர்ப்பாயாக.

## 79. இ.ஐ.ஆரில் சிவராத்திரி!

எஸ்ஐஆர். (South Indian Railway) போல இ. ஐ. ஆர். (East Indian Railway).

இராமகிருஷ்ணன் சொர்க்க வாசலில் நுழைய முயற்சித்தான். தேவேந்திரன் அவனைத் துரத்திவிட்டு, "நீ மகா பாவி; உனக்குச் சொர்க்கத்தில் அனுமதி கிடையாது. ம்ருத்யு (மரணம்) உலகத்திற்குத் திரும்பிப் போ" என்று விரட்டினார்.

இராமகிருஷ்ணன் தேவேந்திரனைப் பார்த்து, "சொர்க்கத்து மன்னரே! நான் இஐஆரில் பிரயாணம் செய்துள்ளேன். சிவராத்திரி அன்று இரவு முழுவதும் (இ. ஐ. ஆர்.) கிழக்கு இந்தியன் ரயில்வே வண்டியில் இமை கொட்டாமல் கண் விழித்துக் கொண்டு பிரயாணம் செய்தேன். சொர்க்கத்தில் புகுவதற்குத் தயவுசெய்து என்னை அனுமதியுங்கள்" என்று சிவராத்திரி கண்விழிப்பு விரதம் அனுஷ்டித்ததைப் பற்றி கூறினான்.

தேவந்திரனுக்கு மனம் இளகியது. தேவேந்திரர், "ராமகிருஷ்ணா! சிவபெருமான் மீது கொண்ட மனமார்ந்த பக்தியோடு சிவராத்திரியில் கண் விழிக்கவில்லை. வண்டியில் பிரயாணம் செய்தபோது அதிகளவுகூட்டம்; நீ நின்று கொண்டிருந்தாய்; இதர பிரயாணிகள் உன்னை இங்கும் அங்குமாகத் தள்ளிக் கொண்டே இருந்தார்கள். இந்த நிலையில், நீ கண் விழித்துக் கொண்டிராமல் எப்படித் தூங்க முடியும்! பரமேஸ்வரருக்கு உகந்த இரவாகிய சிவராத்திரியன்று கண்விழிப்பு எனும் விரதத்தை அனுஷ்டித்தாய். இது பாராட்டுக்குரிய செயல் எப்படியோ உண்மையிலே. சரி. இப்போது நீ சொர்க்கத்திலே தாராளமாகப் பிரவேசிக்கலாம்" என்று அனுமதித்தார்.

## 80. பொய்ப் பகட்டு மரியாதை

இலட்சுமணபுரி இரயில்வே ஸ்டேஷனில் இரண்டு முஸ்லீம் பிரபுக்கள் காசிக்குப் போகப் பயணச்சீட்டுகளை வாங்கிக் கொண்டு இரயில் வண்டிக்காகக் காத்துக் கொண்டிருந்தார்கள். வண்டி வந்தது. ஸ்ரீ ஹபிஸ் என்பவர் ஸ்ரீ சையத் என்பவரைப் பார்த்து, "ஐயா, முதலில் தாங்கள் வண்டிக்குள் ஏறுங்கள்" என்றார். சையத் ஹபிஸைப் பார்த்து, "பிரபு ஐயா, தாங்கள் முதலில் ஏறுங்கள் வண்டியில்" என்றார். இருவரும் மீண்டும் மீண்டும் இவ்வாறே கூறினார்கள். இரயில். ஊதிக் கொண்டு ஸ்டேஷனை விட்டுப் புறப்பட்டது. யாரும்

வண்டிக்குள் ஏறவில்லை. "பிரபு! முதலில் தாங்கள் ஏறுங்கள்" என்ற உரையாடல் இன்னமும் தொடர்ந்தது.

சமுதாயத்தில் இத்தகைய பகட்டு மரியாதை நிலவுகிறது. இதில் யதார்த்தம் என்கிற நறுமணமே காணப்படவில்லை. பொய்ப் பகட்டு மரியாதைகளை எந்தத் துறையிலேனும் சரி, ஒருங்கே தள்ளுங்கள். கபடமற்ற யதார்த்தக் குணத்தைக் கைப்பிடியுங்கள்.

ஓம் தத் ஸத்

## 81. முனிவர்களுக்கு சேவை செய்து முக்தி பெறுதல்

ஸ்ரீ கிருஷ்ண பகவான் ஓர் இடையனின் வீட்டிற்குள் போனார். அந்த இடையன் வீட்டு வாசலை அடைத்துவிட்டு, ஸ்ரீ கிருஷ்ண பகவானை நோக்கி "மகாப்பிரபு! தாங்கள் இங்கே அகப்பட்டு விட்டீர்கள், என்னை ஆசீர்வதித்து அருளுங்கள். தங்கள் திவ்ய கரம் சிரசில் வைக்கும்படி பிரார்த்திக்கிறேன். எனக்கு மோட்சம் கிடைக்கும், அப்பால்தான் தங்களைப் போகவிடுவேன்" என்று மன்றாடினான். கிருஷ்ண பகவான் எவ்வளவோ முயற்சி செய்தும் கிருஷ்ணன் இடையன் என்ற எண்ணத்தைக் கூட அவன் கொள்ளவில்லை. பகவானுக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. இடையனை ஆசீர்வதித்தருளினார். இடையன் உடனே "பகவானே! அந்தபானையின்மீது கூட தங்கள் கரத்தை வைத்தருளுங்கள்" என்றான். விளையாட்டாக அந்தபானையைத் தொட்டார். அக்கணமே ஒரு மான் அப்பானையிலிருந்து குதித்து வெளிவந்து பகவானின் பாதங்களில் விழுந்தது. அந்த மான் கூட மோட்சம் எய்தியது.

அந்த இடையன் பூர்வ ஜன்மத்தில் ஒரு முனிவராக இருந்தான். அந்த ரிஷியின் உணவை உட்கொண்டு ஒரு மான்

அவரிடம் வாத்சல்யமாய் இருந்து வந்தது. மான் மகரிஷியின்மீது மிகுந்த பக்தி செலுத்தியது. இந்த உலகத்தை விட்டு மகரிஷி பிரியும் போது, அந்த மான் அவரிடம் "ஓ, மகரிஷியே! இச் சம்ஸாரத்தினின்று என்னைக்கூட விடுவித்து முக்தி அளியுங்கள். என்னைத் தாங்கள் நினைவிலிருத்திக்கொண்டால் அவ்வாறு தாங்கள் செய்யக்கூடும். அடுத்த ஜன்மத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய தோழனாக - இடையனாக - பிறக்கப் போகிறீர்கள். தங்கள் வீட்டில் நான் பானையாக வடிவெடுத்துக்கொள்கிறேன். ஸ்ரீ கிருஷ்ண பகவானின் ஆசிகள் எனக்கும் கிடைக்கச் செய்யுங்கள்" என்று பிரார்த்தித்தது. மகரிஷி அதற்கு இணங்கி உறுதிமொழி கொடுத்தார். அடுத்த ஜன்மம் அவர்களுடைய கடைசி ஜன்மமாகப் பரிணமித்தது.

முனிவர்களுக்குச் சேவைபுரியுங்கள், அவர்களிடம் பக்தி செலுத்துங்கள். உங்களுக்கு வேறு யோக்கியதாம்சங்கள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அந்தமகரிஷிகள் முக்தி பெறும்போது உங்களுக்கும் முக்தி கிடைத்துவிடும்.

## 82. இரண்டு எறும்புகளின் கதை

கங்கையும் யமுனையும் சந்திக்கிற பகுதியில் மாபெரும் கும்பமேளா திருவிழா நடைபெற்றது. பல்வேறு இடங்களிலிருந்து மக்கள் அங்கு திரண்டு வந்தனர். அங்கே வெகுகாலத்திற்கு முன் பழகிய இரண்டு நண்பர்கள் கூடிப் பேசிக் குலாவினார்கள். உற்சாகமும் பலமும் சுறுசுறுப்பும் வாய்ந்த பிபிலிகா எனும் எறும்பு வம்சத்தைச் சேர்ந்தவர்கள். திருவிழாக்கள் நடைபெறும் புண்ணிய தலங்களில் இவை தவறாமல் கூடும். ஆன்மீக விஷயங்களை நன்கு அறிவதற்கல்ல - பழைய நண்பர்களைச் சந்தித்துத் தம் நட்பைப் புதுப்பித்துக் கொள்வதற்கும் வயிற்றுணவுக்குமே தவிர வேறல்ல.

"நண்பரே!! ரொம்பவும் இளைத்திருக்கிறீரே! நுரையீரல் நோயால் கஷ்டப்பட்டீரா! அல்லது விந்தியாச்சால் எனும் உப்புமலையிலே பஞ்சம் ஏற்பட்டதா?" என்று குருக்ஷேத்திரச் சர்க்கரைக் குன்றிலிருந்து வந்த குண்டு போல் நன்கு பருத்திருந்த எறும்பு விசாரித்தது.

"ஓ, ஸ்தூலகாயா! வாரும் வாரும். என் இளமைப் பருவத்திய நண்பரல்லவா நீர் ! உம்மைச் சந்திக்க எனக்குச் சந்தோஷம் பொங்குகிறது. நீர் ரொம்பவும் மாறிவிட்டீரே. அடையாளம் கண்டுபிடிக்க அரிதாகிவிட்டதே. ஒவ்வொரு திருவிழாவுக்கும் விடாமல் வந்து போகிறீரா? குருக்ஷேத்திரத்தில் உணவுக் குன்றுகள் குவிந்துள்ளனவா? என்னைப் பொருத்தமட்டில், எனக்கு நோய் எதுவும் இல்லை. விந்தியாவில் பஞ்சமே இல்லை. ஆனால் அங்கு கிடைக்கும் உணவு எங்களைப் பருத்தவர்களாக வளர்க்கும் இயல்பைக் கொண்டதல்ல" என்றது ஜீர்ணகாயா.

"ஓ, ஜீர்ணகாயா! உணவுக்குன்றுகள் இல்லை. ஆனால் அங்குள்ள பூமி உணவாகவே உள்ளது. சிறந்த உணவு எனலாம். போஷாக்கும் வலிமையும் ஊட்டவல்ல சர்க்கரை அது. ஆகையால் நாம் சர்க்கரைக் குன்றில் வாசம் செய்பவர்கள் என்று அழைக்கப்படுகிறோம். நான் மட்டுமல்ல அங்குள்ளவர்கள் அனைவரும் வாட்டசாட்டமாக ஒரே மாதிரியாக வளர்ந்தவர்கள். துரதிர்ஷ்டசாலிகள் - மன்னிக்கவும் - விந்தியா உப்புக் குன்றில் வசிப்பவர்களைப் போல ஊர் ஊராகத் திருவிழா பார்க்க என் பருத்த உடல் இடந்தருமென்று நீர் எப்படிக் கற்பனை செய்து பார்க்கக் கூடும்? நமது வாசஸ்தலமோ சீரும் செழிப்பும் உடையது. எங்கள் சுபிட்சகரமான குடும்பத்துடன் கூடி வாழ்வதற்கு எப்போதும் வரவேற்கத் தயார் - இதர பகுதிகளிலிருந்து வருகிற சகோதரர்களை. ஏன்! நண்பரே! அன்பு கூர்ந்து எங்கள் மலை ஸ்தலத்திற்கு வந்து சில நாள்கள் ஆனந்தமாகக் கழிக்கலாமே என்னோடு" என்றது ஸ்தூலகாயா.

"ஓ! ஸ்தூலகாயா! இந்த வரவேற்புக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். குருக்ஷேத்திர சர்க்கரைக் குன்றுக்கு உன்னுடன் வருவதற்கு நான் மகிழ்ச்சியடைகிறேன்" என்றது ஜீர்ணகாயா.

எனவே அவ்விரு நண்பர்களும் குருக்ஷேத்திரத்தின் சர்க்கரைக் குன்றுக்குப் பயணமானார்கள். "மின்னுவதெல்லாம் பொன்னல்ல" என்ற முதுரையின் கருத்தை நினைவில் இருத்திக் கொண்ட ஜீர்ணகாயா ஆபத்துக் காலத்தில் பயன்படுத்தக்கூடிய தன் வாய்ப் பையிலே கொஞ்சம் உப்பை வைத்துக் கொண்டது. "ஸ்தூலகாயா தனது சர்க்கரைக் குன்றைப் புகழ்ந்து வெறும் சப்தம் போட்டாலும் போட்டிருக்கலாம். யார் கண்டார்கள்!" என்று எண்ணமிட்டது.

ஸ்தூலகாயாவோடு யதேஷ்டமாகச் சர்க்கரை உணவுகளைப் புசித்து வந்தது ஜீர்ணகாயா. சில நாள்கள் கழிந்தன. என்றாலும் ஜீர்ணகாயாவின் உடல் வளர்ச்சியிலோ ஆரோக்கிய விருத்தியிலோ எவ்விதமான தோற்றமும் காணப்படவில்லை. "ஏதாவது தவறு நேர்ந்து விட்டதோ?" என்று ஸ்தூலகாயா வினவிற்று. முன்போலவே சோகப்படலம் மாறாத இயல்புள்ள ஜீர்ணகாயா, "எல்லாம் நன்றாக இருக்கிறது, ஆரோக்கியமாயுள்ளது. ஆனால் இதன் ருசி எனக்குப் பிடித்தமாயில்லை" என்றது. இது ஸ்தூலகாயாவைத் தூக்கிவாரிப் போட்டது."அடடா! சர்க்கரையே இனிமையாக ருசிக்கவில்லையென்றால் பின் எதுதான் இனிமையாக இருக்கும் உமக்கு" என்று வியப்புற்றது.

மீண்டும் விசாரித்ததிலிருந்து ஆபத்துக்காலத்தில் பயன்படுத்தக்கூடிய ஜீர்ணகாயாவின் வாய்ப் பையிலே இன்னமும் உப்பு மிஞ்சியிருந்ததுதான் முக்கிய காரணம் என்று கண்டுபிடிக்கப்பட்டது. ஜீர்ணகாயா அதைத் துப்பிவிட்டு நன்கு வாயைச் சுத்தி செய்துகொள்ள வற்புறுத்தப்பட்டது. அப்படியே வாயை நன்கு சுத்தி செய்து கொண்டது ஜீர்ணகாயா. சர்க்கரை சோப்பு உபயோகிக்கவே

அதன் நாக்கும் உப்புப் பையும் முற்றிலும் தூய்மைப்பட்டன. இங்ஙனம், வாயைக் கொப்பளித்துக் கொண்டு மீண்டும் சுத்தி செய்து கொண்டதால் ஜீர்ணகாயா சர்க்கரையின் இனிமையை ரசிக்க இயன்றது; இரண்டு நாள்களிலே, புதிய எறும்பாகத் தோற்றம் அளிக்கலாயிற்று. விரைவிலே ஜீர்ணகாயா ஸ்தூலகாயாவைப் போல் பருமனாக வளர்ந்துவிட்டது.

ஒரே கோப்பையிலிருந்து இரண்டு பானங்களை அருந்த இயலாது என்று பாடத்தை எல்லோரும் கற்றுக் கொள்ள வேண்டும். உலகாயதம் - ஆன்மீகம் இரண்டும் கைகோர்த்துக் கொண்டு செல்லமாட்டா. ஒன்றைப் பின்பற்ற விரும்பினால், மற்றொன்றை விட்டுவிட வேண்டும். ஏனெனில், அது தான் இயற்கையின் நியதி. ஆன்மீக நெறியில் சில வருஷங்கள் சென்ற பிறகும்கூட எவ்வித முன்னேற்றமும் காணவில்லை யென்று சாதகர்கள் முணுமுணுக்கிறார்கள். அவர்கள் ஏமாற்றமடைந்து மனம் ஒடிந்தவர்களாக விடுகிறார்கள். "என்ன! இத்தனை வருஷங்கள் ஆன பிறகும் எங்களுக்கு மன நிம்மதி கிடையாது; சாதனையில் உற்சாகம் கிடையாது! ஆத்ம சாக்ஷாத்காரம் என்பது எங்கேயும் தென்படமாட்டேனென் கிறது" என்று தான் சாதகர்களில் பெரும்பாலோர் குறை கூறுகிறார்கள்.

காரணம் என்னவாகத்தான் இருக்கக்கூடும்? இப்படிப் பட்ட சாதகர்கள் ஜீர்ணகாயாக்களின் குலத்தைச் சேர்ந்த வர்களாவர். உலகத்தைத் துறந்த பின்னும்கூட அவர்கள் தமக்குள்ளே மறைமுகமான சூக்ஷ்ம ஆசைகளையும், பொறாமை, சுயநலம் அகங்காரம், பற்று முதலியவை போன்ற துராசாரங்களையும் கொண்டவர்களாயிருக்கிறார்கள். ஆனதால், ஆன்மீக முன்னேற்றம் எதுவும் தென்படவில்லை. பல வருடங்களுக்கு முன் தோன்றிய அவர்களுடைய துறவு முறிந்துவிடுகிறது. மனம் சுத்தமாகத் தூய்மை பெற வேண்டும். ஜீர்ணகாயாவைப் போல் மனம் சுத்திகரிக்கப்பட வேண்டும். பிறகுதான், சாதனையில் உண்மையான சுவை அனுபவ மாகும். சுய சோதனை, கீழ்த்தர இயல்புகளை இடைவிடாமல்

கண்காணித்தல் ஆகியவை மூலம் அழுக்குகளின் பல்வேறு படலங்கள் வெளியேற்றப்பட வேண்டும். சுயநலமற்ற சேவை, பக்தி, விசாரணை ஆகியவை மூலம் மனம் சுத்திகரிக்கப்பட வேண்டும்.

நண்பா! குறைகூறுவதில் பயனில்லை. சாதனை எனும் மதுரமான பாலைப் பருக விரும்பினால் உலகாயதம் எனும் கசப்பான வேம்பைத் துப்பித்தான் தீர வேண்டும். ஏனெனில் இதற்கு வேறு வழி கிடையாது.

## 83. உயிருள்ள ஸந்நிதி, உலோகத்துண்டு அல்ல!

புரான்சந்த் தன்னுடைய குருவைப் பார்த்து, "சுவாமி! பயனில்லை. ஆறுமாத நாராயண விக்கிரக வழிபாடு எவ்விதத்திலும் பயன் தரவே கிடையாது. அதிகம் சக்தி வாய்ந்த மந்திரத்தையோ மிகவும் மகிமை வாய்ந்த தேவதையோ தயவுசெய்து எனக்கு அனுக்கிரகித்தருளுங்கள்" என்று அழுகையோடு, எதிர்பார்த்த சாதனைப் பலன் கிட்டாமையால் வருந்தினான்.

அழகிய சிறிய நாராயண விக்கிரகம் ஒன்றைக் கொடுத்து நாராயண மந்திர தீட்சை செய்தார் குருதேவர். புரான் விக்கிரகத்தைத் தினசரி பூஜித்து வழிபட்டான். இதில் தவறவே இல்லை. இடையறாது நாராயண மந்திரத்தை ஜபித்தான். அந்த விக்கிரகம் அவனை அனுக்கிரகித்ததாக எந்தவித அறிகுறியும் தென்படவில்லை. இதற்குக் காரணம் என்ன என்பதை இறைவன் ஒருவனே அறிவான்.

புரான்சந்தைப் பார்த்துப் புன்முறுவலித்த குருதேவர், "நல்லது மகனே! சிவபிரான் சிலை இது. சிவமந்திரமாகிய பஞ்சாக்ஷரத்தை உனக்கு இப்போதே தீட்சை செய்கிறேன். சிவபெருமானைப் பக்தி சிரத்தையோடு வழிபடவும். போல்நாத் என்பது அவர் பெயர். சுலபமாக அவரை வழிபட்டு

அனுக்கிரகம் பெறலாம், " என்று கூறினார். புரான்சந்துக்குப் பரிபூரண சந்தோஷம் ஏற்பட்டது.

பூஜை அறையின் மேடையிலிருந்த தூசி படிந்ததோர் தட்டில் நாராயண விக்கிரகம் ஏறியது. புரான்சந்த் சிவபெருமான் விக்கிரகத்தை வைத்துப் பூஜை செய்தும் பஞ்சாக்ஷர ஜபம் புரிந்தும் பக்தியோடு ஆறுமாத காலத்தைக் கழித்தான்.

"இதில் கூட பயனில்லை. ஒரு துளி பயனும் கிடையாது. சுவாமி! என்னைச் சோதிக்காதீர்கள். விரைவில் அனுக்கிரகிக்கக் கூடிய தேவதையின் விக்கிரகத்தையும் மந்திர தீட்சையையும் அருள்புரியுங்கள்" என்று புரான் தன் குருதேவரிடம் கூறினான்.

குருதேவர் மீண்டும் புன்முறுவல் செய்தார். அறிவு விளக்கத்திற்கான காலம் வந்துவிட்டது. ஆயினும், அனுபவ வாயிலாக அந்தசிஷ்யனே தெரிந்து கொள்ளட்டுமென எண்ணலானார். "நல்லது மகனே! இந்த யுகத்திலே காளிமாதாதான் பிரத்தியட்ச தெய்வம். அவளுடைய உருவத்தை வழிபடுவாயாக. நவார்ண மந்திரத்தைச் ஜபிப்பாயாக. உண்மையில் அவளுடைய திருவருளை வெகு விரைவில் பெறலாம்" என்றார். இத்தடவை புரான்சந்த் எவ்வித சந்தேகமும் கொள்ளவில்லை. பூரண நம்பிக்கை அவனுக்கு இருந்தது.

காளி வழிபாடு தொடங்கியது. தட்டிலே நாராயணனோடு சிவன் கைகுலாவினார். பக்தி சிரத்தையுடன் காளிமாதாவின் விக்கிரகத்தின் முன் தூபமிட்டான். புகைப்படலங்கள் எழுந்தன. புரான் கவனித்தான். அவை மேடைமீதிருந்த தூசி படிந்ததோர் அந்தத் தட்டிற்கும் எட்டின. அவனுக்குக் கோபம் கொதித்தது. சாம்பிராணிக் கூட்டைக் கீழே வைத்தான். எழுந்தான். "நல்லது. அனுக்கிரகம் பண்ணமாட்டாத இச்சிவனுக்கு என்ன வேலை? இத்தூபத்தை உறிஞ்சுவது சரியல்ல. இப்போது காளிமாதாவை வழிபடுகிறேன். வாசனையுள்ள இத்தூபம் சிவனுடைய

நாசித்துவாரங்களில் நுழைய நான் விடமாட்டேன். பஞ்சினால் அவற்றை அடைக்கிறேன்" என்ற வண்ணம், எழுந்து அவ்வாறு செய்யத் தொடங்கினான். துருப்பிடித்துப் போன அச்சிவ விக்கிரகத்தைக் கையில் எடுத்துக் கொண்டு அதன் நாசித் துவாரங்களில் பஞ்சைத் திணிக்கலானான்.

அந்தோ! அந்த விக்கிரகம் மறைந்துவிட்டது. அவனுக்கு முன்னால் கருணையே பொழியும் திருக்கண்களுடன் சிவபிரானே காட்சியளித்தார். புரான் முழங்காலிட்டு வணங்கலானான். "உன் பக்திக்காகப் பெரிதும் மகிழ்ந்தேன் புரான்சந்த்! ஏதாவது வரம் கேள்" என்றார்.

"மகா தேவா! முதலில் எனக்குச் சொல்லுங்கள். நான் ஒரே குழப்பமாயிருக்கிறேன். தங்களை பக்தி சிரத்தையுடன் பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபித்து ஆறுமாதம் வழிபட்டபோது என்னை அனுக்கிரகிக்க மனமிரங்கவில்லையே. ஆனால் தங்கள் விக்கிரகத்தைப் புறக்கணித்து வழிபாட்டை நிறுத்தியவுடன் தாங்கள் திடீரெனத் தரிசனம் கொடுத்துவிட்டீர்களே! இந்த மர்மம் என்ன?" என்று ஆவலோடு கேட்டான்.

"என் குழந்தாய்! இதில் மர்மம் எதுவும் கிடையாது. என்னை வெறும் விக்கிரகமாயும் ஓர் உலோகத் துண்டாயும் பாவித்து இஷ்டம் போல வழிபடவும் எறியவும் செய்தாய். இந்நிலையில் உனக்குத் தரிசனம் எப்படித் தரக்கூடும்? ஆனால் விக்கிரகத்தின் நாசித் துவாரங்களை சாம்பிராணிப் புகை நுழையவிடாமல் பஞ்சை வைத்து அடைக்கத் தொடங்கிய போதும், இங்ஙனம் அந்த விக்கிரகத்தில் எனது உயிருள்ள சந்நிதியை நீ உணர்ந்தாயென எனக்கு வெளிப்படுத்திய போதும், உனக்குத் தரிசனம் கொடுப்பதிலிருந்து என்னைத் தடுத்துக் கொள்ள முடியவில்லை" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

பேச்சற்று ஞான ஒளி அடையப் பெற்றவனாக, புரான் சிவபிரானைத் தலைகுனிந்து வணங்கி, அவருடைய பக்தி வெள்ளத்தில் அமிழ்ந்து பரவசமானான். எந்த வரமும் அவன்

கேட்கவில்லை. அந்த ஈடில்லாத பக்தியில் எல்லாவற்றையும் அவன் கண்டான்.

## 84. ஜீவ சிருஷ்டி மட்டுமே துன்பம் தரும்!

ஸ்ரீ ராமனுடைய புத்திரன் இலண்டன் மாநகரில் படித்து வந்தான். எடின்பரோவிலே, ஸ்ரீ கிருஷ்ணனுடைய புத்திரன் படித்து வந்தான். ராமகிருஷ்ணர்களுடைய புத்திரர்களின் நண்பர் ஒருவர் இந்தியாவுக்கு வந்து ராமனுடைய புத்திரன் உயிரோடிருக்கிறபோது இறந்து விட்டானென்றும் கிருஷ்ணனுடைய புத்திரன் உண்மையில் இறந்துபோயினும் சுகமாயிருக்கிறானென்றும் அவரவர் தகப்பனார்களிடம் கூறினான். ராமன் அகோரமாக அழுது மார்பிலே அடித்துக் கொண்டான். கிருஷ்ணனோ இதயபூர்வமாக மகிழ்ந்தான்.

சிலகாலம் சென்றது. ராமனுடைய புத்திரன் இந்தியாவுக்குத் திரும்பினான். ராமனுடைய மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. தன் புத்திரன் இறந்துவிட்டானென்று கிருஷ்ணனுக்குத் தெரியவந்தது. அவன் கோவென்று அழுது மூர்ச்சையடைந்தான்.

இதெல்லாம் மனோ சிருஷ்டியாகும். மனோ சிருஷ்டி துக்கத்தைக் கொடுக்கிறது. ஈஸ்வர சிருஷ்டியில் துக்கம் என்பதில்லை. அவையெல்லாம் மனிதனுக்கு உதவியாகின்றன. காற்று, வெயில், நெருப்பு முதலியவை மனிதனுக்கு மகிழ்ச்சி தருகின்றன.

## 85. அநேக முட்டாள்கள்

முட்டாள் ஒருவன் வியாபாரி ஒருவனிடம் போய் "ஐயா! எனக்குச் சோறு போடுங்கள், வேலை செய்கிறேன்" என்றான். வியாபாரி அதற்கு உடன்பட்டான். எண்ணெய் வாங்கிக் கொண்டுவரும்படி வியாபாரி அவனை கடைக்கு அனுப்பினான். ஒரு தம்ளரை அவ்வேலைக்காரன் கொண்டு

போனான். கடைக்காரன் தம்ளரில் எண்ணெய்யை ஊற்றினான். இன்னும் கொஞ்சம் இருந்தது. வேலைக்காரன் தம்ளரைத் திருப்பி எஞ்சிய எண்ணெய்யை அதில் ஊற்றும்படி கூறினான்.

வேலைக்காரன் வீட்டுக்குப் போனான். வியாபாரி அவனைப் பார்த்து, "நீ வாங்கிய எண்ணெய் இதுதானா?" என்று கேட்டான். வேலைக்காரன் தம்ளரை மீண்டும் திருப் பினான். அடியில் தங்கியிருந்த கொஞ்ச எண்ணெய்யும் தரையில் சிதறிப் போயிற்று. வேலைக்காரன், "தம்ளரிலே எண்ணெய் ஊற்றச் சொன்னேன். வேறு பாத்திரம் இல்லாமையால், இந்த தம்ளரைத் திருப்பினேன். எஞ்சியுள்ள எண்ணெய்யால் நிரப்பிக் கொள்வதற்கு" என்று பதிலளித்தான்.

அசுரர்களின் அரசனான விரோசனன் இத்தகைய முட்டாள். அவன் தன் உடம்பை பரமாத்மாவாகப் பாவித்தான். யோக வேதாந்த பயிற்சியாளர்களிடையிலேகூட, அனேக முட்டாள்கள் (மூர்க்கானந்தாஸ்) இருக்கிறார்கள்.

## 86. முக்திக்கு முயலுக

ராம்பிரசாத் நெடுங்காலம் பன்னிரண்டு ஆண்டு கடுமையாகத் தவஞ்செய்தான். ராம்பிரசாத் முன் சிவபிரான் தோன்றினார். அவர் "ஓ பக்தனே! உன் தபசைக் கண்டு மகிழ்ந்து மெச்சினேன். ஒரு வரத்தைக் கேள். இப்போதே தருகிறேன்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

ராம்பிரசாத் "மகாதேவா! எனக்கு ஒரு புத்திரனை அருளுங்கள்" என்று பிரார்த்தித்தான். "குழந்தாய்! அப்படியேயாகுக" என்று வரந்தந்து அந்தர்த்தானமானார் சிவபெருமான்.

ராம்பிரசாத் புத்திர பாக்கியம் பெற்றான். ஆனால் குழந்தை பார்வையற்றவனாக இருந்தான். பார்வையற்ற மகன்

பெரிய பையனாக வளரலானான். தினந்தோறும் ராம்பிரசாத் அழுதுகொண்டே இருந்தான். பார்வையற்ற மகன், "அப்பா! ஏன் அழுகிறாய்?" என்று கேட்க, அதற்கு ராம்பிரசாத்: "அன்பு மகனே! ஒரு மகனைப் பெறுவதற்குப் பன்னிரண்டாண்டு தவம் கிடந்தேன். எனக்குக் பார்வையற்ற மகன் கிடைத்தாய்" என்று பதில் அளித்தான். புத்திசாலியான அந்தப்புத்திரன், தங்களைக் காட்டிலும் பெரிய பார்வையற்ற ஒருவன் இருக்கிறானா? சிவபெருமான் தங்களை வரங் கேட்கச் சொன்னபோது, தங்களுக்கு மோட்சம் அளிக்குமாறு வரங்கேட்டிருக்க வேண்டும்" என்றான்.

உலகாயத மக்களின் தன்மை இதுதான். அவர்கள் ஜபம் புரிகிறார்கள், தவம் செய்கிறார்கள் - எல்லாம் உலகாயத இன்பப் பொருள்களைப் பெறும் பொருட்டே. ஒருவர்கூட முக்தியையோ மேலான ஆன்மீகப் பொக்கிஷங்களையோ விரும்பிக் கேட்பதில்லை.

## 87. மூன்று திருடர்களின் கதை

அடர்ந்த காடு. அதன் வழியாகப் பணக்காரப் பிரபு ஒருவன் தன் தலைமேல் பணமூட்டையை சுமந்து கொண்டு செல்ல வேண்டும். அந்தக்காட்டிற்கு பிறகுதான் அவனுடைய வீடு இருந்தது. வழி நெடுக முள்ளும் முரடும் கல்லும் கரடுமாக இருந்தது. அவனுக்கு வழி தவறிப் போயிற்று. மாலைப்பொழுதும் வந்தது. காடு முற்றிலும் இருளில் அமிழ்ந்தது.

பண மூட்டையோடு நடந்து செல்லும் பணக்காரனைப் பார்த்த மூன்று திருடர்கள் தக்க நேரம் அறிந்து அவனைத் தொடர்ந்து பிடித்து பணமூட்டையை பறித்துக் கொண்டு, பிரபுவைக் கையும் காலுமாகக் கட்டி பள்ளத்தில் உருட்டித் தள்ளிவிட்டார்கள். இது மிகவும் பரிதாபத்துக்குரிய நிலை. பின் இரவிலே, ஒருவர்பின் ஒருவராக இரண்டு திருடர்களும் போய்விட்டார்கள்; மூன்றாவது திருடன் அவன்மீது இரக்கம்

கொண்டான். பள்ளத்தில் தள்ளிய அப்பிரபுவை வெளியேற்றிக் கட்டுகளை அவிழ்த்து விடுவித்தான். அதோடு, அவன் குறுக்கு வழியிலே அப்பிரபுவை வழிகாட்டிக் காட்டின் கடைசி எல்லைக்கு வந்தவுடனே, "ஐயா, உங்களுடைய வீட்டுக்கு செல்லுங்கள். இந்தக்காட்டிற்கு இனி வரவே வேண்டாம்" என்று கூறி வணக்கம் செலுத்தி வழி அனுப்பினான். பிரபு தன் நன்றியைத் தெரிவிக்கும் முறையில், "ஐயா! என் மீது இரக்கம் பாராட்டினீர், சங்கிலிக் கட்டுகளை அவிழ்த்துவிட்டீர். மற்றிரண்டு திருடர்களின் கோபத்துக்கும் அஞ்சாமல் அடர்ந்த இக்கானகத்திலே வழியும் காட்டினீர்! உமக்கு இதற்கெல்லாம் நான் என்ன கைமாறு செய்வேன்! என்னுடன் வீட்டுக்கு வாரும். சுகமாக வசிப்பீராக" என்று அன்புடன் கூறினான். அதற்கு அந்தத்திருடன் "ஐயா, நீங்கள் கூறுவது சரி. ஆனால் இது எனக்கும் உங்களுக்கும்கூட அபாயமாக முடியும். என் பெயர் திருடனெனப் பதிவு செய்யப்பட்டுவிட்டது. என்னை காவல்துறையினர் சிறையிலடைத்துப் போடுவார்கள். என்னுடன் தொடர்பு கொண்ட தங்களுக்குக்கூட ஆபத்து நேரலாம். இதற்கு மேல் ஒரு அடி கூட எடுத்து வைக்கமாட்டேன். சென்று வாருங்கள். வணக்கம்" என்றான் அத்திருடன். அவன் திரும்பிக் காட்டுக்குள் போக, பிரபு வீட்டுக்கு வந்து சேர்ந்தான்.

இது போலவே, ஜீவன் என்னும் பிரபு கர்மம் என்னும் பண மூட்டையைச் சுமந்து செல்லுகிறான். அடர்ந்த கானகந்தான் ஸம்ஸாரம். ஸத்வம், ரஜஸ், தமஸ் ஆகிய மூன்று குணங்களே மூன்று திருடர்கள். குணங்களினால் இறுகத் தாக்கப்பட்டவனாக அவன் துக்கப்படுகிறான்; ஜனனம், மரணம் எனும் படுகுழிகளில் விழுந்து பரிதாபகரமாக வேதனைப்படுகிறான். யோகப் பயிற்சியினாலே, ஒன்றன்பின் ஒன்றாக தமஸ், ரஜஸ் வீழ்ந்து விடுகின்றன. இதயம் தூய்மை பெறுகிறது. பேய்த்தனமான குணங்கள் எல்லாம் ஒழிந்து போய், சாந்தம், யதார்த்தம், இரக்கம், தூய்மை உண்மையுடைமை, நேர்மை, உதாரகுணம் முதலிய தெய்வீக இயல்புகள் இடம் பெறுகின்றன. ஸத்வ குணத்தாலே மனம்

இறைவன்பால் வழி காட்டப்படுகிறது. ஆத்ம ஞானத்தின் வாயிலாக ஸம்ஸாரக் காட்டை அவன் கடக்கிறான். மனத்தின் கண் தலை தூக்கி நிற்கும் ஸத்வகுணத்தின் தன்மையினால் விவேகம் வியாபகமாகிறது. பிரகிருதிக்கு அப்பாற்பட்ட புருஷனாகத் தன்னை அவன் உணர்ந்து கொள்ளுகிறான். ஸத்வ குணம் கூட பிரம்மனின் வாசஸ்தலத்தில் புக முடியாது. ஜடபதார்த்தம் எவ்வளவு நுண்ணியதாயிருப்பினும், அது சூக்ஷ்மத்திற்கு ஒரு சங்கிலியே ஆகும். முக்தி பெறுவதற்கு ஒருவன் ஸத்வ குணத்தையும் துறந்தாக வேண்டும். பின்னர் அவன் திரிகுணாதீதன் ஆகிறான். சச்சிதானந்த ஸ்வரூபமாக விளங்குகிற பிரம்மன் எனும் இழந்த தெய்வீக நிலையைத் திரும்பப் பெறுகிறான். சம்ஸாரமெனும் காட்டுக்கு அவன் திரும்பப் போவதே கிடையாது.

## 88. மகா லோபி!

மானஸீக பூஜையில் இறைவனுக்கு எதை வேண்டுமானாலும் படைக்கலாம். உலகத்திலுள்ள தித்திப்புப் பக்ஷணங்கள் அத்தனையும் நீங்கள் இறைவனுக்கு நிவேதிக்கலாம். பிரபஞ்சத்திலுள்ள எல்லாக் கனி வர்க்கங்களையும் எல்லாச் சுரங்கங்களிலுள்ள தங்கத்தையும் மாணிக்கங்களையும், உலகத்திலுள்ள ஆடை, உடைகள் எல்லாவற்றையும் பகவானுக்கு நிவேதனம் பண்ணலாம். ஆனால் பக்தன் ஒருவன் அழுகிய வாழைப்பழம் ஒன்றும் தேக்கரண்டி நிறையப் பயறுமே இறைவனுக்குப் படைத்தான் மானஸீக பூஜையிலே!

அவன் மகா லோபி இல்லையா? மானஸீக நிவேதனத்திலேயே அவன் இத்தகைய லோபியாக இருந்தால், ஒருவன் அவனிடமிருந்து ஒரு பருக்கைச் சோறாவது எதிர்பார்க்க முடியுமா? விரலிலே காயத்துடன் வரும் மனிதனுக்கு கொஞ்சம் உப்புகூட அவன் கொடுக்கமாட்டான். அவன் சாப்பிடும்போது, எச்சில் கையினால்கூட காக்கைகளை ஓட்ட மாட்டான்; ஏனெனில் சோற்றுப் பருக்கை

ஒன்று தரையில் சிந்தினால், காக்கை வந்து அதைத் தின்றுவிடுமல்லவா! இத்தகைய லோபிகள் பூமிக்குப் பாரம் ஆவார்கள்.

ஏ மனிதா! இரக்கமுள்ள நெஞ்சுடையவனாக இருக்கப் பழகு. தர்மம் செய். தர்மம் செய். எப்போதும் தர்மம் செய். சுபிட்சத்தின் இரகசியம் இதுதான். இறைவனுடைய செல்வம் அனைத்திற்கும் நீ உரிமை பெறலாம். எப்போதும் நீ நிறைந்தவனாக விளங்குவாய். உன்னிடம் தனலெட்சுமியும் தானியலெட்சுமியும் என்றும் வாசம் புரிவார்கள்.

## 89. யயாதி வீழ்ச்சியும் எழுச்சியும்!

தான் செய்த தவத்தைப் பற்றிக் கர்வம் கொண்டான் யயாதி மன்னன். ரிஷிகள் செய்த தவத்தை அலட்சியம் பண்ணினான். ரிஷிகள், "சொர்க்கத்திலிருந்து விரைவில் நீ வீழ்ந்து விடுவாய்" என்று சபித்தார்கள். அதற்கு யயாதி, "தபசிகள் வாசம் செய்கிற ஸ்தலத்திலே நான் விழுமாறு அனுக்கிரகம் புரியுங்கள்" என்று கெஞ்சினான். ரிஷிகள் "ததாஸ்து" (அப்படியே ஆகுக) என்று கூறினார்கள். யயாதி சொர்க்கம் புகுந்தான். விரைவில் அவன் வீழ்ச்சியுற்றான்.

சொர்க்கத்திலிருந்து யயாதி பூமியை நோக்கி விழுந்து கொண்டிருக்கிறான். யயாதியின் கொள்ளுப் பேரன்கள் கடுந்தவஞ் செய்து கொண்டிருந்தார்கள். இதைக் கண்ணுற்றார்கள். யயாதியைப் பார்த்து, அவர்கள் "நம் தவத்தைப் பெற்றுக் கொண்டு திரும்பவும் சொர்க்கத்திற்குப் போகலாமே" என்றார்கள். இதற்கு யயாதி, "நான் ஒரு க்ஷத்திரியன். யாசகம் செய்யமாட்டேன். தபசை உங்களிடத்திலேயே வைத்துக் கொள்ளுங்கள்" என்று பதிலளித்தான். இத்துறவு மனப்பான்மையின் சக்தியானது யயாதியை மீண்டும் சொர்க்கத்திற்கு எழும்படி செய்தது. துறவி சக்தி இத்தகையது. ஆகையால், துறவு மனப்பான்மையைப் பயிலுவீர்களாக.

# 90. கலப்புப் பால்

ஒரு காலத்தில் ஒரு மகான் பெரிய பட்டணத்து வீதி வழியாகப் போய்க் கொண்டிருந்தார். ஒரு மாது அவரைத் தன் வீட்டிற்கு வந்து போகுமாறு வேண்டினாள். வீட்டிற்கு வந்தார் அம்மகான். உள்ளே போன அம்மாது ஒரு கோப்பை நிறையப் பால் கொணர்ந்தாள். கோப்பையில் பாலை ஊற்றுகிறபோது, மேலே திரண்டிருந்த பாலாடை முழுவதும் கோப்பைக்குள் விழுந்தது. இந்தியாவில் மாதர்கள் பாலாடையைக் கொடுக்க பிரியப்படமாட்டார்கள். ஆதலால், சத்துள்ள பாலாடை முழுதும் கோப்பைக்குள் விழுவதைப் பார்க்க அவள் மனம் மிகவும் சஞ்சலமடைந்தது. நிரம்பவும் கவலைப்பட்டவளாக "உஸ். இவ்வளவு சத்தா" என்று வியப்புடன் இயம்பினாள்.

பாலில் சர்க்கரை சேர்த்தாள். அழகிய சத்துள்ள அந்தப்பாலை மகானுக்கு வழங்கினாள். அதைக் கையால் வாங்கிய மகான் மேஜையின் மீது வைத்துவிட்டு எதைப் பற்றியோ பேசலானார். அதிகசூடாக இருப்பதால் பாலை அவர் பருகவில்லையென்று அம்மாது எண்ணினாள். கடைசியில் வீட்டைவிட்டுப் புறப்பட அவர் தயாரானார். அந்தமாது, "சுவாமிகளே! இப்பாலைப் பருகும் உபகாரம் புரியுங்கள்" என்று வேண்டினாள்.

"பரதேவதா! இது ஓர் சந்நியாசியினால் தொடும் தகுதி வாய்ந்தது அல்ல" என்று பதிலளித்தார் மகான்.

"ஏன்? காரணம் என்ன சுவாமிகளே" என்று வினவ, மகான் "பாலைக் கோப்பைக்குள் ஊற்றும்போது சர்க்கரையும் பாலாடையும் சேர்த்தீர். இவற்றுடன் ஏதோ வேறொன்றையும் சேர்த்தீர். "உஸ், இவ்வளவு சத்தா" என்ற சொற்களைக் கலந்தீர். "உஸ், இவ்வளவு சத்தா - என்ற சொற்கள் கலந்த பால் எனக்குத் தேவை இல்லை." என்று விவரமாகக் கூறினார்.

அந்தமாது வெட்கித் தலைகுனிய, அம்மகான் வெளியே போய்விட்டார்.

மகானுக்குப் பால் வழங்கினது சரிதான் ஆனால், 'உஸ், இவ்வளவு சத்தா' என்பதைக் கலந்தது தவறு. ஒரு செயலை அரை மனத்துடன் செய்யக் கூடாது என்று வேதாந்தம் முழங்குகிறது. செயலைச் செய்யுங்கள் - மனத்திலே முணுமுணுக்காதீர்கள். மனசாகிய துலாக்கோல் சமநிலை எய்துதல் வேண்டும். சூழ்நிலைக்கும் சந்தர்ப்பங்களுக்கும் தகுந்தவாறு உங்களைத் திருத்திக் கொள்ளுங்கள். நேர்மையான மனத்துடன் செயல்களைச் செய்வீர்களானால், உங்கள் அலுவல் வெற்றி பெறும் என்பதை நீங்கள் கண்டு கொள்வீர்கள்.

## 91. கிருஷ்ண பக்தி

பண்டைக் காலத்தில், ஹிந்துக்கள் களிமண்ணால் செய்யப்பட்ட விளக்குகளை உபயோகித்து வந்தார்கள். ஒரு குடும்பத்திலே விளக்கு ஏற்றப்பட்டால், பக்கத்து வீடுகளிலுள்ளவர்கள் தங்கள் விளக்குகளைப் பொருத்திக் கொள்வதற்காக அங்கே வருவார்கள். கிருஷ்ண பகவான் மீது அத்யந்த பக்தியுள்ள யுவதி ஒருத்தி தன் விளக்கைப் பொருத்திக் கொள்வதற்கு ஆண்டவன் வாசம் புரிகின்ற ஒரு வீட்டிற்குள் போனாள். விளக்கைப் பொருத்திக் கொள்வதென்ற சாக்கேயன்றி உண்மை அது அல்ல. உண்மை பார்க்குமிடத்து, கிருஷ்ண பகவான் எழுந்தருளியுள்ள அவ்வீட்டிற்குள் பகவானுடைய திருமுகத்தின் ஒளியில் வண்ணாத்திப் பூச்சிபோன்று பொசுக்கிக் கொள்வதென்ற நிமித்தமே அவளை இழுத்துச் சென்றது. வேறு எந்த வீட்டிற்கும் செல்லவில்லை.

எரிந்து கொண்டிருக்கும் விளக்கிலே அவள் தன் விளக்கின் திரியை வைத்துத் தீபம் ஏற்ற வேண்டும். ஆனால், விளக்கின் மீது அவள் கண்கள் இல்லை. வசீகரிக்கும் அழகிய

வதனத்துடன் கூடிய அந்தச்சிறு கிருஷ்ணனின் மீதே அவளது கண்கள் பாய்ந்தன. ஸ்ரீ கிருஷ்ணனை ஆழ்ந்த கருத்துடன் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள். எரிகின்ற விளக்கின் திரியிலே தன் விளக்கின் திரியை இணைப்பதற்குப் பதிலாக, அவள் தன் விரல்களையே திரியிலிட்டுப் பொசுக்கிக் கொண்டிருக்கிறாள். கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருக்கின்றன அவளுடைய விரல்கள் அந்த விளக்கிலே! ஆனால், அவள் அதைப் பார்க்கவே இல்லை. நேரம் கழிந்துகொண்டே இருந்தது. அவள் வீடு திரும்பவில்லை. விளக்கைப் பொருத்திக்கொண்டு வரச் சென்ற தன் மகள் வீடு திரும்பாத காரணத்தை அறியாமல் அப்பெண்ணின் தாயார் தாமதத்தை மேலும் பொறுத்துக் கொள்ளாதவளாகத் துடியாய்த் தவிக்கிறாள். பக்கத்து வீட்டுக்குச் சென்று பார்த்தாள். அங்கே அவள் தன் மகளின் கை எரிந்து கொண்டிருப்பதையும், மகள் அதைக் கவனிக்காமலே இருந்ததையும் கண்டாள். விரல்கள் பொசுக்கப்பட்டு எலும்புகள் எரிந்து கரிந்து சுருங்கிப் போயின. தாயார் அழுதாள்; "என் குழந்தாய்! என் குழந்தாய்! என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று உரக்கக் கதறினாள். பின்னர் அந்தப்பெண்ணுக்குப் பிரக்ஞை பிறந்தது - அவள் கவனம் பஞ்சேந்திரியங்களுக்குக் கொண்டுவரப்பட்டது.

இத்தகைய தெய்வீக பக்தியிலே இந்த பரிபூரண பக்தி நிலையிலே, பக்தி செலுத்தப்படுபவனும் பக்தி செலுத்துபவனும் ஒன்றாக ஐக்கியமாகிறார்கள். "நான் அவனே . . . . " "நான் நீயே" என்ற பெருநிலை அது.

## 92. ஒரு பன்றியின் கதை

முன்னொரு காலத்திலே நாரத முனிவர் பன்றி ஒன்றின் மீது இரக்கம் கொண்டார். "என் நண்பா! தெய்வலோகத்துக்கு என்னுடன் வா. எக்காலமும் ஆனந்தத்தை அனுபவிப்பாய். தெய்வலோக வாகனத்திலே நீ சவாரி செய்யலாம். வானுலக விருந்துகளை உண்டு இன்பத்தில் திளைக்கலாம். விண்ணுலக

இன்ப கானமும் இனிய நடனமும் உன்னைச் சொக்க வைக்கும். தெய்வலோகப் பெண்டிர் உனக்குத் தொண்டு புரிவர்." என்றெல்லாம் கூறினார். அதைக் கேட்ட அப்பன்றி "போற்றத்தக்க முனிபுங்கவரே! அங்கே புத்தம் புதிய மலம் கிடைக்குமா?" என்று விசாரித்தது. மகான் நாரதர், "மலம் அங்கில்லை" என, அப்புன்றி "அப்படியானால் நான் வரமாட்டேன்" என்று பதிலியம்பிற்று.

ஓ, உலகாயத அறிவிலிகளே! இப்பன்றியைப் போல நடந்து கொள்ளாதீர்கள். "மோட்சம் எனக்கு என்ன கொடுக்க முடியும்? நிர்விகல்ப சமாதியில் புகுவதால் என்ன பயன்? ஒருவன் தன் பண்பாட்டுருவத்தை ஏன் இழக்க வேண்டும்? சமாதியில் பாறாங்கல் போன்று அமர்ந்திருப்பதன் பயன் என்ன? யோகமானது நமக்கு எத்தகைய சக்தியையும் சௌகரியத்தையும் வழங்குகின்றது? உலகைத் துறப்பதால் என்ன பயன்? ஒரு சாதுவின் பிச்சைக்கார வாழ்க்கையைப் பின்பற்றுவதால் என்ன லாபம்?" என்றெல்லாம் வினாக்களை எழுப்பாதீர்கள். அஞ்ஞான மனிதனே! மூன்று உலகங்களிலும் உள்ள இன்பமானது பிரம்மானந்த சாகரத்திலே ஒரே ஒரு துளி மட்டுமே ஆகும். இந்த உலகம் ஒரு நெருப்புப் பந்து - துன்பங்களே நிறைந்தது. - உன் ஆன்மாவை உணர்ந்து நித்தியானந்தத்தைப் பெறுவாயாக.

## 93. எங்கும் பரம்பொருளைக் காணுங்கள்

பத்ராசலம் ராம்தாஸ், "குருதேவரே! ஸ்ரீராம பகவானின் தரிசனத்தை அடியேனுக்குக் கிடைக்கத் திருவருள் புரியுங்கள்" என்று வேண்டினான். அதற்குக் குருதேவர், "நாளைய தினம் பகவான் உன் வீட்டிற்கு எழுந்தருளுவார். ஆயத்தம் செய்துகொள்" என்று கூறினார். பகவானுக்கு விருந்தளிக்கப் பல உணவுகளைச் சமைத்துத் தயாராக்கினான் ராம்தாஸ். குறிப்பிட்ட நேரத்திலே, எருமை ஒன்று வீட்டிற்குள் நுழைந்தது. பானை சட்டிகளை உடைத்து உணவை உட்கொண்டது. கோபங்கொண்ட ராம்தாஸ் எருமையை நையப் புடைத்தான்.

குருதேவரிடம், "சுவாமி! பகவானுக்காகக் காத்துக் காத்துக் கண்கள் பூத்துப் போய்விட்டன. அவர் வரவே இல்லை" என்றான் ராம்தாஸ். குருதேவர், "எருமை- அது பகவானே அன்றி வேறல்ல. ஸ்ரீராம பகவான் என்னிடம் வந்து முதுகை காட்டினார். அதில் அடித்தழும்புகள் ரணமாய் நிறைந்திருந்தன" என்றார். ராம்தாஸ் தான் செய்த செயலுக்காகப் பச்சாத்தாபப்பட்டு அகோரமாக அழுதான். ஸ்ரீ ராம பகவான் தர்ஸனம் வழங்கினார்.

என்றும் எச்சரிக்கையுடன் இருங்கள். எந்த உருவத்தில் பகவான் உங்கள் முன்னால் தோன்றுவார் என்பதைக் கூறுவது மிகவும் கடினம். எல்லாப் படைப்புகளிலும் பகவானைக் காணுங்கள். அவலட்சணமாயும், வெறுக்கத்தக்கனவையாயும், இழிவானவையாயும் அவை இருக்கலாம். பரமாத்மா நாய் வடிவத்தில் வரலாம்; குஷ்டரோகி, தேசப் பிரஷ்டன் வடிவத்திலும் வரலாம். என்றும் எச்சரிக்கையுடன் இருங்கள்.

## 94. சிவாஜி கர்வபங்கம்

மகாராஷ்டிர சாம்ராஜ்யத்தின் மாவீரன் சிவாஜி. அவன் ஒரு பெரிய கோட்டையைக் கட்டினான். ஆயிரக்கணக்கான உழைப்பாளிகள் அதில் ஈடுபட்டார்கள். உழைப்பாளிகள் இத்தனை பேருக்கும் நான் தான் உணவளிக்கிறேன் என்ற எண்ணம் சிவாஜிக்கு உண்டானது. வீண் பெருமையும் கர்வமும் மெள்ள மெள்ள அவனுடைய உள்ளத்தில் படரலாயின.

சிவாஜியின் குரு ஸமர்த்த ராம்தாஸ் என்பவர். இதை அவர் கண்டுகொண்டவராக, சிவாஜிக்கு ஒரு பாடம் புகட்ட விரும்பினார். ஒரு நாள் குருதேவர் சிவாஜியின் அரண்மனைக்கு வந்தார். அவர் அவனைப் பெரிதும் புகழ்ந்து பேசினார். "சிவாஜி! அநேக பாட்டாளி மக்களுக்கு ஆதரவு செய்கிறாய். நீ சாதிக்கிறது மகத்தான திருப்பணி"

என்றெல்லாம் பாராட்டலானார். ஆனந்தக் களிப்பு எய்தினான் சிவாஜி."எல்லாம் தங்கள் திருவருளே தான், குருதேவரே!" என்று பதிலியம்பினான்.

ராம்தாஸ் வெளியிலிருந்த சிறு பாறையை உடைக்கும்படி சிவாஜிக்கு உத்தரவிட்டார். பாறை உடைக்கப்பட்டதும், அதற்குள்ளிருந்த தவளை ஒன்று வெளியே வந்தது. தண்ணீர் வெளியே பாய்ந்தது. பிறகு ராம்தாஸ், "சிவாஜி! பாறைக்குள்ளிருந்த தவளைக்கு உணவூட்டியது யார் அப்பா? என்று கேட்க, சிவாஜி தன் சுய அறிவைத் திரும்பப் பெற்றவனாய் அவமானத்தில் தலையைக் கவிழ்த்துக்கொண்டான். "குருதேவா, பகவானே! என்னை மன்னியுங்கள். என் கர்வம் பங்கமாயிற்று. இனி இத்தகைய எண்ணங்களைக் கொள்ளவே மாட்டேன்" என்று அடங்கிப் பேசினான்.

## 95. குதிரைக்கு முன்னால் வண்டி!

காமநாராயணன் என்பவன் தர்மபூஷணம் என்ற பிரசித்திபெற்ற மருத்துவரை அணுகி, தான் அவஸ்தைப்பட்டுவரும் கொடிய நோயின் வரலாற்றை கூறினான். காமாதுர வாழ்க்கையின் தீய விளைவால் தாக்கப்பட்டுள்ளான் காமநாராயணன் என்று மருத்துவர் கண்டுகொண்டார்.

"காமநாராயணா! நோய் நிவாரணமாகிவிடும். பயப்படாதே. தினசரி இரண்டு முறையாக நாற்பது நாள்கள் ஊசிபோட்டுக் கொள்ள வேண்டும். உணவு விஷயத்தில் கடுமையான பத்தியத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்" என்றார் மருத்துவர்.

"டாக்டர் ஐயா! எவ்வளவு அன்பாக இருக்கிறீர்கள்! உண்மையில் நான் குணமாகிவிடுவேனா?" என்று ஆச்சரியப்பட்டான் காமநாராயணன். நிச்சயமாக, முக்காலும் நிச்சயம்" என்றார் டாக்டர்.

"தங்கள் பேச்சில் எவ்விதம் நம்பிக்கை வைப்பது? என்னைக் குணப்படுத்தக் கூடுமென்பதை இப்போது நிரூபித்துக் காட்டுங்கள். இப்போதே குணமாவதைச் சிறிது காட்டுங்கள்" என்றான் நாராயணன்.

"என் நண்பா! மருந்து உட்கொள்ளாவிட்டால், உனக்கு நோய் நீங்கி நிவாரணம் ஏற்படாது. இப்போதே உனக்கு நிவாரணத்தை ஏற்படுத்த இயலாது. என்னுடைய முறைகளைப் பின்பற்றினால் நிரூபணத்தை நீயே அறியலாம்" என்று திட்டவட்டமாகக் கூறினார் டாக்டர்.

ஆன்மீகச் சாதகர்களின் நிலையும் இங்ஙனமே அமைந்துள்ளது. எத்தகைய சாதனையும் அவர்கள் புரிய விரும்புவதில்லை; ஆனால் சாதனையானது அவர்களுக்கு விமோசனத்தையும் ஆத்மஞானத்தையும் அளிக்கும் என்ற நிரூபணத்தை அறிய விரும்புகிறார்கள். ஓ! சாதகர்களே! யோக மார்க்கத்தில் புத்திசாலித்தனமாக ஈடுபடுங்கள். அதன் விளைவுகளை நீங்களே உய்த்துணருவீர்கள்.

## 96. பலி - விரோசனன் உரையாடல்!

விரோசனன் : - "குழந்தாய்! எதையோ சிந்திக்கிறவன் போல் கலங்கியிருக்கிறாயே! உடம்புக்கு என்ன செய்கிறது?" என்றான்.

அதற்குப் பலி, "ஐயா, நான் கவலைப்பட்டுக் கொண்டிருப்பது உண்மையே. விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் ஜயித்து வெற்றி முரசு கொட்டி விட்டேன். ஆனால் மாறிமாறிச் சுழலுகின்ற ஜனன மரண, நன்மை தீமை, சுக துக்கமாகிய வட்டங்களிலே இருந்து வருகிறேன். எனது பராக்கிரமமும் செல்வமும் அபாரமாயிருப்பினும், நான் வென்ற பிரதேசங்களில் எங்கேயும் நிரந்தரமான நிஜமான சுகத்தைக் காணவில்லை. அதை வேறு எங்கு காண்பதென்றே எனக்குத் தோன்றவில்லை" என்றான்.

**விரோசனன்** :- பராக்கிரமசாலியே! ஒன்றைத் தவிர வேறு எல்லா உலகங்களையும் ஜயித்துவிட்டாய். அந்த ஒரு உலகத்திலே மாத்திரம் நித்தியானந்த சுகம் உண்டு.

**பலி** :- அன்புமிக்க பிதாவே! அந்த உலகம் எங்கே இருக்கிறது? அதன் அரசன் யார்? இவற்றை எனக்கு விரைவாகச் சொல்லுங்கள்.

**விரோசனன்** :- மோட்ச சாம்ராஜ்யம் அது - எல்லையற்ற சுதந்திரமும் இனிமையான ஸாந்தியும் ஒருங்கே அமைந்த நாடு. பிரியும்போது துக்கம் என்பதில்லை; ஏனெனில் ஒவ்வொன்றும் நித்தியமாயும் நிஜமாயும் அதாவது ஸத்தாயும் அமைந்துள்ளது. அஞ்ஞானம் கூட இல்லை, சித்தாகிய ஜோதி இருளை ஒட்டிவிடுகிறது. அந்தப் பிரதேசத்து மக்களுக்கு ஆசைகளே கிடையா. ஏனெனில் அவர்கள் ஆனந்தமாகிய சூழ்நிலையில் வசிக்கிறார்கள். ஆன்மாவாகிய அரசன் சிரஞ்சீவியாய் இந்த தேசத்தை ஆண்டுவருகிறான். அவன் சர்வஞ்ஞனாயும், ஸர்வமயமாயும், ஸர்வசக்திமானாயும் உள்ளவன். ஒருவன் அவன் மகிமையைத் தனித்து அனுபவிக்க வேண்டும். அவனுடைய மகிமை வர்ணனைக்கு அப்பாற்பட்டது. மனம் அவனுடைய மந்திரி. காமம், குரோதம் ஆகியவர்கள் இம்மந்திரிக்குத் துணைவர்கள், ஆன்மா சர்வசக்தி படைத்தவனாயிருப்பினும், மோட்ச சாம்ராஜ்யத்தின் போக்குவரத்தைக் கட்டுப்படுத்துகிறவன் மனமேயாம்.

**பலி** :- ஆனந்தமயமாகிய இந்த அதிசயமான நாட்டில் நுழைய என்னைப் பொறுமையிழக்கும்படி செய்துவிட்டீரே! ஐயா! தங்கள் ஆசீர்வாதங்களுடன் இக்கணமே வீரப் படையினர்களை மோட்சத்திற்கு அழைத்துக் கொண்டு போய் மனம் எப்படி எனக்கு வழிவிடாமல் தடுக்கத் துணிகிறதென்பதைப் பார்க்கிறேன்.

**விரோசனன்** :- அவ்வளவு விரைவில் அல்ல, மகனே! ஒருவித நெருக்கடியில் இருப்பதை நீ உணருவாய். ஆத்மனும் மனமும் மாயவஞ்சகமுள்ளவர்கள். ஆத்மனுடைய

அருளில்லாமல் மனத்தை ஜயிக்க முடியாது. மனம் நசிக்கப்பட்டோ அல்லது ஜயிக்கப்பட்டோ அடங்கிய பிறகு ஆத்மனில் பிரவேசிக்கலாம்.

பலி :- ஐயா, அது அவ்வளவு கடினமாயிராது. ஒவ்வொரு விரோதியையும் தண்டிப்பதற்குத் தக்க ஆயுதங்கள் இல்லையா?

விரோசனன்:- ஆத்மனும் மனமும் வெவ்வேறானவர்கள். தந்திரத்தோடு அவர்களை அணுகுதல் வேண்டும். ஆத்மனையும் மனத்தையும் ஒரே காலத்தில் ஜயிக்க வல்ல இரு கூரான முள்ளைப்போன்ற தாக்குதலைப் பற்றிக் கூறுகிறேன்.

பலி :- நிரம்பவும் நல்லது ஐயா, மேலும் சொல்லுங்கள்.

விரோசனன் :- நீ யார் என்ற விசாரணையோடு கூடிய சிரத்தையானது ஆத்மனுடைய கருணை நிறைந்த சன்னிதானத்துக்குக் உன்னை இட்டுக்கொண்டு போகும். ஆனால், மனத்தை முறியடிப்பதென்பது மிகக் கடினம்.

பலி :- மரியாதைக்குரிய பிதாவே! எனக்கு நிரம்பவும் ஆர்வமாயிருக்கிறது. மனத்தை அடக்குவதைப் பற்றி எனக்குக் கூறுங்கள்.

விரோசனன் :- மனத்தை அடக்கும்போது, விதி உனக்கு உதவி செய்யாது. உன் புருஷார்த்தம் அதாவது சுயமுயற்சியை நீ நம்பியாக வேண்டும். முதன் முதலில் மனம் எந்த நிலையில் இருக்கிறதென்று நீ காத்திருந்து கண்டுபிடிக்க வேண்டும். அந்தமனம் அஞ்ஞானத்தில் சூழ்ந்திருந்ததாகவோ க்ஷிப்தா (சஞ்சல) நிலையிலோ, முத்தா (மறதியான) நிலையிலோ, அல்லது விக்ஷிப்தா (ஒன்று சேர்ந்த) நிலையிலோ இருந்ததாக கண்டுபிடித்தால், இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம் ஆகியவற்றைக் கையாண்டு ஏகாக்ரக நிலைக்கும் நிருத்த (அடங்கிய) நிலைக்கும் மனத்தைக் கொண்டு வர வேண்டும். இந்த மாதிரி மனத்தைத் தாக்கும் இரண்டாவது நிலையில், அதி கூர்மையான ஆயுதங்களைத் தயாரிக்க வேண்டும்.

பலி :- ஐயா, அவை யாவை?

விரோசனன் :- மனத்தினுடைய அஞ்ஞானமாகிய கவசத்தைக் குத்திக் கிழித்த பிறகும்கூட, மனமானது ஒரு வஞ்சகமான வட்டத்திலே உன்னை மயக்கி வீழ்த்த முயற்சிக்கும். அங்கே சம்ஸ்காரங்கள், வாசனைகள், விருத்திகள். சங்கல்பங்கள், ஆசைகள், திருஷ்ணாக்கள், கர்மாக்கள் இப்படித் தொடர்ந்துவர மீண்டும் சம்ஸ்காரங்கள், வாசனைகள் ஆகிய அம்சங்கள் மாறி மாறி வரிசையாக அந்த வட்டத்தில் சங்கிலி போலத் தொகுக்கப்பட்டிருக்கின்றன. எனினும், இந்த வஞ்சகமான வட்டத்தைத் தகர்த்து இந்தச் சங்கிலிகளில் ஏதாவது ஒன்றை நாசஞ் செய்து உன்னை விடுவித்துக் கொள்ள முடியும். இதில் இப்போது பயன்படுத்த வேண்டிய முதலாவது ஆயுதம் விவேகம் அல்லது பகுத்தறிவு. இது மனத்தின்மீது ஜோதி வெள்ளத்தைப் பாய்ச்சி அவனுடைய குற்றமுள்ள நடவடிக்கைகளைப் பார்க்கத் துணை செய்கிறது. மனத்திற்குக் காமம், குரோதம் எனும் மகா சக்திமான்களான இரண்டு நண்பர்கள் உண்டு என்பதை நினைவில் வைத்துக் கொள். இவ்விரண்டு நண்பர்கள் ராகத்தையும் (பற்று) துவேஷத்தையும் (பகைமை) சிருஷ்டித்து உன்னுடைய வழியை மறிப்பார்கள்.

பலி :- ஐயா! இந்த எதிரிகளை எப்படி விரட்டுவது?

விரோச்சனன் :- நிராசையும் விரக்தியும் கொண்டால் ராகத்துவேஷங்களை விரட்ட முடியும். விவேகத்தின் துணையினால், அவர்கள் எல்லா புலன் நுகர்வுப் பொருள்களின் குறைபாடுகளை எடுத்துக் காட்டுவார்கள். பின்னர் ராகம் தானாகச் சாகும். துவேஷம் தன்னந்தனியே நிலைக்காது.

பலி:- காமம், குரோதம் இவர்களைப் பற்றிச் சொல்லுங்கள்.

**விரோசனன்:-** காமம் என்பவனைச் சார்ந்தவன் குரோதம் என்பவன். காமம் அழிந்தானானால் குரோதம் கூட மாண்டு போவான்.

**பலி :-** ஐயா! காமத்தைத் தொலைக்கும் மார்க்கம் என்ன?

**விரோசனன் :-** துறவு மேற்கொண்டால் காமம் அழிந்துவிடுவான். ஆனால் இது நெடுநாள் ஆகிற காரியம். முதன்முதலில் காமத்தைத் தணிக்கச் செய்ய வேண்டும், ஆனால் விவேகத்தின் மூலமாக எல்லாப் புலன் நுகர்வு இன்பத்தின் வீண் தன்மையைக் கண்டு கொள்வாயாக. காமத்தையோ அல்லது ஆசைகளை அடக்குவதால் பயன் இல்லை. அதை எதிர்பாராமலிருக்கும்போது ஆசைகள் கிளம்பிப் போராடும். அவற்றை முளையிலே கிள்ளி முறிக்க வேண்டும் முற்றிலும். எனவே, துறவு நிலையை ஒரே நாளில் உருவாக்க முடியாது. அது படிப்படியாக வர வேண்டும். அப்பியாசத்தின் மூலம் நீண்ட நாள் உழைக்கக் கூடிய வன்மையை ஆயுதமாக உருவாக்க வேண்டும். அப்பியாசத்தைச் சரியானபடி சாதிப்பதற்கு குரு ஒருவரும் சத் ஸங்கமும் தேவை. அப்பியாசத்தின் சாதனைக் காலத்தில், நீ உன் தேக சம்பந்தமான தேவைகளைப் பற்றிய நினைப்பைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்து குருவுக்குச் சேவை புரிதலிலும் ஞானகிரந்தங்களைக் கற்றுக் கொள்வதிலும் உன்னுடைய மனத்தை அதிகமாக ஏகாக்ரப்படுத்த வேண்டும். பின்னர், உனது உணர்வு அகண்டாகார உணர்வாக மாறிவிடும். மகனே! ஒன்றை நினைவில் வைத்துக்கொள். எல்லாம் சொல்லியும் செய்தும் ஆனபின், மனம் அவ்வளவு கெட்டபயல் அல்ல. அவனுடைய சிநேகிதர்களான காமமும் குரோதமும்தான் உண்மையில் பயங்கரமானவர்கள். உண்மை பார்க்குமிடத்து, மனத்தினிடம் நீ சரியானபடி நெருங்கினால் அவன் உனக்கு மெய்யன்பன் ஆகிறான். அவனை நீ ஏகாக்ரத அல்லது நிருத்த நிலைக்கு இட்டுச் சென்றால், அவன் உனக்குப் பெருத்த உதவியாக இருப்பான்; ஏகாக்ரம், தியானம், விசாரணை மூலமாக நித்திய ஆத்மனின் சன்னிதானத்திற்குக் கூட்டிச் செல்வான். பின்னர் மனம் அமைதியாக விலகி

மறைவான். எவனுடைய திருவருளை நீ நம்பிக்கை, தியானம், விசாரணை மூலமாக ஏற்கனவே சம்பாதித்துவிட்டாயோ அந்த ஆத்மன் மோட்ச சாம்ராஜ்யத்திற்கு உன்னை வரவேற்பான்.

இன்னும் ஒரு விஷயம் சொல்ல வேண்டும். மோட்ச சாம்ராஜ்யத்தில் நுழைவதற்காக இந்த தீரவீரச் செய்கையை மேற்கொள்ளுமுன், தற்போதைய நிலையிலே நிஜமாக வெறுப்புற்றதாய் நிச்சயப்படுத்த வேண்டும். அரை குறையான யத்தனங்களால் வெற்றி காண இயலாது. முதலில் நன்றாக உன்னையே சோதித்துக்கொள்- பின் மனத்தைத் திடப்படுத்திக்கொள்.

பலி :- ஐயா, இதற்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன். தங்கள் சொற்படியே செய்வேன்; எச்சரிக்கையுடன் இதைச் சிந்திக்கிறேன்.

விரோசனன் :- இறைவன் உன்னை ஆசீர்வதிப்பாராக. நித்தியானந்த நாட்டை தேடும் பராக்கிரமச் செயலில் வெற்றி பெறுவாய்.

## 97. கானகத்திலே ஓர் குரல்!

தினந்தோறும் வெகு தொலைவிலுள்ள பள்ளிக்கூடத்திற்கு அவன் போக வேண்டியிருந்தது. மாலை நேரத்தில் வீட்டுக்கு வந்ததும் அவன் தாயாரிடம் "தாயே! கானகத்திலே நடந்து வருகிறேன், பயமாயிருக்கிறது" என்று முறையிடுவான். அதற்கு தாயார் அவனை நோக்கி, "அழகான பையன் ஒருவன், கிருஷ்ணன் அவன் பெயர். அவன் கானகத்தின் மையத்திலே வாசம் புரிகிறான். கானகத்தைக் கடக்கிற போதெல்லாம் அவனைக் கூப்பிடு. அன்பு ததும்பிய குரலிலே நாள்தோறும் அவன் உனக்கு உதவி புரிவான்" என்று கூறுவாள்.

அவன் ஒருநாள் மாலை அன்பு ததும்பிய குரலில் கூப்பிட்டான். கிருஷ்ணன் தோன்றி அவனை ஆசீர்வதித்து கானகத்திலே வழிகாட்டினான். பிறகு தினந்தோறும் அந்த மாணவன் கூப்பிடுவதும், கிருஷ்ணனுடன் விளையாடுவதுமாக இருக்கலானான். கானகத்தைப் பற்றியும் அதன் இரகசியங்களைப் பற்றியும் மற்றும் புஷ்பங்கள், பழங்கள், பறவைகள், வெட்டவெளியில் அவை பாடுதல், ஸாந்தமான மான் ஆகியவை பற்றியும் அவற்றிற்கெல்லாம் போஷகராக விளங்கும் சர்வேஸ்வரனைப் பற்றியும் விளக்கமாக கிருஷ்ணன் உரைக்கலானான், அப்பள்ளி மாணவனிடம். இலைகளை புத்துயிரூட்டிப் பசுமையாக்கும் மழைத்தாரை பற்றியும், அருவிகளின் இன்னிசைகளைப் பற்றியும், கிருஷ்ணன் எடுத்தோதுவான். பின்னர் தனது புல்லாங்குழலை எடுத்து இன்னிசை எழுப்புவான். ஆச்சரியகரமான அமைதி இந்த இன்னிசையில் பொங்கித் ததும்பும். கானகமும் வானகமும் ஒன்றாக இசை பாடும். அப்போது அந்த கானகம் அந்தமாணவனுக்கு இருண்ட பயங்கரமான ஸ்தலமாகக் காட்சியளிப்பதில்லை - ஆனால் மகிழ்ச்சி தாண்டவமாடும் மாளிகையாகத் தோற்றம் தருகிறது.

ஒருநாள் ஆசிரியர் தாம் மறுநாள் விருந்தளிப்பதாகக் கூறினார். விருந்துக்கு ஒவ்வொரு மாணவனும் நல்லதொரு பொருளை இனாமாகக் கொடுக்க நினைக்கின்றனர். ஆஸ்ரமத்திலிருந்து திரும்பிய மாணவன் தன் தாயிடம், "தாயே, குருமகான் நாளை விருந்து அளிக்கிறார். நம்முடைய அன்பளிப்பு எது?" என்று கேட்டான். தாயார், "நாம் பரம ஏழை. கானகத்திலுள்ள பையனிடம் போய்ச் சொல். ஆசிரியருக்காக அவன் உனக்கு தரும் அன்பளிப்பு விலை மதிக்கவொண்ணாததாயிருக்கும்" என்று கூறினாள்.

மறுநாள் காலை, மாணவன் பள்ளிக்குப் போகும் வழியிலே கிருஷ்ணனை கானகத்தில் சந்திக்கிறான். ஆசிரியருக்காக அன்பளிப்பை வேண்டுகிறான். கிருஷ்ணன் "இதோ ஒரு கோப்பை பால்" என்று தருகிறான் ஒரு கோப்பை நிறைய பாலை. கிருஷ்ணன் அப்படித்தந்த போது அவன்

குரலிலே எழுந்ததோர் பாட்டை மாணவன் கேட்டுக்கொண்டே இருக்கலானான். அப்பாட்டிற்கு முடிவே இல்லாமலிருந்தது.

அந்த நிலையில், மாணவன் பால் நிறைந்த கோப்பையுடன் பள்ளிக்குப் போனான். இதர மாணவர்கள் மிக விலையுயர்ந்த பொருள்களைக் கொண்டுவந்திருந்தார்கள். நம் மாணவனோ ஒரே ஒரு கோப்பை பால்! அதை அவன் ஆசிரியரிடம் கொடுத்தான். விருந்து தொடங்கியது. ஆசிரியர் பாலை ஒரு பாத்திரத்தில் ஊற்றினார். கோப்பையில் பால் நிரம்பியபடியே இருந்தது. மீண்டும் பால் பாத்திரத்தில் ஊற்றப்பட்டது; மீண்டும் கோப்பை பால் நிறைந்தேயிருந்தது! மீண்டும் மீண்டும் அது பாலால் நிறைந்து ததும்பியது. ஆசிரியரின் வீட்டிலுள்ள பாத்திரங்களெல்லாம் பால் ஊற்றப்பட்டது; இன்னமும் அந்தகோப்பையின் பால் நிறைந்தே இருந்தது. வற்றவில்லை. கிருஷ்ணன் கொடுப்பதெல்லாம் வற்றாதது அல்லவா!

"அதிசயமான இந்தக்கோப்பையை உனக்கு யார் கொடுத்தது?" என்று கேட்டார் ஆசிரியர் "கானகத்திலுள்ள எழில் மிகுந்த பையன்" என்பது மாணவனின் பதில். "அவனை எனக்குக் காட்டு" என்று அவர் கூற, மாணவன் "ஐயா, என்னுடன் வாருங்கள்" என்று கூறி ஆசிரியரை அழைத்துக் கொண்டு காட்டுக்குப் போனான் - விருந்து முடிந்தவுடன்.

"கிருஷ்ணா! கிருஷ்ணா" என்று மாணவன் கூப்பிடுகிறான். கிருஷ்ணன் வரவில்லை. கூப்பாடு போடுகிறான் அம்மாணவன் மீண்டும் மீண்டும். பிறகு, தாரைதாரையாகக் கண்ணீர் வழிந்தோடக் கதறுகிறான் மாணவன். "ஹே, கிருஷ்ணா! வா. என் ஆசிரியர் இங்கே வந்திருக்கிறார்; நீ வரவில்லையென்றால் பொய் பேசும் வீணன் என்று என்னை அவமதிப்பர்" அலறினான். கிருஷ்ணன் வரவில்லை; ஆனால் அவருடைய குரல் எழுந்தது. என் குழந்தாய் நான் வரமாட்டேன், ஏனெனில் உன்னுடன்

வந்துள்ளவரின் இதயத்திலே இறைவன் சாம்ராஜ்யத்தை நாடும் பக்தி சிரத்தையைக் காணவில்லை" என்றது அந்தக்குரல்.

## 98. மூர்க்காராமும் குஷ்டரோக மாதும்

மூர்க்காராம் கபூர் குஷ்டதேவி என்னும் மோசமான பெண்ணைக் காதலித்தான். வெளிப்பார்வைக்கு அவள் மகா ரூபவதியாகக் காட்சியளித்தாள். மூர்க்காராம் உண்மையிலேயே அவளைத் தெய்வமாக கும்பிட்டான். அவள் அவனைத் தன் கொடிய வலையில் விழச்செய்து அவனுடைய செல்வத்தை எல்லாம் கொள்ளையடிக்கலானாள்.

ஒருநாள் குருதேவ்சிங் என்ற மகான், கபூரைப் பார்த்து, "நண்பா, இக்கொடிய மாதைப் பின்பற்றி ஏன் அல்லலுறுகிறாய்? இக்கணமே அவளை விட்டுவிடு. உன் கண்களுக்குத் தோன்றாமல் மறைந்து கிடக்கிற கொடிய நோயால் அவள் அவதிப்படுகிறாள். அவள் குஷ்டரோகி" என்று புத்திமதி கூறினார். குருதேவ்சிங் இதைப் சோதித்துப் பார்க்கும் வழியையும் கூறினார். குருதேவ்சிங் குறிப்பிட்டதோர் அங்கத்தை மூர்க்காராம் பரிசீலனை செய்து பார்க்கவே, குஷ்டதேவி உண்மையிலே குஷ்டரோகியெனக் கண்டுகொண்டார். அவள் மீது தீவிரமான வெறுப்பு அவனுக்குப் பிறந்தது. அவள் வசித்த அந்தத் தெருவில் நடக்கக்கூட அவன் விரும்புவதில்லை.

உலகம் குஷ்டதேவி போன்றது. பிரமையடைந்த ஜீவன்தாம் மூர்க்காராம். மூர்க்காராம் உலகாயத இன்பங்களில் திளைத்து வருகிறான் - ஜனன மரணமெனும் கொடிய வியாதியை அது ஏற்படுத்தும் என்பதை உணராமல், பிரம்ம நிஷ்டகுருதேவர் ஜீவனை எழுப்பி உலகத்தின் உண்மையான இயல்பைக் காண விழிக்கச் செய்யும்போது, அந்த ஜீவன் இந்திரிய சுகங்களிடத்திலே வைராக்கியத்தை வளர்த்து முக்திப்பேற்றை அடைகிறது.

## 99. ஆனந்தபாஷ்பத்திற்கு மிளகு!

ஸ்வாமி கிருஷ்ணானந்தா அவர்கள் சேட் ராதா ராம் அவர்களின் பங்களாவில் பாகவத சப்தாஹம் ஒன்றை நடத்தினார். ஆயிரம் பக்தர்கள் தினந்தோறும் பாகவதத்தைக் கேட்டு ஆனந்த பாஷ்பம் சொரிந்தார்கள்.

பக்கத்து கிராமத்திலுள்ள பத்து பிராமணர்கள் தாம் சப்தாஹத்திலே கலந்துகொண்டால் தினந்தோறும் சம்பிரமமான விருந்து சாப்பிடலாமென்று கருதினார்கள். அவர்கள் அக்கூட்டத்தில் கலந்துகொண்டார்கள். ஆனால் உபந்நியாச ஹாலின் ஓரத்திலே அவர்கள் குறட்டைவிட்டு உறங்கலானார்கள். ஒருநாள் "ஓ, பக்தர்களே! பகவானின் திவ்ய லீலைகளைக் கேட்கும் போது ஏன் ஆனந்த பாஷ்பம் சொரியவில்லை?" என்று ராதாராம் அவர்கள் கேட்டார்கள். பிராமணர்கள் "சேட்ஜீ! நாளைக்கு ஆனந்த பாஷ்பம் வரும்" என்று சொன்னார்கள்.

அவர்கள் மறுநாள் சேட்ஜீயின் பண்டகசாலையில் நுழைந்து பண்டகசாலை அதிபனோடு நட்பு பூண்டு கொஞ்சம் மிளகுகளைப் பெற்றுக் கொண்டார்கள். கதாகாலக்ஷேபம் முடியுமளவிலே மிளகுகளை அரைத்து கண்களைச் சுற்றிலும் பற்றுப்போட்டுக் கொண்டார்கள். கண்களில் பொலபொலவென்று நீர் ததும்பி வழியலாயிற்று.

மூன்று நாள்கள் கழிந்தன. சேட் ராதாராமன் பண்டகசாலையைப் பார்வையிட்டார். மிளகுகள் எல்லாம் தீர்ந்து போயிருந்ததைக் கண்டார். அதிபனைக் கேட்ட போது, "மிளகிலே பாதி சமையற்சாலைக்கும் மறுபாதி ஆனந்த பாஷ்பத்திற்காகவும் செலவிடப்பட்டது" என்று பதிலியம்பினான்.

## 100. குழந்தையின் அறிவு!

ஒரு காலத்தில் ஒரு தாயார் தன் குழந்தையிடம் ஒரு கதையைச் சொன்னாள். அந்தக்குழந்தை அக்கதை உண்மையானதென்றே கேட்டது - அஞ்ஞானிகள் இந்த உலகத்தை நிஜமென்று நினைப்பது போல.

சௌராஷ்டிர தேசத்தில் செல்வம் படைத்த அரசன் ஒருவன் ஆண்டுவந்தான். அவனுக்கு நாடோ செல்வமோ கிடையாது. காவலாளி இல்லை. அரண்மனையும் இல்லை. புல்லைக் கையில் செங்கோலாகப் பிடித்திருந்தான். பூஜ்யம் என்ற மஹாராணியின் பொங்கிய வனப்பு தங்கிய வனிதையை அவன் மணந்து கொண்டான். அவனுக்கு ஐந்து குழந்தைகள் பிறந்தன. நான்கு பிறக்கவில்லை. ஒன்று கர்ப்பத்தில் இல்லை. ஒருசமயம் அவன் வானத்தில் பாய்ந்தான். துப்பாக்கியால் சுடுவதற்கு இரும்பு உத்திரத்தை எடுத்துக்கொண்டான். பெரியதோர் யானையையும் புலியையும் சுட்டுக் கொன்றான். பூஜ்யமாயிருந்த தன் நாட்டிற்கு அவற்றைக் கொண்டு வந்தான். அற்புதமான மாளிகையைக் கட்டினான். கரியமிலவாயுவினாலும் கந்தகக் கலப்பாலான நீர் வாயுவினாலும் மாளிகை கட்டப்பட்டது.

நான்கு லட்சம் ரூபாயிலிருந்து கழிக்கப்பட்ட ஆறு லட்சம் ரூபாயில் அது கட்டப்பட்டது. அவன் இறந்தபோது அங்கே வசித்தான்.

எருமையின் முட்டை, கொசுவின் பால், பாறையின் சாறு ஆகியவற்றால் தயாரிக்கப்பட்ட மருந்தைச் சாப்பிட்டான். பெரும் வியாதி ஒன்று குணமாகியது. ஒரு சமயம் மிகுந்த தாகத்தால் தவித்தான். சஹாரா பாலைவனத்தின் தூயநீரைப் பருகினான் - அடியில்லாத தோண்டியிலிருந்து நீர் இல்லாத ஆற்றில் குளிக்கப் போனான். பத்து முறை மூழ்கி ஸ்நானம் செய்தான். நிரம்பவும் உற்சாகத்துடன் திரும்பினான்.

அவன் பெரிய பக்தன்; ஆனால் கடவுளிடத்திலோ அவருடைய திருநாமத்திலோ, அவருடைய திருவுருவிலோ நம்பிக்கை கிடையாது. கடவுளைத் தவிர இதர எல்லாவற்றையும் அவன் விரும்பினான்.

இந்த உலகம் இக்கதை எவ்வளவு உண்மையோ அவ்வளவு உண்மையாய் அமைந்துள்ளது. மாயையின் மயக்கத்தையும் ஏமாற்றத்தையும் பற்றி எச்சரிக்கையாக இருங்கள். பிரம்மன் மாத்திரமே ஸத்யம்; அவனை உணர்ந்து முக்தி பெறுவீர்.

## 101. ஆத்ம சாதகர்களின் அனுபவங்கள்!

சுபோதன், விவேகன் ஆகிய இரு இளைஞர்களும் சந்நியாசியாகிய தமது குருதேவரிடத்தில் அவரது ஆஸ்ரமத்திலேயே இருந்துகொண்டு சாஸ்திரக் கல்வி பயின்று வந்தார்கள். கற்க வேண்டியவை யாவும் கற்றார்கள். குருகுலவாசத்தில் அவர்கள் கடைப்பிடித்து வந்த கண்டிப்பான வாழ்க்கை, மகான் குருதேவரிடத்தில் அவர்கள் அனுபவித்த ஸத்ஸங்கம், சாஸ்திரங்களைக் கற்ற பேரறிவு ஆகியவை யாவும் ஒன்று கூடி, நிவர்த்தி மார்க்கத்தைப் பின்பற்றி ஆத்ம சாக்ஷாத்காரம் பெறுவதற்காகத் தமது வாழ்க்கையை முழுநேர சாதனைக்கு அர்ப்பணிக்கக் கூடிய நாட்டத்தை அவர்களிடத்தில் உண்டாக்கின.

அன்று குரு பௌர்ணமி நாள். (ஜூன், ஜூலை மாதங்களில் வரும் பௌர்ணமி - சாதாரணமாக ஆடி மாத பௌர்ணமி. வியாச பூஜைதான் குரு பௌர்ணமி நாள்) அவ்விரு இளைஞர்களும் தம் குருதேவரிடத்தில் போய் தமக்குச் சந்நியாசத்தைத் தருமாறு வேண்டினார்கள். அவர்களது தீவிர நாட்டத்தைப் பற்றிப் பெரிதும் பாராட்டிய பிறகு குருதேவர், "சந்நியாசம் என்பது பற்றி எரியும் அக்னி'. அதைத் தழுவுமுன் நீங்கள் உங்களை நன்கு தயாரித்துக் கொள்ள வேண்டும். உலகத்தைப் பற்றிய அறிவோ,

அனுபவமோ உங்களுக்கு ஏற்பட்டபாடில்லை. சாஸ்திரங்களைப் படித்தும், இந்தத்தூய புனிதமான சூழ்நிலையில் இருந்து கொண்டும் நீங்கள் அடைந்துள்ள வைராக்கியம் உண்மையாகவோ, அல்லாமலோ இருக்கலாம்; இது வாழ்க்கையின் இறுதிக்காலம் வரை நிலைக்கலாம்; நிலைக்காமல் போகலாம். உங்கள் பிற்கால வாழ்க்கையிலே ஆசை காட்டி இழுக்கும் சக்திகள் தாக்கி உங்களை வழிதவறச் செய்துவிடும். உலகத்தின் யதார்த்த நிலைமை பற்றிய அனுபவம் வேண்டும். அந்த அற்பசொற்ப அனுபவமானது உங்களுடைய வைராக்கியத்தை வலுப்படுத்தி அசைக்கக் கூடாததாக ஆக்கிவிடும். இன்று குருபௌர்ணமி, புனிதநாள். அகன்ற உலகினிலே புறப்பட்டுச் செல்லுங்கள். நாடு நகரத்திலே ஒரு வருஷம் சுற்றித் திரியுங்கள். நீங்கள் பல விஷயங்களைக் கற்றுக்கொள்வீர்கள். உலகம் என்பது சிறந்த ஆசிரியர். கண்களையும், காதுகளையும் திறந்து வைத்துக் கொள்ளுங்கள். கற்றுக் கொள்ளுங்கள், கற்றுக் கொள்ளுங்கள், கற்றுக் கொள்ளுங்கள். ஆனால், வாயை மூடிக் கொள்ளுங்கள். உலகாயத நடவடிக்கைகளிலே ஈடுபாடு கொள்ளாதீர்கள்; காட்சியாக அனுபவித்துக் கற்றுக்கொள்ளுங்கள்; ஞானிகளின் சகவாசத்திலே கூடுமானவரை வாசம் புரியுங்கள். இது சாத்தியப்படாவிட்டால், சாத்தியமாகுமளவு ஏகாந்தத்தில் வாசம் புரியுங்கள். ஒரு வருஷத்திற்குப் பிறகு திரும்பி வாருங்கள். இந்த ஒரு வருஷத்திலே மிகுந்த அனுபவத்தைப் பெற்றுவிடுவீர்கள். உங்களுடைய வைராக்கியம் உண்மையாயும், அசைக்க வொண்ணாததாயும் உள்ளதென்று எனக்கும்கூட உறுதிப்பட்டுவிடும். குருதேவரின் நல்லாசிகள் உங்கள் இருவருக்கும் வலிமையும், ஞானமும் அருள்புரியுமாக'' என்று சாங்கோபாங்கமாகச் சந்நியாச ஆஸ்ரமத்தின் உண்மையான நிலையைப் பற்றி உரைத்தார்.

இரு இளைஞர்களும் தமது குருதேவரை வணங்கி விடை பெற்றுக்கொண்டு ஆஸ்ரமத்தை விட்டுப் புறப்பட்டார்கள்.

அருகிலுள்ள நாட்டில் ஓர் அரசர் தமது தர்பாரிலே பல கற்றறிஞர்களை வைத்துக் கொண்டிருக்கிறார் என்ற

செய்தியைக் கேட்டு இந்த இரண்டு சாதகர்களும் அங்கே சென்றார்கள். அவர்களை விசேஷமாக வரவேற்றார் அரசர். அரண்மனைப் பண்டிதர் அத்தர்பாரில் குழுமியுள்ளவர்களின் நலத்திற்காகச் சாஸ்திரங்களை விளக்கி விரிவுரையாற்றிக் கொண்டிருந்தார். ஆனால் அரசர் வேடிக்கை, கேளிக்கை களில் மிகவும் பற்றுதல் கொண்டவராயிருந்த படியால், பண்டிதரின் சாஸ்திர விளக்கங்களைத் தெரிந்து கொள்ள அக்கறை காட்டவில்லை.

படித்தவன் ஆனால் நயவஞ்சகன் ஒருவன். அவன் அரசருடைய அஞ்ஞானத்தினால் ஆசையூட்டப் பெற்றவனாக, அரசருடைய வேடிக்கை விஷயத்திலேயே தன் சாமர்த்தியம் காட்டி பெருநிதி பெற்றுப் போகலாமென்று திட்டமிட்டான். தர்பாருக்கு அவன் வந்து, தனது ஆழ்ந்த ஞானத்தைப் பற்றிப் பெருமை பாராட்டிக் கொண்டான். "தங்கள் அறிவுத் திறமையைப் பற்றிய சான்று காட்டுங்கள்" என்றார் அரசர்.

அவன், "மகாராஜா! *சுக்லாம்பரதம் விஷ்ணும், சஸி வர்ணம், சதுர்புஜம் பிரஸன்னவதனம் தியா யேயேத் ஸர்வவிக்நோபஸாந்தயே* - இந்தசுலோகத்தைக் கேள்விப் பட்டிருப்பீர்கள். இச்சுலோகத்தினால் குறிக்கப்படுவது எது?" என்றான். அதற்குப் பண்டிதர் "நிச்சயமாக, மகாவிஷ்ணு தான்" என்றார். நயவஞ்சகனான அவன், "இல்லை, தாங்கள் சொன்னது தவறு. பிரகாசிக்கின்ற ஒரு ரூபாய் நாணயத்தையே இது குறிக்கிறது. ரூபாய் நாணயம் வெண்மை; அது உலகம் முழுதும் வியாபித்துள்ளது. எவருடனும் எந்த ஒரு இடத்திலும் அது தங்குவதில்லை. பூர்ண சந்திரனைப் போன்ற வடிவம் கொண்டது. அதற்கு நான்கு நான்கணாக்கள் உண்டு. அது நம்முடைய எல்லா இடையூறுகளையும் அகற்றி ஒவ்வொருவருக்கும் மகிழ்ச்சியூட்டுகிறது" என்று வணக்கம் கூறினான். அதைக் கேட்ட அரசர், "நமது அரண்மனைப் பண்டிதரைக் காட்டிலும் நீங்கள் அதிகமாகப் படித்து இருக்கிறீர்கள்" என்றார். அதற்கு நயவஞ்சகன் "அதில் என்ன சந்தேகம்?" என்றான்.

உடனே அரசர் அரண்மனைப் பண்டிதரை விரட்டி விட்டு அவருக்குப் பதிலாக புதிய நயவஞ்சகனை நியமித்தான். இந்தகபடமான பண்டிதன் நன்றாகச் சம்பாதித்தான். ஒருநாள் அரசரிடம் விடுமுறை எடுத்துப் போனான்.

இதற்கிடையில், அரண்மனைப் பண்டிதர் சாஸ்திர ஞானிகளின் சபைக்குச் சென்று தமது விதியைக் கூறி, கவலைப்பட்டு அழுதார். அறிவிற் சிறந்த பண்டிதர் ஒருவர் நயவஞ்சகனைத் தோற்கடித்து, அரசருக்குப் பாடம் ஒன்றைப் புகட்டுவதென்று முன்வந்தார். இந்தப் பண்டிதர் மறுவேஷம் புனைந்து அரசரிடம் போய், "இந்த உலகத்திலே தமக்கு மிஞ்சிய அறிவாளி ஒருவன் கூட இல்லை", என்று பெருமை பேசிக் கொண்டார். " தங்கள் அறிவின் திறத்திற்கு சான்று கொடுங்கள்" என்றார் அரசர். மாறுவேடம் புனைந்த பண்டிதர், "மகாராஜா! சுக்லாம் பரதரம் . . . : ஸாந்தயே" என்ற சுலோகத்தைக் கேள்விப்பட்டிருப்பீர்கள். இதன் பொருள் உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டார். அரசர் "ஆம், ஆம். முதல் பண்டிதர் மகாவிஷ்ணு . என்றார். இப்போது அரண்மனையில் பண்டிதராக இருப்பவர் ரூபாய் நாணயம் என்றார்" என்று கூறினார்.

"இருவரும் சொன்னது தவறு. தயிர் வடையை அது குறிக்கிறது. தயிரில் ஊறவைத்த வடை" என்றார் மாறுவேடப் பண்டிதர். அரசர், "அப்படியா! அதை விளக்குங்கள் பண்டிதரே" என்று கேட்க, மாறுவேஷப் பண்டிதர், "ரூபாய் நாணயம் வெள்ளாடையில் சுற்றப்படவில்லை; ஆனால், தயிர்வடை சுற்றப்பட்டிருக்கிறது. அது தயிராகிய ஆடையினால் பிரத்தியட்சமாக உடுத்தப்பட்டிருக்கிறது. அது நம்மை காப்பாற்றுவது. அது பூர்ண சந்திரனைப் போல் வட்டமானது. அது நான்கு வர்ணத்தாராலும் (புஜ்) புசிக்கப்படுகிறது. அதன் எண்ணமே ஒருவனை மகிழ்விக்கிறது. ஆகையால், தயிர் வடையைப் பற்றியே ஒருவன் தியானம் புரிய வேண்டும்; இடைவிடாமல் சாப்பிட வேண்டும்" என்று விளக்கினார்.

"பண்டிதரே! அற்புதம்! மற்றிருவர்களும் கூறியது நிச்சயமாகத் தவறேதான்., விடுமுறை பெற்றுப் போயிருக்கிறார் இரண்டாவது பண்டிதர் - உங்கள் அதிர்ஷ்டவசமாக, மூன்றாவது அரண்மனைப் பண்டிதராகத் தங்களை நியமிக்கிறேன்" என்று உத்தரவிட்டார்.

"நல்லது, அரசரே! அந்த மனிதன் தங்களைக் கொள்ளையடிக்க வந்தவன்; வெற்றி பெற்றான்" என்று கூறித் தமது மாறுவேஷத்தைக் களைந்து, "அரசே! என்னைத் தெரிகிறதா? தங்கள் அரண்மனையில் முதலாவதாக நியமிக்கப்பட்ட பண்டிதரின் நண்பர் நான். அவர் ஞானம் படைத்த உத்தமர். சுலோகத்தின் அவரது விளக்கம் மட்டுமே உண்மையானது. இந்தசுலோகம் மகா விஷ்ணுவை மட்டுமே குறிக்கிறது. சுலோகத்தைத் திருகி உங்களை மகிழ்விக்க வேண்டி அர்த்தம் கூறினேன். ஆனால், மகாராஜா! இது கூடாது. தாங்கள் அஞ்ஞானியாயிருக்கும் வரைக்கும், ஒவ்வொரு கபடனுடைய கையிலும் அடைமானப் பொருளாக விளங்குவீர்கள். ஞானியாக ஆவீர்களாக. முதல் பண்டித்ரை மீண்டும் அழையுங்கள். தாங்களே சாஸ்திரங்களைக் கற்றுக் கொள்ளுங்கள். அப்புறம் நீங்களே எதையும் தீர்மானித்துக் கொள்வீர்கள். யாருமே உங்களை ஏமாற்றமாட்டார்கள்" என்று கூறவே, அது அரசருக்கு நியாயமாகத் தோன்றியது.

இவற்றையெல்லாம் அரண்மனையிலிருந்து கவனித்துக் கொண்டிருந்த சுபோதனும், விவேகனும் தங்கள் முதல் பாடத்தை கற்றுக்கொண்டவர்களாக அரசரிடம் விடைபெற்றுப் புறப்பட்டார்கள்.

அவர்கள் காட்டு வழியே மறுநாள் காலையில் நடந்து செல்லும்போது ஒரு சாது ஓடிக்கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். "மரணம்! மரணத்தைக் காட்டிலும் மகா கொடியது. சிங்கத்தையோ, புலியையோ கண்டு நான் பயப்படமாட்டேன். ஆனால், இப்பணம் - உலகத்தில் மிகுந்த நாசத்தை விளைவிக்கிற பொருள்" என்று கூறி ஓடினான்.

திகைப்பும் வியப்புமடைந்தவர்களாக இருவரும் முன்னாலே சென்றார்கள். இரண்டு பை நிறைய பணத்துடன் நான்கு திருடர்கள் சிரித்துக்கொண்டும் கேலி செய்து கொண்டும் இருப்பதை கண்டார்கள். தலைவனுக்குப் பசி உண்டாயிற்று. தனது இரண்டு சகாக்களை உணவு கொண்டுவர அவன் அனுப்பினான். அவ்விருவரும் உணவு கொண்டுவரப் போனபின், தலைவனும் அவனது உபதலைவனும் கொள்ளைப் பொருளில் தமக்குக் கிடைக்கும் பங்கைப் பற்றிய பெருமிதத்தில் ஆழ்ந்தார்கள். சாத்தான் அவர்கள் இதயத்தைப் பற்றிக் கொண்டது. மற்றிருவர்களையும் கொன்றுவிட்டால், பணத்தில் மிகுந்த பங்கு தங்களுக்குக் கிடைக்குமென்ற எண்ணம் அவர்களுக்கு உதித்தது.

இதே வேளையில், உணவு வாங்கக் கடைக்குச் சென்ற இரு கொள்ளைக்காரர்களுக்கும் இதே எண்ணம் உதித்தது. தலைவனையும் உபதலைவனையும் கொன்றுவிட்டால், எல்லாப் பணத்தையும் நாமிருவருமே பங்கிட்டுக் கொள்ளலாமென்னும் எண்ணம்தான் அது. கடையிலிருந்து கொண்டுவந்த உணவிலே நஞ்சைக் கலந்துவிட்டார்கள். அவர்கள் காட்டுக்குள் போனார்கள். தலைவன், உப தலைவன் ஆகியோர் முன்னால் உணவை வைத்தார்கள். உடனே தலைவனும், உப தலைவனும் அவ்விருவர் மீதும் பாய்ந்து கொன்று போட்டார்கள். பணத்தில் பெரும்பகுதி தமக்குக் கிடைக்கப் போவது குறித்துப் பன்மடங்கு சந்தோஷத்தை அடையப் பெற்றவர்களாக உணவைப் புசிக்கலானார்கள். விஷம் அவர்களைக் கொன்றது.

சுபோதனும் விவேகனும் இந்தசோக நிகழ்ச்சிகளைக் கவனித்துக்கொண்டே இருந்து, பிறகு தமது வழியில் செல்லலானார்கள். "மனிதனுடைய ஆன்மாவையே கொல்லுவது பணம். இப்பணத்தின் முன் யமதேவன் எம்மாத்திரம்?" என்று அவர்கள் கருதலானார்கள்.

மற்றொரு நாள் தர்மசாலை ஒன்றில் அவர்கள் தங்கி இளைப்பாறிக் கொண்டிருந்தார்கள். தர்மசாலைக்கு முன்னால்

இரண்டு நண்பர்கள் பேசிக்கொண்டிருந்தார்கள். ஒருவர் சாஸ்திரி - மற்றவர் நவநாகரிக இளைஞர். ஒரு காலத்தில் அவ்விருவரும் ஒரே வகுப்பில் படித்த நண்பர்கள்.

சாஸ்திரிகளே! எங்கே போகிறீர்கள்?"

"கல்கத்தாவுக்குப் போகிறேன் - தர்ம சம்மேளனத்தில் கலந்துகொள்வதற்காக. நீங்கள் எங்கே போகிறீர்கள்?" என்றார் சாஸ்திரி.

நவநர்கரிக இளைஞர்:- நானும் கல்கத்தாவுக்குப் போகிறேன்.

"சம்மேளனத்திற்காகவா?"

"ஓ. நீங்களும் தர்ம சம்மேளனமும்! தங்களைப் போல என்னையும் பழங்காலப் பழக்கவழக்கங்களைக் கொண்டவனென்றா நினைக்கிறீர்கள்? இல்லை. சர்வதேச திரைப்படத் திருவிழாவுக்குச் செல்லுகிறேன். பழங்கால பழக்க வழக்கங்களை விட்டுவிட்டு வாழ்க்கையில் இன்பம் நுகரக்கூடாதா? தங்களைப் போன்றவர்கள் இருப்பதால் தான், இந்தியா இன்று பின்னணியில் தங்கியுள்ளது. அமெரிக்கா மற்றும் இதர மேல்நாடுகளைப் பாருங்கள். அவர்கள் முன்னேறிக்கொண்டே செல்லுகிறார்கள். ஆனால் நாகரிகத்திற்கு அப்பாற்பட்ட பழைய கோட்பாடுகளைப் பிடித்துத் தொங்கிக் கொண்டிருக்கிறீர்கள் நீங்கள். காலம் மாறிக் கொண்டே வருகிறது; அதுபோல உங்கள் நோக்கங்களும் மாறத்தான் வேண்டும். உங்கள் மதம், தத்துவம், வாழ்க்கையின் நோக்கம் கிழப் பருவம் அடைந்துவிட்டால், அவற்றைத் தூர.எறிந்துவிட வேண்டும்" என்றார் இளைஞர்.

"உம். தங்கள் தகப்பனார் எப்படி இருக்கிறார்? அவருக்கு வயது என்ன?" என்று சாஸ்திரி கேட்க, இளைஞர். "அவர் நலமாகத்தான் இருக்கிறார். எண்பத்தைந்து வயது இருக்கும்" எனவே, "தூர எறியத்தக்க கிழப் பருவமாயிருக்கிறார் என்று கருதுகிறேன்" என்று சாஸ்திரி கூறினார். உடனே இளைஞர் "என்ன மடத்தனமாகப் பேசுகிறீர்கள், சாஸ்திரிகளே!" என்று

ஒட்டம் பிடிக்கத் தொடங்கிய சாஸ்திரிகளை அடிக்கக் கோபத்துடன் ஓங்கினார் கையை.

இந்த உரையாடலைக் கேட்டுக்கொண்டிருந்த இரண்டு ஆன்மீக சாதகர்களும் புறப்பட்டுச் செல்லலானார்கள். வழியில் நிலக்கரியின் தூசி கண்ணில் விழுந்துவிட்டது சுபோதனுக்கு. இருவரும் கண் மருத்துவமனைக்குள் போனார்கள். டாக்டர் வெளியே போயிருந்தார். கண் சிகிச்சை செய்யப்பட்ட ஐந்து நோயாளிகள் அங்கே இருந்தார் கள். அவர்களுக்கு அறுவைச் சிகிச்சை செய்யப்பட்டிருக்கின்றது. தலையை அசைக்காமல் அமைதியாகப்படுத்துக் கொண்டிருக்க வேண்டுமென்று டாக்டர் கூறியிருந்தார். அவர்கள் கண்களுக்குக் பலமாகக் கட்டுகள் கட்டப்பட்டு இருந்தன.

அப்போது ஏதோ ஒன்று முதலாவது நோயாளியின் மீது குதித்தது. அவன் திடுக்கிட்டுக் குதித்து எழுந்து உட்கார்ந்தான். பிறகு அவன், 'ஓ, கடவுளே! தலையை அசைத்தால்கூட கண் பார்வை எப்போதும் வராமல் போய்விடும் என்று டாக்டர் கூறியிருக்கிறார். நான் எழுந்து உட்கார்ந்தும் இருக்கிறேன். எனது கண்பார்வை நிச்சயமாகப் போய்விட்டது. ஆனால் எனக்குப் பக்கத்தில் படுத்திருக்கும் நபருக்குக் கண் பார்வை ஏன் உண்டாக வேண்டும்? நான் குருடனாகப் போனால் அவனும் குருடனாகவே இருக்க வேண்டும்" என்று தனக்குள். எண்ணமிட்டவனாகப் பக்கத்திலிருந்த நபரை மூர்க்கமாக அசைத்தான். அந்த நபரும் எழுந்து உட்கார்ந்தார். இவ்விதம் இதர நோயாளிகளும் எழுந்து, சச்சரவிட்டுக் கொண்டிருந் தார்கள். டாக்டர் அங்கே வந்தார். அவர்களுடைய நிலைமைக்காகக் கவலைப்பட்டார். "நீங்கள் உங்களுடைய கண் பார்வையை இழந்துவிட்டதல்லாமல் பிறருடைய கண் பார்வையையும் கெடுத்துவிட்டீர்கள். எவ்வளவு பெரிய முட்டாள்தனமான காரியத்தைச் செய்தீர்கள்!" என்று கோபித்தார் டாக்டர். இரண்டு சாதகர்களும் தமக்குள், "நோயால் பார்வையற்றவர்கள் அல்ல, பொறாமையால் பார்வையற்றவர்கள் ஆகிவிட்டார்கள்" என்று கூறிக்கொண்டே தம் பயணத்தைத் தொடர்ந்தார்கள்.

நாவிதன் கடைக்கு அவர்கள் வந்தார்கள். சவரம் செய்துகொள்ள அங்கே சிலர் காத்துக்கொண்டிருந்தார்கள். தனவந்தராகிய சமூகத் தலைவர் ஒருவர் அங்கே வந்தார். சவரம் செய்து கொள்ளும்போது, அவருடைய வண்ணான் சாலை வழியாக அகோரமாக அழுதுகொண்டே செல்லலானான். "என்ன சங்கதி? ஏன் அழுகிறாய்?" என்று தனவந்தர் கேட்க, வண்ணான், "சேட்ஜீ! நான் என்ன சொல்லட்டும்! கந்தர்வசேனன் உயிர் போச்சு" என, தனவந்தர் "கந்தர்வசேனன் யார்?" என்று வினவ, வண்ணான் அதற்குப் பதில் கூற மனமோ புத்தித் தெளிவோ கொள்ளவில்லை. "ஓ, கந்தர்வசேனன் ஒரு மகத்தான பரோபகாரி. கந்தர்வசேனன் இல்லாமல் நான் எப்படிப் பிழைப்பேன்" என்று அழுதுகொண்டே போய்விட்டான்.

சமூகத்தலைவராகிய தனவந்தர், "கந்தர்வசேனன் பரோபகாரி; பெரிய மகாத்மாவாயிருக்க வேண்டும். நான்கூட அந்த மகாத்மாவுக்காகத் துக்கம் கொள்ள வேண்டும்" என்று தமக்குள் கூறிக்கொண்டே தலையை மொட்டை அடித்துக்கொண்டார். வீட்டுக்கு திரும்பிப் போகும்போது, போலீஸ் இன்ஸ்பெக்டர் வழியில் எதிர்ப்பட்டார். தலைவர் முகத்தில் துக்கப்படலம் தென்பட்டதைக் கண்டு வியப்படைந்த இன்ஸ்பெக்டர் அதன் காரணத்தைக் கேட்டார். சேட்ஜீ "பெரிய விபத்து; இன்ஸ்பெக்டர் சாஹிப்! கந்தர்வசேனன் எனும் மகாத்மா காலமாகிவிட்டார்" என்று பதில் கூறினார். சேட்ஜியின் உதாரணத்தைப் பின்பற்ற வேண்டுமென்று போலீஸ் இன்ஸ்பெக்டரும் தமது தலையை மொட்டையடித்துக் கொண்டார்.

அன்று பிற்பகலில் ராஜாவைப் போய்ப் பார்த்தார் சேட்ஜீ. ராஜா காரணம் கேட்க, ஷேட்ஜீ, "கந்தர்வசேனன் என்ற பெரிய மகாத்மா காலமானார்" என்று கூறினார். அந்த மகாத்மாவுக்காக நாடு முழுதும் துக்கம் கொண்டாட வேண்டுமென்று ராஜா பிரகடனம் செய்தார். துக்க உடை அணிந்தார். இதையெல்லாம் கவனித்த ராணி அரசரைப் பார்த்து, "கந்தர்வசேனன் யார்? நம் நாடு முழுதும் துக்கம்

பாராட்டத்தக்க அவ்வளவு பெரிய மகானா அவர்?" என்று வினவ, அரசர் போலீஸ் இன்ஸ்பெக்டரை வரவழைத்தார். இவ்விஷயத்தை விளக்குமாறு கேட்க, இன்ஸ்பெக்டர் தமக்கு ஒன்றும் தெரியாதென்று கூறி சேட்ஜீயைக் கூட்டிக்கொண்டு வந்தார். சேட்ஜீக்கும் ஒன்றும் விளக்கமாகத் தெரியாதென்று வண்ணானை அழைத்து வந்தார். அரசர் சபைக்கு வந்த வண்ணான் குய்யோ முறையோவென்று அழுதுகொண்டே, "கந்தர்வசேனன் உண்மையில் ஆத்மநாதன்" என்று கூறினான். "அந்த மகாத்மா எங்கே வசிக்கிறார்?" என்று கேட்க, வண்ணான் திகிலடைந்து, "மகாத்மா என்று யார் சொன்னது? கந்தர்வசேனன் என்னுடைய கழுதை. என்னுடைய கழுதையில்லாமல் நான் எப்படிப் பிழைப்பேன்?" என்று கூறி மீண்டும் அழலானான். அரசர் மிகுந்த கோபமடைந்து சேட்ஜீயையும் போலீஸ் இன்ஸ்பெக்டரையும் திட்டலானார்.

சுபோதனும் விவேகனும் இச்சம்பவத்தை அமைதியாகப் பார்த்துக் கொண்டிருந்து, "ஒரு கழுதைக்காக நாடு முழுதும் துக்கம் கொண்டாடச் செய்த முட்டாள்தனமே பெரும் முட்டாள்தனம். பார்வையற்றவன் மற்றொரு பார்வையற்றவனைத் தொடர்ந்து செல்வது போலிருக்கிறது" என்று கூறிக்கொண்டே வழி நடக்கலானார்கள். ரிஷிகேஷம் வந்து சேர்ந்தார்கள். ஸத்ஸங்கம் ஒன்று கூடியிருந்தது. சுபோதனும் விவேகனும் அதில் கலந்துகொண்டார்கள். சாதனை, ஞானம் ஆகியவை பற்றி குருதேவர் உபந்நியாசம் செய்து கொண்டிருந்தார்.

அன்புள்ள சாதகர்களே! இவ்வுலகில் பக்தி என்பது மிகப் பெரிய பொருள். ஒரு பக்தன் பகவானுக்கு உயர்வானவனாயில்லாவிட்டாலும் சமமானவனே. இதை ஒரு கதை மூலமாக விளக்குகிறேன்.

**பக்தனின் பெருமை :-** ஒரு காலத்தில் ஒரு கேள்வி எழுந்தது. "இப்பிரபஞ்சத்தில் மிக மிகப் பெரியது எது?" என்ற கேள்வி அது. முதலில் பூமி, "நான்தான் பெரியவன்,

ஏனெனில், மனித சமுதாயம், தாவரவர்க்கம், மிருக இனங்கள் எல்லாவற்றையும் நான் தாங்கிக் கொண்டிருக்கிறேன். புண்ணிய ஸ்தலங்களையும் புனித நதிகளையும் நான் அடக்கிக் கொண்டிருக்கிறேன்" என்று கூறிற்று. மகத்தான சர்ப்பமாகிய ஆதிசேஷன் பேசாமல் இல்லை. "பூமியைக் காட்டிலும் நான் பெரியவன்; ஏனெனில் சிரசின் மேல் பூமியையே நான் தாங்குகிறேன்" என்று ஆதிசேஷன் கூறினான். சிவபெருமான் வயிறு குலுங்கச் சிரித்தார்; அதனால் பிரபஞ்சமே அதிர்ச்சி அடைந்தது. "நான் இந்த ஆதிசேஷப் பாம்பைக் கழுத்தில் அணிந்துள்ளேன். ஆகையால், ஆதிசேஷனைக் காட்டிலும் நான் பெரியவன்" என்றார் சிவபெருமான். கைலாசப் பர்வதம் பேசத் தொடங்கி, "சிவபெருமானையும் அவருடைய குடும்பத்தையும் நான் என் உச்சிச் சிகரத்தின் மீது வைத்துக் கொண்டிருக்கிறேன். அதனால் நான் சிவபெருமானைவிடப் பெரியவன்" என்றது. இலங்கையரசனான இராவணன் தனது பத்து வாய்களால், "அமானுஷச் சக்தியினால் இக்கைலாசத்தைப் பெயர்த்தேன் நான். கைலாசத்தைக் காட்டிலும் நான் பெரியவன்" என்று கர்ஜித்தான். மகத்தான வானர மன்னனாகிய வாலி முன்னால் வந்து, "இந்தப் பத்துத் தலை மிருகம்! இவனை என் கக்கத்தில் அடக்கிக் கொண்டு வந்து என் மகனிடத்தில் விளையாட்டுப் பொம்மையாகக் கொடுத்தேன். ஆகையால், முடிவாக இராவணனைக் காட்டிலும் நானே பெரியவன்" என்றான். இப்போது ஸ்ரீ ராமருடைய முறை. அவர், "வாலியை நான் ஒரே அம்பால் கொல்லவில்லையா? எல்லோரைக் காட்டிலும் நான் பெரியவன்" என்றார். ஸ்ரீராமருடைய எளிய பக்தன் ஒருவன் பாவ - சமாதியில் மூழ்கிக் கிடந்தவன், சமாதி கலையப் பெற்றவனாக எழுந்து வந்து, "ஸ்ரீராமர் என்னால் சிறைப்படுத்தப்பட்டவர். மகத்தான பக்தியெனும் கயிறுகளால் அவரைக்கட்டி, எனது இதயத்தில் சிறைப்படுத்திவிட்டேன். என்னுடைய சிறைக்கைதி எப்படி என்னைக்காட்டிலும் பெரியவன் ஆவான்?" என்று நியாயம் பேசலானான். அந்தப்பக்தனைத் தடுத்துப் பேச யாரும் வரவில்லை! அவன் மீது மேன்மை உரிமை பாராட்ட எவருமே முன் வரத்

துணியவில்லை. எல்லோரைக் காட்டிலும் பெரியவன், பகவானையும் விடப் பெரியவன் அந்தப் பக்தனே ஆவான் என்பதை எல்லோரும் ஒப்புக்கொண்டார்கள். பகவானிடத்தில் செலுத்தப்படும் பக்தியின் மகிமை இத்தகையது.

**தவறான கோட்பாடு** : - அஞ்ஞானத்தின் காரணமாக, மனிதன் தன் தேகம், மனம் மற்றும் முக்கியத்துவமாகிய பிராணனைத் தான் எனக் கருதுகிறான். சித்தப் பிரமையடைந்தவனின் வேடிக்கைக் கதையைக் கேளுங்கள். கஞ்சா குடிக்கும் பழக்கமுள்ளவன் ஒருவன் இரும்பினால் ஆக்கப்பட்ட சிறு உரலையும் உலக்கையையும் எடுத்துக்கொண்டு திரிவான். மயக்கந் தரக்கூடிய பானத்தைத் தயாரித்துக் குடிப்பான். ஒரு நாள் ஆற்றின் கரையோரமாகப் போய்க் கொண்டிருக்கையில், கஞ்சா குடிக்கும் பழக்கமானது ஒரு மரத்தடியில் தங்கும்படி செய்தது. உடனே கஞ்சாவைத் தயாரித்தான், விழுங்கினான்; பிறகு உரலையும் உலக்கையையும் இடுப்பில் கட்டிக் கொண்டு குடிகாரன் தூக்கத்தில் ஆழ்ந்துவிட்டான். கஞ்சா அதாவது 'பங்கி' அடிக்கும் பழக்கமுள்ள இன்னொருவன் அப்பாதை வழியே சென்றான். பங்கியை அவன் வைத்திருந்தான். அக்குடியைப் பெரிதும் அவாவினான்; ஆனால், உரலும் உலக்கையும் அவனிடம் இல்லை. தூங்கிக்கொண்டிருந்த குடிகாரனின் இடுப்பில் அவை கட்டப்பட்டிருந்தன. தூங்கிக் கொண்டிருந்தவனின் இடுப்பிலிருந்து உரலையும் உலக்கையையும் மெதுவாக எடுத்து 'பங்கி' தயாரித்துக் குடித்தான். கஞ்சா வெறியின் காரணமாய், உபகரணங்கள் மற்றவனுடையதென்பதை ஞாபகப்படுத்திக் கொள்ளமுடியாமல் அவற்றைத் (உரலையும் உலக்கையையும்) தன் இடுப்புத் துணியிலே கட்டிக்கொண்டு படுத்தான். பின்னர், முதலாவது குடிகாரன் தூக்கத்தினின்று கண்விழித்துத் தன் உரலும் உலக்கையும் தனக்கு அடுத்தபடியாகப் படுத்துக்கொண்டிருந்தவனுடைய இடுப்பில் கட்டப்பட்டுள்ளனவென்பதைக் கண்டு கொண்டான். அவன் தனக்குள், "உரலும் உலக்கையும் என்னுடைய இடுப்பில் கட்டப்பட்டிருந்தன. அது உண்மையானால், நான் தூங்கிக்

கொண்டிருக்க வேண்டும். ஆனால், நான் கறுப்புச் சால்வையைப் போர்த்திக் கொண்டிருந்தேன். அவன் சிவப்புச் சால்வை போர்த்திக் கொண்டிருக்கிறான். கறுப்பு சால்வை மனிதனாக நான் இருந்தால், இவனைப் போலத் தூங்கிக் கொண்டிருக்க வேண்டும். அடடா! எனக்கு குழப்பமாக இருக்கிறது. உரலும் உலக்கையும் கூடிய மனிதனா அல்லது கறுப்புச் சால்வை கொண்ட மனிதனா, நான் யார்?'' என்றெல்லாம் எண்ணமிடலானான். போதை தீரும் வரையில் இப்பிரச்சினைக்கு தீர்வுகாண முடியவில்லை. பிறகு, தனக்கு அன்னியமான சில அம்சங்களைப் பற்றி வீணாகக் குழப்பிக் கொண்டிருந்ததை அவன் உணரலானான். அன்னிய அம்சங்கள் ஆத்மாவுக்குச் சொந்தமானதல்லவென்பதையும் அவை வெறும் உடைகளும் உடைமைகளுமே என்பதையும் அறிந்தான்.

குருவருள் :- தன் நிஜ சொரூபத்தை மறந்து, தேகமும் மனமும்தான் என்று தவறாகச் சாதிப்பதன் மூலம் மனிதன் துன்பமும் வேதனையும் அடைகிற போது, குருவானவர், அவனது சுயமான நிஜ சொரூபத்தின் தன்மைக்குத் தட்டி எழுப்பிவிடுகிறார்; இதுவே அஞ்ஞானத்திற்கும் அதனுடைய எண்ணற்ற தீய விளைவுகளுக்கும் முற்றுப்புள்ளியாகிறது. வண்ணானும் சிங்கமும் என்ற புல்லரிக்கும் கதையை உற்றுக் கேளுங்கள்.

ஒரு வண்ணான் துணிகளைத் துவைத்துக் கொண்டிருந்த தன் மகனைப் பார்த்து, ''மகனே! இரவுநேரம் நெருங்குகிறது. வீட்டுக்குத் திரும்ப ஏற்பாடு செய். இரவைப் பற்றி எனக்கு நிரம்பவும் பயமாக இருக்கிறது. சிங்கத்தையோ அல்லது புலியையோ நான் பொருட்படுத்தமாட்டேன். அவைகளுக்குப் பயப்படமாட்டேன்; ஆனால் இரவு என்றால் மகா பயமாக இருக்கிறது'' என்று போதனை செய்து துரிதப்படுத்தலானான். அருகேயுள்ள புதர் மறைவில் பதுங்கிக் கொண்டிருந்த சிங்கம் ஒன்று வண்ணானுடைய பேச்சைக் கேட்டதும் தனக்குள், ''இந்த இரவு என்பது எப்பேர்ப்பட்ட ஜன்மம்? இந்த மனிதன் கூறுவதிலிருந்து, அந்த இரவு காட்டு ராஜாவாகிய என்னை

விடப் பன்மடங்கு வலிமை படைத்த ஜன்மமாயிருக்க வேண்டுமென்று நான் யூகிக்கிறேன்" என்று சிந்திக்கலாயிற்று. முன்பின் தெரியாத இரவு பற்றிய பயம் அதன் நெஞ்சத்துள் நுழைந்து கொண்டது.

அன்று மாலை திரும்பி வரவேண்டிய கழுதை வராததால் அங்குமிங்குமாகத் தேடலானான் வண்ணான். அந்தி நேரத்திலே நன்றாகப் பார்க்க அவனால் முடியவில்லை; ஆனால் புதரிலே ஒதுங்கியிருந்ததோர் பிராணியைக் கண்டான். அது தன்னுடைய கழுதை எனக் கருதித் தன் கழியினால் பலமான அடிகள் இரண்டு கொடுத்தான். சிங்கம் தன் பயத்திலே உறுதிப்பட்டுத் தனக்குள், "பலசாலியான இரவு இவனாகத்தான் இருக்க வேண்டும். இறைவனுக்கு வணக்கம்! இரண்டு அடிகளோடு மட்டும் என்னை விட்டுவிட்டான்" என்று கூறிக்கொண்டது. அது எழுந்து நின்று வண்ணான் பின்னால் வீட்டுக்குச் சென்றது. அது சிங்கமென்று வண்ணான் பார்க்கவில்லை. அதை முற்றத்தில் கட்டிவிட்டுத் தூங்கலானான். சிங்கத்திற்கோ மகா தொந்தரவாயிருந்தது.

மறுநாள் பொழுது புலருமுன்னே, பெரிய பொதியைச் சிங்கத்தின் முதுகில் ஏற்றினான். இருட்டாக இருந்ததால், வண்ணான் அதைச் சிங்கமென்று கண்டு கொள்ளவில்லை. ஆற்றங்கரைக்கு அதை அழைத்துச் சென்றான். ஐயோ, பாவம்! சிங்கம் சாந்தமாக வண்ணானைப் பின் தொடர்ந்தது. வழியில் ஒரு சிங்கம் எதிர்ப்பட்டுச் சிரித்தவண்ணம் "இதென்ன இப்படிப் போகிறாய்? சிங்கமாயிருந்துகொண்டு ஒரு கழுதையின் வேலையைச் செய்கிறாயே! உனக்கு அவமானமாயில்லையா? அந்தசுமையைத் தூர எறிந்து விட்டு வா என்னோடு" என்று உத்தரவிட்டது. ஆனால் இந்தசிங்கம் அப்படி ஒன்றும் செய்யவில்லை. "அண்ணா, இந்தபயங்கரமான ஜன்மம் இரவு என்பது என்னை என்ன பாடுபடுத்தியதென்று உனக்குத் தெரியாது. பேசாமல் இரு. இன்றேல் உன்னையும் அது அடித்துவிடும்" என்றது. புதிய சிங்கம் இந்தசிங்கத்தின் முட்டாள்தனத்திற்காகப் பெரிதும்

நகைத்து, "ஏ, இங்கே பார். கர்ஜனை செய், ஒரு முறை, என்ன நடக்கிறது பார்" என்று புத்திமதி கூறவே, சிங்கம் கர்ஜித்தது. வண்ணான் பின்னாலே திரும்பினான். விடிகிற காலமாதலால் சிங்கத்தைப் பார்த்துவிட்டான். துணி மூட்டைக்காகக் கவலைப்படாமல் வண்ணான் எடுத்தான் ஓட்டம்! இரண்டு சிங்கங்களும் காட்டிற்குள் நடந்து மறைந்தன.

குருதேவர் சாதகனின் கண்களை இவ்விதம் திறக்கச் செய்தானதும், பிரமை பறந்தோடுகிறது. அதனுடன் மறைகின்றன அச்சமும் துக்கமும்! சுபோதனும் விவேகனும் தமக்குச் சத்சங்கம் வாய்க்கப் பெற்றமைக்காகப் பெருமகிழ்ச்சியடைந்தார்கள். குரு பௌர்ணமி (வியாச பூஜை) நாள் நெருங்குகிறதை அவர்கள் நினைவுபடுத்திக் கொண்டார்கள்.

அங்ஙனமே ஆத்மசாதகர்கள் இருவரும் தமது குருதேவரின் ஆஸ்ரமத்திற்குப் போனார்கள். ஆத்ம சாதகர்கள் அடைந்த அனுபவங்களைப் பற்றி நீதிகளைத் குருதேவர் போதிக்கலானார். முதலாவது, மூட மன்னன் தர்பாரில் நிகழ்ந்த சம்பவங்களைப் பற்றிக் குருதேவர் சொன்னார். பிறரைச் சீர்திருத்துவதற்கு முன், உன்னை நீ சீர்திருத்திக் கொள்க. பிறருக்கு நியாயம் வழங்க முயலுவதற்கு முன், மேலான ஞானத்தை நீ பெற்றுக் கொள்வாயாக. பிறகுதான் எது நன்மை, எது தீமை என்பதை நீ தெரிந்து கொள்வாய். மற்றவர் மூலமாக எதையும் நீ உணர முடியாது. உன்னுடைய சாதனையை நீயே செய்தாக வேண்டும்; ஞானியாகுக நீயே.

நான்கு திருடர்களின் சம்பவங்களைப் பற்றிக் கூறினார். மனிதனுக்குக் கொண்டுவரும் சொல்லொணாத் துயரங்கள் யாவும் பணமேதான். இதை நீங்கள் நிச்சயமாகத் தெரிந்து கொண்மீர்கள். பணம் என்பது மாயையின் மிகச் சக்திவாய்ந்த ஆயுதம்; மற்றொன்று காமம். மிக மிக உக்கிரமான விஷம் நிறைந்ததோர் பானையிலே, மாயையானது ஒரு சில இன்பத் துளிகளைத் தூவியுள்ளாள். அந்த விஷம் தான் பணமும் காமமும். இன்பத் துளிகளால் ஆசையூட்டப் பெற்ற மனிதன்

விஷத்தைக் குடித்து, கணக்கற்ற வேதனைகளை வரவழைத்துக்கொள்கிறான். ஞாபகத்தில் வைத்துக்கொள்க : மரணம் உன் தேகத்தை மட்டுமே கொல்லுகிறது. காமமும் பணமும் (பேராசையும்) இன்னும் ஆழமாகச் செல்லும் - ஆன்மாவையே கருகச் செய்யும். ஆன்மாவின் தூய்மையைத் திரும்பப் பெறுவதற்கு அனேக ஜன்மங்கள் ஆகும். அவை உன்னை ஒரு மிருகமாகச் செய்யும். உனக்கு அருளிய மகத்தான இம்மானிட ஜன்மத்திற்குத் தகுதிவாய்ந்தவன் நீ அல்லவென்பதைக் கண்டுகொண்டு இறைவன் உன்னைக் கீழ்த்தரமான ஜன்மங்களில் தள்ளி, இந்திரிய சுகங்களிலே அழுந்திப் புரளவிட்டுவிடுவார் - இறைவனுடைய கருணை உனக்கு மானிடப் பிறப்பை வழங்கும் வரை நன்னெறியாகிய சன்மார்க்கத்தைக் கடை பிடிக்க நீ விரும்பினால் காமத்தையும் பணத்தையும் புறக்கணிப்பாயாக.

நமது புராதன ஆன்மீகப் பண்பாட்டைக் குறை கூற வேண்டாம். தற்கால நாகரிகமானது நேர்மையின்மை, துயரம், வறுமை, சர்வவியாபகமான விசனமுமே கொண்டு வந்துள்ளது. நவ நாகரிகம் மனிதனை மிருகத்திலும் கேடுகெட்டவனாக மாற்றியமைத்துவிட்டது. விஞ்ஞானத்தின் மேலெழுந்தவாரியான மினுமினுப்பைக் கண்டு ஏமாறாதீர்கள். நமது நல்வாழ்வுக்கு உண்மையாய் உழைத்தவர்கள் புராதன மகரிஷிகளே ஆவார்கள். இப்போதும்கூட இந்த மகரிஷிகளின் வம்சத்தில் வந்தவர்களென நம்மை நாம் உரிமை பாராட்டுகிறோம். ஆனாலும், அந்த மகரிஷிகளுடைய நற்போதனைகளை நிந்திக்கிறோம். நிந்திப்பதில் பெருமை அடைகிறோம். இப்படிச் செய்வதால் இது நமது நல்வாழ்வுக்கு அனுகூலமாயிராது. லோகாயத விஞ்ஞானம் நம்முடைய உண்மையான நலத்தையும் சுபிட்சத்தையும் ஒருபோதும் கொண்டுவர மாட்டாது.

கண் நோயாளிகளின் பைத்தியக்காரச் செயல்களிலிருந்து நீங்கள் என்ன தெரிந்துகொள்கிறீர்கள்? மனிதன் இறங்கியுள்ள மிருகத்தனமான சுபாவ நிலையைக் காட்டுகிறது. தன்னைக்காட்டிலும் எவரேனும்

உயர்ந்தவராகவோ, மிகுந்த புகழ் வாய்ந்தவராகவோ, அதிகமான சுபிட்சத்துடன் வாழ்கிறவராகவோ காண அவன் சகிக்கமாட்டான். அவன் தனது சொந்த வாழ்க்கை நிலையை உயர்த்திக் கொள்வதைக் காட்டிலும் அதிகமாகப் பிறருக்குத் தீங்கு விளைவிப்பதிலே முயற்சி செய்வான். அழகிய புராதன காலப் போதனை ஒன்று எனக்கு நினைவு வருகிறது."தன் நலத்தைத் தியாகம் செய்து பிறருக்கு நன்மை புரிகிறவன் ஒரு பெரிய மனிதனே. தன் நலத்தைக் கஷ்ட நஷ்டத்திற்கு உள்ளாக்காமல் பிறருக்கு நன்மை புரிகிறவன் மனிதப் பிறவியே. தன் சொந்த நலத்திற்காகப் பிறரைக் கெடுப்பவன் மானுட உடையிலுள்ள ஒரு பிசாசு. எக்காரணமுமில்லாமல் பிறருக்குத் தீங்கு இழைக்கிறவனை என்னவென்று அழைப்பதென்றே நமக்குத் தெரியவில்லை!" - இதுதான் புராதன போதனை. தற்கால மனித சமுதாயத்திலே பெரும் பகுதியினர் அருவருக்கத்தக்க கடைசி வகுப்பைச் சார்ந்தவர்களே. ஒவ்வொருவனும் மற்றவனைக் கெடுக்கும் நோக்கத்துடன் இருந்தால் உலகம் என்ன நிலையில் இருக்குமென்பதை உணர்ந்து கொள்ளக் கஷ்டமா? எங்கு பார்த்தாலும் ஒரே குழப்பமும் துன்பமும் மயமாகவும் இருக்கும். உலகத்தில் இந்நிலையையே தற்சமயம் நாம் காண்கிறோம்.

அதிசயத்திலும் அதிசயம் என்னவென்றால், எவருமே ஓர் க்ஷண நேரமாவது நின்று சிந்தித்துப் பார்க்கிறதில்லை என்பதே. ஒவ்வொருவனும் மற்றவனைப் பின்பற்றுகிறான். ஒவ்வொருவனும் தன் அண்டை வீட்டுக்காரனைக் காட்டிலும் பிரசித்திபெறுவதில் முயற்சி செய்கிறான்; ஒவ்வொருவனும் கண்மூடித்தனமாக பிறருடைய அடிச்சுவட்டைப் பின்பற்றுகிறான் - தான் செய்வது சரியானதா அல்லது தவறானதாவென்பதை நினைக்காமலேயே. இளையோன் ஒருவன் பள்ளிக்குச் செல்லுகிறான், ஏனெனில் அவன் தகப்பனார் பள்ளிக்குச் சென்றார் - பக்கத்து வீட்டிலுள்ளவன் பள்ளிக்குச் செல்லுகிறான். அவன் உத்தியோகத்தை நாடுகிறான். ஏனெனில் ஒவ்வொருவரும் உத்தியோகத்தை நாடுகிறார்கள். அவன் திருமணம் செய்துகொள்கிறான், ஏனெனில் அவன் தகப்பனார், பாட்டனார், பாட்டனாரின்

தந்தை திருமணம் செய்து கொண்டார்கள். அவன் பணம் சம்பாதிக்கிறான், ஏனெனில் எல்லோரும் பணம் சம்பாதிக்கிறார்கள். அவன் வாழ்நாளை வீணாகக் கழிக்கிறான், ஏனெனில் அதைத்தவிர வேறு எதைச் செய்வதென்று அவனால் புரிந்துகொள்ள முடியவில்லை அவனுக்கு வாழ்க்கை என்றால் பிறப்பது, குழந்தைகளைப் பெற்றெடுப்பது, கிழப்பருவம் அடைவது, கல்லறைக்குச் செல்லுவது ஆகிய சம்பவங்களைக் கொண்டதென்று அர்த்தமாகிறது. கதையிலுள்ளவாறு, கந்தர்வசேனன் இறந்ததும் ஒருவர் பின் ஒருவராக அரசன் வரைக்கும் எல்லோரும் துக்கம் கொண்டாடுகிறார்கள்! ஆனால் உண்மையை நாடுவோர்கள் அப்படி அல்ல. ஒவ்வொரு படித்தரத்திலும் அவன் நின்று சிந்தனை செய்வான்; விவேகம் அடைவான். பிறகு, அவன் உலக வாழ்க்கையைத் துறந்து ஆன்மீக வாழ்வைத் தழுவுகிறான்; அவன் ஞானி.

சாதகன் பக்தியைப் பயிலுகிறான். மிகப் பெரியவன் யார் என்ற கதையில் உள்ளபடி, பகவான் உண்மையான பக்தனின் அன்பன் ஆகிறான்!

பக்தியும் விவேகமும் விரைவிலே சாதகனிடத்தில் வளர்ச்சி பெறும்போது, உடல், மனம், பிராணன் முதலியன மேலே மூடிக் கொண்டிருக்கும் மாயமான உறைகளென்று கொண்டு அவற்றையே தனது நிஜ சொரூபமென்று இத்தனை காலமாகத் தவறாகக் கருதிவிட்டதைக் கண்டுகொள்கிறான். தன் நிஜ சொரூபத்தைப் பற்றியும், மாயையின் நிலையைப் பற்றியும் அவன் புத்தியில் தெளிவாகத் தெரிகிறது. நிஜ சொரூபத்தை சாக்ஷாத்கரிப்பதற்குத் தடை செய்யும் மாயையின் நிலையையும் உணருகிறான். இதைத்தான் நாம் 'பங்கி' குடிப்பவர்களின் கதையிலிருந்து அறிகிறோம்.

கடைசியில், இரண்டு சிங்கங்கள் என்ற கதையிலிருந்து நாம் என்ன தெரிந்து கொள்ளுகிறோம்? மர்மமான இரவு பற்றிய சிங்கத்தின் அச்சத்தைப் போல, நம்மிடம் உள்ள அஞ்ஞானப் பிடிப்பு அவ்வளவு வலிமையும் சக்தியும்

வாய்ந்ததாக இருக்கிறது. இந்த அஞ்ஞானப் பிடிப்பை அகற்றுவதற்கும் நமது நிஜ சொரூபத்தைச் சுட்டிக்காட்டுவதற்கும் 'சிவோஹம், சச்சிதானந்த ஸ்வரூபோஹம்'' என்று கர்ஜனை புரியப் பக்கத்தில் நமது துணையாகவும் வழிகாட்டியாகவும் நிற்பதற்கும் ஒரு குருவை, மற்ற சிங்கத்தைப் போல நாடுகிறோம். இவ்வளவு காலமாக நாம் சுமந்து கொண்டிருக்கிற கவலை, துக்கம், மாயை, ஏக்கம் ஆகியவற்றால் ஆன சுமையானது- வண்ணான் துணிகளைச் சுமந்துகொண்டிருந்த சிங்கத்தைப் போல - நமது சொந்த ஆனந்த வாசஸ்தலத்தை அடையத் துள்ளிக் குதிக்கும்போது நம்மைவிட்டுத் தூரவிழும்.

குழந்தைகளே! ஆத்மாவைத் தட்டி எழுப்பும் இந்த அனுபவங்களை வெற்றிகரமாகப் பெற்று தீட்சை பெறுவதற்கு உண்மையிலேயே தகுதி வாய்ந்தவர்களாக ஆகிவிட்டீர்கள்! வாருங்கள். சந்நியாச ஆஸ்ரமத்திய தீட்சை புரிகிறேன். உங்கள் மீது நல்லாசிகளை பொழியுமாறு எல்லாம்வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

## 102. ஓர் வேடனின் ஞானோதயம்!

மஹாபாரதத்தில் வியாத கீதை என்ற பகுதி உண்டு. அது தர்ம உபதேசமாக அமைந்துள்ள நூல். சன்மார்க்கசீலனான வேடன் ஒருவன் தன் பெற்றோர்களைப் பக்தி சிரத்தையுடன் பேணி வரும் கடமையைச் சாதித்ததன் மூலம் ஆத்மபரிபூரணம் அடைந்தான். அவன் பின் வருமாறு கௌசிக முனிவரிடம் பேசிக் கொண்டிருந்தான்.

வெளி உலகத்து விஷயங்களை உணர்ந்து கொள்ளும் பொருட்டு முதன்முதலில் மனோ இயக்கம் தொடங்குகிறது. பின்னர் உயிர்களிடத்திலே காமமும் கோபமும் பிறக்கின்றன.

குறிக்கோளை நிறைவேற்றும் பொருட்டு ஒருவன் இடையறாமல் கர்மங்களில் ஈடுபடுகிறான். இந்திரியங்களின்

மூலம் அவன் இன்பமூட்டும் காட்சிகளையும் சுகந்தமான நறுமணங்களையும் அனுபவிக்கிறான்.

பிறகு பற்று ஏற்படுகிறது. பிறகு பகைமை உண்டாகிறது. பின்னர் இவற்றைத் தொடர்ந்து மோகமும் பேராசையும் சூழ்ந்துவிடுகின்றன.

பேராசை நிறைந்து, காமத்தாலும், பகைமையாலும் தூண்டப்பட்டவன் தர்ம நெறியிலே தன் மனத்தைச் செலுத்த இயலாதவனாகிறான். அல்லது அவன் தர்மத்தைப் பின்பற்றுகிறான் அகங்காரத்துடன்.

மனக்கோணலுடன் தர்மத்தைக் கையாளுகிறான். மனக்கோணலுடன் செல்வத்தை நாடுகிறான். அதர்ம வழியில் ஈட்டிய செல்வத்தினைக் கருதி புத்தியானது மகிழ்ச்சியடைகிறது. பிறகு பாபங்களைச் செய்கிறான் நண்பர்களும் அறிவாளிகளும் தடுத்தும்கூட. ஸ்ருதிகளை அறிந்து அவற்றிலிருந்து மேற்கோள்களைக் கூறுகிறான். ஆனால், ஸ்ருதிகளின் சட்ட விரோதமாக வாழ்க்கை நடத்துகிறான். பந்தபாசத்தினால் ஏற்பட்ட மூவகையான ஆசைகளிலே மூழ்கிக் கிடக்கிறான்.

பாபகிருத்தியங்களைப் பற்றியே அவன் சிந்திக்கிறான். பாவங்களையே பேசிப் பாவச் செயல்களையே செய்கிறான். அதர்மமே வடிவெடுத்தவனிடத்தில் பெருந்தன்மையான பழக்கங்கள் பாழடைந்து போகின்றன. அப்பாபிகள் தம்மைப்போன்ற மனப்பான்மையுள்ளவர்களைச் சிநேகம் பிடித்துக் கொள்ளுகிறார்கள். அதனால், அவர்கள் துக்கத்தால் வாடுகிறார்கள்; மறு உலகத்திலும் துக்கத்தையே அடைகிறார்கள். இதெல்லாம் பாவ மனிதனைப் பற்றி.

ஒரு தர்மத்தைப் பற்றிய விவரங்களை அறியுங்கள். தர்மவான் தனது புத்தியினாலே எல்லாவிதமான துர்க்கிருத்தியங்களையும் தீமைகளையும் முன் கூட்டியே தெரிந்துகொள்கிறான். தர்மநெறி கைப்பிடித்துள்ளவன் சுகத்திலாயினும் சரி, துக்கத்திலாயினும் சரி சமநிலை

கொள்கிறான். முனிவர்களுக்குத் தொண்டுபுரிகிறான். முனிவர்களோடு தொடர்பு கொள்வதால், தர்மத்திலே பதிவு கொண்ட புத்தியை வளர்க்கிறவனாகிறான்.

இவ்வுலகம் முழுமையும் (இந்தபிரபஞ்சம்) மகத்தான பூதங்களாகத் தோற்றுவித்துக் கொண்டிருக்கும் பிரம்மனே தவிர வேறல்ல. இந்த நித்தியத்துவ பிரம்மனை அடைவது கடினம். இப்பிரபஞ்சம் இதைத் தவிர வேறொன்றுமல்ல.

தாமஸ குணம் மயக்கத்தை ஏற்படுத்துகிறது. ராஜஸ குணம் சுறுசுறுப்பைத் தூண்டுகிறது. ஆனால் ஸத்வகுணமானது மிகவும் சிறந்தது; ஏனெனில் அது ஒளியும் தூய்மையும் வாய்ந்த வடிவத்தைத் தாங்கியது. அவித்தை நிறைந்தவன், மட்டி, நித்திரை மயக்கமுள்ளவன், அறிவில்லாதவன், கட்டுக்கடங்கா இந்திரியங்களைக் கொண்டவன், கோபி, மோசஞ் செய்பவன், சோம்பேறி, தாமஸ குணம் படைத்தவன். ரஜோகுணம் படைத்தவன் வாக்குச் சாமர்த்தியம் வாய்ந்தவன், அலுவல்களைச் செய்வதில் திறமைசாலி, முக்கியத்துவம் வாய்ந்தவன், ஆசைகள் நிறைந்தவன், தற்பெருமையும் அகங்காரமும் கொண்டவன். ஸத்வகுணம் படைத்தவனோ ஞான ஒளியும் புத்தியும் வாய்ந்து, தைரியவானாகவும் ஆசையும் கோபமும் அற்றவனாயும் பொறாமையில்லாதவனாயும் தன்னடக்கம் கொண்டவனாயும் விளங்குகிறான்.

## 103. தன்னா பகத்!

பஞ்சாபிலே நூறு ஆண்டுகளுக்கு முன் ஒரு விவசாயி வசித்து வந்தான். அவன் பெயர் தன்னா பகத் என்பது. படிப்பு வாசனையே இல்லாதவன். ஆனால் பக்தி சிரத்தையுடன் கூடியவன். எளியவன், கடவுளுக்குப் பயந்து நடப்பவன். திறந்த மனம் படைத்தவன்.

ஒரு முறை அவன் ஒரு மகானைச் சந்தித்தான். சாலிக்ராம் வைத்துப் பூஜை செய்து கொண்டிருந்தார் அந்த

மகான். தன்னா பகத் மகானைப் பார்த்து, "பூஜிக்கத்தக்க மகானே! தாங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?" என்று வினவினான். அதற்கு அந்த மகான், "ஹரிபகவானை இந்த விக்கிரகத்தில் பூஜிக்கிறேன்" என்றார் தன்னா பகத் "சுவாமி! விக்கிரகம் தந்தருளுங்கள்" என்று கெஞ்சினான். அந்த மகான் ஒரு பெரிய விக்ரகத்தைக் கொடுத்து, "இப்பெரிய விக்கிரகத்தைப் பூஜை செய்" என்று கூறி பூஜை செய்யும் கிரமத்தையும் விளக்கினார்.

அந்த விக்கிரகத்தைக் தன்னா தன் வீட்டுக்குக் கொண்டுபோய் மிகுந்த பக்தியோடு பூஜை புரியலானான். உணவை மறந்தான். விக்ரகத்தின் முன்னால் உணவு படைத்துவிட்டு, 'எனது நைவேத்தியத்தை ஏற்றுக் கொள்ளாதவரை உணவைப் புசிக்க மாட்டேன்" என்று வைராக்யம் சாதிக்கலானான்.

இந்தத்தீர்மானத்தில் உறுதி வைத்தான். ஸ்ரீ கிருஷ்ண பகவான் விக்கிரகத்தினின்று தோன்றி உணவைப் புசிக்கலானார் மகிழ்ச்சியாக. பக்தியும் சிரத்தையும் மட்டுமே தேவை. இத்தகைய பலமான நம்பிக்கை, படிக்காத பக்தர்கள் உள்ளத்திலே பதிந்துள்ளது - M.Sc., Ph.D., அல்லது D.Litt. ஆகிய பட்டதாரிகளின் உள்ளங்களில் அல்ல. தன்னா பகத்தின் பக்தியின் பெருமையே பெருமை!

## 104. ஒரு மண்டையோட்டின் ஞானம் (புராதன சீன தேசத்துக் கதை)

சாங்ஜா என்பவர் சலவை செய்யப்பட்ட வெறும் மண்டையோட்டைக் கண்டார். அது முன்னைய வடிவத்தில் மாறாமல் இருந்தது. சவாரிச் சவுக்கு அவருடைய கையில் விளங்கிக் கொண்டிருந்தது. அவர் அந்தசவுக்கினால் மண்டையோட்டை அடித்தவண்ணம், "பேராசை பிடித்த நகரவாசியாக இருந்து அளவிட முடியாத சம்பாத்தியத்தினால் இத்தகைய கதிக்கு உட்பட்டவனா நீ? தேசத்தைப் பாழாக்கிய

பிறகு ஏற்பட்ட குழப்பத்தாலே சிக்கி மடிந்த அமைச்சனா? அவமானந் தாங்க முடியாமல் மரண சாசனப் பத்திரம் எழுதிக் கொடுத்தவனா? குளிரால் தாக்குண்டு பசியால் வாடி வதங்கி மாண்ட ஒரு பிச்சைக்காரனா? அல்லது இயற்கை நியதியால் எய்திய வயோதிகப் பருவத்தின் பயனாக இந்நிலையை அடைந்தவனா? நீ யார்?'' என்றார்.

இந்தகேள்வி முடிந்ததும், அம்மண்டையோட்டை எடுத்துத் தமது தலையின் அடியில் தலையணையாக உபயோகித்துப் படுத்துக் கொண்டார். இரவு நேரம் வந்தது. அவருடைய கனவில் அந்தமண்டையோடு வந்து பேசத் தொடங்கி, "ஐயா! நீங்கள் நன்றாகப் பேசினீர்கள். இறக்கும் சுபாவம் படைத்த மக்களைப் பற்றியும் அவர்களுடைய துயரங்களைப் பற்றியுமே தாங்கள் குறிப்பிட்டீர்கள். மரணத்தில் இவற்றைப் பற்றிய தொல்லைகள் இல்லை. மரணத்தைப் பற்றித் தாங்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளப் விரும்புகிறீர்களா?'' என்று வினவ, சாங்ஜா "ஆம்" என்று பதிலியம்பியதும் மண்டையோடு பேசலாயிற்று.

"மரணத்திலே, மேலானச் சக்கரவர்த்தியோ, கீழான குடிமக்களோ கிடையாது. நான்கு பருவ காலங்கள் இயங்குதல் என்பதும் தெரியாது. நமது வாழ்வு நித்தியத்துவத்தால் சூழப்பட்டதாகவே மிளிரும். மக்களிடையில் விளங்கா நிற்கும் மன்னர் பெருமானுக்கு வாய்க்கும் ஆனந்தம் தாம் அனுபவக்கிற ஆனந்தத்திற்கும் மிஞ்சாது'' என்று உரைத்தது.

சாங்ஜாவுக்கு இது திருப்தியாகத் தோன்றவில்லை. மேலும் அவர் பேசத் தொடங்கி "உன்னுடைய சரீரம் மீண்டும் பிறப்பு அடையவும் எலும்பும் மாமிசமும் பொருந்தி உருவாகவும் கடவுளை நான் வற்புறுத்திக் கேட்டால், நீ உனது பெற்றோர், மனைவி, சிநேகிதர்கள் ஆகியோரிடம் திரும்பிப் போகலாம். இதற்கு நீ சம்மதிக்கிறாயா?'' என்றார்.

அதற்கு அந்த மண்டையோடு கண்களைத் திறந்து புருவத்தைச் சுளுக்கிக்கொண்டு, "ஓர் அரசனுடைய ஆனந்தத்தைக் காட்டிலும் அதிகமான ஆனந்தத்தை உதறித்

தள்ளிவிட்டு, மீண்டும் மிருத்யவத்துவத்திற்கு (மரணமடையும் சுபாவத்திற்கு) திரும்பி உழல்வதா?" என்று கேட்டது.

அமிருத நிலையிலுள்ளவர்கள் மாத்திரமே ஆனந்தமாயிருக்கிறார்கள்; மற்றவர்கள் அல்ல.

## 105. ஞான ஒளி - தூஷணையின் வெகுமதி!

தயாசிந்து பூரி ஸ்தலத்திலே சாலைகள் நெடுக நடனம் புரிந்து கொண்டிருந்தார். அவருக்குப் பசி வந்தது. ஒவ்வொரு நாளும் ஒரு கோப்பைப் பால் மாத்திரமே பருகுவார். பால் வேண்டுமென்று பிறரிடம் பிச்சை கேட்கும் நேரம் தவிர, மற்ற நேரத்திலெல்லாம் ஜகந்நாத சுவாமியின் திருநாமங்களையும் மகிமைகளையும் பாடுவதிலும் ஆடுவதிலும் அந்த பக்திப் பெருக்கிலே மக்களை ஆடும்படி செய்வதிலுமாகச் எல்லாக்காலமும் பகவானின் பக்தியிலே ஆழ்ந்து கொண்டிருந்தார்.

பக்கத்து வீட்டிலே இளம்பெண் ஒருத்தி தாழ்வாரத்தைச் சாணத்தால் மெழுகிக் கொண்டிருந்தாள். அங்கே தயாசிந்து போனார். "தாயே, ஒரு கோப்பைப் பால் உதவுங்கள். எனக்குப் பசியாயிருக்கிறது" என்று வேண்டினார். அதுதான் கடைசித் துரும்பாகப் போனது. அதிகாலையில் எழுந்து, பசுக்களின் வேலைகளைக் கவனிப்பதிலும் அரை டஜன் குழந்தைகளைக் குளிப்பாட்டி ஆடை உடை அணிவிப்பதிலும் தன் கணவனுக்குக் காலையுணவு தயாரிப்பதிலுமான குடும்பக் கடமைகளை நிறைவேற்றிக் கொண்டிருந்தாள். இப்போது மெழுகிக் கொண்டிருக்கும் போது, ஒரு குழந்தை அவள் கூந்தலைப் பிடித்து இழுத்து கொண்டிருக்க இன்னொன்று அவள் பக்கத்திலே அமர்ந்து பால் பருகிக் கொண்டிருந்தது. அவள் பல பக்கங்களிலும் கண்கூடாகத் துன்புறுத்தப்பட்டாள். அவள் துப்பாக்கி போல் வெடித்தாள். தயாசிந்து அந்த வெடிக்கு இலக்கு ஆனார்.

"ஒன்றுக்கும் உதவாத பிச்சைக்காரனே! வெளியே போ. இக்குடும்பத்திற்காகவும் குழந்தைகளுக்காகவும் அதிகாலையில் எழுந்து (செக்கு மாடு போல) உழைத்துக் கொண்டிருக்கிறேன். சோம்பேறியே, என் வேதனைகளுக்கு வட்டியாக நீ முளைத்து வந்தாய்! இந்தா, இதை எடுத்துக்கொள்" என்று கூறிக் கொண்டே, அப்பெண் சாணத்தால் மெழுகிக் கொண்டிருந்த அழுக்குப்படிந்த, துர்நாற்றம் வீசுகிற கந்தல் துணியை எடுத்து தயாசிந்துவின் முகத்தைக் குறியாக வைத்து வீசினாள். கந்தல் துணி தயாசிந்துவின் மார்பிலே சரேலென வந்து வீழ்ந்தது.

தயாசிந்துவுக்கு மகிழ்ச்சி உண்டாயிற்று. "பகவானே! இன்று காலையில் எவ்வளவு அதிசயமான பொருளைத் தந்தாய்! தங்களுக்கு மகிமை! மகிமை!" என்று பிரார்த்தனை செய்தார். பாலை விரும்பிக் கேட்டதை முற்றிலும் மறந்தார். ஆடிப்பாடிக் கொண்டே கடற்கரைக்குச் சென்றார். கந்தல் துணியை அதில் சுத்தமாகத் தோய்த்தார். அதை உலர்த்தினார். அழகான திரியாகத் திரித்தார். கொஞ்சம் நெய் எடுத்துத் திரியிலே பூசினார்.

ஜகந்நாத சுவாமி கோவிலில் அன்று மாலை தீபாராதனை நடந்து கொண்டிருந்தது பக்தர்கள் கூட்டத்திலே தயாசிந்து கூடினார். பகவானுக்கு நைவேத்தியமாகத் திரியைக் கொண்டு வந்திருந்தார். அதைக் கொளுத்தி, பக்தர்கள் வியப்புறும் வண்ணம் பகவான் சந்நிதியில் தீபாராதனை காட்டலானார். பகவானிடம் வைத்துள்ள (தயாசிந்துவின்) விசேஷ பக்தியை அறிந்த மக்கள் இதை எதிர்க்கவில்லை. தயாசிந்து பக்திப் பரவசத்தில் ஆழ்ந்தார். அவரைச் சுற்றிலுமுள்ள மக்கள் பகவானுடைய திருநாமங்களைப் பாடி மகிழ்ந்தார்கள்.

இளம்பெண் ஒருத்தி மெய்ம்மறந்த நிலையில் கூட்டத்திலே வந்து புகுந்தாள். பைத்தியக்காரியைப் போல் தாறுமாறாகச் சரிந்த கூந்தலுடன் பின்னால் ஆடை தரையில் புரள உள்ளே ஓடிவந்தாள். "ஹே, ஜகந்நாதா! ஹே, ஜகந்நாதா! ஹே, கிருஷ்ணா! " என்று கூக்குரலிட்டுக் கொண்டிருந்தாள்.

தயாசிந்துவைப் பார்த்த உடனே, அவள் குதித்துக் கீழே விழுந்து தயாசிந்துவின் திருவடிகளிலே சரண் புகுந்தாள். அவள் உடம்பு முழுதும் நடுங்கியது; ஆனந்தமான புன்முறுவல் ஒன்று தயாசிந்துவின் வதனத்தை ஒளி வீசச் செய்தது.

பரவசப்படுத்தும் இக்காட்சியைக் கண்டுகளித்த பக்தர்கள் இந்த இளம் பெண் ஒரு கணத்திலே பகவானின் மகத்தான திருவருளைப் பெற்றுவிட்டாளென்று உணரவே இல்லை. மத்தியான உணவைச் சமைத்து முடித்தாள். தொட்டிலுக்குத் தனது கடைசிக் குழந்தையைக் கொண்டு போனாள். தொட்டிலில் அதைப் படுக்க வைக்கவில்லை ஆனால் கீழே விட்டுவிட்டாள். முன்னால் மிரள மிரளப் பார்த்தாள். அப்படியே முழங்காலிட்டு அமர்ந்தாள். வயதடைந்த குழந்தைகளால் இதைப் புரிந்துகொள்ள முடியவில்லை; பயத்தால் அவர்கள் கூக்குரல் போட்டார்கள். அதைப் பொருள்படுத்தவில்லை அவள். கண்ணீர் தாரை தாரையாகக் கன்னங்களின் வழியே வழிந்து கொண்டிருந்தது. ஒரு க்ஷணநேரம் அவள் பேசாமல் மௌனம் சாதித்தாள். அவளுடைய இதயத்திலே இறைவனின் ஞான ஒளி ஜ்வலித்தது. அதிலே அவள் ஜகந்நாத பகவானைத் தரிசித்தாள்; முகத்தில் எறிந்த கந்தல் துணியை ஞான ஒளி வீசும் பந்தமாக உருமாற்றிப் ◦ பிடித்துக் கொண்டிருந்த தயாசிந்து பிச்சைக்காரனையும் கண்டாள். பயங்கரமாக "ஹே, ப்ரபோ! பிராணநாதா!" என்று கூக்குரலிட்டாள். அவள் கணவனும் பெற்றோரும் மற்றோரும் சூழ்ந்து கொண்டார்கள்; அவர்கள் முகங்கள் அவளுக்கு ஒரு பொருளே அல்ல. அது மட்டுமல்ல. உற்றார் உறவினர்களை அறியும் பார்வைகூட அவள் முகத்தில் இல்லை. அவள் வெளியே பாய்ந்தோடினாள்; எவரும் அவளைத் தடுக்கத் துணியவில்லை.

இருவரிடையில் ஒரு வார்த்தைகூட பேசப்படவில்லை கருணையே நிறைந்த தயாசிந்துவின் கண்களிலிருந்து அப்பெண் கீழ்க்கண்ட செய்தியை வாசித்தாள்:-

"பக்தன் எதையும் இறைவனின் ஆசீர்வாதமாகப் பெறுகின்றான். தனக்குக் கிடைத்ததெல்லாம் பக்தன் பகவானுக்குச் சமர்ப்பிக்கிறான். பகவானுக்கு அந்நியமாகப் பக்தன் வசிப்பதில்லை. பகவானின் பக்தியிலே மூழ்கியிருப்பதற்கும் பகவானுக்குச் சேவை புரிவதற்குமே பக்தன் வசிக்கிறான். ஒரு கோப்பைப் பால் அவனுக்குக் கொடுத்தால், அது பகவானைப் போய்ச் சேரும். அவன் முகத்தில் கந்தல் துணியை வீசி எறிந்தால், அதுகூட ஆனந்தமாக ஆண்டவனுக்குப் படைக்கப்படும். தன்னுடன் தொடர்பு கொள்ளும் எல்லோரையும் ஒரு பக்தன் தூய்மைப்படுத்தி ஞான ஒளி புகுத்தி மாற்றி அமைக்கிறான்."

அவள் தயாசிந்துவுக்குப் பிரதான சிஷ்யை ஆனாள்.

## 106. யுதிஷ்டிரரும் கலியுக உதயமும்

மகாபாரத யுத்தத்தின் பின், தமது அவதாரத்தின் உத்தேசம் நிறைவேறிவிட்டதெனக் கண்ட ஸ்ரீ கிருஷ்ண பகவான் நித்தியத்துவமான தமது வாசஸ்தலத்திற்கு எழுந்தருளலானார். பகவான் காணாமற்போன செய்தியைப் பாண்டவர்களுக்கு அர்ச்சுனனே தெரிவித்தான். பஞ்சபாண்டவர்களும் துக்கத்தால் வாடியவர்களாக, தமக்குரியன எல்லாவற்றையும் தருமமாக வழங்கிவிட்டு மகாப்பிரஸ்தானத்திற்குத் தயாராக்கிக் கொள்வதெனத் தீர்மானித்தார்கள்.

ஒருநாள் மாலை யுதிஷ்டிரருடைய அரண்மனைக்குள் இரண்டு நபர்கள் வந்தார்கள். அவர்களில் முதலாவது நபர், "ஐயா! இவரிடமிருந்து நான் கொஞ்சம் நிலத்தை விலைக்கு வாங்கினேன். அதை நான் உழுது கொண்டிருந்தேன். திடீரென்று தங்கப் பாத்திரம் ஒன்றைக் கண்டெடுத்தேன். அதில் தங்க மோதிரங்கள் நிறைந்திருந்தன. இந்த நிலம் அவருடையது. ஆதலால் இத்தனை குவியல் அவருக்குச் சேர்ந்தது. இதை ஏற்றுக்கொள்ள இவர் மறுக்கிறார்.

தயவுசெய்து இதை ஒப்புக்கொள்ளுமாறு இவரை வற்புறுத்துங்கள்" என்று புகார் கூறினார். மற்றவர் "ஓ. மகாராஜா! நிலத்தைப் பாகம் பாகமாயில்லாமல் முழுதையும் விற்றேன் இவருக்கு. நிலத்திலே (மேலோ அல்லது கீழோ) கிடைத்தது அவருக்கே சொந்தமானது. தங்கத்தை நான் ஒப்புக் கொள்ளமாட்டேன்" என்று கூறினார்.

சமீபத்திலே கலியுகம் பிறக்கப் போவதை யுதிஷ்டிரர் அறிந்து கொண்டார். ஒரு வாரம்கூட இல்லை. யுதிஷ்டிரர், "நண்பர்களே! பத்து நாள்களுக்குப் பிறகு இவ்வழக்கிற்குத் தீர்ப்பு கூறுகிறேன். பத்து நாள்களுக்குப் பிறகு வாருங்கள்" என்று மொழிந்தார்.

கலியுகம் உதயமானதும், மக்களின் மனோபாவம் மாறிவிட்டது. தங்கப் பொக்கிஷத்தின் உரிமையை மறுத்த இரண்டு நபர்களும் இப்போது பேராசைப்பட்டு அதை ஒவ்வொருவரும் தாமே பெற வேண்டுமென விரும்பினார்கள். அவர்களிடையில் தொடர்ந்து சண்டையும் நடந்து கொண்டிருந்தது. பின்னர், ஒரு நண்பர் நியாயத் தீர்ப்புக்காகத் தர்மபுத்திர மகாராஜாவிடம் அவர்கள் போக வேண்டுமென்று யோசனை கூறினார்.

இரண்டு நபர்களும் யுதிஷ்டிர மன்னரிடம் போய்த் தங்கள் வழக்கைத் தெரிவித்தார்கள். அவர்களின் அடையாளத்தை யுதிஷ்டிரர் அறிந்து கொண்டார். பணம் தமக்குச் சேர்ந்ததல்லவென்றும் அது மற்றவருக்குச் சேர்ந்ததென்றும் வாதாடிய அதே நபர்கள் இப்போது அந்தப்பணத்திற்காகச் சண்டையிடுகிறார்கள் என்று அவர் நினைவுபடுத்திக் கொண்டார். ஆகவே, கலியுகம் பிறந்துவிட்டதென்று முடிவுக்கு வந்தார். நோக்கமும் மனநிலையும் மாறினமைக்காக அவர் மிகவும் ஆச்சரியப்பட்டார்.

திருமணம் செய்யக்கூடிய பருவம் வாய்ந்த பெண் ஒருத்தி இருக்கிறாளாவென்று நிலத்தை வாங்கியவரிடம் யுதிஷ்டிரர் வினவ, அவர் "ஆம்" என்றார். மற்றவரிடம் வயது

வந்த யுவன் இருக்கிறானாவென்று கேட்க, அவர் "ஆம்" என்றார். பின்னர், யுதிஷ்டிரர் அவ்விருவர்களுக்கும் திருமணம் செய்து வைத்து, புதையல் செல்வத்தை தம்பதிகளுக்கு ஸ்திரீதனமாகக் கொடுத்துவிடுமாறு தீர்ப்புக் கூறினார். இதற்கு அவ்விருவரும் சம்மதித்தார்கள். இங்ஙனம் வழக்கு முடிவடைந்தது.

கலியுகம் உதயமாகிவிட்டதென்பதையும் பகவான் தமது யதாஸ்தானத்திற்கு எழுந்தருளிவிட்டாரென்பதையும் அறிந்து கொண்டு, பஞ்சபாண்டவர்கள் தமது தர்ம பத்தினி திரௌபதியுடன் வடதிசை நோக்கிப் பயணமானார்கள். அங்கு தெய்வ விமானம் இவர்களை ஏற்றிச் செல்ல காத்துக் கொண்டிருக்கிறது. மானுடர்களின் மண்ணுலகத்தைவிட்டு அவர்கள் விமானமேறி விண்ணுலகுக்கு ஏகினார்கள்.

தர்மத்தின் மகிமையே மகிமை! தர்மபுத்திரரின் பெருமை விளங்குவதாக! அவருடைய கோட்பாடு நித்தியத்துவ வாசஸ்தலத்திற்கு நம்மை வழிகாட்டி உய்விக்குமாக!

ஓம் தத் ஸத்.

## 107. மகான்களின் இதயத்தில் ஒரே உண்மை!

நாகூர் ஆண்டவர், இராகவையா ஆகிய இருவரும் தென்னிந்தியாவில் ஏக காலத்தில் வசித்த மகான்கள். ஒருவர் முஸ்லிம்; மற்றவர் ஹிந்து. இவர்களின் திவ்யமான வாழ்க்கையைப் பற்றி நூற்றுக்கணக்கான கதைகள் கூறப்பட்டு வருகின்றன. அவர்களின் இதயத்திலே ஒரே உண்மை இருந்தது; ஒரே ஒரு குறிக்கோள் நிறைந்திருந்தது. உடலில் இருவராயினும் குறிக்கோளில் ஒருவரேயாவர்.

பெருமாள் நாயுடுவின் மாந்தோட்டத்தில் மூன்றாவது வருடத்திலே ஒரு பழம்கூட விளையவில்லை! நாகூர் ஆண்டவரின் அதிசயமான சக்திகளைப் பற்றிப் பெருமாள்

கேள்விப்பட்டிருந்தார். "அடுத்த ஆண்டில் தோட்டம் நன்கு பழுத்தால், ஆண்டவருக்கு முதலில் விளைந்த மாம்பழங்களைக் காணிக்கையாகக் கொடுக்கிறேன்" என்று பெருமாள் தமது உள்ளத்திலே சங்கல்பித்துக் கொண்டார். பின்னர், நாகூர் ஆண்டவரின் திருவருள் இயங்கத் தொடங்கிற்று. சங்கல்பம் செய்து கொண்ட ஒரு சில நாள்களுக்குப் பிறகு பழம் விளையும் பருவமல்லாத அக்காலத்திலேயே தோட்டத்து மாமரங்கள் பூக்கலாயின. எவருமே மாம்பழம் அடையக் கனவு காணமுடியாத காலத்திலேயே மரங்கள், பழங்கள் குலுங்கக் காட்சியளித்தன. பெருமாளின் வியப்பிற்கும் மகிழ்வுக்கும் அளவில்லை - சிந்தித்துப் பாருங்கள்.

அதிசயமாகப் பூத்துப் பலன் தந்த மாந்தோட்டம் நாகூர் ஆண்டவரின் திருவருளுக்குப் பாத்திரமானதென்பதை உணர்ந்து கொண்ட பெருமாள் தமது பிரதிக்ஞைப்படி, முதலில் விளைந்த பன்னிரண்டு மாம்பழங்களை எடுத்துக் கொண்டார். நாற்பது மைல் தொலைவிலுள்ள நாகூருக்கு நடந்தே யாத்திரை செய்ய வேண்டுமென்று விரும்பும் அளவு அவருடைய பக்தி சிரத்தை வளர்ந்தது.

இன்னும் ஏழு மைல்களே உள்ளன நாகூருக்குப் போய்ச் சேர. ஒரு மரத்தின் அடியில் அமைதியே வடிவெடுத்த ஏழைப் பிச்சைக்காரன் ஒருவன் இளைப்பாறிக் கொண்டிருந்தான். அவன் பெருமாளை விழித்து, "என்ன கொண்டு போகிறீர்கள்? மாம்பழமா? ஒன்று கொடுங்கள்" என்று வேண்டினான். தாம் எதைக் கொண்டு போகிறோமென்பதைத் தெய்வீகமாகக் கண்டுகொண்ட சாதுவிற்காக வியப்பு எய்தினார். நாகூர் ஆண்டவருக்கென நைவேத்தியமாகக் கொண்டு போகிற பழங்களில் ஒன்றைக்கூட விட்டுப்பிரிய அவர் விரும்பவில்லை. ஆகவே, அந்தசாதுவின் வேண்டுகோளைப் பொருள்படுத்தவில்லை.

அன்று நாகூர் ஆண்டவரைக் கண்டுபிடிக்கக் கஷ்டமாயிருந்தது. ஒருமணி நேரம் வரைத் தேடலானார். பின்னர், ஒரு மரத்தினடியில் ஆண்டவர் அமர்ந்திருந்ததைக்

கண்டுகொண்டார். விலை மதிப்பிற்குரிய அந்தச்சுமையை மகானின் திருவடியில் சமர்பித்தார். "பிரபோ! தங்கள் ஆசியைக் கோருகிறேன்" என்ற வண்ணம் பெருமாள் தமது பிரதிக்ஞையைப் பற்றியும் அது நிறைவேறிய தன்மையைப் பற்றியும் விளக்கிக் கூறினார். ஆண்டவர் தமது முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டு, "ஹூம். பழங்களைக் கேட்டபோது, நீர் மறுத்துவிட்டீர். அவற்றை ஏற்றுக் கொள்ளுமாறு இப்போது வேண்டுகிறீர். அவற்றை எடுத்துக் கொள்ளுங்கள். யாருக்கு வேண்டும்?" என்று கூறினார். பெருமாளுக்கு ஒரே குழப்பமாயிருந்தது. அவருடைய உள்ளத்தில் உண்மை பளிச்சிட்டது. அவர் உணர்ந்து கொண்டார். மீண்டும் வார்த்தை ஏதும் கூறாமல், ஏழு மைல் ஓடலானார். சாது - (இராகவையாவன்றி வேறல்ல அவர்) அதே மரத்தடியில் அமர்ந்திருந்தார். அவருடைய திருவடிகளில் பெருமாள் சரணடைந்து, "மகராஜ்! என்னை மன்னியுங்கள், எனக்குத் தெரியாது" என்று கெஞ்சினார். "அதைப் பற்றிக் கவலைப்படாதீர். அவ்வளவு பழங்களையும் என்னிடமே கொடுக்கலாம்" என்றார்.

முன்பு தம்மை அவமதித்ததற்காகப் பெருமாளைக் கண்டிக்கவில்லை அந்த ஜீவன்முக்தர். அவர் எதையும் நிந்தனையாகக் கொள்ளவில்லை. நித்தியானந்தத்தில் திளைக்கும் கடவுள் மனிதர், எதனாலும் பாதிக்கப்படமாட்டார். எது நடந்தாலும் அதிலே அவருக்கு ஆனந்தம் ஏற்படும். மகான்கள் உள்ளத்தில் ஒரே உண்மை ததும்புகிறதென்கிற பாடத்தை உணர்ந்து கொண்ட பெருமாள் மிகுந்த மகிழ்ச்சியுடன் தமது வீட்டுக்குத் திரும்பினார்.

## 108. யுக்திமூலம் ஈஸ்வர சாக்ஷாத்காரம்!

ராம்லால் பாவச்செயல்களைச் செய்து வயிறு பிழைத்தான். அவன் புரிந்த பாவச்செயல்கள் எண்ணிக்கையற்றவை. உண்மை நோக்குமிடத்து அவன் வாழ்க்கை முழுவதிலும் ஒரு புண்ணியச் செயல் மட்டுமே

புரிந்திருந்தான். ஈஸ்வர சாக்ஷாத்காரம் பெற்ற மஹான் ஒருவர் பசியோடு வந்திருந்தார். அவர் பசியை ஆற்றி உணவு அளித்த தானச் செயல் ஒன்று மட்டும் செய்தான்.

மரண வாயிலில் தத்தளித்துக் கொண்டிருந்த போது, யமதூதன் ஒருவன் வந்து, "ராம்லால்! மலை போல் பாவங்கள் குவிந்துள்ளன. அவற்றின் விளைவுகளை நீ அனுபவித்தே ஆக வேண்டும். ஒரே ஒரு புண்ணியச் செயல் செய்துள்ளாய். அதன் இனிய பழங்களை நீ தின்று ரசிக்கலாம். இப்போது தேர்ந்தெடு - புண்ணியச் செயலின் இனிய பலன்களை அனுபவித்தலா அல்லது எண்ணிறந்த பாவச் செயல்களின் விளைவுக்கு உள்ளாகி அவதிப்படுதலா? எதை முதலில் நீ தேர்ந்தெடுக்கிறாய்?" என்று கேட்டான்.

"ஓ, தேவா! புண்ணியச் செயலின் பலனை முதன் முதலிலே அனுபவித்து விடுகிறேன். பிறகு நான் செய்த பாவங்களுக்காக நரகத்திலே உழன்று அவதிப்படுகிறேன்". என்று கூறவே, யமதூதன் ராம்லாலின் உயிரை மோட்சலோகத்துக்கு இட்டுக் கொண்டு போனான். அவன் விரும்பியதெல்லாம் அவனுக்குக் கிடைத்தன. மூன்று லோகங்களிலும் சஞ்சரிக்கக் கூடுமாகையால் கைலாசத்திற்கோ வைகுண்டத்திற்கோ சென்று ஆண்டவனைத் தரிசிக்கக் கூடிய சக்தியோ அல்லது மோட்சத்திலுள்ள சகலவிதமான இன்பங்களைத் துய்க்கும் திறமையோ ராம்லாலுக்கு ஏற்பட்டுவிட்டது. அவன் செய்த ஒரு புண்ணியச் செயலின் பலன் அவ்வளவு மகத்தானது. ஆதலால் இவ்வளவும் அவனுக்கு அமையுமென்று அவனிடத்தில் கூறப்பட்டது. புத்திசாலித்தனமாக நடந்து கொள்ளலானான் ராம்லால். நல்லதோர் வாய்ப்பு அங்கே இருப்பதை உணரலானான்.

ராம்லால் தேவந்திரனுடைய தெய்வீகக் குதிரையின் மீதேறிக் கொண்டு, மூன்று லோகங்களையும் சஞ்சாரம் செய்தான். மோட்சலோகத்தில் அவன் இருந்து அனுபவிக்க வேண்டிய காலம் தீர்ந்து போகும் நேரத்திலே, முடிவில்,

வைகுண்டத்திற்குச் சென்று ஸ்ரீமந்நாராயண பகவானைத் தரிசித்தான். வைகுண்டத்தினின்று அவன் வெளியே வரும் போது, நரகலோகத்துத் தூதர்கள் ஓடோடி வந்து, "ராம்லால்! உனது நல்வினைப் பயன்கள் யாவும் தீர்ந்து போயின. இப்போது நரகலோகத்திற்கு வந்து தீய கர்மாக்களின் பலன்களுக்காகக் கஷ்டப்படு" என்று அழைத்தார்கள். "ஓம் நமோ நாராயணாய் நமஹா! என்ன இது? பகவானைத் தரிசித்த பக்தன் நரகத்திற்குக் கூட்டிக் கொண்டு போகப்படுவானா? எனலானான் ராம்லால். உடனே நாராயண மூர்த்தியின் தூதர்கள் அங்கே தோன்றி நரகலோகத் தூதர்களை விரட்டினார்கள். ராம்லாலோ பகவானுடைய பாதாரவிந்தங்களின் பக்கத்தில் என்றென்றைக்கும் தங்கி வரலானான்!

## 109. கர்மாவின் பலன்கள்

இந்திரன், வருணன், வாயு, யமன் ஆகிய தேவர்களின் பதவி தாற்காலிகமானது. நிர்வாணம் அல்லது கைவல்யம் பெறுவதற்கு அவர்கள் மீண்டும் மானுஷ்யலோகத்தில் ஜனனமெடுக்க வேண்டும். பூலோகத்தில் கற்றறிந்த ஞானிகள் செய்யும் யக்ஞங்களினாலே அவர்கள் பதவி தேவலோகத்தில் நீடித்து வருகிறதென்று ஊகிக்கப்படுகிறது. இக்கருத்து ஸ்ரீமத் பகவத் கீதையில் உணர்த்தப்படுகிறது. இக்கருத்தை விளக்குவதற்கு அடியிற்கண்ட கதை கூறப்படுகிறது.

பாண்டவர்களின் வம்ச பரம்பரையிலே, பரீக்ஷித்து மகாராஜாவின் அரசாட்சியில் பணக்காரப் பிரபு ஒருவருடைய மாளிகையில் கள்வர்கள் கூட்டம் ஒன்று புகுந்து, விலைமதிக்கவொண்ணாத ஆபரணங்களையும் ஆஸ்தி களையும் கொள்ளையடித்துக் கொண்டு போய்விட்டார்கள். அதிகாரிகளுக்கு இச்சம்பவம் பற்றி உடனே புகார் செய்யப்பட்டது. சட்ட ஒழுங்கை நிலைநிறுத்தும் பொருட்டு, கள்வர்களைத் தேடிப் பிடிக்கவும், களவின் புலன் விசாரிக்கவும் தூதர்கள் பலதிசைகளிலும் அனுப்பப்பட்டனர்.

அவ்வாறு புலன் விசாரணை செய்யும் ஒரு குழுவினர் கள்வர் கூட்டம் கூடாரமடித்துக் கொண்டு தங்கியிருப்பதாகச் சந்தேகிக்கப்பட்ட காட்டின் ஒரு பகுதியிலே புகுந்து, கள்வர்கள் தலைவர்களைக் கைது செய்துவிட்டார்கள். குகையிலே அவர்கள் தங்கியிருந்தார்கள். கள்வர்களின் வெகு அருகில் மாண்டவ்ய மகரிஷி மகா உக்கிரமாகத் தவம் செய்து கொண்டிருந்தார். துரதிர்ஷ்டவசமாக, மாண்டவ்ய மகரிஷியையும் கள்வராகக் கருதிக் கைது செய்தார்கள். மகரிஷி உள்பட எல்லாக் கள்வர்களும் அரசர் முன்பு அழைக்கப்பட்டனர் - மகாராஜா தீர்ப்புக் கூறுவதற்கு, குற்றம் மிகவும் பெரியதாகையால், குற்றவாளிகள் திரிசூலங்களில் கழுவேற்றப்படுமாறு தண்டிக்கப்பட்டனர்.

கள்வர்களின் ஸ்தூலசரீரங்கள் பூலோகத்தில் திரிசூலங்களிலே ஏற்றப்பட்டு உயிர் இழந்தன. அவர்கள் ஆன்மாக்கள் இயம தர்மராஜாவிடம் அனுப்பப்பட்டன. யம லோகத்தில் கள்வர்களின் சூக்ஷ்மசரீரங்கள் நரகத்திலே வீழ்த்தப்பட்டன. இது முடிந்ததும், மாண்டவ்ய மகரிஷியின் வழக்கு விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. யம தர்மராஜாவின் தலைமை குமாஸ்தாவாகிய சித்ர குப்தர் மாண்டவ்ய முனிவரின் ஆவணங்களைப் புரட்டிப்பார்த்து, உலகத்தை விட்டு விடுவதற்கு இன்னும் காலமாகவில்லை என்று கூறினார்.. களவிலே தாம் சம்பந்தப்படவில்லையா தலாலும், கள்வர்களின் கூடாரம் தமது ஆஸ்ரமத்திற்குப் பக்கத்திலே அமைக்கப்பட்டிருந்த தகவலும் தெரியாதாகை யாலும், பரீக்ஷித்து மகாராஜா தமக்கு இட்ட தண்டனை தகுதியற்றதெனப் புகார் செய்யலானார் மாண்டவ்ய மகரிஷி. இவ்வாறு புகார் செய்யவும், யம தர்மராஜா யோசனை புரியலானார். உடனே, சித்ரகுப்தர் பொருத்தமான சில ஆவணங்களைக் காட்டலானார். மாண்டவ்ய மகரிஷி இளமைப் பருவத்திலே ஒரு பாவமுமறியாத ஈக்களைக் கொன்று நீண்ட கூரிய ஊசியிலே அவற்றைக் கோர்த்துச் சித்திரவதை புரிந்தபடியால் பரீக்ஷித்து மகாராஜா மகரிஷியை திரிசூலத்தில் ஏற்றித் தண்டித்தது நியாயமே என்று சித்திரகுப்தர் விளக்கலானார். அதற்கு மாண்டவ்ய மகரிஷி,

சுயமாகச் சிந்திக்கும் திறமை இல்லாத இளமைப் பருவத்தில் செய்யப்பட்ட கருமாக்கள் பலன் தர நியாயமில்லையென்றும், மீண்டும் தமது வழக்கைத் தீர ஆலோசனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும் வேண்டிக் கொண்டார். யம தர்மராஜா இதை நிராகரித்தார். இது மகரிஷிக்குக் கடுமையான கோபத்தை உண்டாக்கி விட்டது. யம தர்மராஜாவைப் பார்த்து, "என் விஷயத்திலே தீர்ப்புக் கூறினதிலே மிகுந்த அஜாக்கிரதை காட்டினபடியாலும், காரண காரியங்களுக்கு அது ஒத்து வாராமையினாலும் உம்முடைய மாசுகளையெல்லாம் போக்கித் தூய்மைப்படுத்திக் கொள்வதற்குப் பூலோகத்திலே மனித தேகத்திலே மீண்டும் பிறக்கக் கடவது" என்று கடுமையாகச் சபித்துவிட்டார்.

பாகவதப் பெருமையை விளக்கும் பொருட்டு விதுரராகப் பிறந்தவர் இந்த யம தர்மராஜா தான் என்று உணரப்படுகிறது.

## 110. பீர்பாலும் அவருடைய மைத்துனனும்

அக்பர் மகாராஜாவின் பிரதம அமைச்சர் பீர்பால் என்பவர். நுண்ணறிவுக்கும் புத்தி சாமர்த்தியத்திற்கும் அவர் பிரசித்தி பெற்றிருந்தார். பீர்பாலின் மைத்துனனோ இவர் மீது பொறாமை கொண்டான். "மகாராஜா இந்தமனுஷன் மீது ஏன் இவ்வளவு பிரியமாயிருக்கிறார்? அரசாங்க நிர்வாகங்களை பீர்பால் அளவு சாமர்த்தியமாக நான் செய்யக் கூடும்" என்று மைத்துனன் எண்ணமிடலானான். சில குறுகிய வழிகளில் அவன் அக்பர் மகாராஜாவை அணுகி, "அமைச்சரின் அலுவல்களை அதிகத் திறமையுடனும் ராஜபக்தியுடனும் என்னால் நிறைவேற்ற முடியும்" என்று உறுதி கூறிப் பீர்பாலைப் பதவியினின்று நீக்குமாறு யோசனையும் கூறிவிட்டான்.

பீர்பால் இதைக் கேள்விப்பட்டதும் புன்முறுவலுடன் தன் மைத்துனனுக்குப் பாடம் புகட்டத் தீர்மானிக்கலானார். அவர் தமது உத்தியோகத்தை ராஜிநாமா செய்துவிட்டு அந்தப்

பதவியில் தமது மைத்துனனை அமர்த்தி நாட்டைவிட்டு அகன்றார்.

புதிய அமைச்சரின் திறமையைப் பரிசோதிக்கக் கருதிய மகாராஜா அக்பர் அவரிடம் ஐந்நூறு ரூபாய் கொடுத்து, "இந்த உலகில் எனக்கு ஐந்நூறு ரூபாய் கொடுக்கவும், ஐந்நூறு ரூபாய் மறு உலகில் கிடைக்கவும், இவ்வுலகிலும் மறு உலகிலும் ஐந்நூறு ரூபாய் கிடைக்காதவாறும் - இப்போது கொடுக்கும் ஐந்நூறு ரூபாயை அங்ஙனம் செலவழித்துவிட்டுப் பிறகு இந்த ஐந்நூறு ரூபாயை முழுமையாக என்னிடம் திருப்பிக் கொடுக்க வேண்டும்" என்று கூறினார்.

புதிய அமைச்சனுக்குப் பெரிதும் குழப்பமுண்டாயிற்று. எவ்வாறு இதைச் செலவழிப்பது என்றே ஒன்றும் தோன்றவில்லை. இரவு நேரங்களிலெல்லாம் இதே சிந்தனை. உணவின் மீது நாட்டம் செல்லவில்லை. சில நாள்களில் அவன் இரத்தமின்மையால் வாடுபவனைப் போல் ஆகிவிட்டான். அவனுடைய மனைவி பீர்பாலை நெருங்கும்படி அவனுக்குப் புத்தி கூறினாள். புதிய அமைச்சனுக்கு இதைத் தவிர வேறு வழி இல்லை.

பீர்பால் புதிய அமைச்சனாகிய மைத்துனனிடம், "பணத்தைக் கொடு. எல்லாவற்றையும் நான் செய்து முடிக்கிறேன்" என்று கூறினார். மைத்துனன் ஐந்நூறு ரூபாயைப் பீர்பாலிடம் கொடுத்தான். பீர்பால் நாட்டிலே புகுந்து சாலைகளின் வழியே செல்லலானார். பிரபல வர்த்தகர் ஒருவர் தமது மகளின் திருமணத்தை நடத்திக் கொண்டிருந்தார். அவ்வீட்டில் பீர்பால் நுழைந்து விசாலமான பந்தலிலே நின்றவாறு, "வர்த்தகரே! பாதுஷா ஸாஹிப் அவர்கள் திருமண அன்பளிப்பாக இந்த ஐந்நூறு ரூபாயைத் தருமாறு அனுப்பியுள்ளார். இச்சன்மானம் தருவதற்கெனவே மகாராஜா என்னை அவரது பிரதிநிதியாக நியமித்துள்ளார்" என்று கூறவே, வர்த்தகருக்கு மிகுந்த மகிழ்ச்சி பொங்கியது. பீர்பாலுக்குத் தகுந்த மரியாதையுடனும் மிக்க கௌரவத்துடனும் விருந்து அளிக்கப்பட்டது. அதோடு,

வர்த்தகர் மகாராஜாவுக்குத் திரும்ப அளிக்கும் சன்மானமாக ஏராளமான பரிசுகளும் திரவியங்களும் வாரி வழங்கலானார்.

அருகிலிருந்த கிராமத்திற்குப் பீர்பால் சென்றார். ஐந்நூறு ரூபாய்க்குத் தித்திப்பு பட்சணங்களும் உணவு வகைகளும் வாங்கி அவற்றையெல்லாம் ஏழைகளுக்குப் பாதுஷாவின் பெயரால் தானமாக விநியோகித்தார். பட்டணத்திற்குத் திரும்பி வந்தார். நாட்டியக் கச்சேரி ஒன்று நடத்தலானார். நாட்டியக் கலைஞர்கள், இன்னிசை நிபுணர்கள் யாவரையும் வரவழைத்து நடத்திய வகையில் ஐந்நூறு ரூபாய் செலவழித்தார்.

அக்பர் மகாராஜாவின் தர்பாருக்குப் போனார் பீர்பால். தர்பாருக்குத் திரும்பவும் பீர்பால் வந்தது குறித்து மகாராஜா மிகவும் மகிழ்ச்சியடையலானார். "பாதுஷா ஸாஹிப் அவர்களே! இதோ ஐந்நூறு ரூபாய். தாங்கள் எனது மைத்துனனுக்குக் கட்டளையிட்டதெல்லாம் நான் முடித்தேன்" என்றார். மகாராஜா, "எப்படி?" என்று வினவ, பீர்பால், வர்த்தகருக்குத் தங்கள் சன்மானமாக ஐந்நூறு ரூபாயைக் கொடுத்தேன்; இது இங்கே செய்யப்பட்டது. ரூபாய் ஐந்நூறு பெறுமானமுள்ள உணவுப் பதார்த்தங்களை ஏழைகளுக்கு வழங்கினேன்; அங்கே, மறு உலகில் இதைத் தாங்கள் பெறுவீர்கள்.

நாட்டியக் கச்சேரிக்கு ஐந்நூறு ரூபாய் செலவழித்தேன்; இதை இங்கேயோ அங்கேயோ பெறமாட்டீர்கள். தங்கள் உத்தரவுப்படி இதோ ஐந்நூறு ரூபாய்" என்று விளக்கம் கூறினார்.

பீர்பாலின் மைத்துனன் தன் தலையை அவமானத்தால் தாழ்த்தினான். அவன் அடங்கி ஒடுங்கினான். பொறாமை மறைந்தது.

இக்கதைக்கு மற்றொரு நீதி உண்டு. உங்களுடைய நண்பர்களுக்காகச் செலவிடும் பணம் இவ்வுலகில் அவர்கள் நமக்கு ஒத்தாசை புரியும் வகையிலும் ஊழியம் செய்யும்

உருவத்திலுமாகத் திரும்பக் கிடைக்கும். தர்மத்தில் செலவழிக்கும் பணம் வானுலகத்திலே பகவானுடைய மகத்தான அருளாசிகளாகவும், மறு உலகத்தில் மாண்புமிக்க வாழ்க்கையாகவுமாகத் தாங்கள் பெறுவீர்கள். இன்ப நுகர்ச்சி விநோத கேளிக்கைகளில் செலவிட்ட பணம் வெறும் பாழ் - இங்கேயும், அங்கேயும் உனக்கு எவ்வித ஒத்தாசையும் இல்லை. ஆகையால், தர்மம் புரிந்து நித்தியானந்தத்தை அனுபவியுங்கள்.

## 111. பகவான் பரிபூரணர்

குழந்தை கண்ணாடியைப் பார்த்தது. அதில் தன் முகத்தைக் கண்டது. அதற்கு ஆனந்தம் அதிகரித்தது. அந்த உருவத்திற்கு மாலை ஒன்றைச் சூட்ட வேண்டுமென்று செய்த முயற்சிகள் பயனடையவில்லை. இப்போது மாலையைத் தன் கழுத்திலேயே போட்டுக் கொண்டது. என்ன ஆச்சரியம்! மாலை அவ்வுருவத்தின் கழுத்திலும் தென்பட்டது. மகிழ்ச்சியால் அது ஆடி ஓடி நாட்டியம் செய்தது. அசலில் எது எது உள்ளதோ நகலிலும் அது அது காணப்படும். அதுபோல் கடவுளைப் பெற்றானதும் உனக்கு எல்லாம் கிடைக்கும். உனது ஆசைகள் அனைத்தும் நிறைவேறும். எப்போதும் அமைதியாயும் ஆனந்தமாயும் இருப்பீர்கள். பகவானுடைய செல்வம் அதாவது ஐஸ்வரியம் அனைத்தும் நீங்கள் பெறுவீர்கள். ஈஸ்வரர் பிம்பம்; ஜீவன் பிரதிபிம்பம். பிம்பத்திற்கு (பகவானுக்கு) எதைதை அலங்கரித்து ஆராதனை செய்கிறீர்களோ அவற்றின் பலன்கள் அனைத்தும் ஜீவன் அல்லது பிரதி பிம்பத்திற்கு ஏற்படுகிறது. பேராசைகள், வாசனைகள் முழுமையும் எரிந்து போகும். பேரும் புகழும் நிழலை போல உங்களைப் பின்பற்றும். சித்திகளும் ரித்திகளும் உங்கள் காலடியில் சுற்றிக்கொண்டிருக்கும். அவை உங்கள் ஊழியர்களாக மாறும்.

## 112. பக்தனுடைய பிராரப்தத்தைப் பகவான் ஏற்றுக் கொள்கிறார்!

நாராயண பிரசாத்தின் தாயார் இறந்துபோனாள். எதிர்பார்க்கப்படுவனவற்றிற்கு மாறாக, நாராயண பிரசாத் மிகுந்த சந்தோஷம் அடைந்தார். அவர் தமது பூஜை அறைக்குச் சென்று, தமது இஷ்ட தெய்வமாகிய ஜகந்நாதமூர்த்தியின் முன்னால் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, "ஹே! பகவானே! அடியேன் கேட்காமலேயே தாங்கள் என் மீது தங்கள் கருணையைப் பொழிந்துவிட்டீர்கள். இவ்வுலக வாழ்விற்கு என்னைப் பிணைத்துக் கொண்டிருந்த ஒரு தளையைத் தாங்கள் நீக்கிவிட்டீர்கள். இப்போது எனது வாழ்வையே தங்களுக்கு தங்களுக்கு மட்டுமே சமர்ப்பித்துவிடக் கூடும் - எவ்விதமான தடுமாற்றங்களும் இல்லாமல், பகவானே! அனன்ய பக்தியை எனக்கு அருளுவீர்களாக!" என்று பிரார்த்திக்கிறார்.

பூரி ஜகந்நாதமூர்த்தியை நாராயண பிரசாத்தும் அவருடைய தாயாரும் அந்தரங்க பக்தியுடன் வழிபட்டு வந்தார்கள். நாராயணபிரசாத் பூரி எனும் புண்ணிய க்ஷேத்திரத்திற்கு நடந்தே பயணமானார். வழிநெடுக அவர் பகவானுடைய திருநாமங்களை, மெய்மறந்த நிலையில் பரவசமாகப் பாடிக் கொண்டே செல்லலானார். பக்தனுடைய இதயத்திலே பகவான் எழுந்தருளியுள்ளார். அவருடன் இடைவிடாமல் பகவான் உரையாடிக் கொண்டிருக்கிறார். ஆகையால், பூரி க்ஷேத்திரத்தில் ஒளியாக நிற்கும் ஜகந்நாத சுவாமியினுடைய ஆலயத்திற்குள் அவர் செல்வதைப் பற்றி நினைக்கவேயில்லை. அதற்குப் பதிலாக கடற்கரைக்குப் போய், பகவானுடைய மகிமைகளைப் பற்றிய திருநாமங்களை உச்சரித்துக் கொண்டும் தியானத்திலிருந்து கொண்டும் நாராயண பிரசாத் தம்மை மறந்தார். இவ்வாறு மூன்று நாள்கள் கழிந்தன. உணவு உட்கொள்ளவே இல்லை. அதைப் பற்றியே நினைக்கவில்லை. அவர் ஜன நடமாட்டத்திற்கு

அப்பாலுள்ள ஒதுக்குப்புறமான ஓர் இடத்தில் இருந்தபடியால், யாத்திரீகர் எவருமே அவ்வழியே செல்லவில்லை. நாராயண பிரசாத் உபவாசத்திலிருக்கிறார்; ஆனால், கீர்த்தனங்களிலும் தியானத்திலும் ஈடுபட்டுப் பிரம்மானந்தமயமான நிலையில் மூழ்கிக் கிடக்கிறார்.

ஜகந்நாத பகவான் தமது பத்தினியைப் பார்த்து, "இலட்சுமீ! என்ன சிரத்தை! கடற்கரையில் எனது பக்தன் பட்டினியாகக் கிடக்கிறான். எனது கடமையைப் புறக்கணித்துவிட்டேன். ஈவிரக்கமில்லாமலும் குரூரமாயும் இதுவரை இருந்துவிட்டேன். அவன் தன் கடமையை (எனது நினைவாகவே தியானத்திலிருத்தல்) நிறைவேற்றுவதில் கண்ணும் கருத்துமாக இருக்கிறான். ஆனால் என்னுடைய கடமையை - பக்தனை இரட்சித்தல் - நிறைவேற்றுவதில் நான் தவறி விட்டேன். அவன் முகத்தில் எப்படி விழிப்பேன்? அவமானம் என்னைச் சுட்டெரிக்கிறது. திவ்யமான உணவை நீ கொண்டு போய் அவனிடம் கொடு" என்று திருவாய் மலர்ந்தருளினார். இலட்சுமி தேவி ஒப்புக் கொண்டாள்.

தங்கத் தட்டிலே திவ்யமான உணவுப் பதார்த்தங்களைக் கொண்டு போனாள் இலட்சுமிதேவி. நாராயண பிரசாத் உலகத்தை மறந்தவனாக, பகவானுடைய திருநாம உச்சாடனத்திலேயே மூழ்கியிருந்தார். அவரை அணுகிய இலட்சுமிதேவி அவருக்கு முன்னால் போய் விழிக்கவும் வெட்கப்பட்டவளானாள். தனது நாயகரும் தானும் காட்டிய பாராமுகத்தின் காரணமாகப் பக்தனைப் பட்டினி போடும்படி செய்ததை நினைத்து நினைத்து அவளும் மிகவும் வருத்தப்பட்டாள். அவள் தங்கத்தட்டை நாராயண பிரசாத்தின் பின் பக்கத்தில் மெதுவாக வைத்துவிட்டுத் தனது யதாஸ்தானத்திற்கு எழுந்தருளினாள்.

இலட்சுமிதேவியின் கால் சதங்கையின் ஒலியைக் கேட்டார் நாராயண பிரசாத். ஒலிவரும் திசையை நோக்கித் தமது தலையைத் திருப்பினார். உணவுப் பதார்த்தங்களைக் கொண்ட தங்கத்தட்டு ஒன்றைக் கண்டார். ஆனால் அதைக்

கொண்டு வந்த நபர் எவரையுமே அவர் பார்க்கவில்லை. பசியோ அசாத்தியமாயிருந்தது. தக்க நேரத்தில் திருவருள் கிட்டியது குறித்துப் பகவானை மனமுவந்து வழிபட்டார். பகவானுடைய பிரசாதமாக அந்த உணவை மிகுந்த சுவையுடன் உட்கொண்டார். மூன்று நாள்கள் வரை தூங்காமலிருந்தபடியால், அவ்வளவு தூக்கமும், உணவு உட்கொண்ட பின்னர் அவரை ஆட்கொண்டுவிட்டது.

பிறகு அவ'ர் கண்திறந்தார். மூன்று தடித்த பிராமணர்கள் கழிகளை ஏந்திக் கொண்டு அவரைச் சுற்றிலும் நின்றார்கள். "துரதிர்ஷ்டத் திருடனே! பகவானின் மூல ஸ்தானத்திலிருந்து தங்கத் தட்டை எப்படித் திருடிக் கொண்டு வரத் துணிந்தாய்? வா. துஷ்டத்தனமான போக்கிரியே! எழுந்திரு. இராஜாவின் அரண்மனைக்கு வா. அவர் கையிலிருந்து ஏற்றுக்கொள் தண்டனையை" என்று கூக்குரலிட்டார்கள்.

முதலில் நாராயண பிரசாத்திற்கு இது திகிலைக் கொடுத்தது. "இந்தத் தட்டை நான் திருடவில்லை" என்று எண்ணினார். "ஆனால், எனக்காக இத்தட்டிலே உணவு கொண்டுவந்த நபர் ஏன் இதை எடுத்துக்கொண்டு போகவில்லை" என்ற எண்ணம் எழுந்தது. பின்பு அவர் தம்மைச் சாந்தப்படுத்திக் கொண்ட வண்ணம், நடக்கிற விஷயத்தைப் பற்றி எண்ணுவதிலே வீணாகப் பொழுது கழிப்பதில் பயனில்லை என்று உணர்ந்தார். மனத்திற்குள்ளேயே பஜனையை நடத்திக் கொண்டிருந்தார்.

மன்னருக்கு மிகுந்த கோபம் மூண்டது. கசையடிக்கு உத்தரவிட்டார். மன்னருடைய இரக்கமற்ற ஏவலாளர்கள் தங்கள் அதிகாரத்தையும் பெருமையையும் காட்டிக் கொள்வதற்கேற்ற வாய்ப்பு கிட்டியது குறித்துப் பரமானந்தமடைந்தார்கள். நாராயண பிரசாத் மீது கசையடி மென்மேலும் வலிமையுடன் விழலாயிற்று. சேவர்களுக்குப் பெருந்திகைப்பும் வியப்புமாயிருந்தது. நாராயண பிரசாத் சிரித்த வண்ணம் பகவானுடைய திருநாமங்களைப் பாடிக் கொண்டிருந்தார். அரை மணி நேரம் வரை கசையடி

கொடுக்கப்பட்டது - சேவகர்கள் அவருடைய உடம்பிலே சவுக்கடியினால் ஏற்படும் தழும்பு ஒன்றைக்கூட காணவில்லை! அது பயனற்றதென விட்டார்கள். அரண்மனையிலிருந்து நாராயண பிரசாத்தைத் துரத்திவிட்டார்கள்.

கடற்கரையிலே கட்டடமில்லாத அதே இடத்திலே அவர் பகவானுடைய சிந்தனையிலே மூழ்கிவிட்டார். இரவில் உணவு வந்தது; ஆனால் இந்தத் தடவை நாராயண பிரசாத் உணவைச் சாப்பிட்டதும் தட்டு மயமாக மறைந்தது. அன்றிரவு இராஜா தூக்கங் கொள்ளவில்லை. தமது மஞ்சத்தினின்று கீழே தள்ளப்பட்டது போன்ற பயங்கரமான கனவால் தாக்கப்பட்டார். ஜகந்நாத பகவானுடைய திருவுருவம் அவர் முன்னால் இடைவிடாமல் தோன்றி நின்றது; பகவானுடைய இடுப்பின் வழியாய் இரத்தம் கசிந்து வருவதை மன்னர் கண்டார். மிக்க திகிலடைந்தார்; எழுந்தார். ஓடினார். கோவிலுக்குப் போனார் கோவிலைத் திறந்து பகவானுடைய தரிசனத்தைக் காட்டுமாறு பூஜாரிகளைக் கேட்டார். என்ன ஆச்சரியம்! பூபாலனும் பூஜாரிகளும் பேச்சற்று நின்றார்கள் - பகவானுடைய இடுப்பினின்று இரத்தப் பிரவாகம் கோப்பிய ஸ்தானத்தை நோக்கி ஓடுவதை கண்டவுடனே கோமகனுக்கு விஷயம் புரிந்துவிட்டது. தமது குற்றத்திற்காக மிக்க வருத்தமும், துக்கமும், அவமானமும் அடைந்தார். அன்று பிற்பகலில் எளிய பக்தனைக் கசையடி கொடுத்து ஹிம்சித்த காரணத்தால்தான் அந்த அதிசயமான நிகழ்ச்சி நேருகிறதென்பதை உடனடியாக அவர் உணர்ந்து கொண்டார். சேவகர்கள் புடைசூழ அரசர் கடற்கரைக்கு ஓடினார். நாராயண பிரசாத்தின் காலடியில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். தமது குற்றத்தை மன்னிக்குமாறு அவர் வேண்டினார். பகவானுடைய திருமேனியில் ஏற்பட்ட புண்களையும் ஆற்றுமாறும் வேண்டினார். புண்ணை ஆற்றும் திறமை நாராயண பிரசாத்திற்கே உரிமையானது.

நாராயண பிரசாத் அகோரமாக அழலானார். "பகவானே! கருணைக் கடலே! இது தங்களுக்கு அரிய

செயலா! ஏழைப் பக்தனுக்காகத் தாங்கள் ஏன் இந்த வேதனையைப் பொறுத்தீர்கள்? கொடிய தண்டனையைத் தங்கள் சொந்த திருமேனியில் ஏற்றுக் கொண்டதற்குப் பதிலாக, அரசருடைய ஏவலாளர்கள் என்னைக் கசையினால் அடிப்பதைத் தாங்கள் தடுத்திருக்கக் கூடாதா?" என்று வேதனையுடன் புலம்பினார். இரத்தப் பிரவாகம் நின்றது.

பகவான் தம் பக்தருக்குப் பதிலளித்தார். "ஓ, நாராயண பிரசாத்! பிராரப்தப்படி நீ இத்தண்டனையை அனுபவித்தே ஆக வேண்டும் என்பதைத் தெரிந்து கொள். என்மீது நீ கொண்ட பக்தியாலும், என்மீது நீ வைத்த சிரத்தையாலும், உன்னைப் பரிபூரணமாக என்னிடம் சரண்புகுத்திவிட்டாய் - ஆனதால், எல்லாவிதத் தீங்குகளினின்றும் உன்னை காப்பது என் கடமையாகிறது. இருந்தாலும், உனது பிராரப்தத்தை க்ஷீணிக்கச் செய்ய என்னால் இயலவில்லை. அது அனுபவித்தேயாக வேண்டும். ஆகையால், உன் சரீரத்திற்கு ஏற்கனவே விதிக்கப்பட்டிருந்த கசையடிபடுதல் என்ற விதியை எனது சொந்த மேனியில் விதிக்கப்பட்டபடி தனது பிராரப்தத்தை அடைந்தே தீருகிறான். ஆனால் அதனால் அவன் பாதிக்கப்படமாட்டான்; பிராரப்தத்தினால் அவன் வேதனைப்படுவதில்லை ஏனெனில் அவனைச் சுற்றிலும் எனது காக்கும் கரங்களால் அணைத்துக் கொள்வேன்" என்பதுவே பகவானின் பதில். பகவானுடைய தேஜோமயமான பேரொளியில் நாராயண பிரசாத் அந்தர்த்தானமானார்.

## 113. வேதங்கள் அனந்தம்

பாரத்வாஜ மகரிஷி வேதங்களைக் கற்றார். பிரம்மச்சரியத்தை வழுவாது அனுஷ்டித்து நூறு ஆண்டுகள் வரை கற்றார். வேதப்படிப்பு ஓயவில்லை. இந்திரனை நோக்கிப் பிரார்த்திக்க இந்திரன் அந்தமகரிஷி முன் தோன்றினார். "ஓ, இந்திரா! என் ஆயுளை இன்னும் நூறு வருஷம் நீடிக்க வரந் தாருங்கள். வேதங்களைக் கற்க ஆசை"

என்று வேண்டவே, இந்திரன் அங்ஙனமே வரந் தந்து மறைந்தார்.

அடுத்த நூறு வருஷங்கள் கடந்தன. இந்திரனைக் குறித்துத் தவமிருந்தார். "ஓ! இந்திரா! வேதப்படிப்பு இன்னும் முடியவில்லை. மீண்டும் நூறு வருஷம் ஆயுள் தாருங்கள்" என்று பிரார்த்தித்தான். இத்தடவையும் வரம் அளிக்கப்பட்டது. வேதங்களைக் கற்பதில் முந்நூறு வயது கழிந்தது. இன்னும் மகரிஷி படிக்க வேண்டிய வேதங்களோ அனேகம் இருந்தன. மீண்டும் ஒரு நூறு வயது வரம் கேட்டார். இந்தமுறை வேதங்கள் அனந்தம் என்பதை மகரிஷிக்கு எடுத்துக்காட்ட விரும்பினார் இந்திரன். "பாரத்வாஜ மகரிஷியே! அதோ அந்த மூன்று பெரிய மலைகளைப் பாருங்கள். தாங்கள் படிக்க வேண்டிய வேதங்களின் அளவை அவை காட்டுகின்றன. இந்த முந்நூறு ஆண்டுகளாகத் தாங்கள் படித்தது இந்த மூன்று கைநிறைய மண்ணளவுக்குச் சமமாகும் எத்தனை லட்சம் வருஷங்களைத்தான் இந்த வேதங்களைக் கற்பதில் பயன்படுத்த விரும்புகிறீர்கள் என்பதைச் சொல்லுங்கள்" என்று கேட்டார் இந்திரன். ரிஷி பின்னர் தேவேந்திரனைத் தலை தாழ்த்தி வணங்கினார். நித்தியப் பிரம்மனுக்குச் சுவாசமே வேதங்கள். நித்தியத்துவமும் எல்லையற்ற பிரபாவமும் பொருந்திய பிரம்மனைக் குறித்துத் தியானமும் தவமும் இயற்றுவதற்காக வேதங்களின் அனந்த நிலையைப் பற்றி அதிசயித்துப் பிரமித்துப்போன பாரத்வாஜ மகரிஷி காட்டுக்கு ஏகினார்.

## 114. அசுரத் தன்மையிலே தெய்வீகம்!

சனந்தனர், சனத்குமாரர், சனத்சுஜாதா ஆகிய முனீந்திரர்கள் நாராயண மூர்த்தியைத் தரிசிக்க வைகுண்டம் ஏகினார்கள். ஜய, விஜய எனும் இரண்டு காவலாளிகள் அவர்களைத் தடுத்துவிட்டார்கள். "பூலோகத்தில் அசுரர்களாகப் பிறக்கக் கடவீர்கள்" என்று சபித்துவிட்டார்கள் ரிஷிகள். நாராயணமூர்த்தி அவ்விடம்

எழுந்தருளினார். ரிஷிகள் நிரம்பவும் கவலைப்பட்டார்கள். "இவர்களைச் சபித்திருக்கலாகாது. நாம் வீணாகக் கோபித்துக் கொண்டோம்" என்று மனத்திற்குள் உணர்ந்தார்கள். அவர்கள் அசுரர்களாகப் பிறந்தாலும் இறைவனைப் பற்றிய பக்தியில் தோய்ந்திருக்குமாறு வரந்தந்து சாபத்தின் வன்மையைக் குறைக்கும்படி நாராயண மூர்த்தியை வேண்டினார்கள். நாராயண மூர்த்தி பேசாமல் இருந்தார்.

எனவே, காவலாளிகள் தெய்வீகத் தன்மை வாய்ந்த அசுரர்களாகப் பிறந்தார்கள். ஜய, விஜயர்கள் போலவே, மகரிஷிகளும் மூன்று ஜன்மம் எடுத்தார்கள் - பிரகலாதானாகவும், விபீஷணராகவும், உத்தவராகவும் அம்மூன்று ரிஷிகளும் ஓர் அசுரனாக அவதரித்தார்கள். ஒவ்வொரு ஜன்மத்திலும் பெரிய மகரிஷிகளும் தெய்வீகப் பிறப்பாளர்களும் மானிடர்களை ஆளுகின்ற சட்டதிட்டங் களுக்குத் தங்களை இலக்காக்கிக் கொள்ளுகின்றார்கள். சுயேச்சையாக மக்களினத்திற்கு உதாரணம் கற்பிக்கவேண்டி நன்னடத்தை என்கிற முறையைக் கையாளுகின்றார்கள்.

## 115. சண்டையிடாதீர்கள்

சச்சிதானந்த வேதாந்த ஆசிரமத்தின் தலைவர் சுவாமி பிரம்மானந்தர். அவர்களுக்கு ராமானந்தர், கிருஷ்ண சைதன்யர், பரமேஸ்வர் தயாள் ஆகியோர் சிஷ்யர்களானார்கள். எல்லைப் பிரதேசத்திலிருந்து வந்தவர் ராமானந்தர். அவருக்கு உருது மட்டும் நன்றாகத் தெரியும் - ஆங்கிலம் சிறிது தெரியும். கிருஷ்ண சைதன்யர் ஆங்கிலேயர். பரமேஸ்வர் தயாள் ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்தவர். ஹிந்தியில் பேசுபவர். பிரம்மானந்தர் அவர்களுக்கு இம்மூன்று மொழிகளும் தெரியும்.

ராமானந்தர் சுவாமி பிரம்மானந்தரிடம் ஒரு நாள் காலையில் சென்று தர்பூஸா வாங்கிச் சாப்பிடுவதற்காக ஒரு ரூபாய் கேட்டார். சில நிமிஷங்களுக்குப் பின் ஹிந்த்வா

வாங்குவதற்கு பரமேஸ்வர் தயாள் பிரம்மானந்த சுவாமிகளிடம் சென்று ஒரு ரூபாய் கேட்டார். சர்க்கரைக் கொம்மட்டிக்காய் (Melon) வாங்குவதற்கு கிருஷ்ண சைதன்யர் ஸ்வாமிகளிடமிருந்து ஒரு ரூபாய் பெற்றுக் கொண்டார். மூவரும் ஆசிரமத்தின் வாசலில் சந்தித்துக் கடைக்குப் போவதன் காரணத்தை ஒருவருக்கு ஒருவர் கூறிக்கொள்ளலானார்கள். ராமானந்தர் "நான் தர்பூஸா வாங்குவதற்குச் செல்கிறேன்" என்றார். கிருஷ்ண சைதன்யர் சிரித்துக்கொண்டே, "பெயர்கூட ருசியற்றதாயிருக்கிறது. நான் Melon சாப்பிடப் போகிறேன். நீங்களும் அதையே சாப்பிடுங்கள். இல்லாவிட்டால் என்னோடு கடைக்கு வரவேண்டாம். அதிசயமான உங்கள் தர்பூஸாவைச் சாப்பிடுகிறபோது உங்கள் பக்கத்தில் இருக்கக்கூட நான் விரும்பவில்லை" என்றார். பின் பரமேஸ்வர் தயாள். "எனது ஹிந்த்வா சாப்பிட்டால் நன்றாயிருக்கும்" என்று கூறினார்.

பின், தர்பூஸா, ஹிந்த்வா, Melon இவற்றில் எது சிறந்தது என்ற விஷயம் பற்றிய விவாதம் நிகழ்ந்தது. பிறகு கோபமாகப் பேசிக் கொள்ளலானார்கள். சண்டைக்கும் ஆயத்தமானார்கள். ராமானந்தர் மற்றிருவர்களையும் உருது மொழியிலும், கிருஷ்ண சைதன்யர் ஆங்கில மொழியிலும், பரமேஸ்வர்தயாள் ஹிந்தியிலுமாக வைது திட்டலானார்கள்.

பிரம்மானந்தர் அங்கே வந்து விரைவில் விஷயத்தைப் புரிந்துகொண்டார். தம்மிடமிருந்த சர்க்கரைக் கொம்மட்டிக்காய் ஒன்றைக் கொண்டுவந்து காட்டி, "ராமானந்தாஜீ! இதோ உங்கள் தர்பூஸா, கிருஷ்ணசைதன்யரே! இதோ உங்கள் Melon. பரமேஸ்வர் தயாள்ஜீ! இதோ உங்கள் ஹிந்த்வா" என்று கூறினார். மூன்று சிஷ்யர்களும் விஷயத்தை உணர்ந்து சுவாமிகளின் திருவடியில் விழுந்து வணங்கினார்கள்.

பிரம்மானந்த சுவாமிகள் "ஒரே பொருளைத் தான் நீங்கள் விரும்பியது; ஆனால் ஒருவரோடொருவர் சண்டையிட்டீர்கள். இது நால்வர் சண்டை போட்டுக்கொண்ட

கதை போலிருக்கிறது. மஹாராஷ்டிர சமஸ்கிருத பண்டிதர், தமிழர், ஹிந்தி பேசுபவர், ஆங்கிலேயர் ஆகிய நால்வரும் பக்கத்திலுள்ள கூரையில் வைக்கப்பட்டிருந்த ஒரு புட்டிப்பாலைப் பற்றி சண்டையிட்டார்கள். எல்லோரும் அதைப் பார்த்தார்கள்; அது பால் தான் என்று புரிந்து கொண்டார்கள் ஒவ்வொருவரும் தத்தம் பஷையில் சொன்னார்கள். க்ஷீரம் என்றார் ஒருவர். பால் என்றார் மற்றவர்; தூத் என்றார் மற்றொருவர்; மில்க் (Milk -பால்) என்றார் வேறொருவர். அவர்கள் சொன்னதெல்லாம் சரியே. ஒரு பொருளையே குறிப்பிட்டார்கள். ஆனால், பேச்சில் ஏற்பட்ட வித்தியாசம் அவர்களைச் சண்டையில் புகுத்தியது. அதுபோலத்தான் உங்கள் விஷயமும்கூட. கடவுளைப் பற்றிய பல்வேறு கோட்பாடுகளைப் பற்றிச் சண்டையிட்டுக்கொள்ளும் மக்களின் நிலைமையும் இதே போலத்தான். ஹிந்துக்கள் கடவுளை பிரம்மன் என்றும், முஸ்லிம்கள் குதா என்றும், கிறிஸ்தவர்கள் விண்ணுலகத்திலுள்ள கடவுள் அல்லது பிதா என்றும், இவ்வாறு பல சமயத்தினர் தத்தம் மொழியிலே பரம்பொருளைக் குறிப்பிட்டார்கள். அமைதியாயிருங்கள்; சாதனைபுரியுங்கள். ஏகனான இறைவனைச் சாக்ஷாத்கரியுங்கள்" என்று உபதேசம் புரிந்தார்கள்.

## 116. பானுப்பிரதாப மன்னரின் சரித்திரம்

அதர்மத்தைப் போக்கித் தர்மத்தை அதன் மகத்தான ஸ்தானத்தில் ஸ்தாபிக்கும் பொருட்டு, மகாவிஷ்ணு இவ்வுலகிலே ஸ்ரீ ராமராக அவதாரமெடுத்ததற்குப் பல காரணங்கள் பகரப்படுகின்றன. இவற்றுள் ஒன்றாகப் பானுப்பிரதாப மன்னரின் சரித்திரம் சிவபெருமானால் பார்வதிதேவிக்குச் சொல்லப்பட்டது.

கைகேய நாட்டில் முன்னொரு காலத்தில் சத்யகேது எனும் மன்னர் வசித்து வந்தார். அவர் தர்மக் கோட்பாடுகளைத் திட்டவட்டமாக அனுஷ்டித்துப் பல

சாஸ்திரங்களையும் கற்று ஆராய்ந்தவர். தந்தையைப் போலக் குடிமக்களை ரக்ஷித்தார். வீர தீரமும் புஜபல பராக்கிரமமும் வாய்ந்தவர். அவரைப் போலத் தீர வீர பராக்கிரமம் பொருந்திய இரண்டு குமாரர்கள் உண்டு. பானுப்பிரதாபர், அரிமர்த்தனர் என்ற பெயர் கொண்டவர்கள். இருவரும் நற்குண நன்னடத்தையும் பராக்கிரமமும் வாய்ந்தவர்கள். பானுப்பிரதாபர் மூத்தவர். இரு சகோதரர்களும் ஒருவரையொருவர் மிகவும் நேசித்தார்கள். ஈருடலும் ஓருயிரும் போன்று அவர்கள் வசித்தார்கள். பானுப்பிரதாபர் பட்டத்துக்குரியவர். சத்யகேது வயோதிகம் மேலிட்டவராகப் பானுப்பிரதாபருக்குப் பட்டங்கட்டி நாட்டை ஒப்புவித்து, வானப்பிரஸ்தாஸ்ரம வாழ்க்கையேற்றுத் தவம் புரிய கானகம் சென்றார்.

பானுப்பிரதாபரின் அரசாட்சியிலே நாடு மிகுந்த வளம் பெற்றது. நெடுந்தொலைவு அவரது புகழ் பரவியது. ஆழ்ந்த விசுவாசத்துடன் மக்களை அரசாண்டார். மக்கள் இலட்சியக் குடிமக்களாக வாழ்ந்தார்கள். பாவம் என்பதே கேட்கப்படவில்லை. அவரது பிரதம மந்திரி தர்மருசி என்ற பெயரினர். அவர் தமது சக்திக்குட்பட்டதெல்லாம் செய்தும் அறிவுள்ள புத்திமதிகளை வழங்கியும் மன்னரைத் திருப்திப்படுத்தினார். சுக்ராச்சாரியரைப் போலப் புத்திசாலித்தனமும் அறிவும் படைத்தவர். நன்னெறியுள்ள மன்னர், சக்தி வாய்ந்த மந்திரியின் புத்திமதியுடனும் வாஞ்சையுள்ள சகோதரனுடனும் இலட்சிய நாட்டை ஸ்தாபித்தார். நாட்டிலே மக்கள் திருப்தியோடும் மகிழ்ச்சியோடும் வசித்தார்கள்.

அவருக்கு நல்ல முஸ்தீபுகளுடன் கூடிய சேனை ஒன்று இருந்தது. யானைகளும் தைரியமான போர் வீரர்களும் நன்கு பயிற்றுவிக்கப்பட்ட குதிரைகளும் தேர்களும் கொண்ட சேனை அது. சேனையின் பலத்தினால் அவர் சந்தோஷப்பட்டார். தமது நாட்டை விரிவாக்கும் பொருட்டுத் திக்குவிஜயம் செய்யலானார். சமீபத்திலிருந்த பல நாடுகளைப் போர் புரிந்து வெற்றி பெற்று தமது நாட்டுடன்

சேர்த்துக்கொண்டார். தீரவீரத்தாலும் பராக்கிரமத்தாலும். சப்ததீவுகளையும் உலகம் முழுமையும் ஜயித்து வெற்றி முரசு கொட்டினார். சண்டையில் தோற்கடிக்கப்பட்டு இவரால் அடக்கப்பட்ட எல்லா ராஜாக்களிடமிருந்தும் நியாயமான கப்பத் தொகையை வசூலித்தார். இங்ஙனம், உலகம் முழுவதற்கும் பானுப்பிரதாபர் ஏகச் சக்கரவர்த்தியாக விளங்கலானார். தகுந்த நேரத்தில் அவர் திக்குவிஜயத்திலிருந்து திரும்பித் தம் தலைநகருக்கு வந்துசேர, உரிய மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டார்.

காமதேனுவைப் போன்ற அழகிய சிருஷ்டிகளைப் பானுப்பிரதாபரின் சக்தியை ஏற்றுக்கொண்ட பூமி வழங்கியது. அல்லல் தொல்லைகளிலிருந்து நீங்கப் பெற்றவர்களாக மக்கள் தத்தம் அலுவல்களைச் செய்து சந்தோஷமாக வாழ்க்கையை நடாத்தலானார்கள். தர்மத்தைப் பயிலுவதில் ஸ்திரமாயிருந்து, பகவானுக்குப் பக்தர்களாக விளங்கினார்கள். மன்னர், குருமார்கள், கடவுள்கள், பாட்டனார், மகான்கள், பெற்றோர்கள் மற்றும் பிராமணர்கள் ஆகிய எல்லோரும் உரிய மரியாதைகளுடன் வணங்கப்பெற்றார்கள்.

மன்னர்கூட சாஸ்திர விதிகளைத் தழுவி ஏராளமான பணத்தைத் தருமம் புரிந்து, பசுக்களையும் பிராமணர்களையும் அநாதைக் குழந்தைகளையும், ஆதரவற்ற ஆடவர் பெண்டிரையும் மிகுந்த கவனத்தோடு காப்பாற்றி ஆதரித்தார். வேதங்களையும் புராணங்களையும் அவர் கற்று, அவற்றின் போதனைகளை மக்களிடையில் கூடப் பரப்பினார். உல்லாசமாக இளைப்பாறும் நிலையங்கள், குளங்கள், கனிகளைத் தரும் தோட்டங்கள், காய்கறிகளைத் தரும் நந்தன வனங்கள் ஆகியவை எண்ணிக்கையிலடங்காதவாறு காட்சியளித்தன. யாத்திரை புரிவதற்குகந்த ஸ்தலங்கள் மாசுமறுவற்று சுத்தமாய் வைத்துக்கொள்ளப்பட்டன. வீடுதோறும் புராணப்படனம் நிறைவேறும். அரசாட்சியின்போது சக்கரவர்த்தி பல முறை சாஸ்திரங்களில் விதிக்கப்பெற்றவாறு யாகங்களைப் புரிந்தார்.

மனம், வாக்கு, காயம் எனும் திரிகரணங்களாலும் வாசுதேவ பகவானுடைய பக்தராக மன்னர் விளங்கினார்.

சிறந்த குதிரை ஒன்றின் மீதேறி மன்னர் ஒரு நாள் வேட்டையாடப் புறப்பட்டார். வேட்டையாடுவதற்குரிய எல்லா ஆயுதங்களுடனும் குதிரைகளுடனும் அனேகர் அவரைத் தொடர்ந்தார்கள். விந்திய மலைகளிலே சென்று காட்டு விலங்குகள் பலவற்றையும் கொன்றார். இறுதியில், விசித்திரமான வடிவத்திலும் உருவத்திலும் மேம்பட்டிருந்த பிரமாண்டமான ஆண் பன்றி ஒன்றைக் கண்டார். காட்டிலே திரியும் மகா கொடிய விலங்குகளில் அது ஒன்று. மன்னர் அதைத் தம்மாலியன்ற வேகத்தோடு துரத்தலானார். ஆண் பன்றி மீது பல அம்புகளை ஏவினார். ஆனால், அந்தப்பன்றியோ தன் உடலைத் தந்திரமாக நெளித்துக் கொண்டு வெகு சாமர்த்தியமாக அம்புகளினின்று தப்பித்துக்கொண்டது. சில நேரங்களில் அது மறைந்தது; மற்ற நேரங்களில் அது தோன்றியது. தமது வலிமை முழுதையும் பயன்படுத்தி மன்னர் அவ்விலங்கைத் துரத்திக்கொண்டே, கானகத்தில் வெகு தொலைவு செல்லலானார், களைப்படைந்தார். அவருடைய சகாக்களோ பின்தங்கிவிட்டார்கள். ஆனாலும், பன்றியின் பின்னால் துரத்துவதைத் தொடர்ந்து செய்தார். கடைசியில் அப்பன்றி ஒரு குகைக்குள்ளே புகுந்து ஒளிந்துகொண்டது. மன்னர் ஏறியுள்ள குதிரை அங்குச் செல்ல இயலாது. இங்ஙனம் மன்னர் அவ்விலங்கைப் பின்தொடர்ந்ததில் ஏமாற்றமுற்றார். களைப்பு ஒரு பக்கம், கடுந்தாகம் மறுபக்கமுமாக மன்னரை அலைக்கழித்தன. முற்றிலும் களைப்புற்றவராக, அவர் அந்த திக்குத் தெரியாத காட்டிலே குடிதண்ணீருக்காக அங்குமிங்கும் அலையலானார்.

வெகுதூரம் அலைந்து திரிந்த பின்பு, மன்னர் முனிவர் போலத் தோற்றமளித்த ஒருவருடைய குடிசையை நெருங்கினார். அவர் சண்டையில் பானுப்பிரதாபரால் தோற்கடித்துத் துரத்தப்பட்ட அரசர்களுள் ஒருவர். அவர் சக்கரவர்த்தியைச் சந்திக்கக் கூசினார்; ஏனெனில் இதயம்

வெதும்பிக் கவலைக்குட்பட்டிருந்தார். மன்னர் மகானை அணுகினார். பசி தாகங்களினால் வாட்டப் பெற்றுக் களைத்திருந்தபடியால், அவரை அடையாளம் கண்டுகொள்ள அரசரால் சாத்தியப்படவில்லை. ஆனால், முனிவரோ பானுப்பிரதாபரை இன்னாரெனக் கண்டுகொண்டார். முனிவர் போலத் தோற்றமளித்தவரை நிஜமான முனிவராகவே மன்னர் நினைத்தார். குதிரையினின்றிறங்கி முனிவர் முன்னால் சாஷ்டாங்க நமஸ்காரம் புரிந்தார். மன்னர் கடுந்தாகத்தால் தாக்குண்டதால், முனிவர் அருகிலிருந்த அழகிய குளத்தை முதலில் காட்டினார். குதிரையுடன் இராஜா அங்கு சென்றார். குளிர்ந்த அக்குளத்தின் நீரைப் பருகி ஆறுதல் அடைந்தார். குதிரையைக்கூட நீர் அருந்தவிட்டார். பிறகு அதை மரத்தடியில் கட்டிவிட்டுக் குடிசைக்குச் சென்றார். முனிவர் அவரைக் குடிசைக்குள் வரவேற்று ஆசனம் சமர்ப்பித்தார். அவர் மன்னவரை நோக்கி, "அரசர் பெருமானே! இரவு வருவதால், இங்கேயே தாங்கள் தங்கி இளைப்பாறுங்கள். இங்கிருந்து உமது அரண்மனை 70 யோஜனை தொலைவு (140 மைல்) இருக்கிறது. இன்று திரும்ப இயலாது. எனது ஆஸ்ரமத்தில் இரவு தங்கி நாளைக்கு உமது தேசத்திற்குப் புறப்படலாம்" என்று கூறினார்.

முனிவர் இன்னாரென்று மன்னரால் கண்டுகொள்ள இயலவில்லை. நிஜமான முனிவராகவே பாவித்துக் கொண்டு அரசர் அவருடன் அளவளாவலானார். அதிதி உபசரணைக்காக அரசர் முதலில் ஆழ்ந்த நன்றி தெரிவித்தார். அரசர் தூய்மையான உள்ளமுடையவராக இருந்தார். ஆனால், முனிவராக அழைக்கப்படுபவரோ (தோற்றுப்போன அரசர், மாறுவேஷத்தில் இருப்பவர்) முற்றிலும் அதிகார ஆசை நிரம்பப்பெற்றவராயிருந்தார். உதவியற்ற நிலைமையில் அரசர் இருப்பதை உணர்ந்தார். இவ்வாய்ப்புக்காக உள்ளூரப் பெரிதும் மகிழ்ந்து, அரசரைப் பழிக்குப் பழிவாங்க விரும்பினார். மிகுந்த சாமர்த்தியசாலியானதால் அம்முனிவர் தமது நோக்கங்களை நிறைவேற்றுவதற்குப் புத்திசாலித்தனமான வழிமுறைகளைக் கையாளலானார்.

பானுப்பிரதாபர் முனிவரைப் பார்த்து, "ஓ! முனிசிரேஷ்டரே! தாங்கள் எவ்வளவு காலமாக இங்கே தங்கியிருக்கிறீர்கள்? தங்கள் நாமம் என்ன? தங்கள் முழு விவரங்களையும் அறிய நான் விரும்புகிறேன்" என்று விசாரிக்கலானார். முனிவர் "என் பெயர் பிகாரி (ஏழை என்று பொருள்). எனக்கு வீடு அல்லது எவ்விதமான வாழ்க்கைச் சாதனமும் கிடையாது" என்று கூறினார். மன்னர், "தாங்கள் கூறுவது சரி, முனிவர்கள் எதையும் தங்களோடு வைத்துக்கொள்ளமாட்டார்கள். எப்போதும் ஏழைகள்தான். ஆகையால் பரமாத்மாவுக்கு அவர்கள் உகந்தவர்கள். அகங்காரம் என்பதே அவர்களிடம் ஒருபோதும் காணப்படுவதில்லை. தங்கள் தகுதிக்கொத்த முனிவர்களைக் கண்டாலே, பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய திருமூர்த்திகளுக்கும் ஐயம் உண்டாகும். ஓ மகானுபாவரே! நான் தங்கள்முன் சாஷ்டாங்க நமஸ்காரம் புரிகிறேன். என்னை ஆசீர்வதியுங்கள்" என்று மன்னர் மொழிந்தார். மன்னரின் எளிய தன்மையைப் பிரியப்பட்ட முனிவர் மீண்டும் "அரசரே! தங்களிடம் உண்மையைக் கூறுகிறேன். பல வருஷங்களாக இப்பகுதிகளில் நான் வசித்துக்கொண்டு வருகிறேன். எங்கும் நான் போனதில்லை. எவரோடும் கூடுவதுமில்லை. மக்களோடு பழகுவதை நான் வெறுக்கிறேன். மக்கள் பழக்கத்தைக் காட்டுத்தீ போல தொலைவிலே ஒதுக்கித் தள்ளுகிறேன். ஆகையால் அஞ்ஞாதவாசத்திலே இருந்து வருகிறேன். பகவானைத் தவிர வேறு எவரையும் பொருள் படுத்துவதில்லை. மக்களிடமிருந்து இலாபகரமானதெதையும் பெற இயலாதபோது, உலகத்தைப் பிரியப்படுவதில் என்ன பயன்? தாங்கள் மிகவும் யதார்த்தமாயிருக்கிறதை நான் காண்கிறேன். தங்களைப் பார்த்ததும் இதயத்திலே மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். இதயத்தின் ஆழத்திலிருந்து இவ்வார்த்தைகளைப் பேசுகிறேன்" என்று கூறினார்.

"வெளிப்பகட்டைக் காணும் மூடர்கள் மட்டும் அல்ல அறிவாளிகளும்கூட சில நேரம் ஏமாறிப்போகிறார்கள். மயிலைப் பாருங்கள். அது எவ்வளவு அழகாக இருக்கிறது;

எவ்வளவு அழகாக அகவுகிறது! ஆனால், அதன் ஆகாரமோ மிக்க விஷம் பொருந்திய பாம்புகளே ஆகும். படமெடுக்கும் நாகப்பாம்பின் மீதுகூட நம்பிக்கை நாட்டலாம்; ஆனால் நண்பனைப் போல மாறுவேஷங் கொண்ட நயவஞ்சகப் பகைவனிடம் ஒருபோதும் நம்பிக்கை கொள்ளலாகாது. நடக்க வேண்டியதெதுவோ அது நடந்தே தீரும்; அதைத் தடுக்க உலகிலே எந்தச் சக்தியும் கிடையாது."

ஆழ்ந்த விரக்தியோடு முனிவர் பேசத் தொடங்கியதால், அவர் வார்த்தைகளைப் பூரணமாக நம்பிவிட்டார் மன்னர் படிப்படியாக. முனிவர் மேலும் பேசத் தொடங்கி, "ஓ. அரசரே! என் பெயர் ஏகதநு" என்றார். மன்னர் இடைமறித்து, "அன்பிற்குரிய முனிவரே! இப்பெயரின் அர்த்தம் என்ன?" என்று வினவ, மோசக்கார முனிவர், "அரசரே! சிருஷ்டி காலந்தொட்டு நான் ஒரே சரீரத்தை எடுத்திருக்கிறேன். எப்போதுமே செத்ததில்லை; வேறு உடம்பு கிடையாது. ஆகையால் இப்பெயர் - ஏகதநு. அரசரே! இதில் வியப்பு கொள்ள வேண்டாம். தவத்தின் மகிமையால் பெறக்கூடியது எதுவும் சாத்தியமில்லாமல் இல்லை. தபோ பலத்தினால் இவ்வுலகத்தை பிரம்மதேவர் சிருஷ்டிக்கிறார்; விஷ்ணு இதை ரக்ஷிக்கிறார்; சிவன் இதை சம்ஹாரிக்கிறார்" என்று மொழிந்தார்.

முனிவரின் இம்மொழிகளைக் கேட்ட மன்னர் பெரிதும் ஆச்சரியமடைந்தார். தம்மைக் கடைத்தேற்றும் ரக்ஷகராக முனிவர் வந்துள்ளாரென்று அவர் முற்றிலும் நம்பிவிட்டார். பின்னர் முனிவர் பக்தியும் ஞானமும் பொருந்திய கதைகள் பலவும் கூறினார். சிருஷ்டி, அழிவு ஆகிய விவரங்களையும் உலகத்தின் மர்மங்களையும்கூட அவர் விளக்கினார்.

தபஸ்வியின் ஆச்சரியப்படத்தக்க போதனா மொழிகளைக் கேட்ட மன்னர் ஒரே வியப்பாக மாறிவிட்டார். அம்முனிவர் மகத்தான சிருஷ்டியாக இருக்க வேண்டுமென்று தமக்குள்ளே அரசர் எண்ணமிடலானார். பின்னர் அரசர் தமது அடையாளத்தைக் கூற விரும்பினார். ஆனால் முனிவர்

அவரைத் தடுத்து, "தாங்கள் என்னிடம் ஒரு தந்திரம் செய்ததை நான் அறிகிறேன். நியாயமாகத்தான் நடந்துகொண்டீர்கள்; ஏனெனில் இதுதான் சிறந்த யுக்தி. அரசர்கள் முதலிலே தாங்கள் இன்னாரென்று அடையாளமம் கூறிக்கொள்ள மாட்டார்கள். தங்களுடைய சூக்ஷ்மபுத்தியைக் கண்டு நான் மிகவும் களிப்புறுகிறேன். ஓ, அரசரே! தங்கள் பெயர் பானுப்பிரதாபர். சத்யகேது தங்கள் தகப்பனார். இதெல்லாம் எனது குருதேவரின் திருவருளால் எனக்குத் தெரிகிறது. ஆனால், பொதுவாக இவ்விஷயங்களை வெளியிடுவதில்லை; ஏனெனில் இது எனக்கே நல்லதல்ல. இச்சிறு விஷயங்களில் ஈடுபடும் முனிவர் சிறுகச்சிறுகத் தமது சக்திகளை இழக்கிறார். ஆனால், தாங்கள் உண்மை நாட்டமுள்ளவரெனவும் நம்பிக்கையான நண்பரெனவும் கண்டுகொண்டபடியால் தங்களிடம் இந்த இரகசியங்களை வெளிப்படுத்தினேன். அரசரே! தங்களிடம் எனக்கு அத்யந்த மகிழ்ச்சி உண்டாகிறது. என்னிடம் வரமொன்று கேளுங்கள். தங்களுக்கு வழங்க இயலாதது எதுவும் கிடையாது" என்றார். மன்னர் திகைப்பும் வியப்புமே வடிவமாக நின்றார்.

பானுப்பிரதாபர் அமைதியாக, "முனிவரே! இந்த ஏழை மீது தங்கள் திருவருள் முற்றிலும் பரவுகிறது. இன்று தங்கள் நட்பு கிடைத்தமையால் நான் அதிர்ஷ்டசாலியானேன். எப்போதும் என் உடல் யௌவனமாயிருக்க வேண்டும். மரணத்தால் பீடிக்கப்படலாகாது. சண்டையில் யாராலும் வெல்லக்கூடாத வலிமை படைத்தவனாயிருக்க வேண்டும். பகைவர்களால் வெல்லப்படாமல் நான் இந்த நாட்டை நூறு கல்பங்கள் அரசாட்சி புரிய வேண்டும். முனிவரே! இந்த வரத்தை நான் தங்களிடமிருந்து விரும்புகிறேன்" என்றார். முனிவர் "அப்படியே ஆகுக. ஆனால், நீங்கள் ஜாக்கிரதையாய் இருக்கவேண்டிய விஷயம் ஒன்றுண்டு. பிராம்மண சாபம் விருப்பத்தக்கதல்ல, பிராம்மணர்களைத் தவிர, இவ்வுலகத்தில் வேறு எவருமே, மரணதேவர் கூட, உங்களுக்குத் தீங்கு இழைக்க இயலாது. தவ வலிமையால் பிராம்மணர்கள் மிகுந்த சக்தி படைத்தவர்கள். பிராம்மண சாபத்தினின்று ஒருவரைக் காப்பாற்றுவதற்கு எவருமே இல்லை. அவர்களைத் தாங்கள்

திருப்திப்படுத்தினால், பின்னர் சிருஷ்டிகர்த்தா பிரம்மா அல்லது சம்ஹார கர்த்தா சிவன்கூட உங்களுக்கு யாதொரு தீங்கும் இழைக்கமாட்டார்கள். பிராம்மணர்களின் சாபம் தவிர, பூமி மேலே யாதொரு விதமான சக்தியும் உங்களுக்குத் தீங்கு செய்யக் கூடியதில்லை. இதை வெளிப்படையாக இயம்புகிறேன்" என்று உறுதி தந்தார். மன்னர் அத்யந்த மகிழ்ச்சி அடைந்தார். மேலும் முனிவர் பேசத் தொடங்கியவராக, "என்னைச் சந்தித்தது, வழிதவறியது ஆகியவையெல்லாம் எவரிடமும் கூறலாகாது. அப்படி யாரிடமாவது கூறினால், எல்லா விளைவுகளுக்கும் தாங்கள் பொறுப்பாளியாக ஏற்றுக்கொள்ளப்படுவீர்கள். மூன்றாவது குழுவினருக்கு இந்த மர்மம் பகிரங்கமாகிவிட்டாலோ, தாங்கள் அக்கணமே அழிந்துபட்டுப் போவீர்கள் என்பதை நிச்சயமாகத் தெரிந்துகொள்ளுங்கள். இவ்விரு காரணங்களைத் தவிர, தங்களைக் கொல்லுவதற்கு இப்பூமியில் வேறு சக்தி எதுவும் கிடையாது. என் சொல்லைச் சத்தியமென நம்புங்கள்" என்று வரத்தின் விளக்கங்களை உரைத்தார். அதற்குப் பானுப்பிரதாபர், "தாங்கள் சொல்லுவது சரி. தனது குரு அல்லது பிராம்மணர்களின் போதனைகளிலே நம்பிக்கை அற்றவனுக்கு அழிவே ஏற்படும். ஆனால், பிராம்மணர்களின் சாபத்திலிருந்து தப்பித்துக்கொள்ளுவதற்கு வழி ஒன்று தயவுசெய்து எனக்குத் தெரிவியுங்கள். தங்களைப் போல, எனது நலத்தை நாடுவோர் வேறு யாருமில்லை" என்றார். கபட முனிவர், "தாங்கள் என்னுடையவர் ஆகிவிட்டீர். என் சக்திக்குள்பட்ட எல்லாவற்றையுமே செய்து தங்களைக் காப்பாற்றுவேன் - மனம், வாக்கு, காயம் அல்லது எல்லாவற்றின் சக்திகளைக் கொண்டேனும், யோகத்தின் உதவியும், மந்திரத்தின் சகாயமும், யுக்தியின் துணையும் ஏற்றுக் கொள்வேன். எதையும் தங்களுக்கு ஒளிக்கமாட்டேன். தங்கள் வேலையைப் பரிபூரணமாகப் புரிவேன். எத்தனை நாள்கள் என்று நான் சொல்லுவேனோ அத்தனை நாள்கள் வரை, ஒவ்வொரு தினமும் லட்சம் பிராம்மணர்களுக்குப் உணவு படைக்க வேண்டும். நான்தானே உணவைச் சமைப்பேன். என்னை யாருமே பார்க்கலாகாது.

பிராம்மணர்கள் உணவு சாப்பிடும்போது, அவர்கள் நிச்சயமாக உங்களை ஆசீர்வதிப்பார்கள். தங்கள் விருப்பங்கள் யாவும் நிறைவேறும். தங்கள் புரோகிதர் வேஷத்திலே இவற்றைச் செய்கிறேன். எனது சக்தியால் அவரை நான் இங்கு வரவழைக்கிறேன்; அவருடைய வடிவத்தை நான் ஏற்றுக்கொள்வேன். ஒரு வருஷம் முழுவதையும் தங்களுக்குச் சேவை புரிவேன். இரகசியங்களைத் தெரிந்து கொள்ள யாராலும் இயலாமற் போகும் வகையில் அவ்வளவு சாமர்த்தியமாகக் காரியங்களைச் செய்வேன். இங்ஙனம், தங்கள் ஆசை பூர்த்தி பெறும். இப்போது இளைப்பாறுங்கள். அதிக காலதாமதமாகிவிட்டது. மூன்றாவது நாளிலே தங்கள் புரோகிதர் மாறுவேஷத்திலே தங்களை வந்து சந்தித்து, இந்த ரகசியங்களை அறியும் வண்ணம் தங்களுக்குக் கூறுவேன். தாங்கள் தூங்கும்போது தங்கள் அரண்மனைக்கு இட்டுச்செல்லுவேன். தூக்கத்தில் தாங்கள் அலட்டிக் கொள்ளமாட்டீர்கள்" என்று விரிவாகச் சாற்றலானார். முனிவரிடம் விடைபெற்ற மன்னர், வேட்டையாடிய களைப்பினால் முற்றிலும் சோர்வுற்றவராகத் தூக்கத்தில் ஆழ்ந்தார்.

தந்திரமுள்ள முனிவர் தூக்கம் கொள்ளவில்லை. அப்போது காலகேது என்ற பெயருடைய ராக்ஷஸன் அங்கே வந்தான். ஆண் பன்றியின் வடிவந்தாங்கிய காலகேது பானுப்பிரதாப மன்னரோடு எல்லாத் தந்திரங்களும் செய்துள்ளான். முனிவர் காலகேதுவுக்கு மன்னரை அரண்மனையில் விடுமாறு உத்தரவிட்டார். அப்படியே அந்த ராக்ஷஸன் செய்தான். பானுப்பிரதாபருடைய புரோகிதரைக் குகையில் ஒளித்துவைத்தான். தங்கள் நடுவே, பானுப்ரதாப மன்னர் திரும்ப வந்தமை குறித்து மக்கள் மிக்க மகிழ்ச்சி அடைந்தார்கள். எங்குமே கொண்டாட்டங்கள் நடந்தன.

மூன்றாவது நாளிலே, காலகேது பானுப்பிரதாபரின் புரோகிதரைப் போன்று ஆடை அணிந்து, முனிவர் தனக்குக் கூறின இரகசியச் சொற்களை வெளியிட்டான். மன்னர் தம் குருவைக் காணப் பெரிதும் சந்தோஷப்பட்டார்.

இரவுகளிலெல்லாம் குருவை எதிர்பார்த்து இளைப்பாறாமல் கவலைப்பட்டுக் கொண்டிருந்தார். புரோகிதரின் சொற்படி பிராம்மணர்களைத் தத்தம் மனைவிகளோடு மன்னர் வரவழைத்தார். எல்லாப் பிராம்மணர்களுக்கும் புரோகிதர் போதுமான உணவைத் தயார்ப்படுத்தினார். நயவஞ்சகமான புரோகிதர் பிராம்மணர்களின் - உணவிலே மாமிசத்தை கலந்துவிட்டார். குறிப்பிட்ட நேரத்திலே, பிராம்மணர்கள் உணவு புசிக்க அமரலானார்கள். பூஜை முடிந்ததும், கைதேர்ந்த சமையற்காரர்கள், புரோகிதரால் சமைத்துத் தயார் செய்யப்பட்ட போஜனத்தைப் பிராம்மணர்களுக்குப் படைக்கலானார்கள். (காலகேது புரோகிதர் மாறுவேஷத்தில் வந்துள்ளான்) காலகேது சாமர்த்தியமாகத் தேவலோகக் குரலில், "ஓ! பிராம்மணர்களே! உணவைப் புசிக்காதீர்கள். பிராம்மணர்களின் உணவில் மாமிசம் கலக்கப்பட்டுள்ளது." என்று கேட்கும்படி செய்தான். தேவலோகக் குரலோசையை நம்பிய பிராம்மணர்கள் எல்லோரும் எழுந்து உடனே மன்னரைப் பார்த்து, "அரசர் பாதகனே! இத்தீய ஆட்டத்தினால் எங்களை ஏமாற்ற விரும்பினாய், நீயும் உனது குடும்பமும் ராக்ஷஸர்களாக மாறுவீர்களாக" என்று சாபமிட்டார்கள்.

விரைவில் இன்னொரு தேவலோகக் குரல் "ஓ! பிராம்மணர்களே! நீங்கள் நீதியாகச் சாபத்தை வழங்கவில்லை. அரசர் குற்றம் புரியவில்லை" என்று முழங்கியது. பிராம்மணர்கள் இதனால் திகைப்படைந்தார்கள். ஆனால், சாபம் ஏற்கெனவே வழங்கப்பட்டதாகையால், அது திருத்தப்படமாட்டாது.

தனது காரியத்தைச் சரிவரச் செய்து முடித்துவிட்டு, முனிவர்போல மாறுவேஷமணிந்து கானகத்தில் தங்கியிருந்த பகையரசனிடம் காலகேது விஷயங்களைக் கூறினான். அவன் இச்செய்தியை இதர அரசர்களுக்குத் தெரிவித்தான். அவர்கள் எல்லோரும் பானுப்பிரதாப மன்னரின் நாட்டின்மீது படையெடுத்து வந்து போரில் தோற்கடித்தார்கள். அவருடைய உற்றார் உறவினர் யாவரும் கொல்லப்பட்டார்கள். அப்பால்,

பிராமணர்களின் சாபத்தினால் பானுப்பிரதாப மன்னர் இராவணனாகவும், சகோதரர் கும்பகர்ணனாகவும் ஜனனமெடுத்தார்கள். அவருடைய சகாக்கள் ராக்ஷதர்களாகப் பிறந்தார்கள். மன்னருடைய பிரதம மந்திரி மிக்க அறிவாளியாயிருந்தபடியால், புகழ்வாய்ந்த விதுரராகப் பிறந்தார் - பகவானுடைய பக்தராக.

இங்ஙனம் பானுப்பிரதாப மன்னரின் சரித்திரம் சிவபெருமானாரால் பகரப்பட்டது. அசுரர்களை அழிக்கவும் சூரர்களை ரக்ஷிக்கவும் பூமிமேல் விஷ்ணுபகவான் இராமராக அவதாரமெடுத்ததற்கு இதுவும் ஒரு காரணமென்பதாகக் கூறப்படுகிறது.

ஓம் தத் ஸத்.

## 117. சிருஷ்டியில் மகுடம் தரித்தவன் மனிதன்!

கடவுள் சிருஷ்டியிலே மனிதன் பெற்றுள்ள மகத்தான நிலையைப் பற்றியும், அவன் அடைந்துள்ள பெருமையைப் பற்றியும் நினைத்து நினைத்து, தந்திரமுள்ள குள்ளநரி ஒன்று மிக்க கவலை கொண்டது. அது தனக்குள், "மனிதனைக்காட்டிலும் எந்தவிதத்தில் நான் புத்தியில் குறைந்தவன்? அல்லது பிறரை வஞ்சிக்கிற போது, அவன் என்னைக்காட்டிலும் தந்திரத்தில் குறைந்தவனா? என்னைப்போலவே, அவனும் ஓர் உயிர் வாழ்கிற பிராணிதானே! உண்மை பார்க்குமிடத்து அவனைவிட நான் எவ்வளவோ திருப்தி கொண்டவன். ஒவ்வொரு விசேஷ காலத்திலும் விலையுயர்ந்த ஆடைகளை நான் அணிவதில்லை. வெப்பதட்ப நிலைகளையெல்லாம் நான் அமைதியுடன் பொறுத்துக்கொள்கிறேன். மழையிலிருந்து காத்துக் கொள்வதற்காக நான் குடைகளைத் தேடுவதில்லை. கோடை காலத்தில், வெயிலைத் தடுத்துக் கொள்ளுவதற்காகக் கறுப்புக் கண்ணாடிகளை நான் அணிவதில்லை. ஓர்

இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்ல மோட்டார் வண்டியோ, ரயில் வண்டியோ நான் கேட்பதில்லை. பிராணிகளாகிய நாங்கள் இத்தகைய குணங்கள் யாவும் பெற்றிருக்கிறோம். சிற்சில அம்சங்களில் மனிதனைவிட அதிகமான பெருந்தன்மை வாய்க்கப் பெற்றிருக்கிறோம். எங்களைக் காட்டிலும் அவன் ஏன் மேலானவன் என்று கருதப்பட வேண்டும்?" என்று எண்ணமிடலாயிற்று.

அக்குள்ள நரி அங்குமிங்கும் ஓடி, மற்ற பிராணிகளைத் தன்னுடன் சேரும்படி தூண்டிற்று. பல பிராணிகளைச் சேர்த்துக்கொண்டது. அப்பால், அவை யானையிடம் போய்க் கூறின. அறிவுள்ள அந்த யானை, "சகோதரர்களே! நீங்கள் சொல்லுவதில் கொஞ்சம் உண்மை இருக்கிறது. அதில் சந்தேகம் இல்லை. காட்டில் வசிக்கிற முனிவரையும் கண்டுபேசி அவர்களுடைய நோக்கங்களை அறியலாம்" என்றது. மற்ற பிராணிகளும் குள்ளநரியைப் பின்தொடர்ந்து, முனிவருடைய ஆஸ்ரமத்திற்குப் போயின.

நாய் அம்முனிவரைப் பார்த்து, 'சுவாமி! என்னைத் தாங்கள் நன்கு அறிவீர்கள். நன்றியின் சின்னமாக நான் இருக்கிறேன். ஆயிரந்தடவை அடித்து விட்டு ஓர் மனிதன் எனக்குக் கவளம் ஆகாரம் கொடுத்தாலே, என் ஆயுள்வரைக்கும் அவனுக்கு நான் நன்றியுள்ளவனாக இருந்து வருகிறேன். அங்ஙனம் அவனுக்குத் தொண்டுபுரிவதில் என் உயிரைக் கொடுக்கவும் தயார். ஆனால், தன் நண்பன் தனக்குச் செய்த ஆயிரம் உதவிகளையும் முற்றிலும் மறந்துவிட்டு அவன் செய்த ஒரு குற்றத்தை மட்டும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, அறிவீனனாய் மனிதன் தன் நண்பனின் உற்றார் உறவினார் யாவரையும் கொலைபுரியவும் தயாராகிறான். முனிவர் பெருமானே! எப்படி மனிதன் மிருகத்தைக்காட்டிலும் உயர்ந்தவனாகிறான்?" என்று கேட்டது.

பின்னர் பின்வருமாறு பசு பேசலாயிற்று. "மனிதன் என்னைப் கசாப்பு கடைக்குக் கொண்டுபோகிறான். சில வேளைகளில் எனக்குக் கொஞ்சம் வைக்கோலும் தவிடும்

கொடுக்கிறான். இவற்றிற்குப் பதிலாக, போஷணைக்குதந்த பாலை நான் தருகிறேன். தனக்கும் தன் குழந்தைக்கும் பாலை வைத்துக்கொண்டு எனது கன்றை அவன் அனேக தடவை பட்டினிபோடுகிறான். அவனையும் அவன் குடும்பத்தார் களையும் இங்ஙனம் நான் போஷித்து வரும்போது, அவன் தன் வீட்டின் கொல்லைப்பக்கத்தில் துர்நாற்றம் வீசுகிற அசுத்தமானதோர் இடத்தைத் தொழுவமாகத் தருகிறான். பால் கொடாத வறட்டுப் பசுவாகப் போய்விட்டாலோ, என்னைக் கவனிக்காமல் அனாதரவாய் விட்டுவிடுகிறான். கிழடுதட்டி விட்டாலோ, ஒன்று நான் வெளியே விரட்டப்படுகிறேன் அல்லது கசாப்புக் கடைக்காரனிடம் விற்கப்படுகிறேன். வானளவுக்கு நீங்கள் புகழ்ந்து பேசுகிற மனிதன் இப்படிப்பட்டவன். ஐயா! இதன் காரணத்தைத் தயவுசெய்து கூறுங்கள்."

காகம் பேசவேண்டிய முறை வந்தது. அது முனிவரைப் பார்த்து, "எனக்குள்ள இந்த நற்குணத்தை மனிதனிடம் காண முடியுமா? ஐயா! எனக்குச் சிறிய ரொட்டித்துண்டு ஒன்று கிடைத்தால் என்து சகோதர சகோதரி இனங்களையெல்லாம் 'கா கா' வெனக் கரைந்து அழைத்து, அவர்களுடன் அதைப் பகிர்ந்து உண்பேன். ஆனால், இதற்கு நேர்மாறாகவே மனிதன் நடந்து கொள்கிறான். அவனுக்கு எவ்வளவு தான் ஐஸ்வரியம் இருந்தாலும் மேலும் மேலும் பணந்திரட்டுவதல்லாமல், தனது தர்மத்தைத் தாண்டி பிறருடைய உணவைப் பறிக்கவும் செல்லுகிறான். சுயநலமும் பேராசையும் வாய்ந்த அத்தகைய மனிதன் என்னைக் காட்டிலும் எவ்வாறு உயர்ந்தவன்?" என்று கேட்டது.

பின் முனிவரைப் பார்த்து ஒரு மீன், "முனிபுங்கவரே! மனிதன் எங்களைக்காட்டிலும் தாழ்ந்தவன் என்று மட்டும் கூறி நிறுத்தமாட்டேன். அவனை முற்றிலும் சுயநலமும் கொடுமையும் வாய்ந்தவன் என்றே சொல்லுவேன். எவ்விதத் தீங்கும் அவனுக்குச் செய்யவில்லை. உண்மையில், குளங்களையும், குட்டைகளையும், ஏரிகளையும், நதிகளையும் சுத்தமாக வைத்துக்கொள்ளும் சேவையில் நான்

ஈடுபட்டிருக்கிறேன். மனிதன் எறிகிற அழுக்கையும் அசுசியையும் நான் சாப்பிடுகிறேன். அவ்வளவு நல்லதோர் ரக்ஷகனைப் பாதுகாப்பதை விட்டுவிட்டு, சுயநலமிகளாகிய மனிதன் என்னைப் பிடித்துக் கொன்று தின்கிறான்! என்னைவிட இந்தமுட்டாள் மனிதன் உயர்ந்தவன் என்று தாங்கள் கருதுகிறீர்களா?" என்றது.

அதன்பிறகு, கோவேறுக்கழுதை, "ஐயா, முனிவரே! மீன் சொன்னது முற்றிலும் உண்மை. எனது பரிதவிக்கத்தக்க நிலைமையை உற்றுக் கவனியுங்கள். சுமைதாங்கும் ஓர் மிருகம் நான். பொறுமை, சகிக்கும்தன்மை ஆகிய தெய்வீகக் குணங்களுக்கு நான் பெயர் வாய்ந்தவன். எனது சேவையில்லாவிட்டால், மலை மக்கள் தம் வாழ்க்கையின் தேவைகளைப் பெற முடியாமல் தத்தளிப்பார்கள். அவர்களுடைய ஆகாரத்தையும் இதர பொருள்களையும் நான் சுமந்து செல்லுகிறேன். எனக்கு என்ன பரிசு? அடித்தல், நையப் புடைத்தல்! இந்த மனிதன் எனக்கு எப்படி உயர்ந்தவன்?" என்றது.

பின்னர், மான், "முனிசிரேஷ்டரே! தாங்கள் அமர்ந்து கடவுளைத் தியானிக்கும் தோல் எங்கள் இனத்திற்கு உரியது. மனிதனுடைய தோல் வேறு நல்ல காரியத்திற்குப் பயன்படுகிறதைப் பற்றித் தாங்கள் கேள்விப்பட்டிருக் கிறீர்களா? அழகு விஷயத்திலோ, மிக்க பேரழகு வாய்ந்த பருவநாயகியின் கண்கள் - எனது கண்களோடு அடிக்கடி உவமிக்கப்படுகின்றன. எனது கொம்புகள் மனிதனுடைய கூடங்களை அலங்கரிக்கின்றன" என்று கூறிற்று.

மயில் பேசத் தொடங்கி, " எனது தோகைகள் மிக்க அழகுவாய்ந்தவை. ஸ்ரீ கிருஷ்ண பகவான் கூட தனது தலையின் முன்பக்கத்தில் எனது பீலியை அணிந்துள்ளார். ஷண்முகக் கடவுள் என்னைத் தமது வாகனமாகப் பயன்படுத்திக் கொள்கிறார். அவர்களுடைய பக்தர்களில் பலரும், மந்திரவாதிகளும் எனது தோகைகளைக் கொண்டு, பேய் பிசாசு போன்ற தீய ஆவிகளை விரட்டுகின்றார்கள்.

மனிதனுடைய தோலோ, முடியோ இவ்வாறு பயன்பட்டதென்கிற விஷயத்தை இதுவரை எவரும் கேட்டதில்லை" என்றது.

பிறகு, பசு முனீஸ்வரரைப் பார்த்து, "எனது சாணம் அவ்வளவும் புனிதத்தன்மை வாய்ந்ததாயும், மிக்க சிரேஷ்டமாகத் தூய்மைப்படுத்தும் சக்தி வாய்ந்ததாயும் வைதிக ஹிந்துக்களால் பாராட்டப்பெறுகின்றது. ஹிந்துக்களின் திவ்யமான கிரியைகளில் எல்லாம் பஞ்சகவ்யம் என்பது இன்றியமையாததோர் அம்சமாகும். மனிதனுடைய மலம் என்று சொன்னால்கூட மனிதர்களை வாந்தி எடுக்கச் செய்யும். அந்தமலத்தில் கொஞ்சம் கையில் பட்டாலோ, கையை உடனே சுத்தமாகக் கழுவுவதோடு மட்டுமின்றி குளிக்கவும் செய்ய வேண்டும்" என்றது.

"என்னைப்போல் அவ்வளவு நுட்பமாக மோப்பம் பிடிக்கக் கூடியவனென்று எந்த மனிதனாலாவது பெருமை பாராட்டிக்கொள்ள முடியுமா?" என்று கேட்டது நாய்.

"என்னைப்போல் அவ்வளவு சூக்ஷமமாகவும் ஆச்சரியமாகவும் பார்க்கிற சக்தி படைத்தவனென்று எந்த மனிதனாலாவது பெருமையடித்துக் கொள்ள முடியுமா?" என்று கேட்டது பருந்து.

"என்னைப் போல் இரவு வேளையிலும் பகல் வேளையிலும் ஒரே மாதிரியான கண் பார்வை படைத்தவனென்று எந்த மனிதனாலாவது பெருமையடித்துக் கொள்ள முடியுமா?" என்று வினவிற்று பூனை.

கடைசியில் யானை, "முனிவரே! பெரிய பெரிய செயல்களைச் செய்வேன். எனக்குப் பெரிய சரீரம் உண்டு. என்னுடைய அறிவைப்பற்றிய கதைகளோ அனந்தம். எனது தந்தமும் எலும்புகளும் அழகிய உருவங்களும் பிறவும் செய்வதற்குப் பயன்படுகின்றன. இதெல்லாம் உண்மை. ஐயா! எங்களைக்காட்டிலும் மனிதன் உயர்ந்தவன் எனக் கருதப்படுவதன் முகாந்திரத்தைத் தயவுசெய்து விளக்குங்கள்.

எங்களுக்கு எனது சகோதரர்கள் கூறிய வாக்குவாதங்கள் யாவையும் நான் ஒப்புக்கொண்டாலும், இதற்கெல்லாம் புத்திசாலித்தனமான முகாந்திரம் ஏதாவது இருக்க வேண்டுமென்று நான் உணருகிறேன்" என்று பணிவுடன் பகர்ந்தது.

முனிவர் பெருமான் காட்டு மிருகங்களையும் பிராணிகளையும் பார்த்து, "காட்டுவாசிகளே! உற்றுக் கேளுங்கள். நீங்கள் சொன்னதெல்லாம் சரி. ஆனால், கடவுள் மனிதருக்கு ஆறாவது புலனாகிய பகுத்தறியும் கண் எனும் புத்தியைக் கொடுத்துள்ளார். இந்த புத்தியினால், அவன் தீமையினின்று நன்மையையும், அசத்தினின்று சத்தையும், அதர்மத்தினின்று தர்மத்தையும் பகுத்தறிந்துகொள்ளுகிறான். உங்களுக்கெல்லாம் இயற்கையறிவு உண்டு. மனிதனால் சகஜ ஞானத்தைப் பெறக் கூடும். அவன் தன் இயற்கையறிவைக் கட்டுப்படுத்தி, சகஜஞானத்தின் வாயிலாக, கடவுளைச் சாக்ஷாத்கரிக்கக் கூடும்" என்று தெளிவாகவும் சுருக்கமாகவும் திருவாய் மலர்ந்தருளினார்.

"அவன் கடவுளைச் சாக்ஷாத்கரிக்க முடியவில்லை என்றால்?" என்று தந்திரமுள்ள நரி கேட்கவும், முனிவர், "முடியவில்லை என்றால், உண்மையில் அவன் ஒரு மிருகத்திலும் கேடுகெட்டவனாகிறான். அவன் கடவுளைச் சாக்ஷாத்கரித்தானெனில் சிருஷ்டி முழுவதிலும் உள்ள எல்லா ஜீவராசிகளிலே மகுடம் தரித்தவன் மனிதனே ஆவான்" என்று கூறினார். நரி முதலிய பிராணிகள் திருப்தியடைந்து, முனிவரிடம் விடைபெற்றுத் திரும்பிப்போயின.

## 118. காணாமற்போன பத்தாவது நபர்

ஆற்றைக் கடந்தார்கள் பத்து பேர். அவர்கள் பத்திரமாகக் கடந்து அக்கரை சென்றார்களா? இதை நிச்சயித்துக் கொள்வதற்காக அவர்கள் ஒவ்வொருவரும் எண்ணத் தொடங்கினார்கள். பிறரை எண்ணுபவன் தன்னை

எண்ணுவதை மறந்தான். எனவே, ஒருவன் காணாமற் போய்விட்டான் என்று அவர்கள் யாவரும் தீர்மானித்துவிட்டார்கள். எண்ணுகிறவன் ஒன்பதாவது நபர் வரை எண்ணுவான். எண்ணுகிறவனே பத்தாவது நபர் என்பதை நினைவுக்குள் வைத்துக்கொள்ளவில்லை. அவர்களில் ஒவ்வொருவனும் பத்தாவது நபர் காணப்படவில்லை என்றே கருதினான். பத்தாவது நபர் எங்கே தொலைந்தான்?

மயக்கம் என்பது அஞ்ஞானத்தின் விளைவே ஆகும். அதற்குத் திரை அல்லது ஆவரணம் என்று பெயர். எண்ணுபவன் பத்தாவது நபர் ஆற்றுநீரில் மூழ்கிப் போனானென்றே முடிவு செய்தான். அகோரமாக அழலானான். இதுவும் அஞ்ஞானத்தின் விளைவுதான். விக்ஷேபம் என்று இதற்குப் பெயர். இவ்வளவு நபர்களும் அகோரமாக அழுது கொண்டிருக்கும்போது, பிறர் மதிக்கத்தக்க நபர் ஒருவர் அங்கே வந்தார். அழுகைக்குக் காரணத்தை அறிந்துகொண்ட பின்னர் அவர்கள் பத்து பேர் தான் என்று உறுதியாகக் கூறினார். அந்த உறுதியான சொல்லை அவர்கள் உண்மையென்று நம்பி ஒப்புக்கொண்டார்கள். பத்தாவது நபர் இருக்கிறான் என்ற அறிவானது உறுதியாகச் சொல்லினின்று பெறப்பட்டது. இதற்குத்தான் பரோக்ஷம் அல்லது நேரடியல்லாதது என்று பெயர். கௌரவிக்கத்தக்க அன்பர் அவர்களை வரிசையாக நிறுத்தி எண்ணி, தன்னை எண்ண மறந்ததால், தானே பத்தாவது நபர் என்பதை தெளிவாகக் காட்டினார். இவ்வாறு காட்டியான பிறகே இதன் உண்மையை ஒவ்வொருவரும் உணர்ந்து அழுகையை நிறுத்தி ஆனந்திக்கலானார்கள். இந்த வகையில் பெறப்படும் அறிவுக்கு அபரோக்ஷம் அல்லது நேரடியானது என்று பெயர்.

இதுபோல, ஆப்த புருஷன் அல்லது ஆத்ம சாக்ஷாத்காரம் பெற்ற முனிவர் முமுக்ஷுவிடம் முதலில், "நீ உடல் அல்ல; நீ அமரத்வமான ஆத்மா ஆவாய்" என்று பிரகடனம் பண்ணுகிறார். இதுதான் பரோக்ஷ ஞானம் அல்லது

நேரடியல்லாத ஞானம். பிறகு அவர், "அது நீயாக இருக்கிறாய்" என்று கூறுகிறார். இது ஆப்த வாக்கியம். முமுக்ஷு தியானித்து மகா வாக்கியத்தின் உண்மையை உணருகிறான். இது அபரோக்ஷ ஞானம் (நேரடியான அறிவு).

## 119. செருப்பும் ஹல்வாதுண்டும்

ஒரு காலத்திலே ஒரு செருப்பும் ஹல்வாதுண்டும் ஒரு முனிவரிடத்திற் சென்று தங்கள் துயரங்களைச் சொல்லிக்கொண்டன. செருப்பு, முனிவரைப் பார்த்து, "போற்றுதற்குரிய ஆற்றல் வாய்ந்த அருந் தபசியே! இரவும் பகலும் என்னுடைய எஜமானரைக் கல்லும் கரடும் முள்ளும் முரடுமான அழுக்கடர்ந்த வழிகளிலே சுமந்துசென்று வருகிறேன். ஆனால், என்னுடைய எஜமானரோ எப்போதும் என்னை வீட்டின் வெளிப்புறத்திலே விட்டுவைக்கிறார். இந்த நிந்தனையைப் பொறுக்க முடியவில்லை" என்று முறையிட்டு அழுதது.

மாமுனிவர் செருப்பை நோக்கி, "அன்பிற்குரிய செருப்பு ஐயா! நீர் உண்மையில் ஓர் பெரிய கர்மயோகி! நீர் உம்முடைய எஜமானருக்கு மகத்தான சரீரத் தியாகத்தினால் சேவை புரிகிறீர். அவருடைய பாதங்களை கல், முள் இவற்றிலிருந்து காப்பாற்றுவதன்றி அப்பாதங்களைச் சுற்றிலும் மூடிக்கொண்டு எல்லாத் துன்பங்களையும் வலிகளையும் பொறுத்துக் கொண்டிருக்கிறீர். நிச்சயமாக, நீர் ஆத்மத் தியாகத்தின் உருவகமாய் விளங்குகிறீர். எல்லா மகிமைகளும் உமக்கே உரியன. தெய்வ வழிபாடு என்ற மனப்பான்மையில் கர்மயோகிகள் செயலைச் செய்ய வேண்டும். சுயலாபத்தை எதிர்பார்க்கக்கூடாது. தான் செய்கிற வேலையைப் பாராட்டிப் பேசுதலைக்கூட எதிர்பார்க்கலாகாது. தான் பணிவிடை செய்வதெல்லாம் கடவுளுக்கே என்ற உணர்ச்சி வேண்டும் கர்மயோகிக்கு. யாருக்குப் பணிவிடை புரிகிறீரோ, அவரிடமிருந்து பாராட்டுதலை எதிர்பார்க்காமல், அவரிடத்திலுள்ள ஆண்டவனைச் சேவிக்கும்படியான

வாய்ப்பு கொடுத்தமைக்காக நன்றி பாராட்ட வேண்டும். எஜமானருடைய சரீரத்திற்குத் தொண்டு புரிவதாகக் கருதாமல், எஜமானர் உருவத்தில் உள்ள பகவானுக்குத் தொண்டாற்றுவதாகக் கருதுதல் வேண்டும். கர்மயோகிக்கு மானமும் அவமானமும் சமநிலை எய்தும். கடவுள் எல்லா வடிவங்களிலும் தங்கியுள்ளார்; எல்லோரும் கடவுளுடைய தோற்றங்கள். உமது அலுவலை ஆண்டவனாகப் பாவித்து, எவ்வித பலனையும் எதிர்பார்க்காமலும் எவ்வித பாராட்டுதலையும்கூட எதிர்பார்க்காமலும், மரியாதை, அவமரியாதை, சந்தோஷம், சஞ்சலம், லாபம், நஷ்டம் இவற்றைச் சமமாகப் பாவித்துத் தொடர்ந்து வேலை செய்வீரானால், சர்வேஸ்வரரின் மகத்தான திருவருளுக்குப் பாத்திரமாகி நித்தியானந்தத்தை அனுபவிப்பீர்; இதில் சந்தேகம் இல்லை. ஆகையால், செருப்பு ஐயா, திரும்பிப் போம்; உமது அலுவலைத் தொடர்ந்து செய்வீராக". என்று ஹிதோபதேசம் செய்தார்.

ஹல்வாதுண்டு, முனிவரைப் பார்த்து, "கண்ணியத்திற்குரிய புண்ணிய மகாபுருஷரே! பரிதாபகரமான கதையைக் கேளுங்கள். மிட்டாய்க் கடையில் நான் அழகாயும், நறுமணம் வீசியும் காட்சி தருகிறேன். ஆசைப்பார்வை என்மீது செலுத்தாமல் யாரும் வழிநடப்பதில்லை. எனது நறுமணம், எனது நாம உச்சாடனம் மட்டுமேகூட அவர்களுடைய வாய் உமிழ்நீர் ஊறச் செய்யும். நான் இல்லாமல் எந்தப் பிரதான விருந்தோ, விழாவோ நடைபெறுவதில்லை. ஆனால், ஐயோ! சில மணிநேரம் சென்றதும் மிகவும் ஆபாசமாயும் துர் நாற்றமாயும் உருவம் மாறிய நான் புறக்கணிக்கப்படுகிறேன். காறித் துப்பியோ அல்லது என்னைப் பார்த்ததும் நாசித்துவாரங்களை மூடிக்கொண்டோ போகின்றார்கள். இந்த அபசாரத்தை என்னால் பொறுக்க முடியவில்லை, சுவாமி!" என்று முறையிட்டது.

மகாமுனிவர் ஹல்வாதுண்டைப் பார்த்து, "இன்பந்தரும் இனிப்புப் பட்சணமாகிய ஹல்வா ஐயா! செருப்பு ஐயாவைப்

போல; நீரும் மகத்தான ஒரு கர்மயோகி! உம்மிடத்தில் உள்ள புஷ்டி தரக்கூடிய சத்துகளுடன் உம்மைச் சாப்பிடுகிறவர்களுக்கு நீர் சேவை புரிகிறீர். உம்முடைய அழகையும், நறுமணத்தையும், மரியாதையையும், உம்முடைய உருவத்தையுங்கூட நீர் தியாகம் பண்ணுகிறீர் - மக்களைப் போஷிப்பதற்காகவும் அவர்களுடைய ருசியைத் திருப்திப்படுத்துவதற்காகவும் ஆஹா! சுயநலமற்ற சேவையின் சொரூபமே நீர்! ஆனால் உமது ஸ்தூல வடிவத்திற்கு வந்த மாறுதலுக்காக அழ வேண்டாம். ஏனெனில், நீர் இந்த ஸ்தூல வடிவம் அல்ல. அழகான கவர்ச்சிதரும் ஹல்வா துண்டோ அல்லது துர்நாற்றமெடுக்கும் மலமோ நீர் அல்ல. சுயநலமற்ற சேவையின் வடிவமாகத் திகழ்கின்றீர்! மகாத்மாக்கள் இந்த நிலையையே விரும்புகிறார்கள். சுயநலமற்ற நிலை அனேக யுகங்களாக இருந்து வருகிறதல்லவா! ஸ்தூல வடிவத்தில் உண்டாகிற மாறுதல்களினாலோ, ஆபாசங்களினாலோ இந்த ஆன்மீக நிலை மாறுதல் அடைவதே இல்லை. ஸ்தூல வடிவத்துடன் உம்மைச் சேர்த்துப் பேசாதீர். உம்முடைய ஸ்தூல வடிவத்திலே நிகழும் இயக்கங்களையெல்லாம் சாட்சியாக நின்று கவனித்து, புஷ்டி தருகிற ருசிமிகுந்த உம்முடைய அம்சங்களினால் மக்களுக்கு சேவை புரிவதைத் தொடர்ந்து நடத்துவீராக. கர்த்ருத்வம் (நான் என்னும் அஹங்காரம் இல்லாமை) இல்லாமல் செய்யப்படும் சேவை - ஆனால் சாட்சி பாவனையோடு செய்யப்படும் சேவைதான் கர்மயோகியின் கோட்பாடு. இது ஓர் அமரத்வ கோட்பாடு - உம்மை எப்போதும் சந்தோஷப்படுத்துவது. நீர் ஸ்தூல வடிவம் என்று நினைப்பதெல்லாம் துயரத்திற்கும் துன்பத்திற்கும் காரணமாகிறது" என்று உபதேசித்தார்.

இங்ஙனம், ஆறுதலும் உபதேசமும் பெற்றுக் கொண்டவையாக, செருப்பும் ஹல்வாதுண்டும் முனிவரிடம் விடைபெற்றுக் கொண்டு தத்தம் இருப்பிடங்களை நாடி முனிவர் பெருமான் உபதேசித்தபடி மக்களுக்குச் சேவை புரிந்துவரலாயின பின்னர் எவ்விதமான குறைபாடுகளையும் கூறிக்கொள்ளவே இல்லை.

# 120. ஒரு மனுதாரரின் கதை

."மிகவும் கண்ணியம் வாய்ந்த ஐயா, பத்தாவது வகுப்புத் தேர்வுக்கு ஆறு முறையும் எழுதினேன். துரதிர்ஷ்டவசமாக அத்தனை முறையும் தேர்வில் தவறிவிட்டேன். இதுதான் எனது யோக்கியதாம்சம். பெற்றோர்கள் தரித்திர நாராயணர்கள். பிள்ளைகுட்டிகள் அனேகம். ஏழ்மை தாண்டவமாடுகிறது. தர்மதுரை தான் இரக்ஷிக்கணும் - பிரபுவே, தாங்களே என்னைக் காப்பாற்ற வேண்டும். மேலும் படிக்க வசதி இல்லை. கண்ணியம் வாய்ந்த தங்கள் அலுவலகத்தில் வேலை காலியாயிருக்கிறதென்று தெரிந்து கொண்டேன். அந்த காலியான வேலைக்கு என்னை ஒரு விண்ணப்பதாரராக மனுச் செய்து கொள்ளுகிறேன். அந்த வேலையை எனக்கு வழங்கும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன். இத்தரும கைங்கரியத்திற்காக, கடமையின் பொருட்டு, கண்ணியமிகுந்த தங்கள் நீண்ட ஆயுளுக்கும், சுபிட்சத்திற்கும், வம்ச விருத்திக்கும் இறைவனைப் பிரார்த்திக்கின்றேன். மிகுந்த கீழ்ப்படிதலுள்ள தங்கள் ஊழியன் - A.R.கிருஷ்ணஸ்வாமி, 72 A, முத்துராமலிங்க வீதி, வேப்பேரி, சென்னை.

ஏ! அறிவில்லாத இளைஞனே! அடிமையே, இத்தகைய பரிதபிக்கத்தக்க நிலைமையில், சின்னஞ்சிறு உத்தியோகஸ்தர்களின் கதவை ஏன் நீ தட்டுகிறாய்? அரசர்களுக்கெல்லாம் மேலான அரசரும், உனது இதய கமலத்தில் வீற்றிருக்கின்றவருமான இறைவனுடைய கதவைத் தட்டுவாயாக. கீர்த்தனை பாடு. ஆண்டவனுடைய நாமத்தைப் பாடு. ஸ்ரீராம் எனும் மந்திரத்தை ஜபிப்பாயாக. உலகத்துச் செல்வம் அனைத்துமன்றி இறைவனுடைய வற்றாத ஆன்மீகப் பொக்கிஷத்தையும் நீ பெறுவாய்.

*நீ அதுவாய் இருக்கிறாய் - தத்துவம் அஸி.*

# 121. நீ கடவுளை ஏமாற்ற முடியாது

இராமகிருஷ்ணன் மெட்ரிகுலேஷன் தேர்வுக்குப் படித்துக் கொண்டிருந்தான். ஆங்கில பாடத்தில் பயம் அதிகம். ஆகையால் கணக்குப் பாடத்தைப் புறக்கணித்தான். ஆங்கில பாடத்திற்கு அதிகக் கவனம் செலுத்தினான். ஆங்கிலத் தேர்வுக்கு முன் தினம் கணக்குத் தேர்வு அமைந்திருந்தது. கணக்குத் தேர்வன்று காலையில் அவன் சிறிது கவலைப்பட்டான். அதற்கு நன்றாய் படிக்கவில்லை. தேர்வில் தவறுவது நிச்சயம் எனத் தோன்றிவிட்டது.

பள்ளிக்குச் சமீபத்தில் கோயில் ஒன்றிருந்தது. முடியாததைக்கூட முடித்துத் தருவார் கடவுள் - அவருக்கு எதையும் சாதிக்கும் சக்தி உண்டு என்பதில் அவன் நம்பிக்கை வைத்தான். கணக்குத் தேர்வு ஆரம்பிப்பதற்கு முன் இராமகிருஷ்ணன் கோயிலுக்குப் போய், "கணக்குத் தேர்வில் தேர்ச்சிக்குரிய அம்சங்களை வரச் செய்து என்னைக் காப்பாற்றுவாயாக. பரீட்சையில் திருப்திகரமாக நான் எழுதிவிட்டால், இறைவா! உனக்கு இருபது ரூபாய் மதிப்புள்ள பிரசாதம் படைக்கிறேன்" என்று பிரார்த்தனை செய்து வழிபட்டான்.

பின்னர், அதிசயம் நிகழ்ந்தது! வினாத்தாளில் உள்ள கணக்குகள் எல்லாம் அவனுக்குச் சுலபமாக இருந்தன. நன்றாக செய்து செய்து பார்த்த கணக்குகள்தான் அங்கே கேள்விகளாக அமைந்திருந்தன. தேர்ச்சி மட்டுமல்ல - மகத்தான தேர்ச்சி அவனுக்குக் கிட்டும். கேள்விகளுக்கு விடை நூற்றுக்கு நூறு சரியாக எழுதினான். இதை நன்றாக அறிந்து கொண்டான். இன்னொன்று குறிப்பிடத்தக்கது. குறிப்பிட்ட நேரத்தில் பாதி அளவு கூட பயன்படுத்தவில்லை - எல்லாக் கேள்விகளுக்கும் நன்றாகப் பதில் அளிக்க நிரம்பவும் சந்தோஷப்பட்டான்.

தேர்வு விடைத்தாள்களை ஒன்று சேர்த்து ஓரத்தில் வைத்துக் கொண்டான். நிரம்பவும் நேரம் இருந்தது. அதைச் செலவழிப்பது எப்படி? கடவுள் பிரசாதத்திற்குத் தேவையான பொருள்களை ஒரு தனிக் காகிதத்தில் எழுதி பட்டியல் தயாரிக்கலாமெனக் கருதினான். மதிப்பு இருபது ரூபாய் பட்டியலைப் பூர்த்தி செய்தானபிறகு, தனக்குள் "ஒன்றிரண்டு இனங்கள் முக்கியம் அல்ல. எல்லாவற்றிற்கும் பணத்தைச் செலவழிப்பானேன்" என்று யோசிக்கலானான். அவற்றில் சில இனங்களைக் குறைத்தான். பின்னர் பிரசாதத்தின் மதிப்பு பதினைந்து ரூபாயாகக் குறைந்தது. மீண்டும் அந்த பட்டியலைச் சோதித்தான். 15 ரூபாய் மதிப்புள்ள பிரசாதத்தைப் பெற்றுக் கொண்டு அதற்குப் பதில் தேர்வில் தேர்ச்சி கொடுக்கக்கூடிய ஓர் வியாபாரியா கடவுள்? பண மதிப்பைப் பற்றியே கவலைப்பட வேண்டியதில்லை. ஆண்டவருக்குப் பிரசாதத்தைப் படைத்தபிறகு, அதை நானும் என் நண்பர்களுமே பகிர்ந்துகொள்ளப் போகிறோம். ஆனதால், பிரசாதத்திற்காக அவ்வளவு செலவழிப்பானேன்?" என்று கூறிக்கொண்டான். வேறு ஓர் காகிதத்தில் எழுதினான். பின்னர் பிரசாத மதிப்பு ரூ. 5க்கு வந்தது. மீண்டும், சோதித்து யோசித்ததன் விளைவாக அது ரூ. 2 ஆகிவிட்டது. ஸ்ரீமத் பகவத் கீதையிலிருந்து ஓர் ஸ்லோகம் அவனுடைய ஞாபகத்திற்கு வந்தது. பக்தி சிரத்தையுடன் அளிக்கப்படும் ஓர் இலையோ, ஒரு பழமோ, அல்லது வெறும் நீரோ மகிழ்ச்சியுடன் நைவேத்தியமாக ஒப்புக்கொள்ளுகிறேனென்று கீதையில் பகவான் சொல்லவில்லையா? கடைசியில், இதய பூர்வமான பக்தி உணர்ச்சியே முக்கியமானது. நல்ல வாழைப்பழங்கள் இரண்டை பகவானுக்குப் பக்தியோடு அளித்து, இருபது ரூபாய் மதிப்புள்ள அதே கண்ணியத்தைச் சம்பாதித்துக் கொள்ளக் கூடும்" என்று தனக்குள் எண்ணமிட்டான்.

இங்ஙனம் இராமகிருஷ்ணன் மனோராஜ்ஜியத்தில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும்போது, மணி அடித்தது. உடனே கண்காணிப்பாளர் விடைத்தாள்களைக் கொண்டு போக வந்தார். கையிலிருந்த காகிதங்களை வெடுக்கெனக்

கொடுத்தான். பரந்த மகிழ்ச்சியான புன்முறுவல் முகத்தில் ஜ்வலிக்க இராமகிருஷ்ணன் வீட்டுக்குத் திரும்பினான். தேர்வில் அசாதாரண வெற்றி கிடைத்து விட்டதாக நம்பினான்.

இராமகிருஷ்ணனின் கையிலிருந்த தாள்களைக் கண்டவுடனே, அவன் தகப்பனார் "என்னப்பா இது! விடைத்தாள்களை வீட்டுக்குத் கொண்டுவந்து விட்டாயே!" என்று வியப்புடன் கேட்டார். தான் யோசித்து எழுதிய பிரசாத மதிப்புத்தாள்களையே தேர்வுக் கண்காணிப் பாளரிடம் மணி அடித்தவுடன் ஞாபகம்றதியில் அவசரத்திலே கொடுத்ததையும், உண்மையான விடைத்தாள்களை வீட்டுக்குக் கொண்டு வந்ததையும் அப்போது உணர்ந்து மிக்க துயரத்திலாழ்ந்தான். அவனுக்குப் பெரிய கோழி முட்டை அம்சம் (Mark) தவிர வேறு என்ன கிடைக்கும்?

அகோரமாக, அழுதவண்ணம், "பிதாவே! கடவுளின் திருவருளினால், தேர்வில் அதிசயிக்கத்தக்க அளவு நன்றாகக் கணக்குகளைச் செய்தேன். ஆனால், பாழாய்ப்போன என் மனசு பிரசாதச் செலவுகளிலிருந்து தப்பித்துக் கொள்ளவும், கடவுளை ஏமாற்றவும் திட்டமிடத் தொடங்கிவிட்டது! தத்துவ ஆராய்ச்சிகள்கூட என்னுடைய நாத்திக பக்தியற்ற நிலையைத் தாங்கிப் பேசின. அதன் விளைவு இதுதான்" என்று கண்ணீர் சொரிந்தான்.

அவனுடைய தகப்பனார் "நீ கடவுளை ஏமாற்ற முடியாது". என்று மொழிந்தார்.

## 122. சசிபதி மன்னன் சரித்திரம்

சசிபதி அயோத்தியை ஆண்டுவந்த மன்னன். அவன் தன் குடிமக்களை நியாயமாகவும் தர்மம் பிறழாமலும் நடத்தினான். பெருந்தன்மை அதிகம் உண்டு. பதினேழாவது நூற்றாண்டிலிருந்த இம்மன்னன் மக்களைப் பிதா போலப் பிரேமை பாராட்டினான். மன்னனின் அறிவிற்காகவும்

இதயத் தூய்மைக்காகவும் மக்கள் யாவரும் அன்பு கொண்டாடினார்கள்.

சசிபதியின் மனைவி ஸ்வர்ணரேகா. ஒரு சமயம், சசிபதியும் ஸ்வர்ணரேகாவும் கயா எனும் புண்ணியக்ஷேத்திரத்திரத்திற்கு யாத்திரை செய்தார்கள். தங்கள் முன்னோர்களுக்கு பிதுர்க்களுக்கு பிண்டதானம் புரிந்தார்கள். புரோகிதர்களில் பிரதம பண்டா புரோகிதர் ரகுநாத் என்பவர் பிரசித்தி பெற்றவர். சிரார்த்தக் கிரியைகள் எல்லாம் ரகுநாத்தே செய்துவந்தார். தர்ப்பணம் முதலியவற்றை மன்னன் சாஸ்திரக் கட்டளைப் பிரகாரம் தவறாமல் செய்யலானான். ராணி ஸ்வர்ணரேகா மன்னன் பக்கத்தில் இருந்தாள். ரகுநாத் ஸ்வர்ணரேகாவின்மீது காதல் கொண்டார். உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார் அவளையே. இதை மன்னன் சசிபதி கவனித்துவிட்டான். சிரார்த்தக் கிரியைகள் பூர்த்தி பெற்றதும் ராணியை அவ்வளவு கூர்ந்து பார்க்கக் காரணம் என்னவென்று மன்னன் ரகுநாத்தைக் கேட்டான். ராணியின் அழகில் தாம் மயங்கியதாகவும், தாம் செய்த கிரியைகளில் தமது மனம் பொருந்தவில்லையென்றும், அம்மனம் இராணியின் அழகில் கொள்ளைகொண்டு விட்டதென்றும் ஒப்புக்கொண்டார் ரகுநாத். இதற்குச் சசிபதி மன்னன், "அப்படியானால், எனது இராணியை பரிசாக வழங்குகிறேன்" என்று கூறிக்கொண்டே, அவளை ரகுநாத் பண்டா புரோகிதருக்கு அர்ப்பணித்தான்.

ரகுநாத்திற்கோ மட்டற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. அவனும் ஸ்வர்ணரேகாவும் வீடு சென்றார்கள். மன்னர்க்குரிய அந்தஸ்து ஆடை உடை இவை யாவும் எங்கே என்று ஸ்வர்ணரேகா கேட்டாள். இன்னது செய்வதென்றே ரகுநாத்திற்குத் தோன்றவில்லை. இராணி விரும்பிய அனைத்தும் தருமாறு மன்னனிடம் போய்க் கேட்டார். அவையெல்லாம் மன்னன் நன்கொடையளித்தான். படிப்படியாகப் பண்டா புரோகிதரின் தேவை அதிகரித்தது. ஒவ்வொன்றாக ரகுநாத் கேட்டதனைத்தும் மன்னன் வழங்கலானான். தனது நாடு முழுவதையும் அவருக்குத் தத்தம்

செய்யுமளவு மன்னன் மனம் இடம் கொடுத்தது. இங்ஙனம், நாட்டைத் தானம் செய்த சசிபதி மன்னன் அதைக்கடந்து ஓர் பிட்சுவாக வழி நடக்கலானான்.

தேவாதி தேவர்கள்கூட சசிபதி மன்னனின் துறவைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சியுற்று, தானம் செய்பவர்களில் அவன் இளவரசனெனப் போற்றிப் புகழ்ந்தார்கள். அவனுடைய கீர்த்தி உலகெங்கும் பரவியது. உண்மைத் துறவின் ஜாஜ்வல்யத்தாலும் மகிமையாலும் மன்னன் ஒரே பிரகாசமாக ஜ்வலித்தான். அடர்ந்த கானகத்தினூடே அவன் போய்க்கொண்டிருப்பதைக் கண்ட மகரிஷி ஒருவர், ஒரு மாம்பழத்தை அவனிடம் கொடுத்தார். அவனுடைய பசியையும் தாகத்தையும் ஒருங்கே நிரந்தரமாகப் போக்கவல்ல சக்தி அம்மாம்பழத்திற்கு உண்டு. சசிபதி சந்நியாசி தனது நாட்டை ஆளுகின்ற ரகுநாத் பண்டாவுக்கு அப்பழத்தைக் கொடுக்கலாமென்று கருதினான். அவர் இப்பழத்தால் திருப்திப்பட்டுப் புதுச்சூழ்நிலையிலே அதிகச் சந்தோஷப்படுவாரென்றே அவன் கருதினான். மீண்டும் நாட்டிற்குத் திரும்பலானான். ரகுநாத்தைக் காண முயன்றான். புது மன்னர், சசிபதி திரும்பி வந்ததைக் கவனித்தார். தமது நாட்டைத் திரும்பவும் பெறுவதற்கே வந்து கொண்டிருக்கிறானென்று ரகுநாத் நினைத்தார். உள்ளே போக சசிபதி மறுக்கப்பட்டான். மாம்பழத்தை மன்னரிடம் வழங்குமாறு ஒரு வேலைக்காரனிடம் அதைக் கொடுத்தான். பழத்தைப் பெற்றுக் கொண்டதும், தம்மைக் கொல்வதற்கெனவே கொண்டுவரப்பட்டது அப்பழம் என்பதாக எண்ணமிட்டார் புது ராஜா. மண்ணின் அடியில் அப்பழத்தைப் புதைக்கும்படி ராஜா உத்தரவிட்டார். இராஜாங்க தோட்டி இதை அறிந்தான். கவலையான வாழ்வு வாழ்வதைக் காட்டிலும் பழத்தைப் புசித்துப் பிராணனை விட்டுவிடலாமென்று எண்ணினான். இவ்விஷயம் தோட்டியின் மனைவிக்கும் தெரிந்துவிட்டது. தன் கணவனுடன் கூடவே தானும் இறக்கலாமெனத் துணிந்தாள். எனவே, மாம்பழத்தைப் பாதி. பாதியாகப் புசித்தார்கள். தோட்டியும் அவன் மனைவியும் என்ன ஆச்சரியம்! அவ்விரு

தோட்டி தம்பதிகளும் எல்லோரும் வியப்படையுமாறு தெய்வ வடிவங்களைத் தாங்கினார்கள். மன்னரும் மற்றோரும் கண்டு அதிசயிக்கும்வண்ணம், தோட்டி தம்பதிகள் ஒரு தங்க சிம்மாசனத்திலேறிக்கொண்டு விண்ணை நோக்கிச் செல்லலானார்கள். சசிபதி சந்நியாசி கொடுத்த பழத்தின் மகிமை அத்தகையது! ரகுநாத் பண்டா தமது அறியாமைக்காகப் பச்சாத்தாபப்பட்டார்.

சசிபதியைத் தேடி அலையலானார் ரகுநாத். அவர் நெடுந்தொலைவு பயணம் செய்து இறுதியில் சசிபதி சந்நியாசியைக் கண்டுகொண்டார். அவர் அவன் காலடியில் விழுந்து இன்னொரு பழத்தைத் தருமாறு வேண்டினார். அப்பழத்தை எங்கிருந்து பெறலாமென்பதைத் தான் அறியவில்லையென்றும் அதைத் தனக்கு ஓர் மகரிஷி தந்தாரென்றும் கூறினான். ரகுநாத் வற்புறுத்தலின்மேல், இருவரும் அந்தமகானைத் தேடிச் செல்லானார்கள். வெகு காலம் பயணம் செய்தார்கள். பழத்தைக் கொடுத்த அந்தமகரிஷியைக் கண்டுகொண்டார்கள். வினாவியபோது தமது பாதுகாப்பில் அது இல்லையென்றும், எதிர்பாராத வகையில் தமக்கு அந்தபழம் கிடைத்ததென்றும் மகரிஷி மொழிந்தார். ஆனால், அம்மகரிஷி இருவரையும் பெருங் கானகத்திற்கு அழைத்துச் சென்றார். அங்கே அத்தகைய பழத்தைத் தருகிற மாமரத்தைக் கண்டார்கள். ஆனால் அதன் வாயிற்புறமோ மூடித் தாளிடப் பெற்றிருந்தது. எவராலும் நுழைய இயலாது. அவர்கள் எல்லோரும் துன்புற்றார்கள். பின்னால் கேட்டது ஓர் குரல். "சசிபதி சந்நியாசி அதைத் திறக்கட்டும்; வேறு யாராலும் அது திறக்கப்படமாட்டாது" என்றது அந்த அசரீரிக் குரல். சசிபதி தன் கையைப் பூட்டின்மீது வைத்தான். என்ன ஆச்சரியம்! பூட்டு தானே திறந்து கொண்டது! ஏனெனில் சசிபதி வழங்கிய எல்லையற்ற தருமத்தின் விளைவே அது! பெரிய அத்தோட்டத்திலே பண்டா மன்னரும் சசிபதியும் மகரிஷியும் விசித்திரமான பல பொருள்களைக் கண்டார்கள். அங்கேயே நிரந்தரமாகத் தங்கியிருக்க விரும்பினார் பண்டா மன்னர். ஆனால், ஒரு பழத்தை எடுத்துக் கொண்டு போய்விடுமாறு சசிபதி

கூறினார். அங்ஙனமே, ரகுநாத் சந்தோஷத்துடன் பழத்தை எடுத்துக் கொண்டு திரும்பினார்.

ரகுநாத் தமது நாட்டிற்கு சந்தோஷத்துடன் வந்தார். பழத்தின் ஆசீர்வாதத்தினால் அவருக்குச் சாந்தியும் அமைதியும் பிறந்தது. நியாயமாகவும் திறமையோடும் நாட்டை ஆண்டார். சசிபதி சந்நியாசி கடுந்தவமியற்றி பிரம்மபதமாகிய நிலையைப் பெற்றார்.

தருமத்தின் மகிமை இத்தகையதே. இவ்வுலகினிலே தருமத்தின் வாயிலாகப் பெற முடியாதது எதுவுமில்லை. குரூர குணமும் துஷ்டத்தனமும் படைத்த மக்களும்கூட மாற்றம் அடைவார்கள். தருமமானது இறுதியிலே ஒருவனை மோட்சத்திற்கு இட்டுச் செல்கிறது. ஆகையால், நேயர்களே! மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்களில் தூய்மையும் தயாளமும் காட்டுவீர்களாக!

ஓம் தத் ஸத்.

## 123. தலையணையின் கீழ் பொக்கிஷம்!

பணக்காரர் ஒருவர் ஆயிரம் ரூபாய் திரவியத்துடன் பிரயாணம் செய்யலானார் தனியாக. இந்தப்பணக்காரப் பிரயாணியின் நம்பிக்கையைச் சம்பாதித்துவிட்டதில் சந்தோஷப்பட்டார் அந்நியர் ஒருவர். என்றைக்காவது ஒருநாள் அவருடைய பணத்தைத் திருடிவிடக் கூடுமென்ற திட்டத்துடன் இருந்தார் அவர்.

ஒவ்வொரு நாள்காலையிலும் அந்நபர் முன்னிலையிலே அப்பணக்காரர் தமது பணத்தையெல்லாம் எண்ணுவார். நாள் முழுதும் அவரது பணம் சட்டைப் பைக்குள்ளேயே இருக்கும். அதைப் பூட்டி வைப்பதற்குப் பெட்டி அவருக்கு இல்லை. இருந்தாலும், இரவில் அந்த நபர் பணத்தைத் தேடிப் பார்த்தால் அவருக்கு கிடைப்பதே இல்லை. இப்படிப் பல இரவுக் காலங்கள் கழிந்தன. அந்த நபர் பணக்காரப் பிரபுவினுடைய

மூட்டை முடிச்சுகள், படுக்கையின் கீழ்ப்புறம் மற்றெல்லாவிடங்களிலும் பணத்தைத் தேடித் தேடிப் பார்த்தார். பணத்தைக் காண முடியவில்லை - மறுநாள் காலையில் பிரயாணியின் கையில் நிச்சயமாகப் பணம் இருக்கிறது.

இந்த மர்மமான ஆட்டம் ஒரு வாரத்திற்கு மேலும் நிகழ்ந்தது. திருட யத்தனித்த நபருக்குப் பயமாகப் போய்விட்டது; அப்பிரயாணி மந்திரவாதியாகவோ சித்திகள் பலவும் கைவரப்பெற்ற யோகியாகவோ இருத்தல் வேண்டுமென நினைக்கலுற்றார். தமது தீய நோக்கத்தை ஒப்புக்கொண்டவராக, அந்த நபர் பணக்காரப் பிரபுவைப் பார்த்து, "இவ்வளவு காலமாகப் பணத்தை எங்கே வைக்கிறீர்கள்? தேடுகிறபோதெல்லாம் எனக்குக் கிடைக்கமாட்டேனென்கிறதே" என்று யதார்த்தமாகப் பேசினார். பிரபு வயிறு குலுங்கச் சிரித்துவிட்டு, "எனது நண்பரே! உம்முடைய சுபாவத்தை உணர்ந்து கொண்டேன். ஆனதால், இரவிலே பணத்தை உம்முடைய தலையணையின் கீழே வைத்துவிடுவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன். அங்கே நீர் எப்பொழுதும் தேடினதில்லை" என்று உண்மை உரைத்தார்.

அந்நியர் என்பவர் ஆசாபாசங்களுடன் கூடிய மூர்க்கத்தனமான மனம் ஆவார். பணக்காரப் பிரபு கடவுள். ஆயிரம் ரூபாய் பொக்கிஷம் என்பது ஆத்ம சாந்தியும் ஆனந்தமுமே ஆகும். கொடிய மனம் சந்தோஷத்தைப் பெற அவாவுகிறது. உலகிலுள்ள பொருள்கள் யாவற்றிலும் சந்தோஷத்தைத் தேடி அலைகிறது. அங்கெல்லாம் சந்தோஷம் காணப்படவில்லை. இறுதியில் அந்தமனமானது தன் தீய நோக்கத்தை ஒழித்துவிட்டுக் கடவுளைச் சுய சரணாகதியில் நெருங்குகிறது. சந்தோஷம் உள்ளேயே, ஆத்மாவிற்குள்ளேயே தங்கியிருக்கிறதென்றும் புறத்திலெங்குமே அது இல்லை என்றும் கடவுள் பிரகடனப்படுத்திவிடுகிறார்.

## 124. மோதிர விரலும் ஆள்காட்டி விரலும்

யார் பெரியவன் என்ற வாதம் மோதிர விரலுக்கும் ஆள்காட்டி விரலுக்கும் எழுந்தது. ஒன்று மற்றதைக் காட்டிலும் உயர்ந்தது என்று வாதம் புரிந்தது. தனது வாக்கு வாதத்திலே மோதிர விரல் பின் வருமாறு பேசிற்று.

"ஓ! ஆள்காட்டி விரலே! உன்னைக்காட்டிலும் நான் நிச்சயமாகப் பெரியவன். மக்கள் தங்கள் பிரேமைக்குரிய திருமண மோதிரங்கள் உள்பட, பிரகாசிக்கின்ற விலையுயர்ந்த மோதிரங்களை அணிவித்து மகிழ்கின்ற விரல் நான் ஒருவனே. என் பெயரே அப்படிக் குறிப்பிடுகிறது. ஒவ்வொரு மதாச்சாரக் கிரியையிலும் கடவுள்களையும், அவர் திருநாமங்களையும் மரியாதையுடன் பாராட்டுவதற்கு முன்னால், ஹிந்துக்கள் முதன் முதலில் புனிதமான பவித்திரத்தை அணிவித்து என்னை மரியாதை செய்கிறார்கள். தூய்மையான குசப்புல்லினால் புனிதமான பவித்திரம் அதாவது மோதிரம் செய்யப்படுகிறது. ஹிந்துக்களின் மதாச்சாரச் சடங்குகள் அனைத்திலும் எனது உதவி நாடப்படுகிறது. உன்னை உபயோகிப்பது அமங்களமானதாய்க் கருதப்படுகிறது. உன்னை உபயோகிப்பதில்லை. ஹிந்துக் குழந்தை முதன் முதலில் அரிசி நிறைந்த தட்டிலே அக்ஷரங்களை எழுதத் தொடங்கும்போது, என்னைக் கொண்டு எழுதுவிக்கிறார் உபாத்தியாயர். குழந்தை என்னைக் கொண்டு அக்ஷரங்களை எழுதுகிறது. ஜபம் புரியும்போது, மணிகளை உருட்டுவதற்கு என்னை உபயோகிக்கிறார்கள் - உன்னை அல்ல. பூஜையின் போது பகவானுக்குப் புஷ்பங்களை வழங்கும்போது, என் உதவியே கோரப்படுகிறது. உன்னுடையதல்ல. பிராணாயாமம் செய்யும்போது உன்னையல்ல என்னையே மக்கள் உபயோகிக்கிறார்கள். வைதிகச் சமூகத்தார் உன்னை வெறுக்கிறார்கள். மகான்களும் மகரிஷிகளும் வர்ணாஸ்ரம தர்மங்களுக்கு அதீதமானவர்கள். இவர்கள்கூட உன்னை

வெறுப்புடன் நோக்குகிறார்கள். ஜபயோகம் என்ற நூலில், அதை எழுதியுள்ள ரிஷிகேஷ், சுவாமி சிவானந்தர், மணிகளை உருட்டும் போது ஆள்காட்டி விரலைப் பயன்படுத்தக் கூடாதென்று தெளிவாகக் கூறியுள்ளார். ஆள்காட்டி விரலே! இக்காரணங்களால் நான் பெரியவன் என்பதை அறிந்துகொள், வீண் வாதங்கள் புரியாமல்" என்றது.

மோதிர விரலின் வாதத்தைக் கேட்ட ஆள்காட்டி விரல் கோபக்கனல் கக்கப் பேசத் தொடங்கி, "ஓ, மோதிர விரலே! வீணாக நீ பெருமையடித்துக் கொள்ளாதே. நிச்சயமாக உன்னைக்காட்டிலும் நான் பெரியவன். ஹிந்து மகரிஷிகள் சின் முத்திரையைக் கையாண்டு வந்தார்கள். இம்முத்திரை வர்ணிக்க இயலாத ஸாந்தியையும் சமநிலையையும் வழங்குகிறது. மர்மமான இந்த சின்முத்திரை காட்டுவதற்கு ரிஷிகள் என்னை நாடினார்கள். மாபெருங் கூட்டத்தின் முன்பு உபந்நியாசகர்கள் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்று கூறும்போதெல்லாம் என்னை உயர்த்தி, அதன் மூலம் கடவுளுக்குப் பிரதிநிதியாக என்னை மரியாதை செய்கிறார்கள். அவ்வளவு பெரிய கூட்டத்தின் நடுவிலே அறிவை வழங்குவதற்கு நான் சாதனமாகப் பயன்படுகிறேன். ஒரு நபரையோ, ஒரு இடத்தையோ அல்லது ஒரு பொருளையோ மற்றவர்களுக்குச் சுட்டிக்காட்டும்போது, மக்கள் வழக்கமாக என்னைப் பயன்படுத்துகிறார்கள். தபேலாவையும் இந்திய பேரிகைகளையும் உபயோகிக்கிறவர்கள் உன்னைவிட என்னை அதிகமாக உபயோகிக்கிறார்கள். டைப் அடிக்கிறவர்களில் பார்த்து அடிக்கும் பயிற்சியைப் பயிலுவோர் பரிபூரணமாகச் என்னைச் சரண்புகுகிறார்கள். ஆனால், பார்க்காமல் தொட்டு அடிக்கும் பயிற்சியைப் பின்பற்றுவோர் உன்னைக்காட்டிலும் என்னை அதிகமாக உபயோகிக்கிறார்கள். எழுதுவதற்கு நான் பயன்படுகிறேன்; நீயல்ல. கதவைத் திறப்பதற்குத் தட்டும் போது நான் சேவை செய்கிறேன்; நீயல்ல. மக்கள் உன்னைப் பயன்படுத்துவதைக் காட்டிலும் என்னை அதிகமாகப் பயன்படுத்துகிறார்கள்; ஏனெனில் நான் மிகுந்த திறமைசாலி. மேலும், நான் ஒரு

வைராகி; தங்க மோதிரங்களுக்காகப் பேராசைப்படுவதில்லை. ஆனால், உன் பெயரே குறிப்பிடுவது போல, மோதிரங்களுக்காகப் பேராசைப்படுகிறாய். இங்ஙனம் மக்களின் செல்வத்தைப் பாழ்படுத்துகிறாய். அவர்களுக்கு நீ சுமையாக நிற்கிறாய். எவ்வளவு குரூரமானவன் நீ !" என்று கூறிற்று.

இங்ஙனம், மோதிர விரலும் ஆள்காட்டி விரலும் தான் தான் பெரியவன் என்று வாதம் புரிந்து கொண்டிருக்கும் போது, காவி தரித்த நரைத்த ஞானி ஒருவர் அவ்வழியே செல்லலானார். அவர் வதனத்தில் அரியதோர் சாந்தம் ஜ்வலித்துக் கொண்டிருந்தது. அந்தத் தீவிரமான வாதத்தைக் கேட்டதும் ஞானி அவர்களின் சமீபத்தில் நெருங்கி, விஷயத்தை உசாவலானார். தகராறைத் தீர்த்து வைக்க முயற்சிப்பதாகவும் உறுதி கூறினார். பின்னர், ஞானி தமது பரிபக்குவ நிலையும் கலக்கமற்ற சாந்தியும் எடுத்துக் காட்டும் தொனியில் பின் வருமாறு திருவாய் மலர்ந்தருளினார்.

"ஓ, அன்புக்குரிய மோதிர விரலே! ஆள்காட்டி விரலே! ஒருவரோடொருவர் நீங்கள் வீணாகத் தர்க்கித்துக் கொண்டீர்கள். மற்றவனைவிடத் தான் மேன்மையுடையவன் என்று நிலைநாட்டும் போது ஒருவனுக்கு சாந்தியும் நிஜமான ஆனந்தமும் உண்டாகாது. ஆனால், எளியவர்களாயும், நான் எனும் அஹங்காரத்தினின்று நீங்கியவர்களாயுமுள்ள மக்களின் இதயங்களில்தான் சாந்தி நிலவுகிறது. துன்மார்க்கமான ஜனன மரணச் சுழலில் ஜீவனைக் கட்டுப்படுத்தக் கூடியனவும், சம்ஸாரமென்று ஏற்படுத்தக் கூடியனவுமான ஆசைகள், விருப்புக்கள், வெறுப்புகள், கர்மங்கள், தளை முதலியவை மூலாதாரக் காரணமாகிய அஹங்காரத்தினின்று வெளிப்படுகின்றனவென்று வேதாந்திகள் பகருகின்றார்கள். நித்தியத்துவம் என்பது ஜனன மரணச் சக்கரத்தினின்று தப்பித்துக்கொள்ளுதல் ஆகும். தகுதி, திறமை, அறிவு அல்லது வைராக்யம் ஆகியவற்றில் மற்றவனைக் காட்டிலும் தான் மேம்பட்டவனென்பதை நிலைநாட்ட முயற்சிப்பதாலும், தன்னைப் பெருமைப்படுத்திக்

கொள்வதாலும் அஹங்காரம் கொழுப்பேறுகிறது. அஹங்காரத்தை ஒழித்துக் கட்டினால்தான் நித்தியத்துவம் பெற முடியும். அதைக் கொழுக்க வைப்பதால் அல்ல. ஒருவனைச் சம்சாரத்திற்குப் பிணைக்கும் அம்சங்கள் எல்லாவற்றையும் துறப்பதால்தான் முக்தி மார்க்கம் திறக்கப்படுகிறது. உண்மையான துறவு என்பது அஹங்காரத்தைத் துறப்பதுவே ஆகும்.

ஞானயோகம், ராஜயோகம், பக்தியோகம், கர்மயோகம் ஆகிய யோகங்கள் அத்தனைக்கும் உள்ள நோக்கமும் தீர்மான முடிவும் என்ன? அகங்காரத்தை வேரோடொழித்தலே ஆகும். மனோ இயக்கமில்லாமல், அஹங்காரம் நிலைபெறாதாகையால், ராஜயோகி தனது மனத்திலுள்ள மாறுபாடுகளை அடக்கியாள்வதன் நிமித்தம் அஹங்காரத்தை ஒழித்துவிடுகிறான். ஆன்மாவை ஒரு பக்கமும், உடலையும் உள்ளத்தையும் புத்தியையும் மற்றொரு பக்கமுமாக இருத்தி, அதனதன் மாறுபாடான இயற்கைச் சுபாவத்தைப் பாகுபடுத்தி ஆராய்வதன் மூலமாக ஞானயோகி அஹங்காரத்தை அகற்றி விடுகிறான். ஏனெனில், உடல், உள்ளம், புத்தி ஆகியவை களையப் பெற்றவுடன், அஹங்காரம் தானாக மறைகிறது; அதன் இடத்தில் சத்து, சித்து, ஆனந்தம் ஆகிய சச்சிதானந்தம் தூய நிலையில் அனுபவிக்கப்படுகிறது. பக்தியோகி ஒருவன் தன் உடல், உள்ளம், புத்தி என்பவற்றைப் பகவானிடமோ குருவினிடமோ (பகவானைத் தவிர வேறுபட்டவரல்ல குரு) சரண் புகுத்துகிறான். அவனுடைய சரணாகதி பூரணமெய்தியபோது, அவன் இயற்கையாகத் தன்னை உடல், உள்ளம், புத்தி இவற்றினின்று பிரித்துக் கொண்டவனாக, அஹங்காரச் சுவடுகள் எல்லாவற்றினின்று விடுதலையடைந்து மூலதத்துவமான சச்சிதானந்த ஸ்வரூபத்தில் நிலைபெற்றுவிடுகிறான். ஏனெனில், உடல், உள்ளம், புத்தி ஆகியவை இல்லாமல் அவற்றின் மூலம் இயங்க முடியாத படியால், அஹங்காரம் நிலைத்திருக்கச் சாத்தியப்படாது. கர்மயோகி ஒருவன் பக்தியோகியின் நிலையையோ அல்லது ஞானயோகியின் நிலையையோ மேற்கொண்டு

கர்மயோகத்தைப் பயிலுகிறான். பக்தி யோகியின் நிலை என்ன?

பக்தியோகி பகவானுடைய கருவிகளாகிய உடல், உள்ளம், புத்தி இவற்றின் மூலமாக பகவான் அல்லது குரு செயலாற்றுகிறாரென உணருகிறான்; புகழ்ச்சி, இகழ்ச்சி, வெற்றி, தோல்வி இவற்றினால் பாதிக்கப்படாமல் இருக்கிறான். இவையெல்லாம் பகவானுக்கோ குருவுக்கோ அல்லது அவருடைய கருவிகளாகிய உடல், உள்ளம், புத்தி இவற்றிற்கோ சொந்தமானவையென்றும், கருவிகள் நடிகர்கள் எனவும், தான் மட்டும் செயலற்ற சச்சிதானந்த ஆத்மன் என்றும் அறிகிறான்.

ஞானயோகியின் நிலை என்ன? தான் கருமம் செய்யவில்லையென்றும், ஆனால் பிரகிருதியின் சிருஷ்டிகளான உடல், உள்ளம், புத்தி ஆகியவை செயலாற்றுகின்றன என்றும், தான் மட்டும் செயலற்ற சச்சிதானந்த ஆத்மன் என்றும் ஞானயோகி உணருகிறான். புகழ்ச்சி, இகழ்ச்சி, வெற்றி, தோல்வி முதலியவை நடிகர்களான உடலுக்கும் உள்ளத்துக்கும் புத்திக்குமே சொந்தமெனவும் தனக்குச் சொந்தம் அல்லவெனவும், தான் பரிசுத்தமான செயலற்ற ஆத்மன் எனவும் கருதி, புகழ்ச்சி அல்லது வெற்றியாலே சந்தோஷப்படாமலும், இகழ்ச்சி அல்லது தோல்வியாலே சஞ்சலப்படாமலும் இருந்து வருகிறான். இங்ஙனம் கர்மயோகி அஹங்காரத்தை ஒழிக்கிறான்.

அகம்பாவம் சரணாகதிக்கு நேர் எதிர்ப்பதம். உடல், உள்ளம், புத்தி இவற்றின் ஆற்றலே அகம்பாவத்திற்குக் காரணமாகிறது. அகம்பாவம் என்பது உடல், உள்ளம், புத்தி ஆகியவற்றைச் சரணாகதி செய்யாமலிருக்கும் நிலையே ஆகும். ஞானயோகத்திலே நிலைபெற்றிருக்கவில்லையென்று அகம்பாவம் காட்டுகிறது; ஏனெனில், உடலும் உள்ளமும் புத்தியும் தானேயென்று உணரும் நிலையிலிருந்துதான் அகம்பாவம் குதித்து வெளிப்படுகிறது. ஆனால், தன்னை

உடல் உள்ளம் புத்தி ஆகியவற்றினின்று வேறுபடுத்திப் பிரித்தலே ஞானயோகத்தின் போக்கு ஆகும். ஒருவன் இராஜயோகத்தில் முன்னேறவில்லை என்பதை அகம்பாவமே சூக்ஷ்மமாகக் காட்டுகிறது. ஏனெனில், அகம்பாவம் என்பது உள்ளத்தின் விருத்தி ஆகும். இராஜயோகியானவன் விருத்திகள் யாவற்றையும் அடக்கியவனென அனுமானிக்கப்படுகிறான். அகம்பாவத்தின் தோற்றமானது ஒருவன் நல்ல கர்மயோகி அல்லவென்பதைக் குறிப்பிடுகிறது. ஏனெனில், முக்கியாம்சத்திலே கர்மயோகியானவன் ஒரு பக்தி யோகியாகவோ அல்லது ஞானயோகியாகவோ இருக்கிறான்.

ஓம் நமோ நாராயணாய எனவும் ஓம் நமோ பகவதே வாசுதேவாய எனவும் மந்திரங்கள் உள்ளன. மந்திரங்கள் எல்லாவற்றிலும் நமஹ என்ற சொல் அடங்கியுள்ளது. நமஹ என்பது சரணாகதி. பகவானுடைய இஷ்டத்திற்குச் சரண்புகுதல் இல்லாமல் பகவானுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் புரிதலில் பொருள் இல்லை. பக்தியோகத்தின் மிக உயர்ந்த நிலையும் ஒன்பதாவது படித்தரமுமானது ஆத்மநிவேதனம். அதாவது ஆத்மாவைச் சரண்புகுதல் ஆகும். பக்தியோகம் என்பதை ஒரே சொல்லில் கூறுமிடத்து சரணாகதி ஆகும். அகம்பாவ மனிதன் எந்தவிதமான சரண்புகுதலும் செய்யமாட்டானாதலால் பக்தியோகத்திற்குச் சத்துரு அகம்பாவம் ஆகும்; ஏற்கெனவே கூறப்பட்டதுபோல் அது எல்லா யோகங்களுக்கும் சத்துருவே.

ஆகையால், மோதிர விரலே, ஆள்காட்டி விரலே, பணிவாக இருங்கள். சாந்திக்கு இரகசியம் பணிவு. யாருடைய சக்தியாலும் திருவருளாலும் நீங்கள் உயிர் பெற்றிருக்கிறீர்களோ, செயலாற்றுகிறீர்களோ, வாதம் செய்கிறீர்களோ அவருக்குச் சரண்புகுவீர்களாக. பகவான் உங்களிடமிருந்து அவருடைய சக்தியை இழுத்துக் கொள்ளும் க்ஷணத்திலே, உயிரின் நகர்த்தக் கூடிய கம்பியை எடுத்துவிடும் க்ஷணத்திலே, நீங்கள் மண்தூசியாகவோ அல்லது சாம்பலாகவோ மாற வேண்டிய தகுதி வாய்ப்பீர்கள்.

வாழ்க்கை என்பது பகவானுடைய மகத்தான வெகுமதி என்று அறிந்து கொண்டு, அவருடைய நினைவிலேயும், அவருடைய சேவையிலும், தங்களுக்கு விதிக்கப்பட்ட கடமைகளை வணங்கும் தன்மையில் செய்துகொண்டு வாழ்க்கையை நடாத்துவீர்களாக. பின்னர், இம்மையிலும், மறுமையிலும் சாந்தி பெறுவீர்கள். தாழ்ந்தவன் உயர்ந்தவன் என்று யாருமே இல்லை. சிறந்தது அல்லது மட்டரகமானது என்று எந்த வேலையும் இல்லை. கீழான அறிவின் காரணமாக, மேன்மையும் கீழ்மையும் அஹங்காரத்தின் சிருஷ்டிகளாகும். இதை உணர்ந்து பணிவாயிருங்கள்" என்றார்.

அறிவுள்ள ஞானியின் அமிர்தம் ஒழுகும் சொற்களைக் கேட்டதும், மோதிரவிரலும் ஆள்காட்டி விரலும் மிக்க மரியாதையோடும் நன்றியறிதலோடும் மகானின் முன்பு தலைதாழ்த்தி வணங்கினார்கள். ஞானப் பிரகாசம் தரும் அவருடைய போதனைகளுக்காக வந்தனம் செய்தார்கள். தத்தம் அலுவல்களைப் பணிவோடும் கடவுள் பக்தியோடும் நிறைவேற்றினார்கள். தான் தான் உயர்ந்தவன் என ஒருபோதும் வாதிக்கவில்லை. இங்ஙனம், தங்கள் கடமைகளைப் பணிவாகவும் ஆராதனையாகவும் ஆற்றிக்கொண்டு, சாந்தியும் கடவுளின் திருவருளும், கைவல்யப் பதவியும் அவர்கள் பெற்றார்கள்.

## 125. ஜம்புகுமாரன்

ராஜகிரஹம் என்ற நகரில் ரிஷபதத்தன் என்ற பெயருடைய தனவந்தர் வசித்து வந்தார். அவருடைய மனைவி தாரிணைதேவிக்கு குழந்தை பிறந்தது. அவன் பெயர் ஜம்புகுமாரன். தனவந்தருக்கு இவன் ஒருவனே மகன். இவன் பல்வேறு சாஸ்திரங்களை கற்றுப் பூரணம் பெற்றான். காளைப் பருவம் அடைந்தான். யௌவனப் பருவம் வலிமையும் சிறப்பும் அதிகம் பெறுமளவு, அவன் மனம் வாழ்க்கையின் இன்பங்களினின்றும் ஆடம்பரங்களினின்றும் பின்வாங்கலாயிற்று. தனவந்தர்களின் புத்திரர்கள்

பொதுவாகப் பிரியப்பட்டு அனுபவிக்கும் பல்வேறு புலன் நுகர்ச்சி இன்பங்களினின்றும் முற்றிலும் விலகினான்.

அந்தக்காலத்தில், நிர்க்கிரந்த ஜைன சமூகத்தினருக்கு ஐந்தாவது கணதாரராயும், பிரதான ஆச்சாரியராயுமிருந்த ஸ்ரீசுதர்மா என்பவர் ராஜகிரஹம் எல்லையில் தங்கியிருந்தார். மஹாவீரரால் இவர் தீட்சை வழங்கப் பெற்றவர். ஆகவே, ஜம்புகுமாரன் ஆச்சார்யசுதர்ம சுவாமிகளை அடிக்கடி போய்த் தரிசித்து, அவருடைய உபதேசங்களை ஏற்றுக் கொள்ளவும் செய்தான். இதனால், ஜம்புகுமாரனுடைய பெற்றோர்கள் பீதியடைந்தார்கள். தமது ஒரே மகன் வீட்டைத் துறந்து வெளியேறிவிடுவானென்று மிகவும் ஆத்திரமடைந் தவர்களாக, அதைத் தடுப்பதற்கான வழியைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கினார்கள். பணக்கார வியாபாரிகளின் மகள்களான எட்டு யௌவன மங்கையர்களைத் தேர்ந்தெடுத்தார்கள். பருவகாலத்து எழிலும், கல்வியும் வழிந்து கொண்டிருந்தன. இந்த எட்டுப் பெண்களையும் தமது மகன் ஜம்புகுமாரனுக்கு மணமுடித்துவிட்டால், உலக வாழ்வைத் துறப்பதான அவனுடைய தீவிர மனப்பான்மைக்கு இது ஓர் மாற்று மருந்தாகுமெனக் கருதித் திருமணத்துக்கு ஏற்பாடு செய்தார்கள். திருமணத்துக்கு முன், ஜம்புகுமாரனுக்கு உலக வாழ்வின் மீது ஏற்பட்டிருக்கும் விரக்தியைப் பற்றிப் பெண்களின் பெற்றோர்களிடம் கூறி, அவர்கள் குமாரிகள் இவ்விரக்தியைக் குணப்படுத்தத் தவறி ஜம்புகுமாரன் உலகத்தைத் துறந்து போவானானால், அதற்குத் தாங்கள் (ஜம்புகுமாரனுடைய பெற்றோர்கள்) பொறுப்பாளிகளாகக் கருதப்படமாட்டோமென்று விளக்கமாக விளம்பிவிட்டார்கள்.

எட்டு எழில் மடந்தையர்களை ஜம்புகுமாரனுக்கு திருமணம் செய்து வைத்தார்கள். ஒவ்வொரு மங்கையும் எட்டு கோடி பொன் நாணயங்களைச் சீதனமாகக் கொணர்ந்தார்கள். ஜம்புகுமாரனின் முன்னால் அமர்ந்தார்கள். அப்பெண்களின் அசாதாரணமான கட்டழகும், அதிமகோன்னத லாவண்ய உருவங்களும், யௌவனம் ததும்பும் பருவமும், ஆடையாபரணாலங்கிர்த ஜாஜ்வல்லியமும்

கூடி எந்த ஒரு யௌவன வாலிபனையும் திகைக்க வைத்துக் கவர்ச்சி கொடுக்கக் கூடியனவாக மிளிர்ந்தன. ஆனால், உருக்கமான ஆன்மீக உணர்ச்சிவசப்பட்ட ஜம்புகுமாரனோ இளநங்கையர்களின் எழிலாலும், குவிக்கப்பட்டிருந்த பொன் நாணயங்களின் சிறப்பாலும் எவ்விதத்திலும் பாதிக்கப்படாமல் அசைவற்றிருந்தான். ஒரு பெண்ணின் உடம்பைத் தீண்டுவதில்லை என்ற கண்டிப்பான சபதம் ஒன்றை ஆச்சார்ய சுதர்மஸ்வாமியிடம் செய்து கொடுத்ததை அவன் மறந்துவிடவில்லை. உலகத்தின் அநித்திய நிலையைப் பற்றி அமைதியாகச் சிந்தித்த வண்ணம் அமர்ந்திருந்தான்.

நிசப்தத்தை உடைத்துப் பேசத் தொடங்கினான் ஜம்புகுமாரன். அவன் தன் மனைவிமார்களை நோக்கி, "நேற்றுதான் எனக்குச் சம்பவித்த விபத்தைப் பற்றிக் கூறுகிறேன். நகர எல்லைப்புறத்திலிருந்து திரும்பி வரும்போது, சாலை வழியில் இளவரசர்கள் தத்தம் பலத்தைப் பரிசோதித்துக் கொண்டிருந்தார்கள் - இரும்புப் பந்துகளை வீசுவதனால். அவ்வழியே நான் சென்றபடியால், கனமான இரும்புப் பந்து ஒன்று என் முன்னால் வந்து விழுந்தது. அது என்னைக் காயப்படுத்திவிட்டது. ஒரு அடிகூட முன்னால் எடுத்து வைத்திருந்தால், அப்பந்து தலைக்கு நேராக வந்து விழுந்து என்னைக் கொன்றிருக்கும். இவ்விபத்திற்குப் பிறகு, ஸ்ரீ சுதர்மஸ்வாமியிடம் திரும்பிச் சென்றேன், வாழ்க்கையின் நிலையாமையைப் பற்றிச் சிந்தித்த வண்ணம். என் உயிர் உள்ளவரை, அதை மிகுந்த அளவு பயன்படுத்திக் கொள்வேன் என்ற சபதம் ஒன்றை ஸ்வாமியிடம் செய்து கொடுத்தேன். திருமணம் புரிந்து கொள்ள ஒரு மனமும் இல்லை. ஆனால், என் பெற்றோர்களின் இடைவிடாத வேண்டுகோள்களுக்கு நான் வற்புறுத்தப்பட்டேன்" என்றான். அப்பெண்டிரில் மூத்தவள் சாமுத்திரஸ்ரீ என்பவள், "அன்பரே! தெய்வங்களால் அனுகூலம் செய்யப்பட்ட தாங்கள் உலக இன்பங்களையும் சந்தோஷங்களையும் அனுபவிக்கத் தக்க நீண்டாயுளோடு பிறந்திருக்கிறீர்கள் என்றே நேற்று நிகழ்ந்த விபத்து மெய்ப்பிக்கிறது" என்று பகர்ந்தாள்.

அதற்கு ஜம்புகுமாரன், "மரணத்திற்கோ விபத்துக்கோ நான் கிஞ்சித்தும் அஞ்சுவதில்லை. நான் சொல்ல விரும்புவது இதுவே. மனிதன் உயிரோடுள்ள வரை, வேலை செய்யப் போதிய வலிமை உள்ளவரை, அவன் தனது திறமைகளையெல்லாம் ஆத்ம நலத்திற்கும், பிறர் நன்மைக்கும், உலக உபகாரத்துக்கும் பயன்படுத்தியாக வேண்டும். கிடைத்தற்கரிய மானுடப் பிறவியைச் சிற்றின்ப சுகபோகங்களில் வீணாக்கிவிடலாகாது. துறவு நெறியும் ஆன்மீக ஆவேசமும் நிறைந்த வாழ்க்கையை உலக உபகாரத்திற்கு அர்ப்பணித்தல் என்பது ஓர் இலட்சியம். ஸ்ரீ சுதர்ம ஸ்வாமியைச் சந்தித்து அவரது வாழ்க்கையின் இந்த இலட்சியத்தைத் தெரிந்துகொண்ட அதிர்ஷ்ட காலந்தொட்டு எனது வாழ்க்கையின் நோக்கத்தை உறுதிப்படுத்திவிட்டேன். வாழ்க்கையின் சிற்றின்ப சுகங்களிலும் கிஞ்சித்து ஆர்வமும் கிடையாது. பற்றின்மையும் துறவும் கொண்ட மகத்தான வாழ்க்கையில் மூழ்கவே தீவிர ஆவேசமானது என்னைத் தின்று கொண்டிருக்கிறது" என்று பதில் கூறினான்.

சாமுத்திரஸ்ரீ, "ஐயா! தாங்கள் கூறுவது உண்மை. ஆனால் மூடனான வாகா என்பவனைப் போல, பிற்காலத்தில் பச்சாத்தாபப்பட வேண்டிய நிலை ஏற்படாமல் தயவுசெய்து பார்த்துக்கொள்ளுங்கள். தெய்வங்களின் திருவருளுக்குப் பாத்திரமானவரே! வாகா என்பவனின் உதாரணத்தைத் தாங்கள் கேட்கவில்லையா?" என்று வினவ, ஜம்புகுமாரன் புன்முறுவலில் எதிர்மறையாகப் பதிலியம்ப, சாமுத்திரஸ்ரீ பேசத் தொடங்கியவளாய், "வாகா என்னும் உழவன் ஒருவன் இருந்தான். வளமில்லாத நிலத்தில் அவனுக்கு ஒரு சில ஏக்கர் இருந்தது. மூன்றாந்தர நெல்லைத் தவிர வேறு ஒன்றும் அந்த நிலத்தில் எதிர்பார்ப்பதற்கில்லை. மற்றொரு கிராமத்தில் அவன் தன் உறவினன் வீட்டிற்குச் சென்றான். அவன் வாகாவைத் தக்க மரியாதையுடன் வரவேற்று ரொட்டியும் வெல்லப்பாகுவும் அளித்தான். வாகா அத்தகைய உணவை அதற்கு முன் புசித்ததில்லையாதலால் அவன் மிக்க ருசியுடன் திருப்தியோடு புசித்தான். புதிய உணவும் மதுரமாயிருந்ததால், அவன் மனம் கவர்ச்சியடைந்தது. அவன் தன்

உறவினனிடமிருந்து கோதுமையும், கரும்பையும் பயிர்செய்யும் வகையைக் கற்றுக்கொண்டான். வீடு திரும்பியவுடன், மூன்றாந்தரமான தானியமே விளைகிற தனது நிலத்தை உழுது கோதுமையைப் பயிரிட்டு கரும்பை நட்டான். போதுமான அளவு தண்ணீர் பாய்ச்சப்படாமலும் சாரமற்றுமிருந்த அந்த நிலத்தில் கோதுமையும் கரும்பும் விளையவில்லை. தன் குற்றத்தை உணர்ந்த மூடனான உழவன், பச்சாத்தாபப்பட்டுப் பட்டினி கிடந்து மரணமடைந்தான். ஐயா! இப்போது தாங்கள் சிந்தனை புரியுங்கள். அடுத்த உலகத்தின் மகத்தான மகிழ்ச்சிப் பேராவலால், இந்த உலகத்தின் நிஜமான இன்பங்களைத் துறந்துவிட்டால், இவ்விரண்டு உலகங்களையும் இழக்கவல்ல அபாயத்தில் தாங்கள் சிக்கியிருக்கிறீர்களா இல்லையா என்பதைச் சிந்தித்துப் பாருங்கள்" என்று விரித்துரைத்தாள்.

ஜம்புகுமாரன், "விந்திய வனத்தின் காகத்தைப் பற்றி நீ கேள்விப்படவில்லையா? உணவின்மீது வைத்த அளவுகடந்த பேராசையின் காரணமாக அந்தகாகம் இறந்தது. ஒரு நாள் யானை ஒன்று விந்திய மலைகளில் அருவியோரமாகத் திடீரென்று இறந்து வீழ்ந்தது. காகம் ஒன்று பறந்து சென்று இறந்த யானையின் மீது அமர்ந்து அதன் மாமிசத்தைக் கொத்தித் தின்னலாயிற்று. இங்ஙனம் சாசுவதமாகவே புசிக்கலாமென்று சிந்தித்தது. பெருத்த வெள்ளம் வந்தது. அருவிக்கரைகள் இரண்டையும் அடித்து ஓடியதன்றி அவ்வெள்ளம் இறந்த யானையின் உடலைத் தாங்கி ஓடிக் கடலில் தள்ளிற்று. புசிப்பதில் கண்ணும் கருத்துமாயிருந்தபடியால், காகத்திற்கு என்ன நடக்கிறதென்றே தெரியாமற் போய்விட்டது. யானையின் சடலத்தைச் சுறா மீன்கள் கடலுக்குள் இழுத்துக் கொண்டு போன போது, அறிவில்லாத காகம் புகலிடத்திற்காக அங்குமிங்கும் பார்த்து ஏமாந்தது. ஆழ்ந்த நீரில் அது தன் ஆருயிரை இழந்தது. ஆகையால், புலன் நுகர்ச்சி இன்பங்களில் தீவிரமாகப் பற்றுக்கொண்டிருப்பவர்கள் உலகமாகிய கடலினுள், காகத்தைப்போல, மூழ்கி இயம்பவொண்ணாத துன்பங்களால் அல்லற்படுகின்றனர்," என்று விரிவாகச் சொன்னான்.

ஜம்புகுமாரனுக்கும் அவனுடைய எட்டு மனைவிமார்களுக்கும் இடையே இத்தகைய வினாக்களும் விடைகளும் தொடர்ந்து நிகழ, இரவு வெகு நேரமாகிவிட்டது. திடும்பிரவேசமாய், அந்நியன் ஒருவன் அந்த அறையில் நுழைந்து ஜம்புகுமாரன் அருகில் அமர்ந்தான். அந்நியன் ஜம்புகுமாரனுக்கு அறிமுகமானவனே. ஐந்நூறு கள்வர்களின் கூட்டத்திற்குத் தலைவன் அவன் - பிரபவ என்ற பெயரினன். அன்றிரவு திருமண வெகுமதிகள் ஏராளம் அங்கு குவிந்திருக்குமென்றும் அவற்றைக் களவு செய்து போகலாமென்றும் பிரபவ வந்து உட்கார்ந்தான். அக்கள்வர் தலைவன் ஜம்புகுமாரனுக்கும் அவனுடைய மனைவிமார் களுக்கும் இடையில் நடைபெற்ற வாக்குவாதங்களை ஒட்டுக்கேட்டு அதிலே மனம் லயித்துக் கிடந்தானாதலால், திருடுவதைப் பற்றி அறவே மறந்து போனான்.

பிரபவ என்பவன் ஓர் க்ஷத்திரிய யுவன். அடங்காச் சேஷ்டையின் காரணமாக அவன் தகப்பனார் அவனை வீட்டிலிருந்து துரத்திவிட்டார். பின்னர் திருட்டுத் தொழிலை மேற்கொண்டு வசித்து வரலானான். நாளடைவில் அவனைப் பின்பற்றி ஒழுகுபவர்கள் ஐந்நூறு நபர்களாகிவிட்டார்கள். பிரபவ கள்வர் தலைவனென்றால் மக்களுக்குப் படுபயம்.

ஜம்புகுமாரன் பிரபவைப் பார்த்ததும், "இப்பொன் நாணயக் குவியல்களை நீ தாராளமாக எடுத்துக் கொண்டு போகலாம். யாரும் உன்னை எதிர்ப்பார் இல்லை. இச்செல்வத்தில் எனக்குக் கடுகளவு பற்றுகூட கிடையாது. நாளை காலையில் நான் கையில் திருவோடு தாங்கி நகரத்தில் சுற்றித் திரிவதை நீ காணலாம்" என்று கூறினான். ஏற்கெனவே, ஜம்புகுமாரனின் பேச்சைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த பிரபவ அவனுடைய துறவு மனப்பான்மையினால் மேற்கொள்ளப்பட்டதாக உணர்ந்தான். ஜம்புகுமாரனுடைய கடைசி வார்த்தையைக் கேட்டதும் பிரபவ உணர்ச்சிகளால் உந்தப்பட்டவனாய்த் தழுதழுத்த குரலில் "இப்பிரமாண்டமான செல்வத்தை கைநிறைந்த தூசிபோலக் கருதித் தாங்கள் கைவிட்டீர்கள். தீயகாரியம்

புரிபவனானாலும், எவ்வளவோ பெருந்தன்மையோடு துறக்கப்பட்டதைத் திருடிக்கொள்வதற்கு நான் அவ்வளவு அற்பத்தனம் வாய்ந்தவன் அல்லன். தங்கள் பேச்சு முற்றும் ஒட்டுக்கேட்டேன். தங்கள் துறவு மகிமையின் ஆதிக்கத்தால் எனது உள்ளத்துள் குடிகொண்டிருந்த அஞ்ஞானக் காரிருள் ஓட்டிவிடப்பட்டது. வெறுக்கத்தக்க இத்திருட்டுத் தொழிலை இன்று முதல் சபதமிட்டுத் தள்ளிவிடுகிறேன். இல்லை. துறவு மனப்பான்மையினால் எனது இதயம் பொங்கித் ததும்புகிறது. தங்கள் புனித சத்சங்கத்தின் சக்திக்கு அனேக வணக்கங்கள் உரித்தாகுக! கௌரவம் மிகுந்த சுதர்மஸ்வாமியிடமிருந்து நான்கூட தீட்சை பெற்றுக்கொள்ளுகிறேன்" என்று ஆவேசம் வந்தவன் போன்று அரற்றினான்.

மறுநாள், சுதர்மஸ்வாமி எனும் மகத்தான மதபோதகரிடம், ஜம்புகுமாரன், அவனுடைய பெற்றோர்கள், அவனுடைய எட்டு மனைவிமார்கள், மனைவிமார்களின் பெற்றோர்கள், பிரபவ கள்வர் தலைவன், அவன் கூட்டத்தைச் சேர்ந்த ஐந்நூறு கள்வர்கள் ஆகிய எல்லோரும் தீட்சை பெற்றுக்கொண்டார்கள். சுதர்ம ஸ்வாமிகளின் நிர்வாணத்திற்குப் பின், மகோன்னத ஆத்மா படைத்த ஜம்புகுமாரர் நிர்க்கிரந்த ஜைன சமூகத்தினர் எல்லோருக்கும் தலைவர் ஆனார். எண்பதாவது வயதில் ஜம்புகுமாரர் நிர்வாணம் எய்தினார். அவருக்குப் பின்னால் கள்வர் தலைவனாயிருந்து தீட்சை பெற்ற பிரபவ ஸ்வாமி அச்சமூகத்தினருக்குத் தலைவர் ஆனார்.

(புராதன ஜைன மதக் கதை - புரான்சந்த் சம்நூகா என்பவர் எழுதியது).

## 126. கழுதையும் ஊர்க்குருவியும்

முன்னொரு காலத்தில் கர்வம் முதிர்ந்ததோர் கழுதை வசித்து வந்தது. உலகத்திலே தன்னைக் காட்டிலும் அறிவு

படைத்த பிராணி வேறு எதுவுமில்லை என்று அகங்கரித்துக் கொண்டிருந்தது.

ஒரு நாள் பழமரங்கள் வளர்ந்த சோலை ஒன்றில் திரிந்து கொண்டிருந்தது. ஆப்பிள் மரங்கள் உயர்ந்து வளர்ந்துங்கூட ரோஜாப் பூவை நிகர்த்த சிறு ஆப்பிள் பழங்களைத் தாங்கி நிற்பதையும் தரையில் படர்ந்திருந்த மெல்லிய கொடியில் பெரிய பூசணிக்காய்கள் பழுத்திருப்பதையும் அது கண்டது. மீண்டும் அது மேலே காட்சியளித்த ஆப்பிள் பழங்களையும் கொடியில் உள்ள பூசணிக்காய்களையும் உற்றுக் கவனித்து மிகவும் வெறுப்புடன் தலையை அசைத்தது.

"இந்த உலகத்தில் ஒவ்வொன்றும் எவ்வளவு அறிவீனமாகப் படைக்கப்பட்டிருக்கிறது. அறிவுள்ள கழுதையாகிய என்னிடம் படைத்தல் என்னும் காரியத்தை ஒப்படைத்திருந்தால், வேறு விதமாகப் படைத்திருப்பேன், பொருள்களையெல்லாம்" என்று வீறாப்பு பேசியது.

மரக்கிளையொன்றில் உட்கார்ந்திருந்த ஓர் ஊர்க்குருவிக்கு இப்பேச்சு பெரும் விந்தையாயிருந்தது. "மிக மிகக் கௌரவிக்கத்தகுந்த கழுதை ஐயாவே! எதிலோ தாங்கள் தவறு கண்டுபிடித்திருக்கிறீர்கள். அதை அடியேனுக்குத் திருவாய் மலர்ந்தருளுங்கள்" என்று வேண்டிக் கொண்டது. பெருமையுடன் தலை நிமிர்ந்துகொண்டு, "நீயே பார் இங்கே. அந்தப் பெரிய மரங்கள் சிறுகுழந்தைகளின் முஷ்டிகளைக் காட்டிலும் அதிகம் பெரிதாயில்லாத ஆப்பிள் பழங்களைத் தாங்கிக் கொண்டும் இந்த பூசணிக்காய்களோ - எனது தலையைக் காட்டிலும் பெரியவை - சுமக்க இயலாத மெல்லிய காம்புகளிலே வளர்ந்திருப்பதையும் பார்" என்று கழுதை பேசிற்று.

"ஆனால், இதுதான் அறிவு படைத்த செயல்" என்று ஊர்க்குருவி உரைத்தவுடன், சினத்துடன் பேசத் தொடங்கி, "இதிலே அறிவுத்திறமை ஒன்றுமில்லை. அப்பெரிய மரங்கள் அந்த பூசணிக்காய்களைப் போல் அவ்வளவு பெரிய ஆப்பிள் பழங்களைத் தாங்கியும், மெல்லிய பூசணிக்கொடிக் காம்புகள்

அந்த ஆப்பிள் பழங்களைப்போல அவ்வளவு சிறிய பூசணிக்காய்களைத் தாங்கியும் நின்றால், அது இதைவிட அறிவு நிறைந்த காரியமாகாதா?'' என்று கழுதை கேட்டது.

அப்போது, கழுதை ஓர் ஆப்பிள் மரத்தின் அருகில் சென்று தன் உடலை தினவு தீர மரத்தின்மீது உராயத் தொடங்கிற்று. அச்சமயம் ஓர் ஆப்பிள் பழம் விழுந்தது. அது அதன் தலையில் மெதுவாக அடித்த மாதிரி விழுந்தது. "ஹி-ஹா. ஐயோ, என் தலை!'' என்று கழுதை அழுதது. ஊர்க்குருவி விழுந்து விழுந்து சிரித்தது. "அப்படி வாருங்கள். ஐயா! கழுதைகளிலே மிக, மிக ஞானமும் அறிவும் வாய்ந்தவர்கள் தாங்களாயிற்றே! இந்த ஆப்பிள் பழம் பூசணிக் காயளவு பெரிதாயில்லாததற்காக தங்கள் கிரகங்களுக்கு நன்றி செலுத்துங்கள். இது மட்டும் பூசணிக்காயளவு பெரிதாயிருந்திருக்குமேயானால், தங்கள் தலை எந்த கதிக்கு உள்ளாகியிருக்கும் என்பதை யோசித்துப் பாருங்கள்'' என்று ஊர்க்குருவி இடித்துரைத்தது.

"நீ சொல்லுவதில் ஏதோ விஷயம் இருக்கத்தான் செய்கிறது'' என்று பெருமூச்சுடன் பேசி, ஆப்பிள் மரங்களையெல்லாம் விட்டுவெளியே துள்ளிக் குதித்துச் சென்றது கழுதை.

## 127. பாராட்டுதலின் மகிமை

இந்தியாவில் ஒரு கிராமத்தில் ஒரு கிழவி தன்னுடைய பிள்ளைகளுடனும் மருமகன்களுடனும் வசித்து வந்தாள். அவளுக்கு சொத்துகள் இல்லை. அதனால் அவளை உபசரித்து பேசுவோர் எவருமே இல்லை. அவளுடைய மருமகன்கள் அவளுடன் சதா சச்சரவிட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஒருநாள், அந்தச் சோகமயமான வாழ்க்கையில் சலித்துப்போய் எவருக்கும் தெரியாமலே வீட்டை விட்டு வெளியே பயணமானாள். வெகுதொலைவு நடந்து போனாள். கோடைக்கால அடர்ந்த கானகத்திற்குள் போய்விட்டாள்.

மெனும் தேவதை அழகிய பெண்ணாக வடிவு கொண்டு அக்கிழவியைப் பார்த்து, தாயே என்னை எப்படி விரும்புகிறீர்கள். சொல்லுங்கள் என்று வினவினாள். புன்முறுவலுடன் அக்கிழவி, "இனியவளே! உன்னைப்பற்றிச் சொல்கிறேன். எல்லாக் காலங்களிலும் நீ வெகு சிறந்த காலம். கொடிய பொல்லாத குளிர் காலத்திற்குப் பிறகு உன்னை வா வா வென்று நல்வரவு கூறி அழைக்கிறோம். கோடையிலே நிலா, வெளிச்சத்திலே, எவ்வளவு சந்தோஷமாயிருக்கிறோம். குளுகுளுவென வீசும் நறுமணம் நிறைந்த காலைத் தென்றலை எவ்வளவு பிரியமாக அனுபவிக்கிறோம்! நீ வந்தால், வாழ்க்கையில் ஆனந்தமும் உடன் வருகிறது. பனிக்கட்டி, ஐஸ்கிரீம், உற்சாகமூட்டக்கூடிய குளிர்ந்த பானங்கள் யாவும் உனது நன்கொடைகளே! காலங்களிலெல்லாம் நீ இராணி! அப்படி நான் உன்னை நேசிக்கிறேன்" என்று வெகுவாகப் பாராட்டினாள். இதைக் கேட்டதும், கோடைக் கால தேவதைக்கு உச்சி குளிர்ந்துவிட்டது. கிழவிக்கு நன்றி கூறி, ஆயிரக்கணக்கில் தங்க நாணயங்களை அன்பின் அடையாளமாக வழங்கினாள். இதைப் பெற்றுக் கொண்டு சிறிதுதொலைவு நடந்தாள் கிழவி.

பச்சைப் புடவை அணிந்து பருவநாயகியாகக் காட்சியளித்த மாரிக்கால தேவதையைக் கிழவி சந்தித்தாள். தன்னை எப்படி விரும்புகிறாள் எனக் கிழவியிடம் கேட்டாள் தேவதை. பாராட்டுரை வழங்கினாள் கிழவி. 'வாழ்க்கையின் அழகி நீ. நீ இல்லாவிட்டால் வாழ்க்கை மலடாகி மந்தமாயும் பயங்கரமாயும் மாறும். மாரிக்காலத்தில் இயற்கை முற்றிலும் இளமை எய்துகிறது. அருவிகள் முணுமுணுக்க, தோட்டங்கள் புன்முறுவல் செய்ய, பாலர்கள் பாடி நாட்டியமாட கிழவர்கள்கூட கண்சிமிட்டி சீழ்க்கை அடிக்கிறார்கள். உன்னிடமிருந்து கவிஞர்கள் ஆவேச உணர்ச்சி பெறுகிறார்கள். ஓ இரம்மியமான இளவரசியே! வனபோஜனங்களும் உல்லாசக் கூட்டங்களும் உன்னுடைய வெகுமானங்கள். உலகம் உன்னை நன்றியறிதலோடும் பிரேமையோடும் வரவேற்கிறது" என்று பாராட்டிப் புகழ்ந்தாள். மாரிக்கால தேவதை அபாரமாக மகிழ்ச்சியடைந்து

கிழவிக்கு விலையுயர்ந்த ரத்தினங்கள் நிறைந்த கனமான பை ஒன்றைப் பரிசாக வழங்கினாள்.

தன் அதிர்ஷ்டத்திற்காக மகிழ்ந்த கிழவி கொஞ்ச தொலைவு நடந்ததும், வெள்ளை உடை அணிந்த குளிர்கால தேவதையைச் சந்தித்தாள். தன்னை அக்கிழவி எப்படி விரும்புகிறாள் எனக் கேட்டாள், அத்தேவதை. யதார்த்தமாக அந்ததேவதையைச் சிறந்த முறையில் புகழ்ந்து பேசினாள். குளிர்கால தேவதைக்கும் மகிழ்ச்சி பொங்கியது. பெருந்தொகையைப் பரிசளித்தாள்.

கிழவி குதூகலத்தால் கூத்தாடினாள். வீட்டுக்குத் திரும்பினாள். தன் குழந்தைகளிடம் முழுக் கதையும் மொழிந்தாள். பணக்காரக் கிழவியாகிவிட்டபடியால் எல்லோரும் அவளை நேசித்து மரியாதை செலுத்தலானார்கள்.

அங்கே இன்னொரு கிழவி வசித்து வந்தாள். பிள்ளைகளால் அபசாரஞ் செய்யப்பட்டவள். கிழவியின் அதிர்ஷ்டத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தாள் இக்கிழவி. வீட்டை விட்டு வெளியே பயணமானாள். அவளும் மூன்று தேவதைகளை ஒன்றன்பின் ஒன்றாக நேசித்தாள். இந்தக் கிழவி கூடிய மட்டும் அவர்களை இகழ்ந்து பேசினாள். அந்ததேவதைகள் கிழவியை அடித்துச் சபித்துவிட்டார்கள். பட்டினி கிடந்தும் துக்கத்தால் அலைக்கழிக்கப்பட்டும் வாடி வதங்கிய கிழவி வீட்டுக்குத் திரும்பி முன்னிலும் அதிகமாக துன்பகரமாக வாழ் நாளைக் கழிக்க வேண்டியவளானாள்.

*நீதி : ஒருவன் பிறரை எப்போதும் பாராட்டிப் புகழ வேண்டும்.*

ஓம் தத் ஸத்

## 128. குழந்தையைப்போல் அழு

திண்ணையில் விளையாட்டுச் சாமான்களை வைத்துக் கொண்டு குழந்தை விளையாடிக் கொண்டிருக்கிறது.

அந்தப்பெண் குழந்தை, "அம்மா அம்மா" என்று கூப்பிட்டது. சமையல் அறையில் உணவைத் தயாரித்துக் கொண்டிருந்த தாய் "ஓ முனி, ஓ முனி" என்று பதில் குரல் கொடுத்தாள். சிறிய நாற்காலி ஒன்று குழந்தையின் மேல் விழுந்தது : இப்போது மிகவும் உரத்த குரலிலே "அம்மா! அம்மா!!" என்று கத்திற்று. தாய் பாலைக் காய்ச்சிக் கொண்டிருந்தாள். அந்த வேலையை விட்டுவிட்டு, தாய் குழந்தையிடம் ஓடி வந்தாள். குழந்தையைத் தூக்கிக் கொண்டு உடம்பைத் தடவிக் கொடுத்து இன்ப வார்த்தைகளைப் பேசி மகிழ்வுறச் செய்தாள். குழந்தை முன்போல் விளையாடலாயிற்று.

இதுபோல முழுமனத்துடன் ஆத்ம சரணாகதி செய்து ஆண்டவனைத் தனிமையாயிருந்து அருளையும் புகலிடத்தையும் வேண்டி பிரார்த்தனை புரிந்தால் அவர் ஓடிவந்து உன்னை இரக்ஷிப்பார். அவர் தம்முடைய திருவருளை உன் மீது பொழிந்து, சம்சாரமெனும் சகதியினின்று மேலே எழுப்பி உன்னைத் தழுவி சிரஞ்சீவியாக்குவார்.

## 129. ராஜரிஷி பிரசன்ன சந்திரர்

### (புராண்சந்த் சம்பூகா)

### (பழங்கால சமணக் கதை)

பதான்பூர் நாட்டு அரசர் பிரசன்ன சந்திரர். துறவு வாழ்க்கை மேற்கொள்ள வேண்டும் என்ற உணர்வால் உந்தப்பட்டு அவர் தமது மனைவி, மக்களையும், அளப்பரிய அரசச் செல்வங்களையும் துறந்தார். சமணத் துறவியர் (ஷிரமணர்கள்) பின்பற்றிய கடும் தவ வாழ்க்கையை மேற்கொண்டார்.

சமணத் துறவியர்களுக்கே உரிய கண்டிப்பான தவநெறிகளை முற்றிலும் பற்றற்ற தன்மையுடன் அவர் பின்பற்றி ஒழுகினார். கடும் சோதனைகளைக் கண்டு அவர் அஞ்சிப் பின் வாங்கவில்லை. பிறப்பு, மூப்பு, இறப்பு எனும்

துன்பங்களில் இருந்தெல்லாம் என்றென்றைக்குமாக விடுதலை பெறுவதற்கான மெய்யார்வ முயற்சியில் அவர் தம்மை ஈடுபடுத்திக் கொண்டார்.

ஒவ்வொரு இடமாக அவர் அலைந்து திரிந்தார்; ஒருமுறை ராஜகிருஹா என்ற நகரத்தை அடைந்தார். அந்த நகரத்தின் எல்லையில் அமைந்த ஒரு சோலையை அடைந்து, நின்ற நிலையிலேயே ஆழ்ந்த தியானத்தில் ஆழ்ந்தார்.

சமண சமய தீர்த்தங்கரர் சுவாமி மகாவீரரும் அப்போது ராஜகிருஹா நகரத்தில் உள்ள குணசீல சைத்யாவில் (சமண மடம்) தங்கியிருந்தார். மகா வீரரை நேரில் சந்தித்து, அவரது ஞான மொழிகளைக் கேட்பதற்காக, நகர மக்கள் மடத்துக்கு அணி திரண்டனர்.

ராஜகிருஹத்தின் அரசரான ஷிரனிகரும் தமது படைகள், பரிவாரங்கள் சூழ மகாவீரரைச் சந்தித்து அவரது அருளுரையைக் கேட்பதற்காக வந்து கொண்டிருந்தார். வரும் வழியில், பிரசன்ன சந்திரர் தவம் செய்யும் அந்தச் சோலையின் வழியே அவர் செல்ல நேர்ந்தது. தன்னை மறந்த தவநிலையில் காட்சிதரும் பிரசன்ன சந்திரரை, மனதுக்குள் போற்றித் தொழுதவாறு ஷிரனிகர் அந்தச் சோலையைக் கடந்து சென்றார்.

சுவாமி மகாவீரரின் அமுத மொழிகளைக் கேட்பதற்காக மடத்தில் மக்கள் பெருந்திரளாகக் கூடியிருந்தனர். ராஜகிருஹ மன்னர் ஷிரனிகரும் அங்கு வந்து சேர்ந்தார். மரபுமுறைப்படி மகாவீரரை மூன்று முறை வலம் வந்து, தலை வணங்கித் தொழுது அமர்ந்தார். வரும் வழியில் கண்ட ராஜரிஷி பிரசன்ன சந்திரரின் தோற்றம் ஷிரனிகரின் மனதில் இன்னும் நீங்காமல் இருந்தது. கூப்பிய கரங்களுடன் மகாவீரரை நோக்கி அவர் கேட்டார் : "சுவாமி, நான் வரும் வழியில், ராஜரிஷி பிரசன்ன சந்திரர் தவமிருப்பதைக் கண்டேன். நான் பார்த்த அந்த நேரத்தில் அவர் உயிர் நீத்திருப்பாரானால், வேறு எந்த உலகத்துக்கு அவர்

சென்றிருக்கக் கூடும்?." "ஏழாவது நரகத்துக்குச் சென்றிருப்பார்" என இதற்கு சுவாமிகள் பதிலளித்தார்.

ஏழாவது நரகம்! அங்கிருந்த அனைவரும் அதிர்ச்சியும் வியப்பும் அடைந்தனர். அளவு கடந்த செல்வத்தையும், மனைவி, குழந்தைகள்பாலான அனைத்துப் பற்றுதல்களையும், அரச வாழ்வுக்குரிய அனைத்து அதிகாரங்களையும் இன்பங்களையும் துறந்த ஒருவர், முக்தி அடையும் நோக்கில் கடும் துறவறத்தைப் பயின்று வரும் ஒருவர் - ஏழாவது நரகத்தில் பிறப்பதா? அங்கிருந்த மக்களின் வியப்புக்கு எல்லையே இல்லை. எனினும், எல்லாம் அறிந்த சுவாமிகளின் சொற்கள் எவ்வாறு பொய்யாக இருக்கக் கூடும்?

சுவாமிகளைப் பார்த்து ஷிரனிகர் மீண்டும் ஒரு கேள்வி எழுப்பினார் : "இப்போது அவர் இறப்பாரானால், அவர் எங்கு செல்லக் கூடும்?" இதற்கு "ஆறாம் நரகத்துக்கு" என்பதே சுவாமிகள் அளித்த பதில்.

ஷிரனிகர், சிறிது இடைவெளி விட்டு, தொடர்ந்து இதேபோல கேள்விகளை எழுப்பிக் கொண்டிருந்தார். சுவாமிகளும், பிரசன்ன சந்திரர் ஐந்தாவது, நான்காவது, மூன்றாவது நரகங்கள் என அடுத்தடுத்துப் பிறப்பெடுப்பார் என சொல்லிக் கொண்டிருந்தார்.

இதையடுத்து, பிரசன்ன சந்திரர் முதலாம் சுவர்க்கத்திலும், இரண்டாம் சுவர்க்கத்திலும், கடைசியில் எல்லா குறிக்கோள்களையும் ஈடேற்றும் சொர்க்கமான, சர்வார்த்தசித்தி என அழைக்கப்படும் மேலான சொர்க்கத்திலும் பிறப்பார் என பதிலளித்தார். அந்த நேரத்தில், சொர்க்கங்களில் எக்காளம் முழங்கும் ஒலி கேட்டது. இதுபற்றி குறிப்பிட்ட சுவாமிகள், "பிரசன்ன சந்திரர், தலையாய ஞானமாகிய கேவல ஞானத்தை அடைந்து விட்டார் என்ற மகிழ்ச்சியில் தேவர்கள் எக்காளம் முழங்குகின்றனர்" என்று விளங்கினார்.

அங்கிருந்தவர்கள் அனைவரும் மீண்டும் எல்லையற்ற வியப்பில் மூழ்கினர். அரசர் ஷிரணிகர் மீண்டும் மகாவீரரை நோக்கி, "சுவாமிகளே, உங்கள் சொற்கள் எங்களுக்கு புதிராக உள்ளன. சற்று முன்பு வரை, ஏழாம் நரகத்துக்கு இட்டுச் செல்லக் கூடிய அளவுக்கு கர்மவினைகளைச் சுமந்து கொண்டிருந்த ஒருவர், அந்தக் கர்மவினைகள் அனைத்தையும் இவ்வளவு குறுகிய காலத்தில் களைந்துவிட்டு, தலையாய ஞானநிலை அடைதல் எவ்விதம் இயலும்?" என்று கேட்டார்.

இதற்குப் பதிலளித்த சுவாமிகள், "ஷிரணிகரே, என்னைக் காண நிலங்கள் படை, பரிவாரங்களுடன் வந்து கொண்டிருந்த போது, உங்கள் படைவீரர்களில் ஒருவன் ராஜரிஷி பிரசன்ன சந்திரர் தவமிருப்பதைக் கண்டான். மற்றொரு படைவீரனைப் பார்த்து அவன் சொன்னான் : அரசவை அதிகாரிகள், அமைச்சர்கள் எல்லாரும் தடுத்தும் கேளாமல் அரசாட்சியைத் சிறுபிள்ளையான தன் மகனிடம் ஒப்படைத்துவிட்டு, இவர் (பிரசன்ன சந்திரர்) துறவறம் மேற்கொண்டுவிட்டார். இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு, இவரது பழைய எதிரியான பக்கத்து நாட்டு அரசன், பதான்பூர் மீது படையெடுத்துள்ளான். இந்தத் தாக்குதலை சமாளிக்க முடியாமல் இவரது இளவயது மகன் தவிக்கிறான். இவ்வளவு சீக்கிரத்தில் பிரசன்ன சந்திரர் அரசாட்சியைத் துறந்தது முறையல்ல. குறைந்தபட்சம் மகன் வளர்ந்து பெரியவனாகும் வரையிலாவது இவர் காத்திருந்திருக்கலாம் என்று குறிப்பிட்டான்.

"படைவீரர்கள் மற்றும் பரிவாரங்கள் எழுப்பிய ஒலி பிரசன்ன சந்திரரின் தவத்தைக் கலைத்தது. அந்தப் படைவீரன் கூறிய சொற்கள் அவரது மனதில் பெரும் கொந்தளிப்பை ஏற்படுத்தியது. மேலான, ஆன்மீகச் சிந்தனை எனும் தியான நிலையில் இருந்து அவர் சரியத் தொடங்கினார். பெரும் ஆபத்திலிருந்து தனது புதல்வனையும், அரசையும் காப்பாற்ற வேண்டும் என்ற எண்ணத்தில், பகைவர்களை அழிக்க அவரது மனம் பாய்ந்தோடியது. உண்மையிலேயே எதிரிப்படைகளை அழிப்பது போன்ற,

அவரது மூர்க்கத் தாக்குதலில் நூற்றுக்கணக்கான பகைவீரர்கள் வீழ்ந்து மாள்வது போன்ற, போர்க்களத்தில் அவலக் குரல்கள் எழுவது போன்ற ஒரு மாயத் தோற்றத்தில் மூழ்கும் அளவுக்கு அவரது மனநிலை மாற்றம் கண்டது. அவர் இந்த மனமயக்கத்தில் இருந்தபோதுதான், உனது தேர் அவர் இருந்த சோலையைக் கடந்து சென்றது. நீயும் அவரை மனதுக்குள் போற்றித் தொழுதாய். ஏழாம் நரகத்துக்கு இட்டுச் செல்லக்கூடிய அளவு கர்மவினை எனும் மாசுகள் அப்போது அவரை வந்தடைந்து கொண்டிருந்தன; அந்தருணத்தில் அவர் இறந்திருப்பாரானால் நிச்சயமாக அவர் ஏழாம் நரகத்தில்தான் பிறந்திருப்பார். கடும் துன்பத்தையும், சித்திரவதைகளையும் அவர் அனுபவிக்க நேர்ந்திருக்கும்" என்று குறிப்பிட்டார்.

அரசர் ஹிரனிகர் மீண்டும் மகாவீரரை நோக்கி, "சுவாமிகளே, அந்தத் தீய கர்மவினைகளை எல்லாம் பிரசன்ன சந்திரர் களைந்தெறிந்தது எவ்விதம்?" என்று வினவினார்.

"ஷிரன்கரே, எதிரிகளுடன் சண்டையிட்டுக் கொண்டிருந்தது போன்ற மனமயக்கத்தில் பிரசன்ன சந்திரர் இருந்தபோது, திடீரென அவரது உடைவாள் இரண்டாக உடைந்ததைப் போல உணர்ந்தார். எதிரி ஒருவன் அவரைக் கொல்ல வருவதாகக் கண்டார். தன்னைக் காத்துக்கொள்ளும் முயற்சியாக, தலையிலிருக்கும் மகுடத்தை எடுத்து எதிரியின் தாக்குதலைத் தடுக்கும் நோக்கில் வலதுகையைத் தலைக்கு உயர்த்தினர். அதுவரையிலும் மனமயக்கமாகவே இருந்து வந்த செயல்பாடு, அப்போதுதான் உடல்ரீதியான செயல்பாடாக மாறியது. மகுடத்தை எடுப்பதற்காகத் தலையைத் தொட்டபோது, தலையில் மகுடம் இல்லாதிருப்பதையும் தலை மழிக்கப்பட்டிருப்பதையும் உணர்ந்து அதிர்ச்சியுற்றார். அப்போதுதான் அவர் விழிப்புற்று தன் நிலை உணர்ந்தார்.

'ஐயகோ, இதுவரை நான் என்ன செய்து கொண்டிருந்து விட்டேன்?' என்று புலம்பினார். 'பகைவன் எங்கே?' 'போர்

எங்கே?' 'யாருடைய அரசு?' 'யாருடைய மகன்?' என்றெல்லாம் கதறினார்.

செய்த தவறை எண்ணி வருந்தியதில், கழிவிரக்கம் எனும் தீயில் அவரது கர்மவினைகள் எனும் மாசுகளெல்லாம் எரிந்து சாம்பலாயின. ஆன்ம பலம் அற்ற எந்த ஒரு மனிதரும், இதுபோன்ற வீழ்ச்சிக்குப் பிறகு நிச்சயம் மேலெழுந்து வராமல் போயிருப்பார். ஆனால் ராஜரிஷி பிரசன்ன சந்திரரோ, அசாதாரண ஆன்ம வலிமை கொண்டவர்; அவர் தனது மனதை முழுக் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வந்துவிட்டார்; குவிந்துவிட்ட அனைத்து கர்மவினைகளையும் தனது ஆன்மா எனும் தீயில் அவர் சுட்டெரித்துவிட்டார்.

அவரது அடுத்தடுத்த பிறவிகள் பற்றி நீ தொடர்ந்து என்னிடம் கேள்விகள் கேட்ட போது, அவரது மனதில் ஒவ்வொரு கணமும் மின்னல் போல ஏற்படும் மாற்றங்களையும், அவரிடம் குவியும் கர்மவினைகளின் வகைகளையும் கருத்தில் கொண்டு, அவர் ஆறாவது நரகம், ஐந்தாவது நரகம், நான்காவது நரகம் என்ற வரிசையிலும், கடைசியில் எல்லாவற்றிலும் மேலான சொர்க்கத்திலும் பிறக்கக் கூடும் என்று நான் பதிலளித்தேன்.

'இந்த வகையில், கர்ம வினைகளை எல்லாம் சுட்டெரித்த அவர், எல்லாக் கட்டுத் தளைகளில் இருந்தும் விடுபட்டு, தலையாய ஞானமாகிய 'கேவல ஞான'த்தை அடைந்தார். இப்போது அவர் எல்லாவற்றையும் அறியும் ஆற்றலும், எல்லாவற்றையும் காணும் ஆற்றலும் படைத்தவர். மீண்டும் அவர் வீழ்ச்சி அடையக் கூடும் என்ற அச்சம் இனி இல்லை. மனதைக் கட்டுப்படுத்துவதன் வாயிலாக நாம் நமது புலன்களைக் கட்டுப்படுத்தலாம்; புலன்களைக் கட்டுப்படுத்திவிட்டோம் எனில், கர்மவினைகள் மாண்டுவிடுவது தடுக்கப்பட்டுவிடும்; கர்மவினை எல்லாம் மாண்டுவிடுவது நின்றுவிடுமானால், நாம் முக்தி அடைய முடியும். எனவே, மனதைக் கட்டுப்படுத்துவதே மனிதர்கள் எல்லோருக்கும் இறுதியில் நன்மை பயக்கும்'' என்று மகாவீரர் பதிலளித்தார்.

## 130. "வாழைப் பழத்தோல் நைவேத்தியம்"

விதுரர் வீட்டுக்கு ஸ்ரீ கிருஷ்ண பகவான் எழுந்தருளினார். அப்போது விதுரர் வீட்டில் இல்லை விதுரருடைய மனைவி பரவசமுற்றாள். அவளுடைய இதயம் ஆனந்தத்தால் நிரம்பியது. சில வாழைப் பழங்களை எடுத்து அவற்றின் மேல் தோலை உரித்து அப்படியே பகவானுக்கு நைவேத்தியமாகப் படைத்தாள். அவளுடைய மெய் மறந்த நிலையில் உணர்வையே அற்றவளானாள். பகவான் அந்த வாழைப்பழத் தோலை மகிழ்ச்சியுடன் உண்ணலானார். இதற்கிடையில் வீட்டுக்குள் வந்தார் விதுரர். அவர் தம் மனைவியைப் பார்த்து "என்ன காரியம் செய்தாய்! பழத்தைப் பகவானுக்குப் படைப்பதற்குப் பதிலாக அதன் தோலையல்லவா கொடுத்திருக்கிறாய்! " என்று கூறினார். விதுரர் பழங்களை எடுத்துப் பகவானுக்குப் படைத்தார். பகவான் "விதுரரே! உன் மனைவி கொடுத்த பழத்தோலைப் போல் அவ்வளவு மதுரமாயில்லை நீ கொடுத்த பழம். எனக்குப் பழம் வேண்டாம்" என்றார்.

பகவான் விலையுயர்ந்த நைவேத்தியங்களை விரும்புகிறதில்லை. அவர் உன்னுடைய இதயபூர்வமான பக்தி, பக்தி ஒன்றினையே விரும்புகிறார். விதுரருடைய மனைவியைப் போன்று பக்தி பரவசமாகிய இதயத்தைக் கொள்வீராக.

## 131. மாட தேவதையின் யுக்தி!

"லோபஸ்வார்" என்பவர் பெரிய பணக்காரர். செல்வத்திலே புரளுகிறார். முன்னோர் வழிவந்த சொத்துகள் ஏராளம். செல்வத்தைத் திரட்டுவதற்காகவே அவர்

வசிக்கிறார். வேறு எண்ணம் கிடையாது. பணம் சேர்ப்பதற்காக அவர் கையாளாத அதர்மக் காரியம் எதுவும் இல்லை. அவர் எத்தனையோ பேரைத் தீங்கு செய்து கொள்ளையடித்திருக்கிறார், எல்லாம் பணத்திற்காக.

அவருடைய புத்திரர்கள் ஒருவர் பின் ஒருவராக மாண்டார்கள். அவரை உபசரிக்க உலகத்தில் ஒருவரும் இல்லை. வயதோ ஏறிக்கொண்டே போனது. அவர் வசித்த கிராமத்திலிருந்த மக்கள் இவருடைய கிழப் பருவத்தைப் பயன்படுத்தி கொண்டு இவரை ஏமாற்றிச் சொத்துகளைக் கவரலானார்கள். இவர் எல்லோராலும் வெறுத்துத் தள்ளப்பட்டார். அவர் அடைந்த ஏக்கத்திலே, அந்தகிராமத்திற்கு வெளியே கோயில் கொண்டிருந்த தாமஸ குணம் படைத்த மாடதேவதை ஒன்றை வணங்கத் தலைப்பட்டார். மாடதேவதைதான் உத்கிருஷ்டமான பிரம்மன் என்றும், எல்லாவற்றிற்கும் சிறந்த தெய்வம் என்றும் அவர் பாவித்தார். அத்தெய்வத்தை வழிபடு கடவுளாகக் கொண்டு எப்போதும் பக்தி செலுத்தி வந்தார்.

லோப்ஸ்வார் பயங்கரமான நோய்க்கு ஆளானார். கிராமத்தார்கள் அவரைப் பார்த்து நகைத்தார்கள். மாடதேவதை தம்மைக் காப்பாற்றுவாரென்று அவர் நம்பினார். அவர் சாவதற்கு சில நிமிஷங்கள் இருக்கும். மாடதேவதை மாந்திரீக சக்தியால் அவரை சரீரத்துடன் காசி க்ஷேத்திரத்திற்கு கொண்டு போனார். ராம தாரக மந்திரத்தை க்ஷேத்திரத்திலே உச்சரித்துக் கொண்டே, அப்புண்ணிய க்ஷேத்திரத்திலே லோப்ஸ்வார் மோட்சமடைந்தார். மாடதேவதை மூலமாகப் பக்தி செலுத்தப்பட்டது, எல்லாம் வல்ல இறைவனுக்கு. இறைவன் தமது விசித்திரமான வழிகளில் லோப்ஸ்வாரைக் கைகொடுத்துக் காப்பாற்றினார்.

எந்ததெய்வத்தை நீங்கள் வழிபட்டாலும் சரி, அத்தெய்வம் எல்லாவற்றிற்கும் மேலான பரப்பிரம்மனே என்று அசையாத உறுதியைக் கைகொள்ளுங்கள். நிச்சயமாக உங்களுக்கு மோட்சம் சித்திக்கும்.

# 132. நாம் இறைவனின் ஆதீனத்தில் இருக்கிறோம்

பம்பாய்த் துறைமுகத்திற்குச் சமீபத்தில் ஆறு பேர் அடங்கிய குழு ஒன்று மோட்டார் படகில் உல்லாசச் சவாரி செய்து கொண்டிருந்தது. திடீரென்று தட்பவெப்ப நிலை மாறிவிட்டது. கடல் கொந்தளிப்புக் கொண்டது. படகிலிருந்தவர்களில் சிலர் பெரிதும் பயந்து போனார்கள். ஆனால் சீக்கியர் ஒருவர் மட்டும் மனங்கலங்காமலிருந்தார்.

ஆங்கில - இந்திய மாது ஒருத்தி தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதில் மிக்க அக்கறை கொண்டவளாக, முகத்தில் அமைதியான புன்சிரிப்பு தவழ குழப்பம் சிறிதுமில்லாமல் அமர்ந்திருந்த அந்த சீக்கியரைப் பார்த்து வருத்தமடைந்தாள். அந்த மாது "தங்களுக்குப் பைத்தியமா? படகு கவிழ்ந்து விடும் போலிருக்கிறது. எதுவும் நேராதது போலத் தாங்கள் கருதுகிறீர்கள் போலும்! உட்கார்ந்திருக்கிறீர்களே" என்று கூறினாள்.

சீக்கியர், "அம்மா! நம்மை நாமே சிருஷ்டித்துக் கொண்டோமா? இல்லை. யாரோ ஒருவர், இறைவன் என்பவர் நம்மைச் சிருஷ்டித்தார். நம்மைக் காப்பாற்றுவதற்கு அவர் சக்தி அற்றவரா? இதுவரை அவர் நம்மைக் காப்பாற்றிக் கொண்டே இருக்கிறார். இல்லை? நமது உயிருக்குப் பொறுப்பு யார்? இறைவன்தான். மூக்குத் துவாரங்களின் வழியாக மூச்சுக் காற்று போகவும் வரவும் செய்கிறவர் யார்? இறைவன். நாம் உண்ட உணவை ஜீரணிக்கச் செய்கிறவன் யார்? இறைவன். இதயத்திலிருந்து உடலெங்கும் இரத்தம் ஓடும்படி செய்கிறவன் யார்? இறைவன். நாம் இறைவனின் ஆதீனத்தில் இருக்கிறோம். தாயே! இறைவனுடைய இஷ்டப்படியே எல்லாம் நடக்கும். பயப்படாதீர்கள். அவர் நம்மைக் காப்பாற்றுவார்" என்று ஆறுதல் கூறினார்.

"முட்டாளே! உங்கள் முட்டாள்தனம் கடல் அடியிலே உங்களை நிச்சயமாகக் கொண்டுபோய்ச் சேர்க்கும். வாருங்கள். அறிவோடு இருங்கள். உயிரைக் காப்பாற்றும் அரைக் கச்சை அணிந்து கொண்டு எங்களோடு குதியுங்கள். யாராவது நம்மைக் காப்பாற்றும் வரை நீரிலேயே மிதந்து கொண்டிருப்போம்" என்று கூக்குரலிட்டாள்.

மேற்பார்வைக்கு ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவராகச் சீக்கியர் காணப்பட்டார். ஆங்கில இந்திய மாது இன்னும் சிலரோடு படகிலிருந்து குதித்தாள். அவர்கள் சுறா மீனுக்கு நேர்த்தியான உணவாக மாறினார்கள். அலைகளால் அங்குமிங்கும் தாக்குண்ட மோட்டார் படகு கரையை நோக்கி நாட்டியமாடிக் கொண்டே சென்றது. சீக்கியரும் சிலரும் சுகமாகக் கரைக்கு வந்து சேர்ந்தார்கள். சீக்கியருடன் வந்த இதர பிரயாணிகள் இறைவனிடம் பதிந்த பக்திப் பெருக்கால் கலங்காத உள்ளத்தோடிருந்த சீக்கியரைப் பாராட்டி அவருடைய சீடர்களாக மாறினார்கள்.

## 133. பக்த ஹரிதாஸ்

சேட் கரோர்மால் என்பவர் ஒரு கோடீஸ்வரர். அவர் ஒரு கோவிலைக் கட்டினார். அவரது மகன் மதன் அக்கோவிலுக்குச் சென்றான். பரமாத்மாவின் ஏழைப்பக்தன் ஹரிதாஸ் என்பவன். அவனுடைய மகள் மனோரமாவும் அக்கோவிலுக்குப் போனாள். மதனும் மனோரமாவும் ஸ்ரீகிருஷ்ண பகவானையும் ஸ்ரீ ராதையையும் வழிபட்டார்கள். சேட்டின் வேலைக்காரன் மதனைத் தேடி வருகிறான். மனோரமாவைத் திட்டிவிட்டு மதனை அழைத்துக் கொண்டு போகையில் அவ்வேலைக்காரன் மனோரமா வழிபட்டுக் கொண்டிருந்த ஸ்ரீ ராதை விக்கிரகத்தைப் பிடுங்கிக் கொண்டு போய் விடுகிறான். பின்னர், ஏழை பக்தன் ஹரிதாஸும் அவன் மனைவியும் கோவிலுக்கு வந்து விக்கிரகங்களை வணங்கிப் பூஜை செய்தார்கள்.

சேட் கரோர்மால் அக்கோவிலுக்குள் வந்து பார்க்க, அங்கு எழுந்தருளியுள்ள ஸ்ரீகிருஷ்ண பகவானை யாரோ காட்டுப் பூக்களால் அர்ச்சித்து வணங்கியதாகத் தெரிந்து கோபிக்கிறார். "என்ன இது! இரண்டு லட்சம் ரூபாய் செலவிட்டு நான் கட்டிய இக்கோவிலில் என்னால் பிரதிஷ்டை செய்யப்பட்ட ஜெய்ப்பூர் பளிங்குக் கல்லால் செதுக்கப்பட்ட அழகான ஸ்ரீ கிருஷ்ண பகவான் விக்கிரகத்திற்கு இரண்டணா பெறுமான காட்டுப் பூமாலையை எவன் போட்டவன்?" என்று கேட்டார். அவருடைய வேலைக்காரன் ஹரிதாஸின் வேலை அது என்று தெரிவிக்கிறான்.

சேட்டிற்கு ஏராளமான வீடுகள் உண்டு. ஹரிதாஸ் என்பவன் அவற்றுள் ஒரு வீட்டில் குடியிருப்பவன். இப்போது ஹரிதாஸை தொலைத்து விடும்படியான சிறந்ததோர் தந்திரத்தை அவர் கண்டுபிடித்தார். அவர் அவனிடம் வாடகைப் பாக்கித் தொகையை உடனடியாகச் செலுத்தும்படி கேட்டார். வாடகைத் தொகை சேட்டின் பொய்க் கணக்கிலே பத்து மடங்கு வளர்ந்துள்ளது. ஐயோ! பாவம்! ஏழை ஹரிதாஸ் வீட்டை விட்டுத் துரத்தப்பட்டான். பரமாத்மாவையே நம்பி அவருடைய கருணாகடாட்சத்தையே குறியாகக் கொண்டுள்ள ஹரிதாஸ் தன் மனைவியோடும் மகளோடும் காட்டுக்குப் போகிறான்.

ரூபலாவண்யம் மிகுந்த மனோரமாவின் பசிக்கொடுமையானது மரம் வெட்டும் தொழிலில் ஹரிதாஸ் ஈடுபட வேண்டிய அவசர அவசியத்தையும் ஏற்படுத்தியது. எங்கும் ஸ்ரீ கிருஷ்ண பகவானைக் காணும் பக்தரானபடியால், கோடாலியை ஓங்கி மரத்தை வெட்டப்போகும் வேளை, மரத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவானை தரிசிக்கிறான். உடனே கோடாலி கீழே விழுகிறது. கூலி செய்யப் புறப்படுகிறான். ஆனால் சம்பாத்தியம் பூஜ்யம். வியாபாரி ஒருவன் பளுவான சுமையைத் தூக்கும்படி கூலிக்கு அமர்த்துகிறான்; ஆனால் ஹரிதாஸ் அதைச் சுமக்கக் கூடாமல் சாலையில் சோர்ந்து விடுகிறான். காட்டு வாசஸ்தலத்திற்கு உடலெங்கும்

காயங்களுடன் திரும்பிப் போகிறான். அப்போதும்கூட ஹரிதாஸும் அவன் மனைவியும் பரமாத்மாவையே நம்பியும் அவரையே அடைக்கலம் புகுந்தும் பக்தி செலுத்துகிறார்கள். அந்தோ! மனோரமா பசி வேதனைகளைத் தாளமாட்டாமல் இறந்து போகிறாள்.

சேட்டின் வீட்டிலே மதன் கடுங்காய்ச்சலால் தாக்குண்டு படுத்த படுக்கையாகக் கிடக்கிறான். பைத்தியம் பிடித்துவிட்டது. மனோரமாவிற்காகவும் ராதா கிருஷ்ணனுக்காகவும் மதன் வாடி எல்லா காலமும் மயங்குகிறான்.

கோமஸ்வர சேட் பிரபு வழியிலே பசியோடுள்ள பிச்சைக்காரனைக் கண்டு காலணாகூட கொடுக்கவில்லை. பசியுள்ளவன், "சேட் பிரபு! கடவுள் கோவிலில் இல்லை; ஆனால் கருணையுள்ளவனின் இதயகமலத்தில் வாசம் பண்ணுகிறார். சீறிச் சினந்து விழுகிற சேட் பிரபு பிச்சைக்காரனைப் பார்த்து, "நீ . . . விளைவுகளைப் பொறுத்துக் கொள்ளவே வேண்டும்" என்று திட்டினார்.

மதன் காய்ச்சல் தீர்ந்து விரைவில் குணமடையும் பொருட்டு கோவிலில் விசேஷ பூஜைகள் நிறைவேறின. இதய நோய் நிபுணர் ஒருவருடைய அறிவுரையுடன் சிகிச்சையும் மேற்கொள்ளப்பட்டன. இந்த இரண்டு அம்சங்களிலும் கோமஸ்வரப் பிரபு தமது பிறவிக் குணமான லோபித்தனத்தையே வெளிப்படுத்தினார். உலோபி ஒருவனுக்குச் சொந்த உயிரைக் காட்டிலும் பணம் அதிக புனிதமுள்ளது. திடீரென மதன் சுய அறிவைத் திரும்ப பெற்றவனாகத் தன் பிதாவைப் பார்த்து, "ஐயா, கடவுள் கோவில்களில் மட்டுமே இல்லை, ஆனால் இரக்கமுள்ளவர்களின் இதயத்தில் வாசம் புரிகிறார். அபாரமான பணம் படைத்தவர் பெரிய மனிதர் அல்ல. ஆனால், விசாலமான இதயம் படைத்தவன் . . . மனோரமா . . . ராதாகிருஷ்ணா" என்று கூறியதும், இறந்துவிட்டான்.

தம் மகனின் பிணத்தைத் தூக்கிக் கொண்டு, சேட் தெருவிலே ஓடலானார், பாதி பைத்தியம் பிடித்தவர் போல் புனித மகான் ஒருவரைச் சந்தித்தார். அருகில் உள்ள காட்டில் வாசம் புரிகிற ஹரிதாஸிடம் போகும்படி அம்மகான் கூறினார்.

காட்டிலே உள்ள ஹரிதாஸ் குடிசைக்குச் செல்லுகிறார் சேட் அப்போதுதான் ஹரிதாஸ் தன் மகளின் மரணத்திற்காக அழுது கொண்டிருந்தான்; ஆழ்ந்த துயரத்திலே ஹரிதாஸ், "இதற்காகவா பகவானை நான் இவ்வளவுகாலம் பூஜித்து வந்தேன்? ஸ்ரீமத் பகவத் கீதையிலுள்ள பகவானின் உபதேசம் உண்மையா? எல்லாக் காலமும் என்னைத் தியானிக்கிற பக்தனை நான் இரட்சிக்கிறேன். இது மெய்தானா? பகவான் என்பவரே உண்மையா?" என்று உரக்கக் கூவினான். இவ்வாறு கூவிக்கொண்டே தான் பூஜித்து வருகிற ஸ்ரீ கிருஷ்ண பகவானின் விக்கிரகத்தை எடுத்து உடைக்கத் தொடங்கினான்.

அந்த க்ஷணத்திலே ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஹரிதாஸ் முன்னால் தோன்றி, மனோரமாவையும் மதனையும் உயிர் பெற்றெழச் செய்து, யாவரையும் நல்லாசி கூறி அருள்பாலிக்கிறார். பக்தர்கள் ஆனந்தத்தில் மூழ்கிப் பரவசமடைகிறார்கள்.

## 134. கஞ்சப் பிரபுவின் கதை

முன்னொரு காலத்தில் அலாகாபாத் சமீபத்தில் ஒரு கிராமத்தில் ஓர் வைசியன் இருந்துவந்தான். அவன் பெயர் கஞ்சப்பிரபு. அவனுடைய பெற்றோர்கள் மைசூரைச் சேர்ந்தவர்கள். சொந்த ஊரைவிட்டு வர்த்தகத்தின் பொருட்டு அலாகாபாத்தில் வந்து தங்கலானான். ஜவுளி வியாபாரம் செய்து வந்தான். பகவானின் கருணையால் அவன் மிகுந்த பணக்காரனானான். தன்னிடம் எவ்வளவு சொத்துகள் உள்ளன என்பதைத் தெரிந்து கொள்ள முடியாத அவ்வளவு

பெரிய பணக்காரனானான். அவனுக்குப் பிள்ளைகள் இல்லை. அவனும் அவன் மனைவியுமே வசித்து வந்தார்கள்.

நாள்கள் சென்றன. அவன் வயோதிகம் அடைந்தான். யாருக்கும் அதுவரைக்கும் அவன் எதுவுமே தருமமாகக் கொடுத்ததில்லை. ஆகையால், சாந்திப்பிரியா என்னும் அவன் மனைவி அவனிடம், "நாம் கொஞ்சம் தருமம் செய்யவேண்டும். காசிக்குப் போய்த் தீர்த்தங்களாடி வர வேண்டாமா? நமது வாழ்க்கையில் ஒரு முறையாவது போக வேண்டாமா?" என்று கூறலானாள். இரயில் கட்டணம், உணவு, இதர செலவுகள் கொண்ட எந்தவித யாத்திரையையும் மேற்கொள்ள கஞ்சப் பிரபுவுக்கு வெறுப்பாயிருந்தது. அவ்வளவு பணத்தை இழக்க நேருமே என்ற பயமும் இருந்தது. யாத்திரைக்குப் போக வேண்டிய தேவை இல்லை என்றும், தீர்த்தங்களில் மிகவும் புனிதம் வாய்ந்தது பிரயாகைதான் என்றும் கஞ்சப் பிரபு கூறினான். மனைவி ஒப்புக் கொண்டாள்.

கஞ்சப் பிரபு தருமத்திற்காக ஒரு சல்லிக் காசுகூட எடுத்துக் கொள்ளவில்லை. ஒரு துணியில் கொஞ்சம் கடலையை முடிந்து கொண்டான். கங்கா ஸ்நானத்திற்குப் புறப்பட்டான். பண்டாக்கள் (புரோகிதர்கள்) எவருமே உட்கார்ந்திராத நீர்த்துறைக்கு போக விரும்பினான். அன்று சங்கராந்தி தினம். எல்லாத்துறைகளிலும் கூட்டம் நிறைந்திருந்தது. பண்டாக்களுக்காக பெரிதும் பயந்தான் கஞ்சப் பிரபு. ஏனெனில் தட்சிணை ஏதாவது கேட்பார்களே என்ற பயம்தான். ஆகையால், அவன் சுற்றிப்போய் மிருதகாட் என்னும் மயானக் கரைக்கே போனான்.

சிவபெருமான் அந்த வைசியனின் நோக்கத்தைக் கண்டு கொண்டவராய், அதே மயானக் கரையில் அமர்ந்து கொண்டார். அந்த மயானக் கரையில்கூட ஒரு பண்டா அமர்ந்து கொண்டிருந்ததைக் காண பிரபுவுக்கு கிலி பிடித்துவிட்டது. பண்டா அருகே வந்து, "சேட்ஜீ! இன்று புனித நாள். ஸ்நானம் செய்வதற்கு முன் சங்கல்பம் செய்து

கொள்ளுங்கள்" என்று கூறினார். பிரபு "என்னிடம் பணம் இல்லை" என்றான். அதற்குப் பண்டா "தட்சிணை பிறகு கொடுங்கள். ஆனால், நீங்கள் எவ்வளவு கொடுப்பீர்கள் என்று மட்டும் சொல்லி விடுங்கள்" என்று கேட்டார் பண்டா. கஞ்சப்பிரபு ஒரு பைசா கொடுப்பதாகக் கூறினான். பண்டா (சிவபெருமானேதான்) மகிழ்ச்சியுற்று கஞ்சப் பிரபுவுக்கு செய்ய வேண்டிய சங்கல்பம் முதலிய சமஸ்த கிரியைகளும் செய்து முடித்தார். கஞ்சப் பிரபுவின் மனைவி இவற்றையெல்லாம் வெகு ஆவலோடு கவனித்து வந்தாள். தன் பதிவிரதையான மனைவியோடு கஞ்சப் பிரபு கங்கா ஸ்நானம் செய்துவிட்டு திரும்பினான். தட்சிணையைப் பண்டாவுக்குக் கொடுக்கும்படி ஒரு வார்த்தைகூட அவள் பேசவில்லை. ஏனெனில், அவர் கோபித்துக் கொள்வாரென்ற பயம்தான்.

சிலகாலம் கழிந்தது. பண்டா கஞ்சப் பிரபுவிடம் வந்து தட்சிணையைக் கேட்டார். பிரபு வீட்டின் உட்புறத்தில் இருந்தான். பண்டாவின் வருகையை மனைவி தெரியப்படுத்தவே, வாக்குறுதி செய்த ஒரு பைசா தட்சிணையை எப்படித் தருவது என்று பெரிதும் குழப்பமடைந்தான். அத்தருமத்தைக் கொடுத்தால், உயிர் உடலைவிட்டு பிரியும் என்று அவன் எண்ணினான். பண்டாவைப் பின் ஒரு நாள் வரச்சொல்லும்படி மனைவியிடம் கூறினான். கடுங்காய்ச்சலால் கஷ்டப்படுவதாகப் பாசாங்கு செய்யலானான். தன் கணவன் காய்ச்சலால் கஷ்டப்படுகிறாரென்றும் அவரைப் பார்க்க முடியாதென்றும் கூறினாள். சேட்ஜி காய்ச்சலால் அவதிப்படுவதால் அவரை அவசியம் பார்க்க வேண்டுமென்றும் பண்டா வற்புறுத்தினார். யஜமானர் வியாதியிலிருப்பதால் அவரைத் தொண்டு செய்து கவனிக்க வேண்டியது தமது கடமை என்றும் கூறினார். கஞ்சப்பிரபு மீண்டும் யோசனையிலாழ்ந்தான். உடனே ஓர் யுக்தி செய்தான். ஜன்னி கண்டு திடீரென இறந்து போய்விட்டதாகக் கூறும்படி மனைவியை அனுப்பினான். அவருக்காகக் காத்திருப்பதால் பயனில்லையாதலால் அவர் போய் விடலாம்

என்றாள். இதையெல்லாம் கேட்ட பண்டா "கருணையுள்ள தாயே! என்னுடைய துரதிர்ஷ்ட வசத்தால், என்னுடைய யஜமானர் இறந்தார். இப்போது அவருக்கு ஈமக்கிரியைகளைச் செய்துவிட்டு இவ்விடத்தை விட்டுப் போகிறேன்" என்று கூறினார். பண்டா கூறியவற்றையெல்லாம் தனது நாயகரிடம் நவின்றாள். அப்பால் அந்தகஞ்சப்பிரபு, "பிரியமுள்ள சாந்திப்பிரியா! என்னை இப்பண்டா விட மாட்டான். சவப்பெட்டியைக் கொண்டுவந்து என்னை மயானத்திற்கு எடுத்துக் கொண்டுபோ" என்றான். மிகுந்த சோகத்தால் தாக்குண்டவளாக, அவள் சேட்ஜீயின் உடலை சவப்பெட்டியில் வைத்தாள். சேட் முற்றிலும் செத்தவன் போன்று பாசாங்கு செய்தான்.

பிரேத ஊர்வலம் புறப்பட்டு மயானத்தை அடைந்தது. பண்டா மந்திரோச்சாடனம் பண்ணினார். சேட்டின் உடலில் அக்கினி வைக்கும் சமயத்தில் அவன் கூக்குரலிட்டுக் குதித்து வெளியேறினான். பண்டாவின் வடிவத்திலிருந்த பரமேஸ்வரர் இதெல்லாம் பார்த்துக் கலகலவென்று சிரித்தார். தம் யதார்த்த சொரூபத்தைக் காட்டினார். "சேட்ஜீ! உங்களிடம் மிகுந்த மகிழ்ச்சி கொண்டேன். ஏதாவது ஒரு வரத்தைக் கேளுங்கள்" என்று பண்டாவாகிய பரமேஸ்வரர் கேட்டார். அதற்குக் கஞ்சப்பிரபு, "ஓ பகவானே! என்னை மன்னியுங்கள். தங்களுக்குத் தட்சிணை கொடுப்பதிலிருந்து என்னை விடுவியுங்கள்" என்று பிரார்த்தித்தான். "அப்படியே" ஆகுக என்று திருவாய் மலர்ந்தருளிவிட்டு அந்தர்த்தானமானார்.

பந்தபாசம் விசித்திரமானது. மானுஷ்ய சுபாவம் மர்மமானது. இது போன்ற சம்பவங்கள் இன்றுகூட காணப்படுகின்றன. உலோகாயதப் பொருள்கள்மீது வைக்கிற பற்றினால் விளையும் அநியாயத் தனத்தை தெளிவாக எச்சரிக்கையுள்ளவர்கள் கவனிக்கிறார்கள்.

உங்கள் உயிர் பிரியும்போது உலகத்திலிருந்து ஒரு பைசாவது உங்களால் எடுத்துக் கொள்ள முடியுமா?

எவ்வளவோ நேசித்துவரும் உங்கள் உடல் உள்பட எல்லாவற்றையும் உதறித் தள்ளவே வேண்டும்.

"வளர்ச்சி அடையுங்கள். விருத்தி செய்யுங்கள். தருமம் புரியுங்கள். எல்லோரையும் நேசியுங்கள். எல்லோரிடத்திலும் அன்பு செலுத்துங்கள். எல்லோருக்கும் தொண்டு செய்யுங்கள்". பொன்னான இவ்வுபதேசங்களைச் செவிசாய்த்து கிரகித்துக் கொள்ளுங்கள்.

## 135. துறவுக்கு ஓர் சோதனை!

ஒரு புண்ணியஸ்தலத்தில் இரண்டு சாதுக்கள் வசித்துவந்தார்கள். ஒருவர் துறப்பதற்கு முன் பெரிய கோடீஸ்வரப் பிரபுவாயிருந்தார். அவர் துறவை மேற்கொண்டு சாதுவாக மாறிய பிறகும், அவருடைய புத்திரர்கள் தாமாகவே முன்வந்து அவருடைய உடல் நலத்தைப் பேணி வரலானார்கள். எனவே, அந்தசாதுவுக்குப் பணியாள்கள் பலர் இருந்தார்கள். அவருக்குச் சகலவிதமான வசதிகளும் சௌகரியங்களும் இருந்துவந்தன. மற்றவரோ மிகவும் கடுமையான வாழ்க்கையை நடத்தினார். பிச்சை எடுத்து உண்டார். அவருக்கென்று எவ்வித உடைமைகளும் கிடையாது. அவர் அணிந்திருந்த ஆடைகளும் கமண்டலமும், மான்தோலுமே அவருடைய ஆஸ்தி.

ஏழைச் சாது தமது துறவு மனப்பான்மைக்காகத் தாமே தமக்குள் வியப்புறுவதும் பணக்காரச் சாதுவைக் கண்டு சிரிப்பதுமாய் இருந்து வந்தார். இதர மகாத்மாக்களையும் பக்திமான்களையும் சந்திக்கும்போதெல்லாம் "குடும்ப வாழ்க்கையை நடத்துவதற்கு இயலாத அவ்வளவு மூப்பு அடைந்துவிட்டார். ஆகையால் உலகத்தை துறந்து சந்நியாசத்தை மேற்கொள்ளும் பாவனை செய்துள்ளார் போலும்! பாருங்கள் - அவர் திளைத்திருக்கும் ஆடம்பர வாழ்க்கையே" என்றெல்லாம் இகழ்ந்து மதிப்புக் குறைவாகப் பேசலானார்.

அகந்தையும் நிந்தனையும் கூடிய தீப்பொறி நாளா வட்டத்தில் கொழுந்துவிட்டு எரியலாயிற்று. ஒரு நாள் ஏழைச் சாது அகம்பாவமே வடிவினராக பணக்காரச் சாதுவை அணுகி, துறவைப் பற்றி சொற்பொழிவாற்றிய பின், "துறவிலே எவ்வளவு மகத்தான சக்தி பொதிந்துள்ளது! ஆனால், என்னுடையதைப் போல் அது உண்மையாயிருத்தல் வேண்டும். செல்வத்தையும் குடும்பத்தையும் தாங்கள் துறந்துள்ளதில் சந்தேகமில்லை. ஆனால், பணியாள்கள் முதலிய ஆடம்பர வாழ்க்கையை எப்போதுதான் துறக்கப் போகிறீர்கள்?" என்று வினவினார்.

பணக்காரச் சாது பளிச்சென்று, "நாராயணா! இப்போதே நாம் இருவரும் உத்தரகாசிக்குப் பயணமாவோம். வாருங்கள்" என்று அழைத்தார். ஏழைச் சாதுவுக்கோ அது பெரும் ஆச்சரியமாயிருந்தது. எந்தளவுக்கு அவர் மனப்பூர்வமாக அழைக்கிறாரென்பதைக் காணும் ஆர்வத்தாலும் அகம்பாவத்தாலும் உந்தப்பட்டவராக அவரைப் பின் தொடர்ந்தார். ஒரு மைல் இரண்டு மைல் தொலைவே அவர்கள் போனார்கள். அந்தகிராமத்தின் எல்லையைத் தாண்டும்போது ஏழைச் சாதுவுக்கு கமண்டலத்தையும் மான் தோலையும் பற்றிய ஞாபகம் வந்தது. அவர், "ஐயா! தயவுசெய்து நில்லுங்கள். எனது கமண்டலத்தையும் மான் தோலையும் எடுத்துக்கொண்டு வருகிறேன்" என்று கூறினார். பணக்காரச் சாது பொருள் ததும்பும் புன்முறுவல் செய்தார். என்ன உண்மையான துறவு அது! பந்தம், நான், எனது எனும் அகங்கார மமகாரங்கள் ஒழிந்தன! ஆடம்பரச் சாது அனைத்தையும் க்ஷண நேரத்தில் துறந்து புறப்பட்டுவிட்டார் ஏழைச் சாதுவோ தமது கமண்டலத்தையும் மான் தோலையும் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிறார்!

# 136. மனிதன் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கும்!

சரியாதி எனும் மன்னர் பண்டைக் காலத்தில் ஆண்டு வந்தார். சுகன்யா என்பவள் அவரது ஒரே புதல்வி. அரசர் அடிக்கடி பக்கத்திலுள்ள காட்டுக்குச் சென்று வேட்டையாடி வருவது வழக்கம். சுகன்யாவுக்குப் பன்னிரெண்டு வயதானபோது, தன் தந்தையுடன் வேட்டைக்குச் செல்லுவதை அவள் பொழுது போக்காகக் கருதினாள்.

அங்ஙனம், ஒரு நாள் மன்னரும் மகள் சுகன்யாவும் கானகம் புகுந்தவுடன், மான் ஒன்று சென்றது. சுகன்யாவைத் தனியே விட்டுவிட்டு, மன்னர் மானைத் துரத்திச் செல்லலானார். மரத்தடியில் அவள் விளையாடிக் கொண்டிருந்தாள். அந்தமரத்தடியில், சியவன மகிரிஷி என்பவர் அகோர தவம் புரிந்து கொண்டிருந்தார். முனிவர் சமாதி நிலையில் இருந்தார். பல்லாண்டு தவம் புரிந்தமையால், அவரது உடல் எறும்புப் புற்றினால் முற்றிலும் மூடப்பட்டிருந்தது. அப்புற்றினுள் மகான் அடையாளம் தெரியாத அளவு புதைபட்டிருந்தார். அவள் தன் கையிலிருந்த கூரிய ஈட்டினால் விளையாட்டாகப் புற்றில் குத்தினாள். அந்தோ! இளவரசியின் சபிக்கப்படும் விதி! ஈட்டியானது சியவன மகரிஷியின் கண்கள் இரண்டையும் குத்திவிட்டது - எறும்புப் புற்றினின்று இரத்த வெள்ளம் பெருகி ஓடிக்கொண்டிருந்தது. இளவரசிக்கு இரத்த வெள்ளம் எங்கிருந்து வருகிறதெனத் தெரியவில்லை; அறியவும் இயலவில்லை. இயற்கையாக அவள் பரிதவிக்கத்தக்க நிலையில் தவித்தாள். அதற்குள் மன்னர் பெருமான் திரும்பி வந்துவிட்டார். இரத்தம் குளமாகப் பெருகுவதையும், தனது மகள் அங்கே திக் பிரமை - பிடித்தவளாகத் திகைத்து நிற்பதையும் கண்டு ஆச்சரியப்பட்டார். நடுங்கிக் கொண்டிருந்த அந்நங்கை நடந்ததை நவின்றாள். மன்னர் உடனே அந்த எறும்புப் புற்றை இடித்துத் தள்ளவே, மகான்

ஒருவருடைய கண்களிலிருந்து இரத்தம் பீறிட்டு வருவதைக் கண்டுகொண்டார். இதற்குள் தவம் கலைக்கப்பட்டுவிட்டது. நடுநடுங்கியவாறு, அரசர் முனிவர் முன்னால் சாஷ்டாங்க தெண்டம் சமர்ப்பித்து, அவ்விபத்தின் காரணத்தை விளக்கி, தம்மீதும் தமது மகள் மீதும் இரக்கமும் கருணையும் காட்டுமாறு பிரார்த்தித்தார். வரலாற்றைக் கேட்டதும், சியவன மகரிஷி சினந்தார். அவரது மகளின் விஷமத்தனத்தால் பார்வை கெட்டு விட்டபடியால், தொண்டு புரிய அவ்விளவரசியைத் தமக்குத் திருமணம் செய்து கொடுக்குமாறு அரசருக்குக் கட்டளையிட்டார்.

முனிவர் கட்டளையை நீலவானத்தினின்று வீழ்ந்த இடிபோல இராஜாவுக்குத் தோன்றியது. மனநிலையைச் சீர்குலைத்தது. யௌவன மங்கை சுகன்யாவைப் பார்வையற்ற கிழட்டுத் தபசிக்கு திருமணம் செய்து கொடுக்க நினைப்பது தமக்கு மரணத்திற்கும் குறைவானதல்ல. ஆகையால் அரசர் அத்தவசியின் தயவைக் கோரினார்: சியவன முனிவர் அதற்கு அசையவில்லை; தண்டனையைத் தள்ளுபடி செய்யவில்லை. தான் செய்த அபராதத்திற்காகப் பச்சாத்தாபப்பட்டவளாக, முனிவர் இடுகிற சாபத்தினின்று தன் பிதாவைக் காப்பாற்றும் வண்ணம், தன்னை முனிவருக்கே அளிக்குமாறு சுகன்யா வலிந்து கூறலானாள்.

அந்தப்பிரச்சினையைத் தீர்க்க வேறு வழியில்லாமையால், மன்னர் தமது மகளை அந்த மகானுக்கு மணஞ் செய்து தருவதாக வாக்களித்துத் தமது அரண்மனைக்குத் திரும்பினார். அங்ஙனமே, ஒரு சுபதினத்தில் அரசரும் அரசியும் தமது அருமைப் புதல்வி சுகன்யாவுடன் கானகம் வந்து வாக்கை நிறைவேற்றினார்கள். சுகன்யாவை முனிவரிடம் ஒப்புவித்து, தமது வாஞ்சைக்குரிய மகளுக்கு உகந்தவாறு ஆஸ்ரமம் ஒன்று அமைத்துச் சகல சௌகரியங்கள் செய்வித்து, தாம் எதிர்பார்த்த மகிழ்ச்சிக்கு எதிராகப் பாரமான உள்ளத்துடன் இராஜாவும் இராணியும் அரண்மனைக்குத் திரும்பினார்கள். **மனிதன் ஒன்று நினைக்கத் தெய்வம் ஒன்று நினைக்கிறது!**

புதிய சூழ்நிலையிலே சுகன்யா அமைதியும் மகிழ்ச்சியும் அடையப் பெற்றவளாகத் தன் பார்வையற்ற தபசிக் கணவருக்குப் பதிவிரதா தர்மப்படி எள்ளளவும் பிசகாது நல்வழிப்பட்டு ஒழுகினாள். நாள்கள் மாதம் ஆக, மாதங்கள் வருஷங்களாக ஆகிவிட்டன. சுகன்யாவின் பதிவிரதா தர்மப் பிரபாவம் தேவலோகவாசிகளுக்கு எட்டிவிட்டது. தேவந்திரர் அத்தகைய தம்பதிகளிடையில் சிலாகிக்கத்தக்க ஒருமைப்பாடு இருப்பதை எண்ணிப் பார்க்கவும் இயலவில்லை. அவர் அஸ்வினி தேவர்களை மானுடலோகத்திற்குச் சென்று, சுகன்யாவின் கற்பைப் பரிசோதித்துக் கூடுமானால் அவளைக் கடத்திக்கொண்டு வருமாறு ஏற்பாடு செய்தார்.

மனித வடிவத்திலே தூதர்கள் மானிலத்திற்கு வந்தார்கள். சியவன மகானின் ஆசிரமத்திற்கே வந்தார்கள். அத்தருணத்திலே, சுகன்யா அருகிலுள்ள ஏரியிலிருந்து நீரை எடுத்துக்கொண்டு செல்லுகிறாள். அஸ்வினி தேவர்கள் அவளை வழிமறித்து "ஓ. பருவநாயகி! இக்காட்டில் ஏன் இருக்கிறாய்? உன்னைப் பார்த்தால் இளவரசியாகத் தோன்றுகிறாய்! இப்பயங்கரமான வேலை செய்யும்படி ஏவியது யார்? ஆதரவற்ற நிலையில் தத்தளிப்பதையும் பார்க்க எமது இதயங்கள் உருகுகின்றன" என்று கூறினார்கள். கற்புள்ள பெண்ணுக்குப் பொருத்தமான வகையில் சுகன்யா சாந்தமாகத் தனது கதை முழுவதையும் ஒப்பித்தாள். ஆஸ்ரமத்திற்குச் செல்லலானாள். தேவர்கள் ஆசைகாட்டத் தொடங்கியவர்களாக, இங்ஙனம் உன் பருவத்தை ஏன் வீணாக்குகிறாய்? உன் கணவர் சந்நியாசி; அவர் கிழவர், பார்வையற்றவர் என்று நீ கூறுகிறாய். அவரிடமிருந்து நீ சிற்றின்பத்தை எப்படிப் பெற இயலும்? எம்மில் ஒருவரை நீ தேர்ந்தெடுத்து வாழ்க்கைத் துணைவனாக ஏற்றுக்கொண்டு ஆனந்தமாக வாழ்வாயாக" என்று கூறினார்கள். அவர்களுடைய யோசனையைத் தள்ளிவிட்டுத் தனக்கு அமைந்த வாழ்க்கையில் தான் முற்றிலும் திருப்திப்படுவதாகக் கூறினாள்.

தமக்கு அனுகூலமான சூழ்நிலை அமையவில்லையே யென்று ஏக்கம் கொண்டு அஸ்வினி தேவர்கள் அப்பெண் தன் கணவனிடம் கொண்ட மாறாத கற்பின் உறுதியைப் பற்றித் திருப்தியடைந்தார்கள். தாம்பத்ய வாழ்க்கையின் பூரண பலன்களை வழங்குவதற்குத் துணைபுரியச் சித்தங் கொண்டவர்களாக, "நாங்கள் அஸ்வினி தேவர்கள். தேவலோக மருத்துவர்கள். தேவலோகத்திலிருந்து வந்தோம். திறமையான வைத்திய ஆலோசனை தெரியும். அதன்படி நடந்துகொண்டால், உன் கணவன் கண் பார்வையும் யௌவனத்தையும் திரும்பப் பெறுவார். சம்மதப்பட்டால், தங்கள் கணவரை இந்த ஏரிக்கு அழைத்து வாருங்கள். ஏரியில் ஸ்நானம் செய்தவுடன், ஆச்சரியகரமான புது மாறுதலை உன் கணவனாரிடம் காண்பாய்" என்று முழங்கினார்கள்.

தேவர்களுக்குச் சுகன்யா தலைதாழ்த்தி வணங்கிவிட்டு ஆஸ்ரமத்திற்குச் சென்று உடனே கணவருடன் ஏரிக்கு வந்து சேர்ந்தாள். அஸ்வினி தேவர்கள் காத்துக் கொண்டிருந்தார்கள். சியவனர், சுகன்யா இரண்டு தேவர்கள் ஆகியோர் ஏரி நீரில் மூழ்கினார்கள். என்ன ஆச்சரியம்! இரண்டு தேவர்களுக்குப் பதிலாக, சுகன்யாவின் முன்னால் மூன்று தேவர்கள் தமது கணவர் உள்பட ஒரே வடிவத்தில் நிற்கிறார்கள். கணவருக்குக் கண் பார்வை வந்துவிட்டது. ஆனால் அவர்கள் ஒரே மாதிரி இருந்தமையால், தமது கணவர் யார் என்று கண்டுபிடிப்பது சுகன்யாவுக்கு ஏமாற்றமாகத் தோன்றியது. மிகுந்த பக்தி சிரத்தையுடன் இறைவனை ஏத்தித் துதிக்கலானாள் - தன் கணவர் இன்னார் என்று அம்மூன்று வடிவங்களில் தேர்ந்தெடுக்கச் செய்யவேண்டுமென பிரார்த்தனை புரிந்தாள். அவ்விதமே, அவளுடைய கணவர் அதே வயோதிக சியவனராகத் தோன்றினார். இச்சூழ்ச்சியில்கூட தங்கள் தந்திரம் பலிக்காமல் தோற்றுவிட்டதைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள் அஸ்வினி தேவர்கள். ஆனால், தங்கள் வாக்குறுதியை நிறைவேற்றும்பொருட்டு அவர்கள் மருந்து ஒன்றை வழங்கவே, சியவனர் தமது யௌவனப் பருவத்தை மீண்டும் அடையப்பெற்றார். அவர்களது தயாள சித்தத்திற்குப் பெரிதும்

மகிழ்ந்தவர்களாக, சியவனரும் சுகன்யாவும் அஸ்வினி தேவர்களை வணங்கித் துதித்தார்கள். தேவர்கள் ஆசீர்வதித்துவிட்டுத் தங்கள் தெய்வலோக வாசஸ்தலத்திற்குத் திரும்பிவிட்டார்கள். யௌவனத்தைப் புதுப்பிக்கச் சியவனருக்குத் தேவர்களால் வழங்கப்பட்ட இந்த மருந்து இப்போது கீர்த்திவாய்ந்த சியவனப்பிராஷ் என்ற பெயரால் விளங்கி வருகிறது.

இப்போது கதையைத் தொடர்ந்து செல்வோம். அஸ்வினி தேவர்கள் மானுஷப் பிறவியாகிய சியவனருக்குத் தமது உத்தரவு இல்லாமல் வைத்திய உதவி அளித்தமையால் தேவேந்திரர் கோபமடைந்தார். தேவர்கள் எனும் நிலையிலிருந்து இவர்களைத் தள்ளி வைத்தார். தங்கள் நிலை பறிக்கப்பட்ட அஸ்வினி தேவர்கள் ஹரிபகவானிடம் முறையிட்டார்கள். தாம் அந்த விஷயத்தில் தலையிட முடியாதாகையால் சியவன மகரிஷியின் உதவியையே நாடுமாறு யோசனை கூறினார் ஹரிபகவான். மீண்டும் அஸ்வினி தேவர்கள் சியவனரை அணுகி நடந்த கதை முழுவதையும் கூறி, இந்திரர் தங்கள் மீது எடுத்துக்கொண்ட கடுமையான நடவடிக்கை பற்றி குறிப்பிட்டார்கள். தாம் ஏற்கெனவே யௌவனத்தைத் திரும்பப் பெற்றமையால் சியவனர் அஸ்வினி தேவர்களுக்குக் கடமைப்பட்டவராக, தத்தம் முன்னைய வாழ்விலும் குலத்திலும் புனஸ்தாபனம் செய்வதாக வாக்குறுதி அளித்தார். இக்குறிக்கோளைப் பெறும் பொருட்டு யாகம் ஒன்று நடத்த ஏற்பாடு செய்தார். கடவுளர் பட்டியலிலிருந்து வேண்டுமென்றே இந்திரரை நீக்கிவிட்டார். எனவே இந்திரருக்கு அர்க்கியம் அளிக்கப்படவில்லை. இந்த யக்ஞம் நடத்தப்பட்டதன் மீது தேவேந்திரர் கலங்கினார். முரண்டு பண்ணும் சியவன முனிவரைப் பற்றிய விஷயத்தை எடுத்துக்கொண்டு தீர்ப்பளிக்குமாறு தேவேந்திரர் திரிமூர்த்திகளிடம் முறையிட்டார். திரிமூர்த்திகளோ உதவியளிக்க இயலாத தங்கள் நிலையைப் பற்றிக் கூறியதன்றி, பதவியையும் அந்தஸ்தையும் பற்றி அக்கறை கொண்டால் சியவன

முனிவரிடமே நேரில் போய் சமரசம் செய்து கொள்ளுமாறு யோசனை சொன்னார்கள்.

செய்வது வேறு இன்னதெனத் தோன்றாதவராக, தேவந்திரர் சியவன முனிவரை நெருங்கி, இதர தேவர்கள் வழக்கப் பிரகாரம் அர்க்கியங்களைப் பெற்றுக்கொள்ள, தமக்கு அது மறுக்கப்பட்டதன் காரணத்தை வினவினார். சியவனர், "யௌவனத்தை நான் மீண்டும் பெறுவதற்கான சிகிச்சை செய்தமையால், அஸ்வினி தேவர்களைத் தங்கள் குழுவினின்று தள்ளி விட்டீர்கள். அத்தகைய அற்பச் சிருஷ்டியாக என்னைக் கருதும்போது, என் கையிலிருந்து யக்ஞ அர்க்கியப் பிச்சையைத் தாங்கள் ஏன் எதிர்பார்க்க வேண்டும்? ஆனால் தங்கள் பதவியையும் யக்ஞ அர்க்கியங்களையும் நிஜமாக விரும்பினால் தங்கள் குழுவிலே அஸ்வினி தேவர்களைத் திரும்பச் சேர்த்துக் கொள்ள தயவு செய்து ஏற்பாடு செய்வீர்களாக! இது தவறினால், உலகிலே நடக்கவிருக்கும் எதிர்கால யக்ஞங்கள் யாவற்றிலும் தங்களுக்கு எவ்விதமான அர்க்கியங்களும் வழங்கப்படமாட்டா என்று பதிலுரைத்தார். நிலைமையின் கடுமையைக் கருதிய தேவேந்திரர் பின்னும் தர்க்கம் புரியாமல் அஸ்வினி தேவர்கள் செய்த செயலை மன்னித்துவிட்டு அவர்களைத் திரும்பச் சேர்த்துக்கொண்டார். தேவந்திரரும் அஸ்வினி தேவர்களும் சியவன முனிவரிடம் விடை பெற்றுக் கொண்டு தங்கள் யதாஸ்தானத்திற்கு எழுந்தருளினார்கள்.

தேவர்கள்கூட தெய்வலோகப் பிராரந்தியங்களில் தங்கள் சேவை முடிவு பெற்ற பிறகு, மானுஷப் பிறவியை மட்டுமே நம்பியிருக்க வேண்டும் - இறுதியான மோட்சம் பெறுவதற்கு இக்கருத்து இங்ஙனம் இப்போது தெளிவாக நிரூபிக்கப்படுகிறது.

# 137. ஏமாற்றாதே

ஒரு வர்த்தகன், பார்வையற்ற அனைவருக்கும் உணவளிக்க விரும்பினான். முரசறைவித்து பார்வையற்ற அனைவருக்கும் தகவல் தெரிவிக்குமாறு தன் பணியாளுக்கு அவன் பணித்தான். அவ்வளவு பேரும் அவனுடைய வீட்டிற்கு வந்தனர். பார்வையற்றவர்களுக்காக அனைத்துவிதமான இனிப்புகளையும் உணவையும் தயாரிக்குமாறு தன்னுடைய வேலையாள்களுக்கு அவன் கட்டளையிட்டான். பார்வையற்றவர்களைப் பார்த்து அவன் கூறினான்: 'ஒவ்வொன்றாக உங்களுக்குப் பரிமாறுவது மிகவும் கடினம்; அத்தனையையும் ஒரு தட்டில் வைத்து விடுகிறேன்.' பார்வையற்றவர்களும் ஒப்புக்கொண்டனர். பார்வையற்ற ஒருவரின் முன் ஒரு தட்டு வைக்கப்பட்டது. பின்னர், அதே தட்டு இரண்டாமவன் முன் நகர்த்தப்பட்டது. பிறகு மூன்றாவது நபர், நான்காவது நபர், இப்படி வரிசையாக கடைசியாக உணவுடன் இருந்த தட்டு எடுத்துச் செல்லப்பட்டு, ஒவ்வொருவர் முன்னாலும் காலித் தட்டு ஒன்று வைக்கப்பட்டது. பின்னர், அவர்கள் அனைவரையும் உணவருந்தும்படி வர்த்தகர் கேட்டுக் கொண்டான். அவர்கள் சாப்பிடத் தொடங்கினார்கள் - ஆனால் அவர்கள் முன் வெறுந் தட்டுதான் இருந்தது; பார்வையற்ற ஒவ்வொருவரும், பக்கத்திலிருப்பவன்தான் உணவைக் களவாடிக் கொண்டதாக நினைத்துக் கொண்டார்கள். அனைவரும் கடுமையாகச் சண்டையிடத் தொடங்கினார்கள். இந்த விஷயத்தை நீதிபதிக்கு வர்த்தகன் தெரிவித்தான். புத்திசாலியான நீதிபதி விசாரித்து பார்வையற்றவர்களை வர்த்தகன் ஏமாற்றியிருக்கிறான் என்பதைக் கண்டுபிடித்தார். வர்த்தகனுக்கு ஓர் ஆண்டு சிறைத் தண்டனையும் விதித்தார்.

எனவே, பிறரை ஏமாற்றாதீர்கள்.

ஏமாற்றுவதென்பது இதயத்தைச் சுருக்கி இரும்பாக்கிவிடுகிறது, மனச் சான்றைக் கொன்று, ஆன்மாவை இருளடையச் செய்கிறது; கடவுளை உய்த்துணருவதற்குப் பெருந் தடையாக இருக்கிறது.

## 138. உதயத்திற்கும் அஸ்தமனத்திற்கும் யுத்தம்

வஸந்த ருதுவிலே, ஒரு நாள் காலையில், கிழக்குக் குன்றுகளின் பின்னால் உதயம் ரகசியமாகப் பேசிக் கொண்டே புறப்பட்டு வந்தாள். மிகுந்த ஆனந்தத்துடன் வாழ்க்கையின் விசித்திரங்களைப் போற்றிப் பாட்டுப் பாடினாள் உதயம். அவளது வதனம் ஜாஜ்வல்லியமான இளஞ்சிவப்பு நிறத்தால் பிரகாசித்தது.

ஆனால், பள்ளத்தாக்கில் தாழ்ந்து வீசிக்கொண்டிருந்த காற்று தன் தலையை நிமிர்த்தி, "ஓ உதயமே! விசித்திரமாயிருக்கிறாயென்று நீ எண்ணுகிறாய். ஆனால் உன்னைக் காட்டிலும் மிகுந்த அழகு படைத்தவளென்று அஸ்தமனம் என்னிடம் கூறுகிறாள்" என்று பேசிற்று.

உதயம் கோபித்துத் தன் அழகிய கண்கள்மீது கருத்த மேகம் ஒன்று செல்லவிடுத்தாள். "இது ஓர் பொய். அதோ அந்த மேற்கு மலைகளின் மீது உட்கார வருகிற நேரத்தில் அஸ்தமனத்துடன் நான் பேசுகிறேன்" என்று பதிலியம்பினாள். உதயத்திற்குக் கோபமூட்டியதைக் குறித்து காற்று நிரம்பவும் சந்தோஷப்பட்டது. உதயமும் அஸ்தமனமும் யுத்தம் புரிவதைப் பார்க்க வேண்டுமென்ற காற்றின் விருப்பம் முற்றுப்பெற்றதல்லவா!

அன்று சாயங்காலம் அஸ்தமனம் அகண்டாகாரமான சிவப்பும் ஊதா வர்ணமும் கலந்த புன்முறுவலுடன் அங்கே உட்கார வந்தாள். உதயம் அஸ்தமனத்தை விளித்து, 'ஓ, அஸ்தமனமே! உன்னைக் காட்டிலும் நான் மிகுந்த அழகு

படைத்தவள். உன்னைக் காட்டிலும் அதிக பயன் தருகிறவள்; உலகத்தை எழுப்புகிறவள் நான்'' என்று பெருமையுடன் பேசியது.

அஸ்தமனம் கோபித்துக்கொண்டு "எனது புன்முறுவலில் வெகு நேர்த்தியான மிருதுவான வண்ணங்கள் நிறைந்துள்ளன - ஊதா, இளஞ்சிவப்பு, மஞ்சள், நீலம், பச்சை. தங்கள் அலுவலை ஒதுக்கித் தள்ளிவிட்டுப் பிரார்த்தனை செய்யும் காலம் அதுதான் என்று மக்களுக்கு நான் அறிவுறுத்துகிறேன்'' என்றாள். அதற்கு உதயம் உடனே பேசத் தொடங்கி, "மக்களின் இதயங்களிலிருந்து அஞ்ஞான இருளை பறித்துக்கொண்டு, ஜ்வலிக்கும் எனது புன்முறுவலினால் அவர்களுக்கு புதிய நம்பிக்கையை ஊட்டுகிறேன்'' என்றாள்.

அஸ்தமனம் கோபக் குறிகளுடன், "இரவுக்காகக் கதவை நான் திறந்துவிடுகிறேன். பல்வேறு இடங்களிலே ஓடிய செருப்புகள் ஓய்வெடுத்துப் படுத்துக் கொள்வதற்கு வழி செய்கிறேன். இறைவனின் கரங்களில் உலகம் தூங்கும் - அது அல்லல் தொல்லைகளை அகற்றிவிட்டது'' என்றாள். உதயம், "ஆனால், தங்கள் வாழ்க்கையை மாற்றியமைத்துக் கொள்வதற்காக மக்களுக்கு நான் புதிய வாய்ப்பைத் தருகிறேன். புதியதோர் பகலுக்காகக் கதவைத் திறக்கிறேன். புதிய வழியில் அவர்களுக்கு நம்பிக்கையும் ஊட்டுகிறேன்'' என்று இயம்பினாள். ஆழ்ந்த சிவப்பு வர்ணம் ஜ்வலிக்க அஸ்தமனம் "எனது ஆழ்ந்த ஊதா வர்ணம் தூங்குகிற தோட்டத்துச் சுவர்களின் மீது படுகிறபோது, உலகம் முழுவதும் அமைதியைக் குறிக்கும் பெருமூச்சை விட்டுப் பாடுகிறது'' என்று கூறினாள். இவ்வாறு கூறிக்கொண்டே அஸ்தமனம் கடலில் மூழ்கினாள் புன்முறுவலுடன். "நீண்ட பகல் பொழுதை மக்கள் மறந்துவிட்டார்கள்'' என்றாள் அவள். ஆனால் உதயம் அவளைக் கூப்பிட்டு "நான் பகற் பொழுதைக் கொண்டுவருகிறேன். நான் தான் முதலில் வருகிறவள் - நீயோ கடைசி'' என்றாள்.





அப்போது அஸ்தமனத்தின் கண்களிலிருந்து நீர் பெருகிற்று. உடனே வானவில்லைப் பரப்பினாள். பிறகு மிருதுவாக அவள் பேசத் தொடங்கி, "நான் மறைந்துபோய் இருள் பரவும்வண்ணம் செய்யாவிட்டால் . . . . நீ உன் தலையை ஒருபோதும் காலை வேளையில் தூக்க இயலாது" என்றாள்.

"ஓ, வேண்டாம் - வேண்டாம் பயங்கரமான இந்தச்செயலைப் புரியாதே அஸ்தமனமே! என் உயிரை வாங்கிவிடப் பார்க்கிறாயா?" என்று உரக்கக் கத்தினாள் உதயம்.

வெகு தாமதம் ஆகிவிட்டது. மேற்கு மலைகளை விட்டு அஸ்தமனம் போய்விடுவதைப் பற்றி உலகம் எதிர்பார்த்ததெல்லாம் வீணாகப் போயிற்று. மேய்ந்து கொண்டிருந்த பசுமாடுகள் இரவு வரவில்லையே என்று ஏங்கிக் கொண்டிருந்தன. ஆனால் அஸ்தமனமோ வெற்று வெளியைப் பார்த்த வண்ணம் உட்கார்ந்திருந்தாள் - எதையோ பறிகொடுத்தவள் போல். வயலில் உழைத்துக்கொண்டிருந்த உழவர்கள் மிகவும் களைத்துப்போய், இரவுக்காலம் வராமையால் வேலையை நிறுத்தாமல் தயங்கினார்கள். இரவு வந்தால் தாய்மார்கள் குழந்தைகளுக்கு உணவு படைப்பார்கள். பசியெடுத்துவிட்டது. குழந்தைகளுக்கு இரவுக்காலம் வரவில்லை!

அப்போது சந்திரன் பயந்து மெலிந்தவள் போன்று தோன்றினாள். அவள் கணீர் கணீர் எனும் தனது குரலில் பேசத் தொடங்கி, "ஓ, அஸ்தமனமே, உதயமே! ஏன் போராடுகிறீர்கள்? ஒரே தந்தையுடைய குழந்தைகள் நீங்கள் இரண்டு பேரும். நீங்கள் ஒரே இனம். உங்களுக்குள் சண்டை எதற்கு? ஒருவருக்கொருவர் வித்தியாசப்பட்டவர்கள் அல்ல. சண்டையை விட்டுவிடுங்கள், உங்களை மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். எவ்வளவோ நேரம் காத்துக் காத்து கண்கள் பூத்துப் போய்விட்டன. வெளுத்தும் போய் விட்டேன். நீங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ளுங்கள்.

அன்னியோன்னியமான ஒரே இனத்தவர்கள் என்று உணருங்கள். அஸ்தமனமே! நட்சத்திரங்கள் பார்வையற்றவர்கள் ஆகிவிட்டார்கள். ஏனெனில் நீ இன்னும் மேற்கு மலைகளில் உட்கார்ந்து கொண்டிருக்கிறாய். ஓ! அஸ்தமனமே! என் தந்தையே உன் தந்தை" என்று முணுமுணுத்தாள்.

தாங்கள் சண்டையிடுவது சரியல்லவென்று உடனே அஸ்தமனப் பெண்ணும் உதய மங்கையும் இதயபூர்வமாக உணர்ந்தார்கள். மலைத் தொடர்களிலிருந்து அஸ்தமனப் பெண் அழகான நீண்ட புன்சிரிப்போடு மெல்ல நழுவி மறைந்தாள். இரவு வந்தது. மோகஷாகார புன்முறுவலோடு சந்திரன் ஒளி வீசினாள். உலகம் மீண்டும் சுழலலாயிற்று. ஜ்வலிப்பான இதயத்தோடு சந்திரன் மஞ்சள் நிறமான நிலவை பூமிமீது அள்ளி வீசிற்று. தூக்க மயக்கத்தாலாடிய தலைகள் கண்களை மூடிக்கொண்டன. நட்சத்திரங்கள் பிரகாசித்து நாட்டியம் புரிந்தன.

இறைவன் தனது புஜங்களை உலகின்மீது வைத்தான் . . . . உலகம் . . தூ . . . ங் . . . கி. . . ய – து.

*நீதி : - எவருடனும் சண்டையிடாதே நமக்கெல்லோருக்கும் ஒரே பிதா. இந்த இரகசியத்தைத் தெரிந்துகொள்க. நாமெல்லோரும் ஒரே இனம். உங்களுக்கும் பிறருக்கும் இடையில் எவ்வித வித்தியாசத்தையும் காணாதீர்கள். பின்னர்தான் உங்களுக்கு சாந்தியும் சந்தோஷமும் எப்போதும் பெருகும்.*

(Leonoro Rego என்பவரால் ஆங்கிலத்தில் எழுதப்பட்ட கதை இது.)

